பிலே பொருந்திநின்று, லோகத்தை நீரேற்று. லோகத்
வயிற்றிலே வைத்துக்காத்து, வெளிநாடு காணவுமிழ்ந்
நீரேற்ற லோகத்தை மூவடியாலே அளந்தவனுடைய திருவ
மருந்தும் பொருளும் அமுதமுந்தானே.

---

னென்றும். இவர்கள் இருந்தாக்குறைதீரத்தானிவர்களுக்
மாகத் திருந்தியிருக்குமென்றும் பொருளாகக் கடவ
நமுசிப்ரப்ருதிகளைப் போக்குகையாலே மருந்து. அர்த்
யாய் வருகையாலே பொருள். தன் திருவடிகளைத் த
யிலே வைக்கையாலே அமுதமானான்.

---

வாகவே இனியதாயிருக்கும் அமுதம்போலே, தானே இனிய
யிருப்பதாய் உள்ளது. உபாயமாவது அநிஷ்டத்தைத் தவிர்ப்
தாயும், இஷ்டத்தை அளிப்பதாயும் இரண்டு விதமாயுள்ள
அவ்விரண்டு ஆகாரங்களும் திருவடிகளுக்கு உள்ளனவென்ப
'மருந்தும் பொருளும்' என்னும் பதங்களாலும், 'அமுதமு
என்று உபேயமாயிருப்பதைச் சொல்லுவதாகவும் கொள்ளலா
அன்றிக்கே, மருந்தே அநிஷ்டமான வியாதியைத் தீர்ப்பதாகவு
இஷ்டமான தேஹபலத்தை அளிப்பதாகவுமிருப்பதுண்டா
யாலே 'மருந்து' என்னும் பதமே இரண்டு ஆகாரங்களையுமுடை
உபாயமாயிருப்பதைச் சொல்லுவதாகக் கொள்ளலாம்; அப்போ
'பொருளும் அமுதமும்' என்று இரண்டு விதமான ஆகாரமுடை
உபேயத்தைச் சொல்லுகிறது. அதாவது பிறவற்றுக்கு ஸாதன
யிருந்து கொண்டு உபேயமாகும் பணம் போலவும், தானே
இனியதாகையாலே உபேயமாயிருக்கும் அமுதம் போலவும் இ
விதமாகவும் உபேயமாயிருப்பது எம்பெருமான் திருவடியே என்
படி. திருவுலகளந்த விருத்தாந்தத்திலேயே இவன் மருந்
பொருளும் அமுதமும் ஆனமை விளங்கிநிற்கிறது என்று காட்
கிறார் அப்பிள்ளை. எப்படியெனில்,

"என்னிதுமாயம் என்னப்பன் அறிந்திலன்
முன்னைய வண்ணமே கொண்டளவாய் என்ற
மன்னு நமுசியை வானிற் சுழற்றிய
மின்னு முடியனே"

[பெரியாழ்திரு 1-8

5. அடிவண்ணம் தாமரை அன்றுலகம் தாயோன்
படிவண்ணம் பார்க்கடல் நீர்வண்ணம்—முடிவண்ணம்
ஓராழி வெய்யோன் ஒளியும் அஃதன்றே
ஆராழி கொண்டாற் கழகு.

**அன்று உலகம் தாயோன்**—(மாவலி நீர்வார்த்த) அன்று. **உலகம் தாயோன்**-உலகங்களைத்தாவியளந்த பெருமானுடைய, **அடிவண்ணம்**-திருவடிகளின் நிறம். **தாமரை**-தாமரைபோலே சிவந்திராநின்றது; **படி வண்ணம்**—திருமேனியின் நிறம், **பார் கடல் நீர்வண்ணம்**-பூமியைச் சூழ்ந்த கடல் நீரின் நிறம்போல் கறுத்துக் குளிர்ந்திராநின்றது; **முடிவண்ணம்**—கிரீடத்தினுடைய நிறம். **ஓர் ஆழி வெய்யோன்**—ஒற்றைச்சக்கரமுடைய தேரிலேறியவனாய் கொடியகிரணங்களையுடைய ஸூர்யனுடைய நிறம் போன்றது; **ஒளியும்**—(அப் பிரானுடைய) தேஜஸ்ஸும். **அஃது அன்றே**—அந்த ஸூர்யனுடைய ஒளி போன்றதேயன்றோ; **ஆர் ஆழி கொண்டாற்கு அழகு**—அழகு பொருந்திய திருவாழியைக் கையில் தரித்துள்ள எம்பெருமானுடைய அழகு இப்படிப்பட்டதாயிராநின்றது.

**அவ:—(அடிவண்ணம்) திருவுலகளந்தருளினபடி ப்ரஸ்துதமானவாறே அதுக்குத்தோற்று அவனழகை அநுபவிக்கிறார்.**

---

அவ:— திருவுலகளந்தருளினபடி ப்ரஸ்துதமாகையாலே அதுக்குத் தோற்று அவனழகை அநுபவிக்கிறார்.

---

என்றாற்போலே நமுசி முதலான விரோதிகளைப் போக்குகையாலே மருந்தானான்; தானே இரப்பாளனாய் வந்து மாவலியின் ஔதார்ய குணத்தை வெளிப்படுத்துகையாலே பொருளானான். தன் திருவடிகளை அவன் தலையிலே வைக்கையாலே அமுதமானான். ஆக, இப் ப்ரகாரத்தால் ப்ராப்யமாகவும், ப்ராபகமாகவுமிருப்பது அவன் திருவடி என்று நிரூபித்தாராயிற்று.

6. அவ:—திருவுலகளந்தருளின விருத்தாந்தத்தைச் சென்ற பாசுரத்தில் பேசப்புகுந்தவுடன், அதில் ஈடுபட்டு அத்திரிவிக்ரமனின் அழகை அநுபவிக்கிறார் இப்பாசுரத்தில்.

வ்யா:—(அடிவண்ணந்தாமரை) திருவடிகளுடைய நிறம் தாமரை.(அன்றித்யாதி) லோகத்தை அடங்கலும் அளந்து கொண்டவனுடைய நிறம் பார் சூழ்ந்த கடலின் நிறம். வெளுப்புப்பேசுகிற இடமாகில் திருப்பாற்கடலினுடைய நிறமென்னவுமாம். (முடியித்யாதி)திருவபிஷேகத்தினுடைய நிறம் ஆதித்யன்.

---

உரை:— மஹாபலி நீர்வார்த்துக் கொடுத்த அன்று லோகத்தை அநாயாஸேந அளந்துகொண்டவனுடைய திருவடிகளின் நிறமானது தாமரைபோலே சிவந்திராநின்றது. திருமேனியின் நிறமானது, பூமியைச்சூழ்ந்த கடலின் ஜலம் போலே இருண்டு குளிர்ந்திராநின்றது. திருவபிஷேகத்தினுடைய நிறமானது, ஏகசக்ரரதாரூடனாய் ப்ரதாபோத்தரனை ஆதித்யன்போலேயிராநின்றது. அவனுடையதேஜஸ்ஸு அந்த ஆதித்யனுடைய தேஜஸ்ஸுபோலே இராநின்றது.

---

வ்யா:— (அன்று) மஹாபலி தாரைநீர் வார்த்துக் கொடுத்த அன்று. (உலகம் தாயோன் அடிவண்ணம் தாமரை) உலகனைத்தையும் விளையாட்டாகத்தாவிய திரிவிக்கிரமப்பெருமானுடைய திருவடிகளின் நிறம் தாமரைபோல் சிவந்திருக்கும். 'வண்ணம்' என்பது ஸ்வபாவத்தையும் குறிக்குமாகையாலே, திருவடிகள் தாமரைபோலே மென்மைமிக்கவையாயும், நறுமணமுள்ளவையாயும் இருப்பதையும் காட்டுகிறது. 'அன்றுலகம் தாயோன்' என்பதை முன்னும் பின்னும் கூட்டிக்கொள்ளவேணும் என்பது தோற்ற இடையில் அமைத்தார். (உலகம் தாயோன் படிவண்ணம் பார் கடல் நீர் வண்ணம்) அவ்வுலகளந்த பெருமானுடைய திருமேனியின் நிறமானது (அவனளந்த) பூமியைச் சூழ்ந்திருக்கும் கடல் நீர்போலே கறுத்துக் குளிர்ந்து இருக்கும். ''பாற்கடல் நீர்வண்ணம்'' என்று பாடமாகில், கொடுத்துவளர்ந்த கையாலே யாசிக்கப் பெறுகையாலே பாற்கடல்போலே உடம்பு வெளுத்தபடியைச் சொல்லுவதாகக் கொள்ளலாம். 'படிவண்ணம்' என்பது இங்கும் ஸ்வபாவத்தைக் குறிப்பதாகக்கொண்டால், இழுத்த இழுப்புக்கெல்லாம் ஓடிவரும் நீர்போலே, இவனும் அடியாரிட்ட வழக்காயிருக்கையாகிற ஆர்ஜவகுணத்தையுடையவனாயிருப்பவன் என்று பொருளாகிறது. ''நீர்புரை வண்ணன்'' [திருவாய் 1-8-11] என்றாரன்றோ நம்மாழ்வாரும். (முடிவண்ணம் ஓராழிவெய்யோன்) அப்பெருமானுடைய கிரீடத்தின் நிறம் ஒற்றைச்சக்கரத்தேரில் ஏறியிருக்கும் உஷ்ணகிரணனை ஸூர்யனுடையதைப்போலேயிருக்கும்.

(ஒளியுமஃதன்றேயித்யாதி) கையிலே திருவாழிபிடித்தால் வேறொரு ஆபரணம் சாத்தவேண்டாதிருக்கிறவனுடைய அழகு அடிவண்ணந்தாமரை. 5.

---

அழகு பொருந்தின திருவாழியைத் திருக்கையிலே தரித்துக் கொண்டிருக்கிறவனுக்கு அழகு பார்த்தவளவிலிப்படியிரா நின்றதென்று அவனழகிலே ஆழங்காற்பட்டு அநுபவிக்கிறார். 5.

---

(ஒளியும் அஃதன்றே) அவனுடைய தேஜஸ்ஸாம் ஸூர்யனுடைய தேஜஸ்ஸு போலேயிருக்கும்.

திவி ஸூர்யஸஹஸ்ரஸ்ய பவேத் யுகபதுத்திதா ।
யதி பா: ஸத்ருசீ ஸா ஸ்யாத் பாஸஸ் தஸ்ய மஹாத்மந: ॥
[கீதை 11-12]

[ஆகாயத்தில் ஆயிரம் ஸூர்யர்களுடைய ஒளி ஒரே சமயத்தில் தோன்றிற்றாகில், அவ்வொளி அப்பெருமானுடைய ஒளிக்கு ஸமானமாகலாம்.] "கதிராயிரம் இரவி கலந்தெரித்தால் ஒத்த நீண்முடியன்" [பெரியாழ் 4-1-1] என்று சொல்லுகையாலே இங்கு ஸூர்யனைச் சொன்னது கணக்கற்ற ஸூர்யர்களுக்கு உபலக்ஷணம். 'வண்ணம்' என்று ஸ்வபாவமாகில் "அபித: பாவகோபமம்" [ரா-அ 99-26] [சுற்றிலும் நெருப்புப்போலேயிருப்பவன்] என்கிறபடியே சூரியனொளிபோலே இவனுடைய கிரீடவொளியும் திருமேனியொளியும் எதிரிகளுக்கு நெருங்கவொண்ணாதவையாயிருப்பதைக் குறிக்கிறது. (ஆராழிகொண்டாற்கு அழகு) அழகு பொருந்திய திருவாழியைத் திருக்கையிலே ஏந்திநிற்பவனுடைய அழகை ஆராயுமளவில், இப்படி இராநின்றது என்று திரிவிக்கிரமனின் அழகிலே ஆழ்ந்து அனுபவித்தாராயிற்று. ஆர்-பொருந்திய, இங்கு அழகு பொருந்திய என்றபடி. அன்றிக்கே, 'ஆர்' என்றது 'நிறைந்த' என்றபடியாய், கையிலே திருவாழியைப் பிடித்தால், வேறோர் ஆபரணம் சார்த்த வேண்டாதபடி நிறைந்திருக்கும் திருவாழி என்கிறதாகவுமாம். 5.

6. அழகன்றே யாழியாற்கு ஆழிநீர் வண்ணம்
அழகன்றே யண்டம் கடத்தல்— அழகன்றே
அங்கைநீ ரேற்றாற்கு அலர்மேலோன் கால்கழுவ
கங்கைநீர் கான்ற கழல்.

ஆழியாற்கு— திருவாழியையுடைய ஸர்வேச்வரனுக்கு ஆழி நீர் வண்ணம்— கடல் நீரின் நிறம் போன்ற நி மானது. அழகு அன்றே—அழகே வடிவெடுத்ததன்றோ அண்டம் கடத்தல்— உலகங்களை அளந்து கொண்ட செய அழகு அன்றே— அழகே வடிவெடுத்ததன்றோ. அங்கை— அழகிய கையிலே. நீர் ஏற்றாற்கு— மாவலியின் தான நீரை பெற்றுக்கொண்ட பெருமானுக்கு. அலர்மேலோன்—(உந்தி தாமரை மேலிருக்கும் பிரமன். கால் கழுவ— திருவடிகளை விளக்க. (அப்போது) கங்கை நீர்— கங்காதீர்த்தத்தை கான்ற— வெளிப்படுத்திய. கழல்— அத்திருவடி. அழ அன்றே— அழகே வடிவெடுத்ததன்றோ.

வ்யா:—(அழகு) (ஆழியித்யாதி) ஸர்வேச்வரனுக்கு கடலின் நீரினுடைய நிறம் வெறுமனே நிறமாகுமதேயே

---

அவ:— கீழ்ச்சொன்ன அழகையும் அத்தோஷ்டாத் சேஷ்டிதங்களையும் சேர்த்து அநுபவிக்கிறார்.

உரை:— திருக்கையிலே திருவாழியையுடையவனுக்கு கடலின் நீரினுடைய நிறம் வெறும் நிறம் மாத்ரமேயோ

---

6. அவ:— அநந்தனுடைய அழகிலே ஆழங்காற்படுகிறவர்களன்றோ ஆழ்வார்கள். ஆகையாலே, சென்ற பாசுரத்தில் அழகை பற்றிய ப்ரஸ்தாவம் நேர்ந்தவுடன், அவனுடைய நிறம், செய திருவடி ஆகிய எல்லாமே அழகே வடிவெடுத்தவையாகவன்றே இருக்கின்றன என்று ஆழங்காற்படுகிறார் இப்பாசுரத்தில்.

வ்யா:—(ஆழியாற்கு ஆழிநீர் வண்ணம் அழகன்றே) திரு கையிலே திருவாழியை ஏந்திநிற்பவனுக்குக் கடலின் நீரினுடை நிறம் வெறும் நிறம் மாத்திரமேயோ? அழகே வடிவெடுத்திருப் தன்றோ. இத்திருவாழியை ஏந்தி, இந்நிறத்தை உடையவ

அழகன்றே? இங்கிறமுடையவற்கு வேறொரு ஒப்பனை வேணுமோ? (அண்டங்கடத்தலழகன்றே) செயலோவழகிய தன்றிக்கேயிருக்கிறது? (அங்கையித்யாதி) திருவடிதான் கங்கைக்குக் காரணமென்று பாவநமாத்ரமாகுமதேயோ? அதுவுமவனுக்கழகன்றே. 6.

---

அழகுக்குடலன்றே. அந்தரிக்ஷாதிகளான லோகங்களை அளந்துகொண்டது வருந்திச்செய்த செயல்மாத்ரமோ? "[illegible] ழுலகுங்கொண்ட கோலக்கூத்தன்" என்கிறபடியே [illegible] ராடினாற்போலே அழகுக்கு உடலாயிருப்பதொன் [illegible]. கொடுத்துவளர்ந்த அழகிய கையிலே நீரேற்ற [illegible] க்குத் திருநாபீகமலத்தை இருப்பிடமாகவுடைய [illegible] திருவடிகளை விளக்க கங்கா ஜலத்தைப் புறப்பட [illegible] திருவடிகள், கங்கைக்கு உத்பாதகமென்று பாவன

---

அழகு [illegible] த்த வேறொரு அலங்காரம் வேண்டுமோ? என்று கருத்து. (அழ [illegible] அண்டம் கடத்தல்) "ஸ பூமிம் விச்வதோ வ்ருத்வா அத்யதிஷ்டத் தசாங்குலம்" [பு. ஸூ] [அவன் பூமி முழுவதையும் அளந்து, அதற்குமேலும் நெடுந்தூரம் அளந்தான்.] என்கிற [illegible] மாவலியாண்டது மூவுலகேயாகிலும், ரக்ஷ்யத்தின் [illegible] ரக்ஷகனின பாரிப்பாலே, அண்டம் முழுவதையும் [illegible] அளந்து, மூன்றாவதடியாலே பரமபதத்தையும அளந்த [illegible] செய்த செயல் மாத்திரமேயோ? "ஏத்த ஏழுலகும் [illegible] கோலக் கூத்தன்" [திருவாய் 2-2-11] எனகிறபடியே [illegible] ஆடிய ஆடல்போலே அழகே வடிவெடுத்ததா [illegible] இருக்கிறது. (அங்கை நீர் ஏற்றாற்கு) "அலம்புரிந்த [illegible] தடக்கை" [திருநெடு 6] என்கிறபடியே யாசிப்பார் 'அலம் [illegible]' [போதும் போதும்] என்னும்படி கொடுத்து வளர்ந்த அழகிய கையைக்கொண்டு மாவலியிடம் தானநீர் ஏற்றவனு [illegible]. (அலர்மேலோன் கால்கழுவ) திருநாபீகமலத்தின் [illegible] ரும் பிரமன் திருவடிகளை விளக்க. (கங்கை நீர் கான்ற [illegible] அழகன்றே) அந்நீரை கங்காஜலமாகப் புறப்படவிட்ட [illegible]. சிவன் முதலானோரைப் பரிசுத்தப்படுத்திய கங்கைக்குப் [illegible] பாவனத்வத்தை மாத்திரம் உடையதோ? [illegible] விசும்பில் வெண் துகில் கொடியென விரிந்து வலந்தரு

7. கழல்தொழுதும் வாநெஞ்சே கார்க்கடல்நீர் வேலை
பொழிலளந்த புள்ளூர்திச் செல்வன்—எழிலளந்தங்
கெண்ணற் கரியானை எப்பொருட்கும் சேயானை
நண்ணற் கரியானை நாம்.

நெஞ்சே— ஓமனமே! கார் கடல் நீர்—கறுத்த கடலின் நீரோடே கூடின. வேலை—கரையையுடைத்தான. பொழில்—பூமியை. அளந்த—அளந்து கொண்டவனும். புள் ஊர்தி—கருடனை வாஹநமாகக் கொண்டவனும். செல்வன்—செல்வமான ஸ்ரீதேவியை உடையவனும். எழில் அளந்து எண்ணற்கு அரியானை—அழகை எல்லைகண்டு நினைப்பதற்கும் முடியாதவனும். எப்பொருட்கும் சேயானை—எல்லாப் பொருள்களுக்கும் நெடுந்தூரத்திலிருப்பவனும். நண்ணற்கு அரியானை—(யார்க்கும் தம் முயற்சியாலே) கிட்டமுடியாதவனுயிருப்பவனுமான எம்பெருமானுடைய. கழல்—திருவடிகளை. நாம் தொழுதும்—நாம் வணங்குவோம்; வா—நீயும் உடன்படுவாயாக.

---

மாத்ரமேயோ? "வெண்டுகிற் கொடியெனவிரிந்து" என்கிற படியே கங்காஜலத்தின் வெளுப்பும் திருவடிகளின் சிவப்புமாய் அழகுக்குடலாயிருப்பதொன்றன்றோ. 6

---

மணிநீர்க் கங்கை" [பெரிய திருமொழி 1-4-3] என்கிறபடியே ஆகாயத்தில் வெள்ளைநிறத் துணியாலான கொடிபோல விரிந்து நிற்கும் கங்கையின் வெளுப்பும், திருவடிகளின் சிவப்புமாகி வர்ணச்சேர்த்தியைப் பார்த்தால் அழகே வடிவெடுத்ததாயிருப்பதன்றோ. அவனுடைய நிறம் கடல்போலிருப்பதையும், அவன் உலகளந்ததாகிய அரியசெயலைச் செய்தான் என்றும், பரம பாவனமான கங்கையை அவன் திருவடி படைத்தது என்று பேசுகிறுக்களேயொழிய, அந்நிறமும், அச்செயலும், அக்கழலும் அழகே வடிவெடுத்ததாயிருப்பதை அறிந்து பேசுவாரில்லையே "மதுராதிபதேரகிலம் மதுரம்" [மதுராதிபதியின் தொடர்புடைய அனைத்துமே மதுரமாயுள்ளது.] என்றுப்போலே அவனுடைய அனைத்தும் அழகே வடிவெடுத்திருப்பதை நினைந்து நைந்து உள்கரைந்து உருகிப் பேசவேண்டாமோ? என்று கருத்து.

அவ:—(கழல்) அழகிப்படிக் குறைவற்றபின்பு நாமுமிப்படி அநுபவிப்பேர்மென்று திருவுள்ளத்தை அழைக்கிறார்.

வ்யா:–(கார்க்கடலித்யாதி) கடல்சூழ்ந்த பூமியை அளந்து, புள்ளூர்ந்து, அத்தாலே ஸ்ரீமானாய். (எழிலித்யாதி) எழிலே அளந்து மநோரதிக்கவொண்ணாதவனை. (எப்பொருட்கும்

---

அவ:—இப்படி அவனழகிலே தோற்ற இவர் தம் திருவுள்ளத்தைக்குறித்து அவன் திருவடிகளிலே நாம் அடிமை செய்து வாழும்படி வாராயென்கிறார்.

உரை:—கறுத்த கடலின் நீரோடே கூடின கரையை யுடைத்தான பூமியை அளந்துகொண்ட கருடவாஹநனை ஸ்ரிய:பதியாய், தன்னுடைய அழகை இவ்வளவென்று பரிச்சேதித்துச்சொல்லவொண்ணாதவளவன்றிக்கே மனஸ்ஸால்

---

7. அவ:— இவ்வண்ணமாக அவனுடைய அழகிலே ஈடுபட்டுத் தன்னை எழுதிக் கொடுத்திருக்கும் இவர், இப்பாசுரத்தில் தம் திருவுள்ளத்தைக்குறித்து, 'அவன் திருவடிகளிலே நாம் அடிமை செய்து வாழும்படி வாராய் நெஞ்சே' என்கிறார்.

வ்யா:— (கார்க்கடல் நீர்வேலைப் பொழில் அளந்த புள்ளூர்திச் செல்வன்) கறுத்த கடலின் நீரோடு கூடிய கரையையுடையதான பூமியை அளந்துகொண்டவனாய், கருடவாஹனனாய், ஸ்ரிய:பதியானவன். (பொழில் அளந்த)

"ஏக: ப்ராக்ஷீஸரத் பாதமேக: ப்ரசாசிக்ஷளந் முதா |
அபரோ ஏப்யதரந் மூர்த்நா கோதிகஸ் தேஷு கண்யதாம் ||"

(ஒருவன் திருவடியை நீட்டினான்; ஒருவன் உகப்புடன் அதைக் கழுவினான்; மற்றொருவன் அந்நீரைத் தலையால் தரித்தான். இவர்களில் எவன் ஸர்வேஸ்வரன் என்பதை நீங்களே எண்ணிப் பாருங்கள்) என்கிறபடியே இச்செயலும் பரத்வத்தைக் காட்டுகிறது. (புள்ளூர்தி) "ஸுபர்ணோஸி கருத்மாந்" என்கிறபடியே வேதஸ்வரூபியான கருடனை வாஹனமாகக் கொண்டிருக்கிறதுவும் இவனுடைய பரத்வத்தைக் காட்டுகிறது. (செல்வன்) "செல்வநாரணன்" [திருவாய்1-10-8] என்கிறபடியே இப்

ரேயானை) எல்லாப்பொருளுக்கும் தூரஸ்தனாயுள்ளவனை (நண்ணற்கரியானை) ஸ்வயத்நத்தாலே காண்பார்க்குக் கிட் அரியனானவனை. (நாம் கழல் தொழுதும் வா நெஞ்சே) அவ காட்டக்காணவிருக்கிற நாம் திருவடிகளைத்தொழுவோ போரு.

8. நாமம் பலசொல்லி நாராயணா வென்று
நாமங்கையாற் றொழுதும் நன்னெஞ்சே!—வா மருவி
மண்ணுலக முண்டுமிழ்ந்த வண்டறையுந் தண்டுழாய்
கண்ணனையே காண்கநங் கண்.

---

நினைக்கைக்குங் கூட அரியனாயிருக்குமவனாய், எல்லாப் பதார்த்தங்களுக்கும் அவ்வருகுபட்டிருக்கிற வைலக்ஷண்யத்தை யுடையனாய் ஆர்க்கும் ஸ்வயத்நத்தால் கிட்டுகைக்கு அரி னானவனை அவன்றானே காட்டக்கண்ட நாம், அடிமைச் சுவடறியும் நெஞ்சே!, திருவடிகளைக்கிட்டி அடிமை செய்வோம் போரு. 7

---

பரத்வத்திற்கெல்லாம மூலகாரணமாக ஸ்ரீமானாயிருக்கும் பெருமையை உடையவன். அன்றிக்கே, பொழிலளந்ததும், புள்ளூர்ந்ததும் ஸ்ரீமானாயிருப்பதும் சென்ற பாசுரத்திற்போலே அழகைக் காட் பனவையாகவுமாம். (எழில் அளந்து அங்கு எண்ணற்கு அரியானை இத்தகைய தன் அழகை 'இவ்வளவு' என்று அளவிட்டு அறிந் வாயால் சொல்லமுடியாமலிருப்பது மாத்திரமன்றிக்கே, நெஞ்சா நினைக்கக் கூட முடியாதபடியிருக்கும் பெருமையை உடையவனை (எப்பொருட்கும் சேயானை) 'இவனுடைய அழகு இப்பொருளின் அழகுபோன்றது' என்று ஒரு பொருளை இவனுடைய அழகுக்கு போலியாகச் சொல்லமுடியாதபடி எல்லாப்பொருள்களுக்கும் அ பாற்பட்டிருக்கும் அழகுப்பெருமையை உடையவனை. (நண்ண கரியானை) "யாருமோர் நிலைமையன் என அறிவரிய எம்பெருமான்" [திருவாய் 1-3-4] என்கிறபடியே எவ்வளவு பெரிய ஜ்ஞா சக்திகளையுடைய பிரமன் முதலானோர்க்கும் தமது முயற்சியா அடைவதற்கு அரியவனாயிருப்பவனை. (நாம் கழல் தொழுதும் அவன் தான் தன்னைக் காட்டக் கண்ட நாம், "யாருமோர் நிலைமைய என அறிவெளிய எம்பெருமான்" [திருவாய் 1-3-4] என்கிறபடியே எளிதில் அவன் திருவடிகளைக் கிட்டி அடிமை செய்வோ (வா நெஞ்சே) அடிமைச் சுவையறிந்து எனக்கு வசப்பட்டிருக்கு நெஞ்சே! அடிமை செய்ய வருவாயாக.

நல் நெஞ்சே—(என்னிலும் முற்படும்) நல்ல மனமே! பல நாமம் சொல்லி — பல திருநாமங்களைச் சொல்லி நாராயணா என்று—அனைத்திலும் முக்கியமான நாராயண நாமத்தைச் சொல்லி. அம் கையால்—அழகிய கையினாலே, நாம் தொழுதும்—நாம் தொழுவோம்; மருவி வா—இதற்கு நீயும் உடன்பட்டுவா; மண் உலகம்—பூமி முதலிய லோகங்களை. உண்டு உமிழ்ந்த—ப்ரளய காலத்தில் உள்ளே அடக்கிவைத்து ஸ்ருஷ்டி காலத்தில் வெளிப்படுத்தினவனும். வண்டு அறையும் தண் துழாய்—வண்டுகள் படிந்து ஒலி செய்யப்பெற்ற குளிர்ந்த திருத்துழாய் மாலையையுடைய வனுமான. கண்ணனையே—கண்ணனையே. நம் கண்—நமது கண்கள். காண்க—கண்டு களித்திடுக.

அவ:—(நாமம்) எல்லா இந்த்ரியங்களும் அவனை அநுபவிக்கவேணுமென்கிறார்.

---

அவ:— எல்லா இந்த்₃ரியங்களாலும் அவனை அநுபவிக்க வேண்டுமென்கிறார்.

உரை:— என்னிலும்விஷயத்தில் முற்கோலி விழுகிற நல்ல நெஞ்சே! வாகி₃ந்த்₃ரியத்தில் நாவுறுவுதல் திரும்படி

---

8. அவ:—'அடிமை செய்ய வா!' என்று நெஞ்சைக்கூப்பிட்டார் சென்ற பாசுரத்தில்; 'ஓரிந்திரியத்தால் ஒருவகைப்பட்ட அடிமை செய்தால் போதாது; எல்லா இந்திரியங்களாலும் அவனை அநுபவித்துப் பலவகைப்பட்ட அடிமைகளையும் செய்யவேணும்' என்று அந்நெஞ்சுக்கே உபதேசம் செய்கிறார் இப்பாசுரத்தில்.

வ்யா:— (நன்னெஞ்சே!) சென்றபாசுரத்தில் 'கழல்தொழுதும் வா நெஞ்சே!' என்று இவர் கூப்பிடுவதற்கு முன்னமே அடிமை செய்ய முற்பட்டு நின்றதைக்கண்டு 'நன்னெஞ்சே!' என்று கொண்டாடுகிறார். 'என்னைக்காட்டிலும் ப₄க₃வத்விஷயத்தில் முற்பட்டு நிற்கையாகிற நன்மையை உடைய நெஞ்சே!' என்றபடி. "முந்துற்ற நெஞ்சே" [பெரியதிருவ 1] "என்னை நெகிழ்க்கிலும் என்னுடைய நன்னெஞ்சம் தன்னை அகல்விக்கத் தானும் கில்லான் இனி" [திருவாய் 1-7-8] என்றாரன்றோ நம்மாழ்வாரும். 'நன்னெஞ்சே!' என்று எல்லா இந்திரியங்களையும் நியமிக்கவல்லதாயிருக்கும்

வ்யா:—(நாமம் பலசொல்லி) கார்யபுத்த்யா சொல்
கிறாராகிலிறே ஒன்றைச் சொல்லுவது. எல்லாத் தி
நாமங்களையும் சொல்லி. (நாராயணாவென்று) அஸாதார
மான நாமத்தைச்சொல்லி. (கையால் தொழு
நன்னெஞ்சே) எல்லா இந்த்ரியங்களுக்கும் அடி நீயி

ஓரோ குணசேஷ்டிதங்களுக்கு வாசகமான திருநாமங்க
பலவற்றையும் சொல்லி. இவற்றுக்கெல்லாம் ப்ரதாநமா
ஸ்வரூபரூபகுணவிபூதிகளுக்கெல்லாம் பூர்ணவாசகமா
அஸாதாரணமான திருநாமத்தைச் சொல்லி, அங்குத்தைக்
எடுத்துக் கைநீட்டக்கடவ அழகிய கையாலே நாம் அஞ்ஜ
பந்தம் பண்ணுகை முதலான வ்ருத்தி விசேஷங்களை
பண்ணுவோம். நீ இறாயாதே பொருந்தி வாரா

நன்மையைச் சொல்லுகிறாராகவுமாம். (நாமம் பல சொல்
நாவின் பரிப்பெல்லாம் அடங்கும்படி பேரும் ஓர் ஆயிரம் பீ
பல உடைய எம்பெருமானுடைய குணசேஷ்டிதங்கள் ஒவ்வொன்றை
பேசும் நாமங்கள் பலவற்றையும் சொல்லி. ஒரு பயனைப் பெ
விரும்பி நாமத்தைச் சொல்லுவதாகில் ஒரு நாமத்தையே உ
போடவேண்டியிருக்கும்; இவர் அப்படியல்லாமல், குணசேஷ்
தங்களை அநுபவிப்பதற்காகவே திருநாமஞ்சொல்லுகிறார
யாலே, திருநாமங்கள் பலவற்றையும் சொல்லவேண்டியிருக்கிற
(நாராயணாவென்று) எத்தனை நாமஞ்சொன்னாலும் இத்
நாமத்துக்கு ஈடாகாதே! எல்லாத் திருநாமங்களுக்கும் ப்ரதா
மாய், ஸ்வரூபம், ரூபம், குணம், [illegible] திகள் (செல்வங்கள்
ஆகியவற்றில் ஒவ்வொன்றைச் [illegible] அவைபோலன்றி
இவையனைத்தையும் குறைவறச் சொல்லுவதாய், அவனைத் த
வேறு எந்த தேவதையையும் குறிக்கமாட்டாததான நாராய
நாமத்தையும் நாவாறச் சொல்லி. இத்தால் வாசிகமா
அடிமையைச் சொன்னார்; இனி, காயிகமான அடிமையைச் சொ
கிறார்.— (நாம் அங்கையால் தொழுதும்) கைங்கர்யம் செய்
தொடங்கினால் உபகரணங்களை முதன்முதலில் எடுத்துவைப்ப
கையேயன்றோ. கைக்குள்ள இந்த அழகு மற்ற எந்த இந்
யத்திற்கும் இல்லையன்றோ. இத்தகைய அழகையுடைய
கையாலே நாம் அஞ்ஜலிசெய்வது முதலான கைங்கர்யங்களை
செய்யக்கடவோம். தொழுவதாகிற அஞ்ஜலியைச் சொன்ன
கையால் செய்யும் எல்லா அடிமைகளுக்கும் உபலக்ஷண

(மண்ணணித்யாதி) ப்ரளயம் வருமென்றுஏற்கவே கோலி வயிற்றிலே வைத்து வெளிநாடு காண உமிழ்ந்து பே₄ாக்₃யபூ₄தனுய் ஸௌலப₄ருன க்ருஷ்ணனையே விரும்பிக்காணவேணும்கண். 8.

---

பூ₄மி முதலான லோகங்களை ப்ரளயம் வருவதற்கு முன்னே திருவயிற்றிலே வைத்து நோக்கி அங்கிருந்து நெருக்குண்ணுதபடி புறப்படவிட்டு ரக்ஷித்தவனுய். ரக்ஷியாவிடிலும் விடவொண்ணுதபடி மது₄பானமத்தமாய்க்கொண்டு வண்டுகள் ஸப்₃தி₃க்கிற குளிர்ந்த திருத்துழாயாலே அலங்க்ருதனுகையாலே நிரதிஶய பே₄ாக்₃யபூ₄தனுன க்ருஷ்ணனையே காணவேணுமென்று மேல்விழுகிற நம்முடைய கண்களானவை கண்டு களித்திடுக. 8.

---

(வாமருவி) ஸர்வதே₃ஶ ஸர்வகால ஸர்வாவஸ்தை₂களுக்கும் உரிய ஸகலவித₄கைங்கர்யங்களையும் செய்ய நான் பாரித்தால், 'ஒண்ணுல் ஆகாது' என்று பின்வாங்காமல், என்னோடு பொருந்தியருபவனாக: கைங்கர்யம் செய்யப்போகும் விஷயத்தின் பெருமையைச் சொல்லிக்கொண்டு, அவனையே கண்ணுல் அநுபவித்துக் கைங்கர்யம் செய்வோம் என்கிருர் பின்னடிகளாலே,— (மண்ணுலகம் உண்டு உமிழ்ந்து) ப்ரளயகாலத்தில் பூமி முதலான எல்லாவுலகங்களையும், ப்ரளயம் வந்து அழிப்பதற்கு முன்னமே திருவயிற்றிலே வைத்துத்தாயிருக்கும் வண்ணமே உய்யக்கொண்டு, நெடுங்காலம் அங்கேயேயிருந்து நெருக்குண்ணுதபடி ஸ்ருஷ்டி காலத்தில் அவற்றை வெளிநாடு காண உமிழ்ந்து ரக்ஷித்தவனன்றோ இவன். இப்படி ரக்ஷிக்காவிடிலும் விடவொண்ணுத ஒப்பனையழகையும், வடிவழகையும், எளிமை, நீர்மை முதலான 'குணத்தழகையும் உடையவன் அவன் என்கிருர் அடுத்தபடியாக,— (வண்டறையும் தண்துழாய்க் கண்ணனையே) தேனைக்குடித்து மயங்கி வண்டுகள் ரீங்காரம் செய்யும் குளிர்ந்த திருத்துழாயாலே அலங்கரிக்கப்பட்ட க்ருஷ்ணனையே. 'வண்டறையும் தண்டுழாய்' என்று ஒப்பனையழகையும், 'கண்ணன்' என்று தாமரைக் கண்ணாமுகையும், ஆய்ச்சியர்க்கும் கட்டவும் அடிக்கவுமாம்படி இருந்த குணத்தழகையும் காட்டுகிறது. (நம் கண் காண்க) நமக்கு விதே₄யமாயிருக்கும் கண்களானவை, 'அவனையே காண

9. கண்ணும் கமலங் கமலமே கைத்தலமும்
மண்ணளந்த பாதமும் மற்றவையே—எண்ணிற்
கருமா முகில்வண்ணன் கார்க்கடல்நீர் வண்ணன்
திருமாமணி வண்ணன் தேசு.

**கரு மா முகில் வண்ணன்**—*கரிய பெரிய மேகம் போன்ற வடிவையுடையவனும்.* **கார் கடல் நீர் வண்ணன்**—*கரிய நீரின் நிறம்போன்ற நிறமுடையவனும்.* **திரு மா மணி வண்ணன்**—*அழகிய பெருவிலையுள்ள மணிபோன்ற நிறமுடையவனுமான எம்பெருமானுடைய,* **தேசு**—*அழகை.* **எண்ணில்**—*நினைக்கப்புகுந்தால்.* **கண்ணும்**—*திருக்கண்களும்,* **கமலம்**—*தாமரைப் பூப்போன்றவை;* **கைத் தலமும்**—*திருக்கைத்தலங்களும்.* **கமலமே**—*அத்தாமரைப் பூப்போன்றவையே;* **மற்று**—*மேலும்,* **மண் அளந்த பாதமும்**—*உலகளந்த திருவடிகளும்.* **அவையே**—*அத்தாமரைப் பூப்போன்றவையே.*

---

**அவ:**—*"காண்க நங்கண்" என்று இவர் சொன்னவாறே அவன் தன்னைக்காட்டக்கண்டு அவனுடைய அழகை அநுபவிக்கிறார்.*

**உரை:**—*கறுத்துப்பெருத்த மேகம் போன்ற ஸ்ரமஹரமான வடிவையுடையனாய், கறுத்த கடலின் நீர்நிறம்போலே*

---

வேணும்' என்னும் ஆசைதீரக்கண்டு களித்திடுக. காணக்காண நாம் ஸர்வேந்திரியங்களாலும் அடிமை செய்வோம். 8.

9. அவ:—"கண்ணனையே காண்க நம் கண்" என்று இவர் ஆசைப்பட்ட பின்பும், ஆஶ்ரிதபரதந்திரனான கண்ணன் தன்னைக் காட்டாமலிரானே; அவன் தன்னைத்தானே காட்டக் கண்டு அவனுடைய அழகை அநுபவிக்கிறார்.

வ்யா:—(கருமாமுகில்வண்ணன்) கரிய பெரிய மேகம்போன்று கண்டார் களைப்பை ஆற்றும் வடிவையுடையவன். 'முகில் வண்ணன்' என்று ஸாமாந்யமாகச் சொன்னால் இவனுடைய கரிய பெரிய வடிவுக்கு ஒப்பாகமாட்டாதாகையால், 'கருமாமுகில்

வ்யா:—(கண்ணும்) (கருமாமுகில்வண்ணன், கார்க்கடல் நீர்வண்ணன் திருமா மணிவண்ணன் தேசெண்ணில்) ப்ர ஸாரமாய் கண்ணுக்கு அடங்காதே திரண்டு குளிர்ந்திருந்தவ

---

கண்ணுக்கடங்காமல் அபரிச்சேத்யமான திருநிறத்தை யுடையனாய். அழகுமிக்குப் பெருவிலையனான நீலரத்னம்போலே கண்ணாலே முகந்து அனுபவிக்கலாம்படி இருண்டு குளிர்ந்த வடிவையுடையனானவனுடைய அழகால் வந்த தேஜஸ்ஸு.

---

வண்ணன்' என்று விசேஷிக்கிறார். இப்படிக் கருமாமுகிலாகிற ஒன்றை உபமானமாக இட்டதால் திருப்தியுறாமல், மேலுமிரண்டை உபமானமிடுகிறார்,— (கார்க்கடல் நீர் வண்ணன்) கறுத்த கடலின் நீர்போலே கண்ணுக்கு அடங்காமல், அளவிடவொண்ணாததா யிருக்கும் திருநிறத்தையுடையவன். கருமைக்கும், பெருமைக்கும் கருமாமுகிலை உபமானமிட்டவர், கண்ணுக்கு அடங்காமல் அளவிட வொண்ணாததாயிருக்கைக்குக் கார்க்கடல் நீரை ஒப்பிடுகிறார். (திருமாமணிவண்ணன்) முகிலையும், கார்க்கடல் நீரையும் காட்டிலும் ஒளிவிஞ்சியதாகையாலே அழகுடையதாய், பெருவிலை யுடையதாய்; கண்ணுக்கடங்காத அவைபோலல்லாமல் கண்ணாலே முகந்து அநுபவிக்கலாம்படி திரண்டு இருண்டு குளிர்ந்த வடி வழகையுடையதாய், முந்தானையில் முடியலாம் எளிமையை யுடையதான நீலமணிபோலேயிருப்பவன். ஒளிவிஞ்சி நிற்கை, மிக்க அழகுடையதாயிருக்கை, விலைமதிப்பற்றதாயிருக்கை, கண்ணாலே முகந்து அநுபவிக்கத்தக்கதாயிருக்கை, எளிமை ஆகிய தன்மை களுக்குத் திருமாமணியை ஒப்பிடுகிறார். 'திரு' என்று அழகை யும், 'மா' என்று விலைமிகுதியையும் சொல்லுகிறது. 'மணி' என்னும் சொல்லே நீலமணியைக் குறிக்கிறது. அன்றிக்கே, 'மா' என்று நீலநிறத்தைக் குறிக்கிறதாகையாலே 'மாமணி' என்று நீலமணியைக் குறிக்கிறதாகவுமாம். அப்போது 'திரு' என்று அழகையும் விலைமிகுதியையும் சொல்லுகிறது. (தேசு எண்ணில்) இத்தகைய அழகனுடைய அழகால் வந்த தேஜஸ்ஸை நினைக் கப்புகில், 'யதோ வாசோ நிவர்த்தந்தே அப்ராப்ய மநஸா ஸஹ' என்கிறபடியே வாக்குக்கும் மனத்துக்கும் அப்பாற்பட்ட இதை எவராலுமே அளவிட்டு நினைக்கமுடியாது; அதிலும், இதை நினைத்த மாத்திரத்தில் காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும் எனக்கு நினைக்கவே முடியாது. இவ்வழகுக் கடலில் அமிழ்ந்து

10. தேசுந் திறலுந் திருவுமுருவமும்
மாசில் குடிப்பிறப்பும் மற்றவையும்—பேசில்
வலம்புரிந்த வான்சங்கங் கொண்டான் பேரோத
நலம்புரிந்து சென்றடையும் நன்கு.

வலம் புரிந்த வான் சங்கம் கொண்டான்—வலது பக்கத்தில் சுழித்திருக்கிற வெளுத்த சங்கைக் கைக்கொண்ட பெருமானுடைய. பேர் ஓத–திருநாமங்களைச் சொல்ல, பேசில்–(அதன் பலன்களைப்) பேசப்புகின், தேசும்–தேஜஸ்ஸும். திறலும்–பிறரை வெற்றிகொள்ளும் திறமையும். திருவும்–செல்வமும், உருவமும்—அழகிய ரூபமும், மாசு இல் குடிப்பிறப்பும்— குற்றமற்ற நற்குடிப்பிறப்பும். மற்றவையும்—மற்றுமுள்ள நன்மைகளும், நலம் புரிந்து நன்கு சென்று அடையும்—தாமே ஆசைப்பட்டு நன்ருக வந்து சேரும்.

அவ:— (தேசும்) அங்குள்ள அழகைப் பேசிப்போமித்தனையோ? நமக்கும் சில பேறுகள் வேண்டாவோவென்னில்; நாம் அவனுடைய திருநாமங்களைச் சொல்ல உபக்ரமிக்க எல்லா ஸம்பத்துக்களும் தங்களுடைய ஸ்வரூபம் பெறுகைக்காகத்தானே வந்தடையுமென்கிறது.

---

அவ:— இப்படி அழகு குறைவற்ற விஷயத்தையநுபவிக்கும்போது அதுக்கிடான நன்மைகள் வேண்டாவோ என்னில். மேல்விழுந்து அநுபவிக்கவே எல்லா நன்மைகளும் தன்னடையே உண்டாம் என்கிறார்.

---

காக எடுப்பார்களன்றோ. "கருமுகில் தாமரைக் காடு பூத்து" என்றார் கம்பநாட்டாழ்வாரும். ஒவ்வோரவயவத்துக்கும் தனியாக்கியமிடுவது ஒவ்வோரவய்வத்திலும் ஆழ்வார்களுக்குள்ள ஈடுபாட்டைக் காட்டுகிறது. 9.

10. அவ:— குறைவற்ற அழகனான அவனுடைய அழகைப் பேசி அநுபவிப்பதற்கு நமக்குச் சில பெருமைகள் வேண்டுமே! அவற்றை நாம் எப்படி அடைவது? என்னில்: நாம் அவனுடைய திருநாமங்களைச் சொல்லத் தொடங்கும்போதே எல்லாப் பெருமைகளும் தாங்கள் நிறம் பெறுவதற்காக நம்மைத் தாமே வந்து அடையும் என்கிறார்.

வ்யா:-(தேசும்) மதிப்பும், (திறலும்) பராபிபவநஸாமர்த்
மும். (திருவும்) ஐஶ்வர்யமும், (உருவமும்) வடிவழகும். (மாச
குடிப்பிறப்பும்) குற்றமற்றபிறப்பும். (மற்றவையும்நன்கு) அநுச

---

உரை:— வலவருகே புரிந்திருப்பதாய், ஶ்யாமளமா
திருமேனிக்குப் ப்ரதிபடமான வெளுத்த நிறத்தையுடை
தான ஸ்ரீபாஞ்சஜந்யத்தைத் திருக்கையிலே தரித்து
கொண்டிருக்கிற ஸர்வேஶ்வரனுடைய குணசேஷ்டிதங்
களுக்கு வாசகமான திருநாமங்களை ஸாத்ரமாகச்சொல்
தத்பலங்களைச் சிறிது சொல்லப்பார்க்கில், இருந்தே

---

வ்யா:— (வலம் புரிந்த வான் சங்கம் கொண்டான் பேர் ஓத
வலப்பக்கமாகச் சுழித்திருக்கும் சிறந்த சங்கமாகிற பாஞ்சஜன
யத்தை ஏந்தியவனுடைய குணங்களையும், செயல்களையும் பேசு
திருநாமங்களைச் சொல்லத் தொடங்கியவளவில். வான்-சிறந்
சக்ரவர்த்திகளுக்குரியவலம்புரிச்சங்குகளில் மிகச்சிறந்ததான பாஞ்
சஜந்யத்தைக் கொண்டவனுடையாலே இவன் ஸர்வலோகசக்ரவர்த்
யான ஸர்வேஶ்வரன் என்பது தெளிவாகிறது என்று கருத்து
'வான் சங்கம்' என்றது வாலிய சங்கம் (வெளுத்த சங்கம்
என்றதாய், கறுத்த திருமேனிக்குப் ப்ரதிபக்ஷத்தை (வர்ண
சேர்த்தியழகை) அளிக்கும வெளுப்பு நிறத்தை உடையத
யிருக்கை என்றும் கொள்ளலாம். (பேர் ஓத) அவனுடைய திரு
நாமத்தில் ஒன்றைச் சொன்னாலே பல நன்மைகள் வந்தடையு
என்று திருநாமவைபவத்தைச் சொல்லுகிறார். அவன் கட்டி
பொன்போலாருவன் என்றும், திருநாமம் பணிப்பொன் போன்று
என்றும், அவன் தூரஸ்தனானாலும் இது கிட்டிநின்று உதவு
என்றும் சொல்லப்படுகிறதன்றோ. (பேசில்) திருநாமஞ் சொன்ன
தற்குப் பலனைச்சொல்லி முடிக்கமுடியாது; பலஞ்சொல்லவேண்டு
என்னும் முறையில் ஏதோ சில சொல்லிப்பார்த்தால். (தேசும்
ஸர்வலோகமும் கொண்டாடும்படியான மதிப்பால் ஏற்பட்
தேஜஸ்ஸும். தேஜஸ் உள்ளவன் பேசினால்தான் எந்த விஷ
மும் சிறப்புறுமாகையாலே முதலில் அதைச் சொல்லுகிறார்
(திறலும்) பிறரை வென்று கொள்ளும் ஸாமர்த்யமும். அவனை தே
இல்லை செய்வாரும், அழகே வடிவெடுத்த அவனுடைய ரூபகுண
விபூதிகளை இல்லை செய்வாரும், அவனுக்கு ஒத்ததாகவும், மிக

மானவையும் இவையெல்லாமான நன்கு. (பேசில்) திருநாமம் சொன்னதுக்குப் பலம் பேசப்போகாது. ப்ரயோஜனத்திலே பேசில். (வலம் புரிந்தவித்யாதி) ஸர்வேச்வரனுடைய திரு

குடியாகக் கொண்டாடும்படியான மதிப்பால் வந்த தேஜஸ்ஸும், பராபிபவநஸாமர்த்யமும், நிரவதிகமான ஸம்பத்தும், அழகிய ரூபஸ்ரீயும் குற்றமற்ற பகவத் ப்ரத்யாஸத்தியால் வரும் ஆபிஜாத்யமும், மற்றும் சொல்லிச் சொல்லாத நன்மைகளும் நாமிவ்விஷயத்தைக்கிட்டி ஸ்வ

தாகவும் சில தத்துவங்களைச் சொல்லுவாரும் உலகில் நிறைந்திருக்கின்றனரன்றோ; அவர்களை வெற்றிகொள்ளாவிடில் இவன் ஸர்வேஸ்வரனுடைய ஒப்புயர்வற்ற அழகை எப்படிப் பேசமுடியும்? ஆகையாலே அதைச் சொல்லுகிறார். (திருவும்) பெருஞ்செல்வமும். பொருளில்லாதவனுக்கு ஶரீரதாரணமும் இயலாதாகையாலே, அவனைப் பேசுவதற்கு இன்றியமையாததான அதையும் கூறுகிறார். (உருவமும்) "ரூபமேவாஸ்யைதந் மஹிமாநம் வ்யாசஷ்டே" [இவனுடைய உருவமே இவனுக்கு இப்பெருமையைக் காட்டுகிறது.] என்கிறபடியே எல்லாப் பெருமைகளையும் காட்டித்தரும் உருவமும். குரூபியாயிருப்பவன் எதைச் சொன்னாலும் அது எடுபடாதன்றோ. ஆகையாலே ஸ்வரூபத்தைச் சொல்லுகிறது. (மாசில் குடிப்பிறப்பும்) வக்த்ருவைலக்ஷண்யத்தைக் காட்டித்தரும் குற்றமற்ற குடியில் பிறப்பும். "எந்தை தந்தை தந்தை தம் மூத்தப்பன் ஏழ்படிகால் தொடங்கி, வந்து வழிவழி ஆட் செய்கின்றோம்" [திருப்பல்லாண்டு 6] என்கிறபடியே ஏழு தலைமுறை பகவத் ஸம்பந்தத்தில் குறைவற்றிருக்கையைச் சொல்லுகிறது. குடிப் பிறப்பில் குற்றமிருந்தால் 'இக்குடியில் பிறந்தவன் தானே சொன்னான்' என்று இகழ்வதற்கு உறுப்பாகுமாகையாலே மாசில் குடிப்பிறப்பையும் கூறுகிறார். (மற்றவையும்) இனிய வாக்கு முதலான மற்ற பெருமைகளும். எத்தனையிருந்தாலும் வாக்கு இனிமையாயில்லாவிடில் இவன் சொல்லுவதை எவரும் கேட்கமாட்டார்களாகையாலே அதையும், மற்றும் வக்தாக்களுக்கு இருக்க வேண்டிய குணங்களையும், 'மற்றவையும்' என்னும் பதத்தாலே பேசுகிறார். (நலம் புரிந்து நன்கு சென்று அடையும்) விருப்பத்தைச் செய்து நன்றாகச் சென்று அடையும். நலம்–விருப்பம். இவனிடத்தில் நாம் சென்று சேர்ந்தால் நமக்குச் சிறப்பாகும்'

நாமத்தைச் சொல்ல. (நலம்புரிந்து சென்றடையும்) இஸ் ஸம்பத்தெல்லாம் தன்பேருகச் சென்றடையும். 10.

11. நன்கோதும் நால்வேதத் துள்ளான் நறவிரியும்
பொங்கோ தருவிப் புனல்வண்ணன்—சங்கோதப்
பாற்கடலான் பாம்பணையின் மேலான் பயின்றுரைப்பார்
நூற்கடலான் நுண்ணறிவி ளன்.

**நன்கு ஓதும் நால் வேதத்து உள்ளான்**—பிழையற ஓதப் படுகிற நான்கு வேதங்களாலும் சொல்லப்படுமவனும், **நறவு இரியும்**–தேன் தோற்கும்படியான இனிமையை உடையதாய். **பொங்கு ஓதம் அருவி புனல்**—கடல் போலவும் அருவிநீர் போலவுமுள்ளதான. **வண்ணன்**—திருமேனியை உடையவனும். **சங்கு ஓதம் பால் கடலான்**–சங்குகளையுடைய அலைகளை யுடைத்தான திருப்பாற் கடலில் கண்வளர்ந்தருள்பவனும் **பாம்பு அணையின் மேலான்**—சேஷ சயனத்தின் மேல் சயனித் திருப்பவனும். **பயின்று உரைப்பார் நூல் கடலான்**— ஓதி யுணர்த்துகின்ற வைதிகர்களின் கடல்போன்ற சாஸ்திரங் களால் சொல்லப்படுபவனுமான எம்பெருமான். **நுண் அறிவினன்**— (தம் முயற்சியாலே அறிவார்க்கு) அறிய முடியாதவன்.

---

ரூபலாபமும் பெறவேணுமென்று ஸ்நேஹாந்முகமாய்க் கொண்டு தன்பேறாக வந்தடையாநிற்கும். "வான் சங்கம்" என்றது-வெளுத்த சங்கமென்றபடி. 10.

---

என்று கருதினாற்போலே, இந்தப் பெருமைகளெல்லாம் இவனை மிக விரும்பித் தாமே வந்தடையும். 'தீயவர்களிடம் சென்றடைந் தால் நற்குணமும் மதிக்கப்படுவதில்லையாகையாலே, நல்லோர் களாகிய இவர்களைச் சென்றடைந்தால்தான் நாம் நற்குணங்களாகி மதிக்கப்பெறுவோம்' என்று நினைத்தனவோ? என்று சங்கிக்கலாம்படி, இக்குணங்கள் இவர்களைத் தேடித் தாமே வந்தடையும் என்று கருத்து. 10.

அவ:— (நன்கோதும்) அவன் திருநாமத்தைச் சொல்லத் தானே காட்டக் காணுமத்தனை. அல்லாதார்க்கு து₃ர்ஜ்ஞேயனென்கிறது.

வ்யா:— (நன்கோதுமித்யாதி) ப்ரதிநியதவிஶேஷங்களோடே கூட ஸாங்க₃த்₄யயநம் பண்ணின வேதங்களாலே

---

அவ:— கூரியதான ஜ்ஞானத்தையுடையார்க்கல்லது அவனையறிந்து தலைக்கட்டப்போகாது என்கிறார்.

உரை:— ஸ்வரவர்ணாதி₃களில் நழுவுதல் வாராதபடி ஆசார்யோச்சாரணாநூச்சாரண க்ரமத்தாலே நன்றாக ஓதப்படுமதாய் ருக₃ாதி₃பே₄த₃த்தாலே நாலு வகைப்பட்டிருந்

---

11. அவ:— சென்ற பாசுரத்தில், 'திருநாமத்தைச் சொல்லுவார்க்குத் தானே தன்னைக்காட்டி எல்லாப்பேற்றையும் அளிப்பான்' என்றார். மற்ற எவர்க்கும் அறிவதற்கு அரியவன் என்பதைக் காரணம் காட்டி விளக்குகிறார் இப்பாசுரத்தில்.

வ்யா:— (நன்கு ஓதும் நால்வேதத்து உள்ளான்) ஸ்வரம் வர்ணம் முதலானவற்றில் நழுவுதல் வாராதபடி ஆசார்யன் ஓத, அதையொட்டி சிஷ்யனால் ஓதப்படும் நாலுவேதத்தில் உள்ளவன்.

"மந்த்ரோ ஹீந: ஸ்வரதோ வர்ணதோ வா
மித்₂யாப்ரயுக்தோ ந தமர்த்த₂மாஹ।
ஸ வாக்₃வஜ்ரோ யஜமாநம் ஹிநஸ்தி
யதே₂ந்த்₃ரஶத்ரு: ஸ்வரதோऽபராத₄ாத்॥"

[பாணிநிசிக்ஷா-52]

[மந்திரமானது ஸ்வரத்திலோ எழுத்திலோ பிழையுள்ளதாயினும், மாற்றி ஓதப்பட்டாலும், (சொல்ல நினைத்த) பொருளைச் சொல்லாது; அந்த வாக்காகிற வஜ்ரம், ஸ்வரம் தவறினதால் இந்த்ரசத்ரு பதத்தைப்போலே, யஜமானனைத் துன்புறுத்தும்.] என்கிறபடியே ஸ்வரத்தில் சிறிது நழுவினாலும் பெரிய அநர்த்தம் நேருமன்றோ. நன்கு ஓதுகையாவது,—ஸ்வரம், வர்ணம் முதலானவற்றில் குறைவற ஓதுகை. அன்றிக்கே சீக்ஷா முதலான ஆறு அங்கங்களோடு சேர்த்து ஓதுகை என்றும் கொள்ளலாம். அங்கங்களோடு சேர்த்து ஓதாவிடில் அர்த்தத்தை அறிவது அரிதன்றோ (நால் வேதத்து

"वेदैश्च सर्वैरहमेव वेद्यः" (வேதை₃ஶ்ச ஸர்வைரஹமேவ வேத்₃ய: ) என்கிறபடியே ப்ரதிபாதிக்கப்பட்டவன். (நறவித் யாதி ) தேன் தோற்கும்படியாய்க் கிளர்ந்த கடல்போலேயும் அருவிப் புனல்போலேயும் இருந்துள்ள திருமேனியை

---

துள்ள வேதங்களாலே ப்ரதிபாதி₃க்கப்படுமவனாய், நன்றாக விஸ்த்ருமாகாநிற்பதாய் கிளர்த்தியையுடைத்தான கடல் போலேயும், அருவிப்புனல்போலேயுமிருக்கிற திருமேனி யின் நிறத்தையுடையனாய், சங்குகளைக் கொழித்தேறிடா

---

உள்ளான் ) முற்கூறியபடி ஓதப்படும் வேதமும் ஒன்றாயிருக்கை யன்றிக்கே நாலாய், ஒவ்வொன்றும் ஸ்வரம் முதலானவற்றில் வேறுபட்டிருக்கையாலே ஓதுவதற்கரிய நாலு வேதங்களிலும் உட்பொருளாயிருப்பவன். "வேதை₃ஶ்ச ஸர்வை: அஹமேவ வேத்₃ய:" [கீதை 15-15] [ வேதங்கள் அனைத்தாலும் அறியப்படுபவன் நானே ] என்கிறபடியே எல்லா வேதங்களிலும் சொல்லப்படுமவனா யிருந்தபோதிலும், மேலெழப்பார்ப்பார்க்கு அவை இந்திரன் முதலான தேவதைகளைச் சொல்லுகிறவையாகத் தோன்றுகை யாலும், உட்புகுந்து காண்பார்க்கே அந்தர்யாமியான இவனையே எல்லா வேதங்களும் சொல்லுகின்றன என்பது விளங்குமாகை யாலும், 'வேதத்து உள்ளான்' என்கிறார். இத்தால் இவனை ப்ரமாணங்கொண்டு அறிவதிலுள்ள அருமை அறிவிக்கப்பட்ட தாயிற்று. இனி, ப்ரமேயத்தின் அருமையை அறிவிக்கிறார்.— ( நறவு இரியும் வண்ணன் ) தேன் தோற்கும்படியான இனிமையை உடைய திருமேனியை உடையவன். இரியும்–சிதறும்; தோற்கும் என்றபடி. அன்றிக்கே, " விஷ்ணோ: பதே₃ பரமே மத்₄வ உத்ஸ: " "தேனே மலரும் திருப்பாதம் " [திருவாய் 1-5-5] என்று உபய வேதங்களும் முழங்கியபடியே தேன் ஒழுகும் திருமேனி என்கிற தாகவுமாம். ( பொங்கோதருவிப் புனல் வண்ணன் ) பொங்கும் கடல் போலவும், அருவி நீர்போலவும் உள்ள திருமேனியை உடையவன். ஓர் உவமை போராமையால் இரண்டு உவமை யிட்டு, அதுவும் போராமையாலே திருமேனி தன்னையே சொல்லு கிறார். ஆக, இனிமையும், நிறமும் மிக்கிருக்கும் திருமேனியின் பெருமை சொல்லப்பட்டது. 'நற விரியும்' என்று பிரித்து, 'நன்றாக விரியும் (கடல் போன்ற திருமேனியை உடையவன்)' என்று பொருள்கொள்வர் அப்பிள்ளை. இத்தகையவனைக் காண்பது

யுடையவன். (சங்கோதப்பாற்கடலான்) சங்குகளோடே கூடின திரையையுடைத்தான திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளுமவன். (பாம்பணையின்மேலான்) அநந்தசாயி. (பயின்றுரைப்பார் நூற்கடலான்) ஸாத₃ரமாக உரைக்குமவர்களாலே இதிஹாஸ புராணங்களாலே ப்ரதிபாதிக்கப்படு

கின்ற திரைகளையுடைத்தான திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளினவனாய், திருவநந்தாழ்வானாகிற படுக்கையின் மேலே பள்ளிகொண்டருளுமவனாகையாலே ஆஶ்ரித ஸம்ஶ்லேஷைகஸ்வபா₄வனாய், த₄ர்மவீர்ய ஜ்ஞானத்தாலே வேதா₃ர்த்த₂ங்களை உத்தரோத்தரமவகா₃ஹித்து த₃ர்ஶித்து லோகோபகாரமாகச் சொல்லிப்போரும் மன்வாதி₃ பரமரிஷிகளாலே நிர்மிதங்களான ஸ்ம்ருதீதிஹாஸங்களாகிற ஶாஸ்த்ரவர்க்க₃ங்க₃ளாலே ப்ரதிபாதிக்கப்படும் ஸ்வபா₄வ

னங்கே? எனில்: (சங்கோதப் பாற்கடலான்) சங்குகளை அலைகளால் கொழித்து எறிகிற திருப்பாற்கடலிலே சயனித்திருப்பவன். (பாம்பணையின் மேலான்) நீர் உறுத்தாமலிருப்பதற்காக, அதில் ஆதிசேஷனாகிற படுக்கையை விரித்துப் படுத்திருப்பவன். அடியாரோடு அணைந்திருப்பதே தன் இயல்வு என்று குணப்பெருமையையும் காட்டிக்கொண்டிருப்பவன். இப்படிப் பாற்கடலில் பாம்பணையின்மேல் இருப்பவனென்று அறிவது எந்த ப்ரமாணத்திலிருந்து? எனில், ஒரு ப்ரமாணக் கடலுண்டு என்கிறார்,— (பயின்று உரைப்பார் நூற்கடலான்) "தத் ஸர்வம் த₄ர்மவீர்யேண யதா₂வத் ஸம்ப்ரபஶ்யதி" [ரா-பா 3-4] [எம்பெருமானுடைய நடையுடைபாவனைகள் முழுவதையும் த₄ர்மவீர்யஜ்ஞானத்தாலே உள்ளபடி காண்பாய்.] என்கிற பெருமைபெற்ற வால்மீகியைப்போலே த₄ர்மவீர்யஜ்ஞானத்தாலே மேன்மேலே வேதார்த்தங்களை உட்புகுந்து அறிந்து அநுபவித்து, அநுபவம் உள்ளடங்காமல் லோகோபகாரமாக க்ரந்தரூபமாக உரைக்கும் மநு, வியாஸர், பராஶரர் முதலான பரமரிஷிகளாலே இயற்றப்பெற்ற ஸ்ம்ருதிகள், இதிஹாஸங்கள், புராணங்கள் முதலான, கடல்போன்று ஆழ்ந்து, விரிந்து, நீண்டு, அகன்று, பரந்த நூல்களிலிருந்து இவனுடைய இப்பெருமைகளை அறிகிறோம் என்கிறார். இவ்வளவும் உத்₃தே₃ஶ்யமாய், இத்தகையவனாயிருக்கையாலே முயன்று அறிதற்கரியவனு

மவன். ( நுண்ணறிவினன் ) ஸ்வயத்நத்தாலே அறிவார்க்கு துர்ஜ்ஞேயன். 11.

12. அறிவென்னுந் தாள்கொளுவி ஐம்புலனுந் தம்மில்
செறிவென்னுந் திண்கதவஞ் செம்மி—மறையென்றும்
நன்கோதி நன்குணர்வார் காண்பரே நாடோறும்
பைங்கோத வண்ணன் படி.

மறை—வேதத்தை. என்றும்—இடைவிடாது. நன்கு ஓதி—நன்றாக அத்யயநம் பண்ணி. அறிவு என்னும்—(ஆத்ம பரமாத்ம) ஜ்ஞாநமாகிற. தாள் கொளுவி—தாழ்ப்பாளை யிட்டு. ஐம்புலனும்—ஐந்து இந்திரியங்களையும். தம்மில் செறிவு என்னும்—தமக்கு வகுத்த விஷயத்தில் அடக்கி வைப்பதாகிற. திண் கதவம் செம்மி—திடமான கதவை அடைத்து. நன்கு உணர்வார்—நன்றாக தியானிக்குமவர்கள். பைங்கோதம் வண்ணன் படி—பசுமையான கடலின் நிறம் போன்ற நிறமுடையனான எம்பெருமானது தன்மைகளை. நாள் தோறும்—தினந்தோறும். காண்பர்—ஸாக்ஷாத்கரிப்பர்கள்.

---

னய். ஸௌக்ஷ்மார்த்தக்ராஹியான விலக்ஷண ஜ்ஞானத் தாலே அறியப்படும் ஸ்வபாவனாயிருக்கும். பரிசலான அறிவாலறியப்படுமவனல்லனென்று கருத்து. 11.

---

யிருக்கிறான் என்று விதிக்கிறார் கடைசி பதத்தாலே,— ( நுண்ணறி வினன் ) தம் முயற்சியாலே அவனை அறிய நினைப்பார்க்கு அறிய முடியாதவன் என்றபடி. சென்ற பாசுரத்தில் சொன்னபடியே அவன் தானே தன்னைக் காட்டினால் காணலாமேயொழியத் தம் முயற்சியாலே காண நினைப்பார்க்குக் காண அரியவன் என்றபடி. நுண்ணறிவினன்—அறிவுக்கு நுண்ணியவன. அறிதற்கு அரியவன். அன்றிக்கே, நுண்ணிதான—ஸௌக்ஷ்மமான அறிவால் அறியத் தக்கவன்; 'அவன் தானே தன்னைக் காட்டுவார்க்கே அவனை அறிய லாம்' என்னும் ஸௌக்ஷ்மமான அறிவுடையார் அவனை அறியலாமே யொழிய, 'நம் முயற்சியாலே அவனை அறியலாம்' என்னும் ஸ்தூலமான அறிவையுடையார் அவனை அறியமுடியாது என்று கருத்து. 11.

அவ:—(அறிவென்னும்) ஒருத்தருக்கு மறியப்போகாதோ வென்னில், இப்படி யறிவார்க்கறியலாமென்கிறது.

வ்யா:— (அறிவித்யாதி) திண்ணிதான ஶ்ரவண ஜ்ஞாநத்தை மூட்டி. (ஐம்புலனுமித்யாதி) பாஹ்யேந்த்ரி

அவ:— ஆகில் அவனையொருவராகிலுமறிந்து கண்டதாய்த்தலைக்கட்டவொண்ணாதோவென்னில். நாம் சொல்லுகிற இவ்வழியாலே காண்பார்க்குக் காணலாமென்கிறார்.

உரை:—"स्वाध्यायोऽध्येतव्यः"(ஸ்வாத்₄யாயோऽத்₄யேதவ்ய:) என்கிற விதி₄யையநுஸரித்துக்கொண்டு அஶேஷஜகத்துக்கும் ஹிதத்தை அநுஶாஸிக்கையாகிற நன்மையையுடைத்தான வேதத்தை ஸக்ரமமாகவோதி, தத₃ர்த்த₂ஶ்ரவண

12. அவ:— "தம் முயற்சியாலே அவனை ஒருவருமே அறிந்து காணமுடியாதோ? உபாயாந்தர நிஷ்ட்டர்கள் அவனை முயன்று காண்பதாக சாஸ்திரங்கள் கூறுகின்றனவே?" என்னும் ஐயமெழ, "இந்திரிய நிக்ரஹம் முதலான பாடுகள்பட்டு முயன்று பக்தியோகம் கைவரப்பெற்றவர்கள் காணலாம்; அப்படிக் காண்பதில் அருமையை நோக்கியே சென்ற பாசுரத்தில் முயற்சியால் காணமுடியாதவன் என்றது" என்கிறார் இப்பாசுரத்தில்.

வ்யா:—(மறை என்றும் நன்கோதி) "ஸ்வாத்₄யாயோऽத்₄யேதவ்ய" [தை-ஆர 2-15] [வேதத்தை அத்யயனம் செய்யவேண்டும்.] என்கிற விதியை ஓட்டி, எல்லா உலகுக்கும் நன்மையை உபதேசிக்கையாகிற நன்மையை உடையதான வேதத்தை என்றும் முறையோடு ஓதி. (அறிவு என்னும் தாள் கொளுவி) முற்கூறிய வேதப்பொருளைக் கேட்டதினால் ஆத்மவிஷயமாகவும், பரமாத்ம விஷயமாகவும் அறிவுண்டாகுமன்றோ; மனமானது வெளிவிஷயங்களில் ஓடாதபடி அவ்வறிவாகிற தாழ்ப்பாளை வலிதாகக்கோத்து. விலக்ஷணமான ஆத்மபரமாத்ம விஷயமான ஜ்ஞானம் தாழ்ந்த விஷயங்களில் செல்லாதபடி நெஞ்சைத் தடுக்குமாகையால், அதைத் தாளாக உருவகப்படுத்துகிறார். தாழ்ப்பாள் ஒன்றிருந்தால், கதவு ஒன்றிருக்க வேண்டுமே? எனில்: (ஐம்புலனும் தம்மில் செறிவு என்னும் திண் கதவம் செம்மி) மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐந்து இந்திரியங்களையும் தமக்கு வகுத்த இருப்பிட

யங்கள் மநஸ்ஸோடேகூடி மநஸ்ஸு ஆத்மாவோடே கூடியிருக்கிற இந்தச் செறிவாகிற திண்ணிய கதவை இந்த்ரியங்கள் பாஹ்யவிஷயங்களில் போகாதபடி செம்மி. (மறை

ஜநிதமாய் ஆத்மபரமாத்ம விஷய ... ஞானமாகிற தாளை பாஹ்ய விஷயங்களில் மனஸ்ஸு ஓடாதபடி உறைக்கக் கோத்து. ஸ்ரோத்ராதிகளான ஐந்து இந்த்ரியங்களும் தந்தாமுக்கடைத்த இருப்பிடமான ஸுபாஸ்ரயத்திலே செறிந்து நிற்கப்பண்ணுகையாகிற பலிஷ்டமான கதவை, புகவிட்ட மனஸ்ஸு புறப்பட இடமறும்படி யோகாப்யாஸத்தாலே செம்மிப்போகட்டு. இப்படி யோகஜநித

மான ஸுபாஸ்ரயமான பகவானுடைய திவ்யவிக்ரஹத்தில் நெருங்கி நிற்கச்செய்கையாகிற வலிமைமிக்க கதவைச் சாத்தி. ஆத்ம பரமாத்ம விஷயஜ்ஞானமாகிற தாள்போட்டு வைத்தாலும், சஞ்சலமான நெஞ்சு விஷயங்களை நோக்கியே ஓடப் பார்க்கும். அதனாலே, நெஞ்சு ஓடும் வழிகளான இந்திரியங்களை அவற்றுக்கு வகுத்த இடமான ஸுபாஸ்ரயத்திலே நெருங்கிநிற்கச் செய்கையாகிற கதவை நன்கு அடைத்துவைத்தால்-யோகாப்யாஸத்தாலே இந்திரியங்களைப் பரமாத்மாவின் திருமேனியில் ஈடுபடுத்தினால்தான் நெஞ்சம் வெளி விஷயங்களில் ஓட இடமில்லாமற்போகும் என்று கருத்து.

"தாநி ஸர்வாணி ஸம்யம்ய யுக்த ஆஸீத மத்பர:" [கீதை 2-61] [அவ்விந்திரியங்கள் அனைத்தையும் அடக்கி, என்னிடத்திலே மனத்தை யோகாப்யாஸத்தாலே நிலைநிறுத்தக்கடவன்] என்று கீதையில் கண்ணன் இவ்வர்த்தத்தையே அருளிச்செய்தானன்றோ. "ஸ்வாத்யாயாத் யோகமாஸீத" [வி-பு 6-6-2] [வேதாத்யயனத் திற்குப் பின் யோகாப்யாஸம் செய்யவேண்டும்] என்ற கிரமத்தை யொட்டி, பின்புள்ள "மறையென்றும் நன்கோதி" என்றதை முதலில் வைத்து அப்பிள்ளை பொருளுரைத்தபடி இதுவரையில் விவரிக்கப்பட்டது. தொடர்களை உள்ள இடத்திலேயே வைத்துப் பெரியவாச்சான்பிள்ளை அருளிய பொருளை இனிக் காண்போம்.

(அறிவு என்னும் தாள் கொளுவி) கேள்வி ஞானமான வலிய தாளையிட்டு நெஞ்சை சப்தாதிவிஷயங்களில் செல்லாதபடி அடக்கி. (ஐம்புலனும் தம் இல் செறிவு என்னும் திண் கதவம்

யென்றும் நன்கோதி) "योगात्स्वाध्यायमामनेत्" (யோக3ாத் ஸ்வாத்4யாயமாமநேத்) யோகம் கைவந்தாலும் ப்ரமாண ப்ரமேயங்களுடைய சேர்த்தி அநுஸந்திக்கவேணும். (நன்கித்யாதி) உபாஸநம், த்4ருவாநுஸ்ம்ருதி, த3ர்ஶந ஸமாநாகார ப்ரத்யக்ஷதாபத்தி. இவ்வளவாகவுணர்ந்தவர்கள நன்குணர்ந்

---

மான மனஸ்ஸாலே த்4யேயவஸ்துவை ஸாக்ஷாத்காரபர்யந்தம் நன்றாக அறியவல்லவர்கள். பச்சை நிறத்தையுடைத்தான கடல்போலே ஶ்ரமஹரமான திருநிறத்தையுடையனை ஸர்வேஶ்வரனுடைய ரூபகு3ணவிபூ4த்யாதி3களான ஸ்வப4ாவங்களை "ஸதா3 பஶ்யந்தி" என்கிறபடியே

---

செம்மி) மெய் வாய் கண் மூக்கு செவி என்னும் வெளியிந்திரியங்கள் ஐந்தும் தமக்கு இருப்பிடமான மனத்திலும், மனம் தனக்கு இருப்பிடமான ஆத்மாவிலும் கூடியிருக்கையாகிற இந்தச் செறிவாகிற திண்மை(வலிமை)மிக்க கதவை இந்திரியங்கள் வெளிவிஷயங்களில் செல்லாதபடி யோகாப்யாஸத்தாலே அடைத்து வைத்து. (மறை என்றும் நன்கோதி) "யோக3ாத் ஸ்வாத்4யாய மாமநேத்" [வி-பு 6-6-2] [யோகம் கைவந்த பின்னும் வேதாத்யயனத்தைச் செய்யவேண்டியது] என்கிற கிரமத்தாலே, யோகம் கைபுகுந்தாலும், அது நிலைநிற்பதற்காக இடைவிடாமல் வேதாத்யயனத்தை நன்கு செய்வதன்மூலம் ப்ரமாண ப்ரமேயங்களின் சேர்த்தியை அநுஸந்தித்து. (நன்குணர்வார்) "ஸ்வாத்4யாய யோக3ஸம்பத்த்யா பரமாத்மா ப்ரகாஶதே" [வி-பு 6-6-2] [வேதாத்யயனம், யோகம் இரண்டும் நிறைந்திருந்தால்தான் பரமாத்மா ப்ரகாஶிப்பான்.] என்கிறபடியே வேதாத்யயனத்தாலும், யோகத்தாலும் பரிசுத்தமான மனத்தாலே தியானிக்கத்தக்க பொருளான அவனை நன்றாக அறியவல்லவர்கள். (நன்கு உணர்வார்) உபாஸனம், த்4ருவா ஸ்ம்ருதி (நிலையான நினைவு), த3ர்ஶந ஸமாநாகார ப்ரத்யக்ஷதாபத்தி (நேரே காண்பது போன்ற ப்ரத்யக்ஷ நிலையை அடைதல்) என்று சாஸ்திரங்களில் சொல்லப்படுமளவும் பக்தி யோகம் கைவரப்பெற்றவர்களை இங்கு 'நன்கு உணர்வார்' என்கிறது. (பைங்கோதவண்ணன் படி காண்பரே) முற்கூறிய அத்தனை பாடுகளையும் படுகிறவர்கள் பச்சை நிறத்தை உடைத்தான கடல்போலே கண்டார் களைப்பை ஆற்றும் திருநிறத்தை உடையவனை ஸர்வேஶ்வரனுடைய ரூபகுணவிபூ4திகள் முதலான

தவராகிறார். ப்ரமஹரமான வடிவையுடையவனுடைய படி இப்படி யுணர்ந்தவர்கள் நாள்தோறுங் காண்பர்கள். 12.

13. படிவட்டத் தாமரை பண்டுலகம் நீரேற்று
அடிவட்டத் தாலளப்ப நீண்ட—முடிவட்டம்
ஆகாய மூடறுத்து அண்டம்போய் நீண்டதே
மாகாயமாய் நின்ற மாற்கு.

பண்டு—முன்னொரு காலத்தில். ...ம் நீர் ஏற்று—(மாவலிடம்) பூமியை தானம் வாங்...ண்டு. தாமரை படிவட்டம்—தாமரை மலர்ந்தாற்போலே வட்ட வடிவமா யிருக்கிற பூமியை. அடி வட்டத்தால் அளப்ப—திருவடி வளையத்தால் அளப்பதற்காக. மா காயம் ஆய் நின்றமாற்கு—பெரிய திருமேனியாய் [திரிவிக்கிரமனாய்] வளர்ந்து நின்ற எம்பெருமானுடைய. நீண்ட முடி வட்டம்—நீண்ட திருமுடி வளையமானது. ஆகாயம் ஊடு அறுத்து—மேலுலகங்களின் வழியாகச்சென்று. அண்டம் போய் நீண்டதே — அண்ட கடாஹத்தளவாக வளர்ந்ததே! இஃது என்ன ஆச்சரியம்!.

---

இன்றோடன்றோடு வாசியற எப்போதும் கண்டநுபவிக்கப் பெறுவர்கள். இப்பாட்டிலும் கீழ் அறியவரியனென்றத்தை உபபாதித்தாராய்த்து. 12.

அவ:—இப்படி ஸ்வயத்நத்தாலே காண்பார்க்கு வருத்த முண்டித்தனைபோக்கி அவன்றானே கொண்டுவந்து காட்டு மன்று வருத்தமறக் காணலாமென்கிறார்.

---

தன்மைகளைக் காண்பார்கள். (நாள்தோறுங் காண்பரே) ''ஸதா₃ பஶ்யந்தி'' [நித்யஸூரிகள் எப்போதும் காண்கிறார்கள்] எனகிற படியே இன்றோடு அன்றோடு வாசியற எப்போதும் கண்டு அநுபவிக்கப்பெறுவர்கள். உபாயாந்தர நிஷ்டர்கள் அவனை அறிவதற்குப் படும்பாடுகளை விவரிப்பதன்மூலம் சென்ற பாசுரத்தில் 'நுண்ணறிவினன்' என்று தம் முயற்சியால் அறிய அரியவனைச் சொன்னதையே விளக்கினாராயிற்று. 12.

13. அவ:— சென்ற பாசுரத்தில் கூறியபடியே தம் முயற்சியாலே அவனைக் காணமுயல்வார்க்கு அருமையுண்டேயொழிய, அவன தானே தன்னுடைய பெருமைகளைக் காட்டக்கண்ட நாம் அருமையில்லாமல் காண்கிறோம் என்று ஒரு சேஷ்டிதத்தைக் கண்டபடியைப் பேசுகிறார்.

வ்யா:— (படிவட்டத்தாமரை) பூவலயமாகிற தாமரைப் பூவை. (பண்டித்யாதி) அடிவலயத்தாலே அளப்ப. (நீண்ட வித்யாதி) வடிவாலே பாரித்து வ்யாமோஹத்தையுடையனை

உரை:— முன்பொருநாளிலே லோகத்தை மஹாபலி பக்கலிலே சென்று நீரேற்று வாங்கிக்கொண்டு பூமண்டலமாகிற தாமரையைப் பாதவலயத்தாலே அளக்க, அண்டகூடாஹம் வெடிக்கும்படி விம்மவளர்ந்த ஸர்வேஸ்வரனுக்குப் பெருக்காறு சுழித்தாற்போலே சுழித்துக்கிளருகிற ஒளிவெள்ளத்தையுடைத்தாய் மூசிவழவளர்ந்த திரு

வ்யா:—(பண்டு) முன்னொருநாளிலே வாமனனாய் அவதரித்த போது. (உலகம் நீரேற்று) மகாபலியிடம் சென்று தன்னுடைய தான உலகத்தைத் தானே அவனிடம் தானநீர் ஏற்று வாங்கிக்கொண்டு. (தாமரைப் படி வட்டம்) பூமண்டலமாகிற தாமரையை. பூவினும் மெல்லிய திருவடிகளுக்கு என் வருகிறதோ என்று வயிறு பிடித்து, காடும் மலையுமான உலகைத் தாமரையாக உருவகப்படுத்தி ஆறுதலடைகிறார். தாமரைபோலவே வட்ட வடிவமாக இருக்கையாலே உலகைத் தாமரை என்கிறாராகவுமாம். (அடிவட்டத்தால் அளப்ப) பூமண்டலமாகிற தாமரைக்குத் தக்கபடி வட்டவடிவமாக வளர்ந்த திருவடிகளாலே அளப்பதற்காக. (மாயமாய் நின்ற மாற்கு) அண்டச் சுவரும் வெடிக்கும்படி விம்மி வளர்ந்த ஸர்வேஸ்வரனுக்கு. (மாற்கு)

"ஏக: ப்ராஸீஸரத் பாதும் ஏக: ப்ராக்ஷாளந் முதா |
அபரோऽப்யதாரம் மூர்த்நா கோऽதிகஸ் தேஷு கண்யதாம் ||"

[ஒருவன் திருவடியை நீட்டினான். மற்றொருவன் அத்திருவடியை உவப்புடன் விளக்கினான். வேறொருவன் அத்திருவடி நீரைத் தலையாலே தாங்கினான். இவர்களுள் எவன் பெரியவன் என்பதைக் காணலாகாதோ?] என்கிறபடியே திரிவிக்ரமனாய் நின்ற நிலையிலேயே இவனே ஸர்வேஸ்வரன் என்று அறுதியிடலாம்படி இருந்தவனுக்கு என்று கருத்து. மால்-பெரியவன்; ஸர்வேஸ்வரன். அன்றிக்கே இந்திரன் முதலான அடியார்களிடத்திலே அன்புடையவனுக்கு என்றும் பொருள் கொள்ளலாம். அவ்வன் பினாலேயே

வனுக்குத் திருவபிஷேகமானது ஆகாசத்தையூடறுத்து அண்டபித்திக்கவ்வருகே நீண்டது. 13.

14. மாற்பால் மனஞ்சுழிப்ப மங்கையர்தோள் கைவிட்டு
நூற்பால் மனம்வைக்க நொய்விதாம்— நாற்பால
வேதத்தான் வேங்கடத்தான் விண்ணோர் முடிதோயும்
பாதத்தான் பாதம் பணிந்து.

**நாற்பால வேதத்தான்**—நான்கு வகைப்பட்ட வேதங்களாலே சொல்லப்படுபவனும்; **வேங்கடத்தான்**—திருமலையிலே நிற்கும் எளிமையுடையவனும். **விண்ணோர் முடி தோயும் பாதத்தான்**—நித்யஸூரிகளின் முடிகள் பொருந்தும்படியான திருவடிகளையுடையவனுமான எம்பெருமானுடைய **பாதம்**—திருவடிகளை, **பணிந்து**—ஆஸ்ரயித்து, **மால் பால்**—அந்த ஸர்வேஶ்வரனிடத்திலே, **மனம் சுழிப்ப**—நெஞ்சு ஈடுபட, (அதனாலே) **மங்கையர் தோள் கைவிட்டு**—ஸ்த்ரீ

---

வபிஷேகமானது அந்தரிக்ஷாதிகளான ஊர்த்வலோகங்களை ஊடுருவிக்கொண்டுபோய் அண்டகடாஹத்தளவும் செல்ல வளர்ந்ததே! இதென்ன ஆஶ்சர்யமென்றநுபவிக்கிறார். 13.

---

தன் பெருமைக்குத்தகாதபடி தன்னதான உலகைத் தானே மாவலியிடம் கையேந்தி வாங்கினான் என்று கருத்து. (நீண்ட முடிவட்டம்) பெருக்கெடுத்து வரும் ஆறு சுழித்துக்கொண்டு வெள்ளமிடுவதுபோலே, சுழித்து எழுகின்ற ஒளிவெள்ளத்தையுடையதாய், நீண்டு வளர்ந்த திருமுடியானது. (ஆகாய மூடறுத்து) அந்தரிக்ஷம் முதலான மேல் உலகங்களை ஊடுருவிக்கொண்டுபோய். (அண்டம்போய் நீண்டதே) "ஸ பூமிம் விஶ்வதோ வ்ருத்வா அத்யதிஷ்டத்தஶாங்குலம்" [பு ஸூ] [அவர் உலகம் முழுவதையும் வியாபித்து, அதற்குமேலும் நெடுந்தூரம் வளர்ந்தார்.] என்கிறபடியே, ரக்ஷ்யத்தின் அளவல்லாத ரக்ஷகனின் பாரிப்பாலே, அண்டச்சுவர் வரையிலும் சென்று அதையும் ஊடுருவிக்கொண்டு அதற்கப்பாலும் வளர்ந்ததே! இதுஎன்ன ஆச்சர்யம்! என்று அநுபவிக்கிறார். 13.

களின் தோளோடே அணையவேணுமென்கிற ஆசையைக் கை விட்டு நூல் பால்-(வேதம் முதலிய) சாஸ்திரங்களிலே. மனம் வைக்க-மனம் செலுத்துவதற்கு. நொய்விது ஆம்-எளிதாகும்.

அவ:— (மாற்பால்) "அறிவென்னுந்தாள்கொளுவி" என்கிறபாட்டிற் சொல்லுகிறபடி இந்த்₃ரியஜயம்பண்ணி அறிகை அரிதாயிருந்ததீ; அஶக்தர் இழக்குமத்தனையோ வென்னில். இழக்கவேண்டாத உபாயம் சொல்லுகிறது.

---

அவ:— கீழே "ஐம்புலனும் தம்மில் செறிவென்னும் திண்கதவம் செம்மி" என்று. இந்த்₃ரியஜயம்பண்ணுகை அரிது; இந்த்₃ரியஜயம் பண்ணினார்க்கல்லது அவனைக்காண முடியாது; கண்டாலல்லது இந்த்₃ரியங்களை ஜயிக்க முடியாது; ஆனபின்பு அஜிதேந்த்₃ரியரான அஶக்தர் அவனை யிழக்குமித்தனையோ? என்னில், 'அஜிதேந்த்₃ரியரானார்க்கும் கண்ணாலே கண்டாஶ்ரயிக்கலாம்படி திருமலையிலே வந்து ஸுலபனானான்; ஆனபின்பு அவனை எளிதாக ஆஶ்ர யிக்கலாம்' என்கிறார்.

---

14. அவ:— "அறிவென்னும் தாள் கொளுவி" என்கிற பாசுரத்தில் "ஐம்புலனும் தம்மில் செறிவென்னும் திண்கதவம் செம்மி" என்று யோகா₃ப்₄யாஸத்தாலே ஶுபா₄ஶ்ரயமான அந்தர்யாமி ரூபத்திலே நெஞ்சைச் செலுத்தியவர்களுக்கு இந்திரியங்களை வெல்லலாமென்றும் இப்படி இந்திரியங்களை வென்றார்க்கல்லது அவனைக் காணமுடியாது என்றும் கூறினார். இப்படி யோகா₃ப்₄யாஸம் செய்யமுடியாத அஶக்தர்கள் ஶுப₄ாஶ்ரயமான திருமேனியிலே நெஞ்சு செலுத்தமுடியாதாகையால், அவர்கள் இந்திரியங்களை வெல்வதும் அவனைக்காண்பதும் அரிதன்றோ எனவும் கேள்வி யெழ, "இப்படி யோகா₃ப்₄யாஸத்தால் அந்தர்யாமியைக் கண்டு இந்திரியங்களை வெல்லமுடியாதவர்களுக்கும் கண்ணாலே கண்டு ஆஶ்ரயித்து இந்திரியங்களை வெல்லலாம்படி ஶுபாஶ்ரயத் திரு மேனியோடே திருமலையிலே அர்ச்சாவதாரமாகவந்து எளியனானான். ஆகையாலே, தம்மைப்போலே அவன்தானே தன்னைக் காட்டப் பெறாத அஶக்தர்களும் அவனை அடையலாம்" என்கிறார் இப்பாசுரத்தில்.

வ்யா:— (நாற்பாலவேதத்தான்) நாலுவகையான வேதத்தாலே ப்ரதிபாதிக்கப் படுமவன். வேதைகஸமதிகம்யனுகில் கண்ணுலே காண்கிற ஶப்தாதிகளை அநுபவிப்பார்க்குக் காணவரிதிறேயென்னில்; (வேங்கடத்தான்) கண்ணுலே கண்டநுபவிக்கும்படி திருமலையிலே வந்து நின்றவனே. ஆகில் கண்ணுலே காணப்படுகிற சப்தாதிகளோடொக்குமோவென்னில், (விணணோர் முடிதோயும் பாதத்தான்) இப்படி

---

உரை:— நாலு வகைப்பட்ட வேதங்களாலே ப்ரதிபாதிக்கப்படுமவனுய், இப்படி ஓலைப்புறத்திலே கேட்டுப்போகாதே கண்டநுபவிக்கலாம்படி திருமலையிலேவந்து நிற்கிற ஸௌலப்யத்தையுடையனுய் இப்படி ஸுலபனுன நிலைதன்னிலே நித்யஸூரிகளும் திருவடிகளிலே தலைமடுத்தாஶ்ரயிக்கலாம்படி பெரிய மேன்மையையுடையனுனவ

---

வ்யா:— (நாற்பால வேதத்தான்) நால[illegible]ட்ட வேதங்களாலே பரம்பொருளாக முழங்கப்படுபவ[illegible]படி வேதத்தாலேயே அறியப்படுபவனுகில், கண் முதலான இந்திரியங்களாலே சப்தம் முதலான விஷயங்களை அனுபவிப்பதிலேயே பயின்று கொண்டிருக்கும் ஸம்ஸாரிகளுக்குக் காண அரிதாயிற்றே என்னில்,— (வேங்கடத்தான்) இப்படி ஓலைப்புறத்திலே கேட்டுப்போவது மாத்திரமன்றிக்கே, கண்டு அநுபவிக்கலாம்படி திருமலையிலே வந்து நிற்கின்ற எளிமையையுடையவன். அப்படியானல் கண் முதலான இந்திரியங்களாலே அனுபவிக்கப்படும் சப்தம் முதலான விஷயங்களைப்போலே இவ்விஷயமும் தாழ்ந்ததோ? என்னில்,— (விண்ணோர் முடிதோயும் பாதத்தான்) இப்படி எளியனுய் இருந்தபோதிலும், அயர்வறும் அமரர்களான நித்யஸூரிகளும் திருவடிகளிலே தலையைவைத்து ஆஶ்ரயிக்கலாம்படி பெரியமேன்மையை உடையவன். ஆகையாலே ஶப்தாதி விஷயங்களைப்போலே இவ்விஷயம் தாழ்ந்ததோ என்று ஶங்கிக்க இடமில்லை என்று கருத்து. (பாதம்பணிந்து) யோகாப்யாஸத்தாலே அந்தர்யாமியைக் காண முடியாதவர்களும் அர்ச்சாமூர்த்தியான இவனுடைய பாதத்தைப் பணியலாம் என்று கருத்து. (பாதம் பணிந்து) சேஷபூதனை தன் ஸ்வரூபத்துக்குத் தக்கபடி திருமேனியிலே மற்ற அவயவங்கள் நிற்க, திருவடிகளையே பணிந்து. (மாற்பால் மனம் சுழிப்ப)

திருமலையிலே நிற்கிறவன் நித்யஸூரிகளுக்கு ஸ்ப்ருஹணீயனானவன். அவன் திருவடிகளிலே பணிந்து. (மாற்பால் மனம் சுழிப்ப) வ்யாமுக்₃த₄னாயிருக்கிறவன் பக்கலிலே மநஸ்ஸு சுழிக்க. (மங்கையர் தோள் கைவிட்டு) நரகத்திலே மூட்டக்கடவதான ஸ்த்ரீகளுடைய தோளைக் கைவிட்டு. (நூற்பால்மனம் வைக்க நொய்விதாம்) ப்ரமாணங்களிலே அல்பம் மநஸ்ஸை வைக்கவெளிதாம். 14.

---

னுடைய திருவடிகளை ஆஶ்ரயித்து ஸர்வேஶ்வரன் பக்கலிலே மனஸ்ஸு ப்ரவணமாக, போ₄க₃யோக்₃யமான பருவத்தைக் காட்டித் துவக்கக்கடவ ஸ்த்ரீகளுடைய தோளோடேயணைந்தநுபவிக்கவேணுமென்னும் ஆசையை ஸவாஸநமாகவிட்டு வேத₃ாதி₃ ஶாஸ்த்ரங்களிலே மனஸ்ஸை வைக்கைக்கு எளிதாம். 14.

---

முற்கூறிய மேன்மையையும் எளிமையையும் ஒருசேரப்பெற்ற ஸர்வேஶ்வரனிடத்திலே நெஞ்சை ஈடுபடுத்தினால். நம்மிடம் அன்பாலே தன்னை எளியனாக்கி வைத்திருப்பவனிடம் நாமும் அன்பைச் செலுத்தினால் என்றுமாம். யோக₃ாப்₄யாஸத்தாலே அந்தர்யமியைக் காணமுடியவில்லை என்னும் குறைதீரத்தானே தன் திருமேனியை அனைவர்க்கும் காட்டி நிற்கையாலே, அர்ச்சாமூர்த்தியிடத்திலே மனத்தை ஈடுபடுத்துவது ஸம்ஸாரிகளுக்கும் எளிது என்று காட்டுகிறார். (மங்கையர்தோள் கைவிட்டு) சிற்றின்பத்துக்குத் தகுதிபடைத்த மங்கைப்பருவத்தைக்காட்டி ஈடுபடுத்துகின்ற பெண்களுடைய தோளோடே அணைந்து அவ்வின்பத்தையனுபவிக்க வேணும் என்னும் ஆசையானது, திருமாலிடத்திலே ஈடுபட ஈடுபடத்தானே வாஸனையோடு தொலையும் என்று கருத்து. இதையே "அத்தோள் தொழுதார் பிறந்தார் பிறந்து எய்தும் பேரின்பமெல்லாம் துறந்தார்" (இர-திருவ-42) என்று பூதத்தாழ்வாரும் அருளினார். இங்கு மங்கையர் தோளைச் சொன்னது நரகத்தை அடைவிக்கும் ஶப்தாதிவிஷயானுபவம் அனைத்துக்கும் உபலக்ஷணம். (நூற்பால் மனம் வைக்க நொய்விதாம்) முற்கூறியவாறு சப்தாதி விஷயானுபவம் கழிந்தவுடன் வேதம் முதலான ஶாஸ்த்ரங்களிலே சிறிதேனும் மனத்தைவைக்க எளிதாகும். மனம் வைத்தபின் தக்க உபாயத்தை அநுஷ்டித்து அவனை அடைவதும் எளிது என்று கருத்து. 14.

15. பணிந்துயர்ந்த பௌவப் படுதிரைகள் மோத
பணிந்தபண மணிகளாலே—அணிந்தங்
கனந்தனணைக் கிடக்குமம்மான் அடியேன்
மனந்தனணைக் கிடக்கும் வந்து.

**பணிந்து உயர்ந்த**—*தாழ்ந்தும் ஏறியும் வீசுகின்றவை யான,* **பௌவம் படுதிரைகள்**—*கடலிலுண்டான அலை களானவை.* **மோத**—*எல்லாப்புறமும் அடிக்க.* **பணிந்த**—*(அத்திவலைகள் திருமேனியில் படாதபடி குடைபிடித்தாற் போலே) கவிந்திருக்கிற.* **பணம்**—*படங்களிலுண்டான.* **மணிகளாலே**—*மாணிக்கங்களினாலே.* **அணிந்த**—*அலங்கரிக் கப்பட்டிருக்கிற.* **அனந்தன்**-*திருவனந்தாழ்வானாகிற.* **அணை**-*திருப்பள்ளிமெத்தையிலே.* **கிடக்கும்**-*சயனிக்கிற.* **அம்மான்**-*ஸர்வேஶ்வரன் (அந்தப் படுக்கையிற் பொருந்தாதே).* **அங்கு**—*அங்கு நின்றும்.* **வந்து**—*புறப்பட்டுவந்து.* **அடி யேன்தன்**—*அடியேனுடைய.* **மனம் அணை**—*மனமாகிற படுக்கையில்.* **கிடக்கும்**—*திருக்கண் வளரா நின்றான்.*

---

அவ:— (பணிந்து) அவனாலே ஸ்வயம் [illegible] பட்ட வனுக்கு துக்கமொன்றுமில்லையிறே என்கிறது.

வ்யா:— (பணிந்தித்யாதி) தாழ்வதுகிளருவதானகடல் திரைகளை மோத. மோதவென்கிறது—குறுந்திவலை படிலும்

---

அவ:— *இப்படியரியனானவனை நீர்கண்டு அநுபவிக்கப் பெற்றபடி எங்ஙனேயென்ன. 'நிர்ஹேதுகமாக என் ஹ்ருதயத்திலேபுகுந்து கண்வளரக்கண்டேன்' என்கிறார்.*

---

15. அவ:—சென்ற பாசுரங்களில் எம்பெருமானையடைய அரிய வழியையும் எளிய வழியையும் காட்டினார். 'இவ்வழிகளிலே எவ் வழியிலே நீர் முயன்று அவனைக்கண்டீர்' என்னும் கேள்வி எழ, 'அவன் தானே என் நெஞ்சிலேபுகுந்து நிர்ஹேதுகமாகத் தன்னைக் காட்டக்கண்ட எனக்கு இவ்விருவழிகளிலும் உள்ள சிரமம் சிறிதும் இல்லை' என்கிறார்.

திருமேனியிலே ஒரு மலை விழுந்தாற்போலேயிருக்கை. (பணிந்த பணமணிகளாலே) அத்திவலைகள் திருமேனியில் படாதபடி காத்த பணத்தின் மணிகளாலே. (அணிந்தித்யாதி) அதினாலே அலங்க்ருதனான திருவனந்தாழ்வானென்கிற படுக்கையிலே கிடக்கிற ஸர்வேஶ்வரன். (வந்து அடியேன் மனங்

---

உரை:— ஸ்வஸந்நிதாநத்தாலே மேலே கிளர்ந்தும், கீழேவிழுந்துஞ் செல்லுகிற கடலில் உண்டான அலைகளானவை நாலுபாடுங்கண்பாராமலலைக்க. அத்திவலைகள் திருமேனியில் படாதபடி குடைபிடித்தாற்போலே கவிந்திருக்கிற பூணைமண்டலத்திலுண்டான மாணிக்கங்களாலே அழகுபெற அலங்கரித்துக் கொண்டிருக்கிற திருவனந்

---

வ்யா:— (பணிந்துயர்ந்த பௌவப் படுதிரைகள் மோத) 'எம்பெருமானை ஸ்பரிசிக்கவேண்டும்' என்னும் ஆவலாலே மேலே எழுவதும், கீழே விழுவதுமாயிருக்கும் கடலில் உண்டாகும் அலைகளானவை நாற்புறமும் எம்பெருமானுடைய மென்மையை நோக்காமல் மலை மோதுவதுபோலே மோதிக்கொண்டிருக்க. 'மோத' என்னும் பதம், சிறு திவலை பட்டாலும், திருமேனியிலே ஒரு மலைவிழுந்தாற்போலேயிருக்கும் திருமேனி மென்மையைக் காட்டுகிறது. இப்படி நாற்புறமும் மலைகள்போலே அலைகள்மோதக் கேட்பாரற்றுக்கிடக்கிறதோ? என்னில், காப்பாருண்டு எனகிறார் மேலே,— (பணிந்த பணமணிகளாலே அணிந்து) அத்திவலைகளில் ஒருசிறிதும் திருமேனியிலே படாதபடி குடைபிடித்தாற்போலே, கவிந்திருக்கும் படமண்டலத்தில் (படங்களில்) உள்ள மணிகளாலே அழகுபெற அலங்கரித்துக்கொண்டுள்ள. (அனந்தன் அணைக்கிடக்கும்அம்மான்) திருவனந்தாழ்வானாகிற திருப்பள்ளி மெத்தையிலே சயனித்திருக்கிற ஸர்வேஶ்வரன். (அனந்தன்) எத்தனை அலை மலைகள் மோதினாலும், அவற்றையெல்லாம் தானே தாங்கிக்கொண்டு எம்பெருமானைக் காக்கவல்ல அனந்த பலத்தையுடையவன். அஸ்தாநே பயஶங்கையில் அநந்தனாய் (அளவற்றவனாய்) இருப்பவன் என்றுமாம். "அமிதௌஜா: பர்யங்க:" [அளவற்ற பலத்தையுடையவன் படுக்கை] என்றதன்றோ கௌஷீதகி உபநிஷத்தும், (அங்கு அனந்தன் அணைக்கிடக்கும் அம்மான்) அத்தகைய படுக்கையில் கிடப்பதில்

தனனேக்கிடக்கும்) அப்பெரிய படுக்கையிலே கிடக்குமவன் பரியவுமறியாதே. அப்படுக்கை வாய்ப்புமின்றிக்கேயிருக்க வந்து என் மநஸ்ஸிலே தங்காநின்ருன். எங்கே தங்குமவன் எங்கே தங்காநின்ருன்? கிடக்க வொருபடுக்கையில்லாதவன் படுக்கையுள்ள விடந்தேடிவருமாபோலே. திருவயோத்யையிலுள்ளார் அவனைச் சரணம்புக்குக்கிடக்க. "आवासन्त्वहमिच्छामि" (ஆவாஸந்த்வஹமிச்சாமி) என்றிருந்தாற்போலே. 15.

---

*தாழ்வானுகிற திருப்பள்ளி மெத்தையிலே பள்ளி கொண்டருளாநின்றுள்ள ஸர்வேஶ்வரன் அந்தப் படுக்கையிற் பொருந்தாதே அங்குநின்றும் அத்யபிநிவிஷ்டனாய்க் கொண்டுவந்து அநந்யார்ஹஶேஷபூதனை என்னுடைய மனஸ்ஸாகிற படுக்கையிலே பள்ளிகொண்டருளாநிற்கும்.15.*

---

ருந்தே இவனே ஸர்வேஶ்வரன் என்பது தெளிவாகிறது. (வந்து அடியேன் மனந்தன் அணைக்கிடக்கும்) அந்தப் படுக்கையிற்பொருந்தாமல் அங்குநின்றும் பெருங்காதலுடன் அடியேனிருக்குமிடந்தேடி வந்து, தனக்கே அடிமைப்பட்டிருக்கும் என் மனமாகிற படுக்கையிலே பள்ளிகொண்டருள்வான். (அங்கு கிடக்கும் அம்மான் வந்து அடியேன் மனந்தன் அணை கிடக்கும்) அப்பெரிய படுக்கையிலே கிடப்பவன், அவ்வனந்தனைப்போலே பரியவும் அறியாதே, மென்மை, குளிர்த்தி, நறுமணம் முதலான படுக்கைக்குணங்களு ற்ற என் கல்மனத்திலே தங்கினுன்! எங்கே படுத்திருந்தவன் எங்கே வந்து படுத்துக்கொண்டான்? தங்க ஓரிடமும், கிடக்க ஓர் படுக்கையும் இல்லாதவனுக்கு அரண்மனையில் மெத்தென்ற பஞ்ச சயனம் கிடைத்தாற்போலே, அவ்வரிய படுக்கையைவிட்டு இக்கல் மனத்தை விரும்பினுன்! திருவயோத்தியிலுள்ளோர் 'அயோத்திக்கு வரவேணும்' என்று அவனைச் சரணம்புகுந்து நிற்க, அவர்களைவிட்டுக் காடுசென்று. 'ஆவாஸம் த்வஹமிச்சாமி' [ரா·ஆர 5-34] [ஓரிருப்பிடத்தை வேண்டுகிறேன்] என்று ரிஷிகளிடம் இருப்பிடம் கேட்டுநின்றதுபோலே இருந்தது இது என்று கருத்து. இப்படி மேல் விழுந்து அவன்தானே என்னைத்தேடிவந்தமையாலே, அவனை முயன்று பெறும் எவ்வழியிலும் துவண்டு நான் சிரமப்படவில்லை என்ருராயிற்று. 15

16. வந்துதைத்த வெண்டிரைகள் செம்பவள வெண்முத்தம்
அந்திவிளக்கு மணிவிளக்காம்—எந்தை
ஒருவல்லித் தாமரையாள் ஒன்றியசீர் மார்பன்
திருவல்லிக் கேணியான் சென்று.

ஒரு **அல்லி தாமரையாள்**—ஒப்பற்ற அழகிய இதழ்களை யுடைய தாமரைப்பூவை இருப்பிடமாகவுடைய பெரிய பிராட்டியார். **சென்று ஒன்றிய் சீர் மார்பன்**—வந்து பொருந்திய அழகிய திருமார்பையுடையவனும், **வெண் திரைகள் வந்து உதைத்த செம் பவளம் வெண் முத்தம்**—வெளுத்த அலைகள் மோதித்தள்ளிய சிவந்த பவழங்களும் வெளுத்த முத்துக்களும். **அந்தி விளக்கும் அணி விளக்குஆம்**—மாலை நேரத்தை விளங்கவைக்கும் மங்கள தீபங்களாக ஆகப்பெற்ற. **திருவல்லிக்கேணியான்**—திருவல்லிக்கேணியில் எழுந்தருளி யிருப்பவனுமான பெருமான், **எந்தை**—எனக்கு ஸ்வாமி.

அவ:— (வந்து) இப்படி வந்து தங்குகைக்கடி பிராட்டி யோடேயிருக்கை யென்கிறார்.

---

அவ:— திருப்பாற்கடலில் நின்றும் தம் திருவுள்ளத்துக்கு வருகிறபோது திருவல்லிக்கேணியிலே தங்கினானென்கிறார்.

---

16. அவ:— இப்படித் தாம் பரக₃தஸ்வீகாரத்துக்கு விஷயமானதற்குக் காரணமென்னவெனில்: திருப்பாற்கடலினின்றும் சேதநன் ஒருவனைக் கிடைக்கப்பெறுவோமோ? என்னும் ஆசையாலே திருவல்லிக்கேணிக்கு எழுந்தருளியபோது, 'இவ்வருகிலே வந்த இவனைக் கடாக்ஷிக்கவேண்டும்' என்று பிராட்டி புருஷகாரம் செய்கையே காரணம் என்கிறார்.

வ்யா:— (வந்தித்யாதி) வந்து உதையாநின்றுள்ள வெண்டிரைகளாலே உண்டான சிவந்த பவளமும். ஒளியை யுடைத்தான முத்தும். அந்திக்கு ப்ரகாஶகமாக நின்ற மங்கள தீபத்தை யுடைத்தான திருவல்லிக்கேணியிலே நின்றவன். (சென்று ஒருவல்லித்தாமரையாள் ஒன்றிய சீர்மார்பன்) "पश्यतां सर्वदेवानां ययौ वक्षःस्थलं हरेः" (பஶ்யதாம் ஸர்வ

---

உரை:— அழகிய அல்லியையுடைத்தான தாமரையை இருப்பிடமாகவுடையளாய். நிரதிஶய போ₄க்₃யையான பெரியபிராட்டியார், அம்ருதமத₂ன ஸமயத்திலே நிற்கிற தேவர்களை மதியாமற்சென்று "இறையுமகலகில்லேன்" என்று பொருந்தி வர்த்திக்கும்படியான அழ... திரு

---

வ்யா:— (வந்துதைத்த வெண்திரைகள் செம்பவள வெண் முத்தம்) கரையிலே வந்து உதைக்கின்ற வெண்மைமிக்க அலைகளில் உள்ள சிவந்த பவளங்களும், வெளுத்து ஒளிமிக்க முத்துக்களும். வெண்திரைகள் வந்துதைத்த செம்பவள வெண்முத்தம் என்று கூட்டி, கடலின் அலைகள் வந்து தள்ளாநின்றுள்ள செம் பவளக்கொடிகளும், வெண்முத்துக்களும் என்றும் கொள்ளலாம். இது மற்ற ரத்னங்களுக்கும் உபலக்ஷணம். (அந்தி விளக்கும் அணி விளக்காம் திருவல்லிக்கேணியான்) செம்பவளங்களும், வெண்முத்துக்களும் கரு நீலம் முதலான மற்ற ரத்தினங் களும் மாலை நேரத்தை விளங்கவைக்கும் பல நிறமுடைய மங்களதீபங்களாயிருக்கும் திருவல்லிக்கேணியில் நித்ய வாஸம் செய்பவன். 'வந்துதைத்த வெண் திரைகள்' என்று தொடங்கியுள்ள விசேஷணத்திற்குக் கருத்து என்னவெனில்: யாத்₃ருச்சி₂கமாக எறியப்பட்ட பவளங்களும், முத்துக்களும், ரத்தினங்களும் கரையை அணிசெய்வதுபோலே ஸம்ஸாரத்திற்கு அணிவிளக்காயிருக்கும் சில புருஷரத்னங்களை நாமும் கிடைக்கப் பெறுவோமோ? என்னும் ஆசையாலேயே இவன் திருப்பாற் கடலில் நின்றும் திருவல்லிக்கேணிக்கு எழுந்தருளினன் என்று உணர்த்துகிறபடி.

இவனுடைய ஆசை நிறைவேறியபடியைப் பிற்பகுதியிலே பேசுகிருர். (ஒரு அல்லித் தாமரையாள் சென்று ஒன்றிய சீர் மார்பன்) ஒப்பற்ற அழகையுடைய இதழ்களையுடைய தாமரையிலே

15. திரிந்தது வெஞ்சமத்துத் தேர்கடவி அன்று
பிரிந்தது சீதையைமான் பின்போய் — புரிந்ததுவும்
கண்பள்ளி கொள்ள வழகியதே நாகத்தின்
தண்பள்ளி கொள்வான் றனக்கு.

வெம் சமத்து— (கண்ணனாயிருந்தபோது) கொடிய (பாரத) யுத்தத்திலே, தேர் கடவி— (பார்த்தஸாரதியாகித்) தேரை நடத்திக்கொண்டு, திரிந்தது- அலைந்ததும், அன்று- இராமனாகத் திருவவதரித்தபோது, மான் பின் போய்— மாரீசனாகிற மாயமானின் பின்னே சென்று, சீதையை பிரிந்தது — பிராட்டியைப் பிரிந்து துயருற்றதும், கண்— தரையிலே,பள்ளி கொள்ள-படுத்துக்கொள்ள, புரிந்ததுவும்- விரும்பியதும், (ஆகிய இச்செயல்கள் எல்லாம்), நாகத்தின் தண் பள்ளி கொள்வான் தனக்கு— திருவனந்தாழ்வானாகிற குளிர்ந்த படுக்கையில் பள்ளிகொண்டிருக்கும்பெருமானுக்கு, அழகியதே— தக்கவையோ?

பெரி அவ:-(திரிந்தது) திருவுலகளந்தருளினபடி ப்ரஸ்துதமாகையாலே அல்லாத அவதாரங்களிலும் ஆஶ்ரிதார்த்தமாக மிகப்பட்ட மிறுக்குகளை நினைத்து வெறுக்கிறார்.

---

அவ: — இவர்கள் இப்படி தங்கள் உடம்பைப் பேணிப் பேய்களாய்த்திரிய, இவர்களுக்காக க்ருஷ்ணனாவது ராமனாவதாய்க்கொண்டு அதிஸுகுமாரமான திருமேனியோடே அவன் பட்ட மிறுக்குகளை நினைத்து வெறுக்கிறார்.

---

அவ:— திரிவிக்கிரமனாகிக் காட்டையும், மேட்டையும், பூவிலும் மென்மைமிக்க தன் திருவடிகளாலே அளந்துபட்ட சிரமம் சென்ற பாசுரத்தில் நினைவுக்கு வந்தவுடன், இப்பாசுரத்தில் மற்ற அவதாரங்களில் அடியார்களுக்காகப் பட்ட பாடுகளை நினைத்து வெறுக்கிறார். அன்றிக்கே, பண்டிப் பெரும்பதியையாக்கிப் பழிபாவங் கொண்டு வாழும் பேய்களான இந்த ஸம்ஸாரிகளுக்காக அவன் ராமனாகவும் கண்ணனாகவும் அவதரித்து, மென்மைமிக்க திருமேனியோடு பட்டபாடுகளை நினைத்து வெறுக்கிறார் என்றுமாம்.

பார்த்துக் கிடக்கத் திருமார்பிலே ஏறினாள். "तयावलोकिता देवाः" (தயாவலோகிதா தே₃வா:) பின்னை ஸர்வேஶ்வரன் இவர்களுடைய அலமாப்பைப்பாராயென்று திருவுள்ளத்தாலே நினைத்தபடி தோற்றப் பின்னை அவளாலே பார்க்கப்பட்ட வர்கள். "प्रदेहि सुभगे हारम्" (ப்ரதே₃ஹி ஸுப₄கே ஹாரம்) அவன் நினைவுஞ் சொல்லுமறிந்திறே சிலரைக் கடாக்ஷிப்பதும். சிலரைக் கொண்டு கொடுப்பதும். பெரியபிராட்டியார் தானே சென்றடையும் திருமார்பையுடையனாய். திருவல்லிக்கேணி யானானவன். (எந்தை) எனக்கு ஸ்வாமி. 16.

---

யுடைத்தான திருவல்லிக்கேணியிலே தங்கினவன் எனக்கு ஸ்வாமி. "ஒருவல்லித் தாமரையாள் சென்றொன்றிய சீர்மார்வனாய் வெண்டிரைகள் வந்துதைத்த செம்பவள வெண்முத்தமந்திவிளக்கு மணிவிளக்கான திருவல்லிக்கேணி யானெந்தை" என்றந்வயம்.

---

மல் அநாதரித்துத் திருமார்பில் ஏறினாள் என்றபடி. இவளால் அநாதரிக்கப்பட்டால் அவர்களுடைய செல்வங்கள் அனைத்தும் அழிந்துவிடுமே என்று சிந்தாகுலனான எம்பெருமான், 'இவர் களுடைய கஷ்டத்தைப் பாராய்' என்று முகக்குறிப்பாலே உணர்த்த, "தயாऽவலோகிதா தே₃வா:...பராம் நிர்வ்ருதிமாக₃தா:" [வி-பு 1-9-106] [அவளாலே கடாக்ஷிக்கப்பட்ட தேவர்கள் மேலான இன்பத்தை அடைந்தனர்.] என்று அதன் பின்பே இந்த தேவர்களைக் குழந்தைகளைத் தாய் கடாக்ஷிப்பதுபோலே, கடாக்ஷித்தாள் அகிலஜகந்மாதாவான அலர்மேல்மங்கை. அவன் நினைவறிந்தன்றோ இவள் எல்லாச் செயல்களையும் புரிவது.

"ப்ரதே₃ஹி ஸுப₄கே₃ ஹாரம் யஸ்ய துஷ்டாऽஸி பா₄மினி"
[ரா-யு 131-80]

[மங்களமானவளே! எவனிடம் நீ உகப்புடையளோ, அவனுக்கு இந்த ஹாரத்தை அளிப்பாய்.] என்று அவன் நியமித்த பின்பு அவன் நினைவறிந்தன்றோ ஹாரத்தை அநுமனுக்குக் கொடுத்தாள். (சென்று ஒன்றிய சீர்மார்பன் திருவல்லிக்கேணியான் எந்தை) பெரியபிராட்டியார் தானே சென்று அடைந்த திருமார்பை

17. சென்றநாள் செல்லாத செங்கண்மா லெங்கள்மால்
என்றநா ளெந்நாளும் நாளாகும்—என்றும்
இறவாத வெந்தை யிணையடிக்கே யாளாய்
மறவாது வாழ்த்துகவென் வாய்.

செங்கண் மால் எங்கள் மால் என்ற நாள்—'செந்தாமரைக் கண்ணன் நம்மிடத்துப் பேரன்புடையனாயிருக்கிறான்' என்று சொல்லப்பெற்ற நாள் உண்டானால். சென்ற நாள்—கீழ்க்கழிந்த காலங்களும், செல்லாத (நாள்)—இனிமேல் வரப்போகிற நாள்களுமாகிற. எந்நாளும்—எல்லாக் காலங்களும், நாள் ஆகும்—நல்ல காலமேயாகும்; என்றும் இறவாத எந்தை—ஒருநாளும் அழிவில்லாதவனான எம்பெருமானுடைய. இணை அடிக்கே—இருதிருவடிகளுக்கே. ஆள் ஆய்—ஆட்பட்டு. மறவாது—மறவாமல். என் வாய் வாழ்த்துக—என்வாய் வாழ்த்த வேணும்.

அவ:— (சென்றநாள்) அவளோடே கூடியிருக்கையாலே பலத்துக்குத் தட்டில்லை. இனி என்னுடைய வாக்கானது அவனை விச்சேதமின்றிக்கே அநுபவிப்பதாக.

---

அவ:— இப்படிப்பட்ட ஸர்வேஶ்வரனை நம்பக்கல் வ்யாமுக்தனென்றறிவதொரு நாளுண்டானால், இதுக்கு முன்பும் பின்புமுள்ள காலமெல்லாம் ஸப்ரயோஜனமாய்த் தலைக்கட்டுங்கிடீரென்கிறார்.

---

உடையவனாய்த் திருவல்லிக்கேணியிலே நித்யவாஸம் செய்தவனே என் ஸ்வாமி. அவளுடைய புருஷகார பலத்தாலேயே அடியேன் அவன் தன்னாலேயே மேல்விழுந்து விஷயீகரிக்கப்பெற்றேன். அத்தாயானவள் தானே தேடிச்சென்று அவனை அடைந்து, அவனை நானிருக்குமிடம் தேடிவரச் செய்தாள்! என்று ஆச்சரியப்படுகிறார். 16.

17. அவ:— இப்படிப்பட்ட அப்பிராட்டியோடு அவன் கூடியிருக்கையாலே எனக்குப் பலத்துக்குக் குறையில்லை. இப்படி அவன் நம்மிடம் ஈடுபட்டிருப்பவன் என்று அறிவதொரு நாள்

வ்யா:— (செங்கண்மா லெங்கண்மா லென்றநாள் சென்ற நாள் செல்லாத எந்நாளும் நாளாகும்) ஸர்வேஶ்வரன் என் பக்கலிலே வ்யாமோஹத்தைப் பண்ணினனென்று அறிந்த நாள், கழிந்தநாள் வரக்கடவ நாளான எல்லாநாளும் நல் விடிவாம். இந்நாள் வரும்படி கழிந்தநாளாகையாலே போன நாளுமழகிது. மேல் விச்சே₂த₃மின்றிக்கே அநுபவிக்கப் பெறுகையாலே வரும் நாளும் அழகிது. (என்றுமித்யாதி) ஒரு

உரை:— 'புண்டரீகாக்ஷனை ஸர்வேஶ்வரன் அந்தக் கண்ணாலே குளிரநோக்கி நம்பக்கலிலே வ்யாமோஹத்தைப் பண்ணினன்' என்னுமறிவு பிறந்ததொரு நாளுண்டானல், இந்நாள் மருவுகைக்குடலாய்க்கொண்டு கழிந்தநாள்களும், இப்பேற்றை அநுபவித்திருக்கைக்குக்குறுப்பாய்க்கொண்டு மேல் வரக்கடவ நாள்களுமான எல்லா நாள்களும் அடிக் கழஞ்சு பெற்றுச்செல்லுகிற நல்ல நாளாய்த் தலைக்கட்டும்; உண்டானல், முன்பும் பின்புமுண்டான எல்லா நாட்களும் பய னுடையதாகும். இனி, என்னுடைய வாயானது பொழுது போக்குக்கு உறுப்பாக அவனை இடைவிடாமல் வாழ்த்தக்கடவது என்கிறார்.

வ்யா:— (செங்கண்மால் எங்கள் மால் என்ற நாள் சென்ற நாள் செல்லாத எந்நாளும் நாளாகும்) "செந்தாமரைக் கண்ணனை ஸர்வேஶ்வரன், அந்தக் கண்ணாலே குளிரக் கடாக்ஷித்து என்னோடு தொடர்புடையாரளவும் அன்பைச் செலுத்தினன்" என்னும் அறிவு பிறப்பதொரு நாள் உண்டானல், நல்வி பிறந்த இந்நாள் மாத்திரமன்றிக்கே, இந்நாள் வந் சேருவதற்கு உறுப்பாகக் கழிந்த நாள்களும், இப்பெறும் பேற்றை அநுபவித்திருப்பதற்கு உறுப்பாய் வரவிருக்கும் நாள் களும் ஆகிய எல்லா நாள்களும் பயனுடைய நல்ல நாள்களாய் முடிகின்றன. கடந்த நாள்கள் இந்நாளிலே வந்து முடிகையாலே நன்னாளாகி விடுகின்றன. மேலே இடைவெளியில்லாமல் அனுப விப்பதற்கு உறுப்பாகையாலே வரவிருக்கும் நாள்களும் நன்னாளாகி விடுகின்றன என்று கருத்து. ஆக, எனக்குப் பேற்றுக்குக் குறையில்லை; என் நாள்கள் எல்லாம் வீணாகாமல் பயனுடைவை யாகிவிட்டன என்றாராயிற்று. இனி, போதுபோக்கும் வழியைக் காட்டுகிறார் பாசுரத்தின் பிற்பகுதியாலே. (என்றும் இறவாத எந்தை)

நாளுண்டாய் ஒரு நாளின்றிக்கேயொழியுமுறவின்றிக்கே நித்யனான பிதாவினுடைய. வாக்கானது விச்சே₂த₃மின்றிக்கே வாழ்த்துக. 17.

18. வாய்மொழிந்து வாமனனாய் மாவலிபால் மூவடிமண்
நீயளந்து கொண்ட நெடுமாலே—தாவியநின்
எஞ்சா விணையடிக்கே யேழ்பிறப்பு மாளாகி
அஞ்சா திருக்க வருள்.

---

ஒரு நாளுண்டாய் ஒரு நாளில்லையாயிருக்கையன்றிக்கே. "भूतानां योऽव्ययः पिता" (பூ₄தாநாம் யோऽவ்யய: பிதா) என்கிறபடியே ஸர்வகாலத்திலும் அழியாத என் பிதாவானவனுடைய. ஒன்றுக்கொன்றொப்பான திருவடிகளுக்கே அடிமையாய்க்கொண்டு என்னுடைய வாகி₃ந்த்₃ரியமானது விஸ்ம்ருதி ப்ரஸங்க₃மின்றிக்கே ஏத்துவதாக. 17.

---

"க₃ங்க₃யா : ஸிகதா தா₄ரா யதா₂ வர்ஷதி வாஸவே|
ஶக்யா க₃ணயிதும் லோகே ந வ்யதீதா: பிதாமஹா:||"
[விஷ்ணுஸ்ம்ருதி-20]

[இந்திரன் மழை பொழியும்போது கங்கையில் மணல்கள் எப்படி எண்ணமுடியாதவையோ. அப்படியே இவ்வுலகில் அழிந்துபோன பிரம்மாக்கள் எண்ணமுடியாதவர்கள்.] என்கிறபடியே கர்ம வசப்பட்டுப் பிறந்தும் செத்தும் நின்று இடரும் பிரமன் உருத்திரன் முதலான மற்ற தெய்வங்களைப் போல் ஒருநாள் இருந்து ஒருநாள் அழியும் உறவுடையவனாயிராமல், என்றும் அழிவில்லாதவனாய். "பூ₄தாநாம் யோऽவ்யய: பிதா" [விஷ்ணு ஸஹஸ்ரநாமாத்தியாயம்] [ஜீவராசிகளுக்கு அழிவற்ற தந்தையாயிருப்பவன்.] என்கிறபடியே எனக்குத் தந்தையாயிருப்பவனுடைய, (இணை அடிக்கே ஆளாய்) ஒன்றுக்கு மற்றொன்றே ஒப்பான திருவடிகளுக்கே அடிமைப் பட்டதாய்க்கொண்டு. (என் வாய் மறவாது வாழ்த்துக) என்னுடைய வாகிந்திரியமானது கணமும் மறவாமல் மங்களாஶாஸனம் செய்வதாகுக. இங்கு வாய் வாழ்த்துவதைச் சொன்னது மற்ற இரு கரணங்களான மனமும், காயமும் அவற்றுக்குரிய வகையில் கைங்கரியம் செய்வதற்கும் உபலக்ஷணம். ஆக, பேற்றில் குறையில்லாமையாலே, முக்கரணங்களாலும் அடிமை செய்வதொன்றே அதி₄காரிக்ருத்யம் என்றதாயிற்று. 17.

வாமனன் ஆய்— வாமநரூபியாகி. மாவலி பால்— மஹாபலியினிடத்தில் (சென்று). வாய் மொழிந்து–(பிள்ளைத் தனமான சில) வாய்மொழிகளைச் சொல்லி. மூ அடி மண்— மூவடி நிலத்தை (யாசித்துப் பெற்று). அளந்து கொண்ட— அதை அளந்து கொண்ட. நெடு மாலே—ஸர்வேஶ்வரனே! எஞ்சா—(அழகில்) சுருங்குதலில்லாததாய். தாவிய—உலகளந்ததான. நின் இணை அடிக்கே—உனது இரு பாதங்களுக்கே. ஏழ் பிறப்பும்—எல்லாப் பிறவிகளிலும். ஆள் ஆகி—நான் அடிமைப்பட்டவனாகி. அஞ்சாது இருக்க— பயங்கெட்டிருக்கும்படி. நீ அருள்—நீ கிருபைபுரிய வேணும்.

அவ:—(வாய்மொழிந்து) உன்னுடைமையை யொன்றுஞ் சோரவிடாத நீயென்னைக் கைக்கொண்டருளவேணுமென்கிறார்.

வ்யா:— (வாமனனாய் வாய்மொழிந்து) ஸ்ரீவாமனனாய். "மாவலி! மூவடிமண் தா" என்றருளிச்செய்து. (மாவலியித்யாதி) அவன் தரப் பின்னை அளந்து கொண்ட ஸர்வேஶ்வரனே!

---

அவ:– காலத்ரயத்திலுமழிவுவாராமலநுபவிக்கப்பெற்ற எனக்குத் திருவடிகளில் நித்யகைங்கர்யத்தையும் தந்து. தத்₃விரோதி₄யான ஸம்ஸாரப₄யத்தையும் மாற்றியருள வேணுமென்கிறார்.

உரை:— ஸர்வாதி₄கனான நீ வாமனனாகி. ஆஸுர ப்ரக்ருதியான அவனிரங்கும்படி. "கொள்வன் நான்" என்றாற்போலே சில முக்₃த₄ஜல்பிதங்களைப்பண்ணி மஹாபலி பக்கலிலே சென்று மூன்றடிமண்ணை அபேக்ஷித்து. அவன் தரப் பின்னை அளந்துகொண்ட ஸர்வேஶ்வரனே!

---

18. அவ:—இப்படி அடிமை செய்வதற்கும் அவனுடைய இசைவு வேண்டுகையாலே, "உன் உடைமையை ஒரு சிறிதும் சோரவிடாத நீ, திருவடிகளில் நித்யகைங்கர்யத்தையும் தந்து, அதற்கு விரோதியான ஸம்ஸார ப₄யத்தையும் மாற்றியருளவேணும்" என்று ப்ரார்த்திக்கிறார்.

(தாவியவித்யாதி) திருவுலகளந்தருளினவனுடைய கல்யாண மான திருவடிகளிலே நிர்ப்பயனாய் காலமெல்லாமடிமை செய்திருக்கும்படி அருள். ஔஷதத்தை ஸேவித்தாெனாருவன்

வகுத்தசேஷியான உன்னுடைய அநாயாஸேந ஜகத்தை அளந்துகொண்டதாய், அஸங்கோசமான அழகையுடைத் தாய், பரஸ்பர ஸத்ருஶமான திருவடிகளுக்கே "ஒழிவில் காலமெல்லாம்" என்கிறபடியே காலதத்வமுள்ளதனையும்

வ்யா:—(வாமனனாய் வாய்மொழிந்து) நெடியோனான நீ உன் இயல்புக்குமாறாகக் குறட்பிரமசாரியாகி, அஸுரஸ்வபாவமுள்ள அவனும் இரங்கும்படி "கொள்வன் நான் மாவலி! மூவடிதா" [திருவாய் ௫-8-9] என்றாற்போலே சில சிறுபிள்ளைப்பேச்சுக்களைப் பேசி. (மாவலிபால் மூவடிமண் நீ அளந்துகொண்ட நெடுமாலே!) மஹாபலியிடம் சென்று மூன்றடி மண்ணை வேண்டி, அவன் அதைத் தந்தவுடன் சிறிய வடிவைப் பெரியவடிவாக்கி எல்லாவுலகை யும் "அளந்துகொண்ட ஸர்வேஶ்வரனே! (நெடுமாலே) எல்லார் தலையிலும் காலை வைக்கையாலே நீயே ஸர்வேஶ்வரன் என்று கருத்து. மாவலியையும் அழிக்காமல் இந்திரன் காரியத்தை ஸாதித்துத் தருவதற்காகக்கொடுப்பதையல்லால் கொள்வதறியாத உன் இயல்வை யும் மாற்றிக்கொண்டு யாசகனாகி நின்றது அடியார்களிடத்திலுள்ள பேரன்பாலேயன்றோ என்றும் கொள்ளலாம், (தாவிய நின் எஞ்சா இணையடிக்கே) அநாயாஸமாக உலகை அளந்துகொண்டதாய், வகுத்த ஸ்வாமியான உன்னுடையதாய், சுருக்கமற்ற அழகையுடைய தாய், ஒன்றையொன்று ஒத்ததான திருவடியிணைக்கே. ஏகாரத் தாலே அநந்யார்ஹஶேஷத்வத்தைக் காட்டுகிறது. எல்லார் தலையிலும் காலைவைத்தமையாலும், வகுத்த சேஷியினுடைய திருவடிகளாகையாலும், அழகில் ஒப்பற்றவையாகையாலும் இவை தவிர வேறொன்றைப்பற்ற வழியில்லை எனக்காட்டுகிறார். கைக் குழந்தைக்குத் தாய் முலைபோலே எம்பெருமானுடைய மற்ற அவயவங்களைக்காட்டிலும் சேதனனுக்கு இவையே உத்தேஶ்ய மாகின்றன எனவும் உணர்த்துகிறார். (ஏழ்பிறப்பும் ஆளாய்) "ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை செய்யவேண்டும் நாம்" [திருவாய்3-3-1] என்கிறபடியே காலமுள்ள வரையில் அடிமை செய்யவேணும் என்று பிரார்த்திக்கிறார்.

தனக்கு பயமின்றிக்கே ஸர்ப்பத்தின் வாயிலே கைகொடா நின்றானிறே. அவனுடையவருள் பெற்றவன்றே ஸம்ஸாரத்திலேயிருந்து பயங்கெடவிருக்கத்தட்டில்லை யிறே. 18.

---

*அடிமைசெய்து, இவ்வடிமைக்கு அழிவுவரில் செய்வதென்னென்று நானஞ்சாதே நிர்ப்பரனாயிருக்கும்படி பண்ணியருளவேணும். நெடுமால் — ஆஶ்ரிதர்பக்கல் வ்யாமுக்தனென்னவுமாம். 18.*

---

**(ஏழ்பிறப்பும் ஆளாய்) " காமயே வைஷ்ணவத்வம் து ஸர்வஜந்மஸு கேவலம் "** *[ஜிதந்தே 1-13] [எல்லாப்பிறப்புக்களிலும் வைஷ்ணவத்வத்தை மாத்திரமே நான் ஆசைப்படுகிறேன்.]* **"எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்றன்னோடு உற்றோமேயாவோம் உனக்கே நாம் ஆட்செய்வோம்-"** *[திருப்பாவை 29]* என்று கூறியபடியே உன் இணையடிக்கே ஆட்படும் சிறப்பு வாய்க்குமாகில், எத்தனை பிறப்புகள் எடுத்தாலும் எடுக்கத் துணிவுடையேனாயிருக்கிறேன் என்று கருத்து. (அஞ்சாதிருக்க அருள்) " இவ்வடிமைக்கு அழிவு ஏற்பட்டால் என் செய்வேன்? ' என்று அஞ்சாமல் நான் கவலையற்றவனாயிருக்கும்படி செய்வதொன்றே நீ செய்யவேண்டியது. இவ்வருள் புரிந்தாயாகில், எத்தனை பிறவிகள் இவ்விருள் தருமாஞாலத்தில் நான் எடுத்தாலும் எனக்கு அது மோக்ஷதுல்யமாகும் என்று கருத்து.

**"தூங்கார் பிறவிக்கள் இன்னம் புகப் பெய்து**
**வாங்காய் என்று சிந்தித்து நான் அதற்கஞ்சி**
**பாம்போடு ஒரு கூறையிலே பயின்றாற்போல்**
**தாங்காதுள்ளம் தள்ளும் என் தாமரைக்கண்ணா"**
*[பெரியதிரு 11-8-3]*

என்று ஸம்ஸாரத்தில் பிறவியெடுப்பதைப் பாம்போடு கூடி வாழ்வது போலே பயங்கரமானது என்று அறிவுடையார் அருளிச்செய்திருக்க, பிறவிகளை வேண்டுவது பொருந்துமோ? எனில்: பாம்பின் விஷத்தை முறிக்கும் எட்டிக்காய் முதலான மூலிகைகளைத் தின்று உடலை வலுப்படுத்திக்கொண்டவன் பயமில்லாமல் பாம்பின் வாயிலே கையிடுவதைக் காண்கிறோம். அவ்வண்ணமே ஸம்ஸாரமோக்ஷஸ்திதிபடிந்தஹேதுவான அவனுடைய அருளாகிற ஔஷதம் கிட்டுமாகில் ஸம்ஸாரகால ஸர்ப்பத்தின் வாயிலே

**19.** அருளா தொழியுமே யாலிலைமேல் அன்று
தெருளாத பிள்ளையாய்ச் சேர்ந்தான்—இருளாத
சிந்தையராய்ச் சேவடிக்கே செம்மலர் தூய்க் கைதொழுது
முந்தையராய் நிற்பார்க்கு முன்.

**இருளாத சிந்தையர் ஆய்**—*அஞ்ஞானவிருள் சேராத நெஞ்சையுடையராய்க்கொண்டு,* **சே அடிக்கே**—*சிவந்த திருவடிகளுக்கே.* **செம் மலர் தூய்**—*செவ்விப் புஷ்பங்களை ஸமர்ப்பித்து.* **கை தொழுது**—*அஞ்ஜலிபண்ணி.* **முந்தையர் ஆய் நிற்பார்க்கு**—*(பகவத் விஷயத்தில்) முற்பட்டு நிற்கும் பக்தர்களுக்கு.*— **அன்று**—*முன்பொருகாலத்தில்.* **தெருளாத பிள்ளை ஆய்**—*அறியாத சிறு குழந்தையாய்.* **ஆல் இலை மேல் சேர்ந்தான்**—*ஆலந்தளிரில் கண்வளர்ந்த பெருமான்,* **முன் அருளாது ஒழியுமே**-*முற்பட்டுக் கிருபைபண்ணமற்போவனோ?*

**அவ:— (அருளாது) அருளென்னுங்காட்டில் அருளுமோ வென்று திருவுள்ளம் விசாரிக்க நமக்கருளாதொழியுமோ என்கிறார்.**

---

**அவ:—** *"அஞ்சாதிருக்கவருள்" என்று நாம் அவனை இப்படி நிர்பந்தித்தால், அவன் நம்முடைய அயோக்யதை யைப் பார்த்து உபேக்ஷித்தல், அன்றிக்கே நம் கார்யம் செய்கைக்கு சக்தனன்றிக்கேயிருத்தல் செய்யிலோவென்று திருவுள்ளம் பிற்காலிக்க, அவன் நம் கார்யம் செய்கைக்கு சக்தனே, நம்மயோக்யதையைப் பார்த்து உபேக்ஷிப்பதும் செய்யான் காணென்கிறார்.*

---

புகுந்து புறப்படத் தடையில்லையன்றோ. அவனுடைய அருள் கிட்டுமோ, கிட்டாதோ என்று அஞ்சினவன்று பிறவிகள் பயங்கர மாகவுமிருக்கும்; அவனுடைய அருள் கிட்டுவது உறுதியென்று தெளிவுபிறந்து அச்சம் நீங்கினவன்று பிறவிகளே உத்₃தே₃ஶ்ய மாகவுமிருக்கும் என்று அறியத்தக்கது. 18.

19. அவ:— "அஞ்சாதிருக்க அருள்" என்று அவனை நிர்ப் பந்தித்தவுடன் அவன் அருள்செய்து விடுவானோ? நம்முடைய

(ஆலிலேயித்யாதி) ஆலிலேயிலே சேர்ந்து வ்யாமுக்₃த₄னை பிள்ளை நமக்கு அருளாதொழியுமோ? (இருளாதவித்யர்தி)

---

உரை— பகவத்விஷயத்தில் அஜ்ஞானைகதேஶமும் ஊடு கலசாத ஹ்ருதயத்தையுடையராய்க்கொண்டு சிவந்த திருவடிகளிலே அழகிய செவ்விப்பூக்களை அடைவுகெடப் பணிமாறி, கைகளாலே அஞ்ஜலி ப₃ந்த₄த்தைப்பண்ணி

---

தகுதியின்மையைப்பார்த்து நம்மை அவன் அலட்சியப்படுத்தவும் கூடும்; வலிய பாபம்செய்த நம் காரியம் செய்ய சக்தியற்றவனு யிருக்கவும் கூடும்" என்று திருவுள்ளம் தயங்கத்தொடங்க, "அவன் நம் காரியம் செய்ய சக்தியையும் உடையவனே; நம் தகுதி யின்மையைப் பார்த்துக் கைவிடவும் மாட்டான்" என்று நெஞ்சைப் பார்த்து ஆறுதல் கூறுகிறுர்.

வ்யா:— (அருளாதொழியுமே) நமக்கு அருள்புரியாமலிருப் பாஞே? நமது வலியபாபங்கள் பெருந்தடையிருக்கும்போது அவன் நமக்கு அருள்புரிய வல்லவஞே? என்ன, (ஆலிலேமேல் அன்று தெருளாத பிள்ளையாய்ச் சேர்ந்தான்) ப்ரளயகாலத்திலே உலகம் அழியப்புக்கவன்று, அன்றலர்ந்ததொரு ஆலந்தளிரிலே அறி வுக்கு இடமில்லாததொரு பச்சிளம்பிள்ளையின் வடிவைக்கொண்ட வனுய்ப் பள்ளிகொண்டு உலகை அழியாதபடி வயிற்றிலேவைத்து ரக்ஷித்த அக₄டிதக₄டநாஸமர்த்₂னன்றே இவன். எத்தனை வலிய பாபங்களையும் அழித்து நமக்கு அருள்புரியத்தடையுண்டோ? என்று கருத்து. (ஆலிலேமேல்...)

"பாலன் தனதுருவாய் ஏழுலகுண்டு. ஆலிலையின்
மேலன்று நீ வளர்ந்த மெய்யென்பர்—ஆலன்று
வேலைநீர் உள்ளதோ? விண்ணதோ? மண்ணதோ?
சோலைசூழ் குன்றெடுத்தாய் சொல்லு" [முதல்திருவ69]

என்கிறபடியே எல்லாவுலகையும் சிறிய வயிற்றிலே வை ஓராலிலையில் பள்ளிகொள்வது என்ன ஸாஹஸம்? எ (தெருளாதபிள்ளை) மேலெழப்பார்த்தால் அறிவே ஏற்படாத பச்சிளம்பிள்ளை செய்யும் காரியமாகத்தானிருக்கிறது இது. ஆராய்ந் தால் அக₄டிதக₄டநாஸாமர்த்₂யத்தை விளக்கும் அருஞ்செய லாகவன்றே இச்செயல் இருக்கிறது. இப்படிச் சேராதனவற்றை

இருளாதசிந்தைகளையுடையராய்த் திருவடிகளிலே புஷ்பாத்₃
யுபகரணங்களைக் கொண்டு கைகளாலே தொழுது முற்
பாடராயிருக்கிறவர்களுக்கு.(முன்னருளாதொழியுமோ) முன்னே
யருளானோ? 19.

---

ஆஶ்ரயித்து முற்பாடராய் இருக்கிற அதி₄காரிகளுக்கு
முன்னே ஜகத்து ப்ரளயத்திலே அழியப்புக்கவன்று பவனை
யிருப்பதோராலந்தளிரின்மேலே அறிவு கலசாத முக்₃த₄
ஶிஶுவாய்க்கொண்டு பள்ளிகொண்டருளின அக₄டிதக₄டநா
ஸமர்த்₂ன் அருளாதொழியுமோ? யோக்₃யருக்கு முன்னே
அயோக்₃யரான நமக்குத் தன் அக₄டிதக₄டநாஸாமர்த்₂யத்
தாலேயருளும்; நீ பயப்படவேண்டாவென்று திருவுள்ளத்தை
“मा शुचः” (மா ஶுச:) என்று தேற்றியருளுகிறார். 19.

---

யும் சேர்த்துவைக்கும் திறனுடையவன் அழிக்கவொண்ணாத நமது
பாபத்தையும் அழித்து அருள்புரியவல்லவனே என்றாயிற்று.
நமக்குப் பல தகுதியின்மைகளிருக்கும்போது நமமை அலட்சியப்
படுத்தி விடுவானோ? எனில், உள்ள சில தகுதிகளைக்கொண்டு
நம்மைக் கைக்கொள்வானேயொழிய, இல்லாத தகுதிகளை நினைத்
துக் கைவிடமாட்டான் என்கிறார் பிற்பகுதியாலே,— (இருளாத்
சிந்தையராய்) பகவத்விஷயத்தில் ஒரு சிறிதும் அறியாமையற்ற
நெஞ்சுடைமை நமக்கு உள்ளது: இதுவே போதும் நமக்கு அவன்
அருள்புரிவதற்கு. அறிவுடைமையிருந்தாலும், நம் பொழுதுபோக்கு
இதர விஷயங்களிலேயானால், அதையிட்டு அவன் நம்மை
உபேக்ஷிக்கக்கூடுமே? எனில், நமது பொழுதுபோக்கும் அவன்
விஷயத்திலேயுள்ளதாகையாலே கவலையில்லை என்கிறார்,—
(சேவடிக்கே செம்மலர்தூய்க் கைதொழுது முந்தையராய் நிற்
பார்க்கு) அவனுடைய சிவந்த திருவடிகளிலே அழகிய செவ்விப்
பூக்களை அன்பினாலே முறைகெடத்தூவி, கைகளாலே அஞ்ஜலியைச்
செய்து ஆஶ்ரயித்து இதர விஷயங்களில் நெஞ்சு செலுத்தாமல்
பகவத் விஷயத்திலேயே முற்பட்டு நிற்பவர்களன்றோ நாம்;
அத்தகைய நமக்கு அருளாதொழிவனோ? என்று கருத்து. இத்
தகுதிக்கும் மேற்பட்ட தகுதியுடைய கர்மஜ்ஞாநபக்தியோகநிஷ்டர்
களுக்கே முதலில் அருளுவானேயொழிய, அல்பயோக்₃யதை
படைத்த நமக்கு முதலில் அருளுவானோ? எனில் (முன் அருளா

௨௦ முன்னுலக முண்டுமிழ்ந்தாய்க்கு அவ்வுலக மீரடியால்
பின்னளந்து கோடல் பெரிதொன்றே—என்னே
திருமாலே செங்க ணெடியானே எங்கள்
பெருமானே நீயிதனைப் பேசு.

**முன்**—முன்பொருகாலத்தில். **உலகம்**—உலகங்களையெல்லாம். **உண்டு**—திருவயிற்றிலே வைத்திருந்து. **உ[illegible]ய்க்கு**—பிறகு வெளிப்படுத்தின உனக்கு. **அவ்[illegible]**—அந்தவுலகங்களை. **பின்**—பின்பொருகாலத்தில். **ஈர் அடியால்**—இரண்டு திருவடிகளால். **அளந்து கோடல்**—அளந்து கொள்வதானது. **பெரிது ஒன்றே**—பெரியவொரு காரியமாகுமோ? [இல்லை.], **திரு மாலே**—திருமகள்கேள்வனே! **செம் கண் நெடியானே**—சிவந்த திருக்கண்களையுடைய பெரியவனே! **எங்கள் பெருமானே**—எமக்கு ஸ்வாமியானவனே! **நீ இதனை பேசு**—நீ இதை (எனக்குத் தெரிய)ச் சொல்லவேணும்; **என்னே**—இஃது என்ன ஆச்சரியம்!

---

**அவ:**— அவன் தன்னையபேக்ஷித்தார்க்குத் தன்னையழிய மாறியும் காரியம் செய்யுமவனன்றோவென்கிருர்.

---

தொழியுமே) "அங்கங்களில் நிறைவுபெற்ற குழந்தைகளிடத்திற் காட்டிலும், அங்கங்களில் குறைவுடைய குழந்தையிடத்திலே பரிவு மிக்கு முதலில் அருளும் தாயைப்போலே ஜ்ஞாநஶக்திகள் மிக்க அவர்களுக்கு முன்னே, அவற்ருல் குறைந்த நமக்குத் தன் அகடிதகடநாஸாமர்த்யத்தாலே அருளாதொழிவனோ? நீ பயப்படவேண்டா" என்று திருவுள்ளத்தைத் தேற்றுகிருர். அவன் "பயப்படாதே" [கீதை 18-66] என்று அர்ஜுனனைத் தேற்றியது போலே இவர் தம் நெஞ்சைத் தேற்றுகிருர். (முந்தையராய் நிற்பார்க்கு முன் அருளாதொழியுமே) அவன் விஷயத்தில் நாம் முற்பட்டு நின்ருல் நம்மை அருள அவன் முற்பட்டு நிற்க மாட்டானோ என்றுமாம். 19.

20. **அவ:**— ப்ரயோஜநாந்தரபரராய்த் தன்னை வேண்டியவர்களுக்கும் தன் இயல்வை மாற்றிக்கொண்டும் காரியம் செய்யும் நீ அநந்யப்ரயோஜனரான நம் காரியம் செய்யாயோ? என்கிருர்.

**வ்யா:— ( முன்னுலகமித்யாதி ) உன்கையிலே பருத்தி பட்ட பன்னிரண்டும் பட்ட இந்த லோகந்தன்னையே பெறாது பெற்றாயாக அளந்துகொள்கை. இது பெரியதொன்றே?**

---

*உரை:— முன்பொருகாலத்திலே ஜகத்தையெல்லாம் திருவுத₃ரத்திலே எடுத்துவைத்துப் புறப்படவிடுவதாய்ச் செய்த உனக்கு இப்படி இஷ்ட ஸர்வசேஷ்டாவிஷயமான அந்த லோகத்தைப் பின்பொருநாளிலே இரண்டு திருவடிகளாலே அளந்து கொள்கையான இது பெரியதொரு செயலாய்ச் செய்தாயோ? ஸ்ரிய:பதியாய், அவளோட்டைச்*

---

'வ்யா:—(முன் உலகம் உண்டு உமிழ்ந்தாய்க்கு) ஆதியில் ப்ரளய காலத்தில் உலகனைத்தையும் நோவுபடாதபடி திருவயிற்றில் வைத்துநோக்கி, அதற்குப்பின் ஸ்ருஷ்டிகாலத்தில் சேதனவர்க்கம் உய்வதற்காக மறுபடியும் அவ்வுலகத்தை வெளிப்படுத்தின உனக்கு. இங்கு உண்டு உமிழ்ந்த இருசெயல்களைச் சொன்னது "படைத்திடந்து உண்டு உமிழ்ந்து தேர்ந்து உலகளிக்கும்" [திருவாசிரியம்6] "பரந்த தெய்வமும் பல்லுலகும் படைத்து அன்றுடனே விழுங்கிக் கரந்து உமிழ்ந்து இடந்தது" [திருவாய் 4-10-3] என்று அவனாற் செய்யப்பட்ட பல செயல்களையும் காட்டுகிறது. (அவ்வுலகம் ஈரடியால் பின் அளந்து கோடல் பெரிதொன்றே) பருத்தி ஆடையாம்போது (1) கொட்டையெடுத்தல் (2) அடித்தல் (3) சுருட்டல் (4) நூலாக்குதல் (5) பரவோட்டுதல் (6) நெய்தல் (7) மடித்தல் (8) விற்றல் (9) தோய்த்தல் (10) உலர்த்தல் (11) உடுத்தல் (12) கிழித்தல் என்னும் பன்னிரண்டு பாடுகள் படுவது போலே, பலபல பாடுகளையும் உன் கையிலே நிரந்தரமாகப் பட்டுவரும் இவ்வுலகையே, பின்பொருகாலத்தில் உன் இயல்வுக்குத் தகாதபடி யாசகனாகிச்சென்று மாவலிடம் மூவடிமண் வேண்டி, அவன் அதை அளித்தவுடன் பெறாதது பெற்றதுபோலே பூரிப்படைந்து வளர்ந்து இரண்டு அடியால் அளந்துகொண்டது பெரியதொரு காரியமோ? (என்னே!) உன் பெருமைக்குத் தகாததொரு சிறுசெயலாகவன்றோ இது எங்களுக்குத் தோற்றுகிறது. இதை ஒரு பெரிய செயலாக எல்லோரும் பேசுகிறார்களே! என்று ஆச்சரியப்படுகிறார். எத்தகைய பெரியவன் இச்செயலைச் செய்தான் என்பதைப் பேசுகிறார் மேலே,— ( திருமாலே )

(என்னே திருமாலே யித்யாதி) உன்னுடைய மேன்மைக்கும் இத்தாழ்ச்சிக்குமெங்கே சேர்த்தியுண்டு? நீ இத்தைச்சொல்ல வேணுமென்று எத்திறமென்கிறார். 20.

**21. பேசுவார் எவ்வளவு பேசுவர் அவ்வளவே**
**வாசமலர்த் துழாய் மாலையான்—தேசுடைய**
**சக்கரத்தான் சங்கினன் சார்ங்கத்தான் பொங்கரவ**
**வக்கரனைக் கொன்றான் வடிவு.**

---

*சேர்த்தியாலே சிவந்த திருக்கண்களையுடையனாய். ஒருவராலும் அளவிடவொண்ணாத பெருமையையுடையனாய். எங்களுக்கு ஸ்வாமியானவனே! நீ இத்தை அருளிச்செய்ய வேணும். இந்த்ரன் பல் காட்டினது பொறுக்கமாட்டாமல் உன் வ்யாமோஹத்தாலே செய்த செயலித்தனையிறே. என்னே—இதென்ன ஆச்சர்யமென்று வித்தராகிறார். 20.*

---

உலகிற்காணும் செல்வங்களுக்கெல்லாம் அதிதேவதையான திருவுக்கும் திருவாயிருப்பவனான நீயன்றோ யாசகனாய்ச் சென்றாய்! (செங்கண்) அவளுக்கும் நாயகனாயிருக்கையால் உபயவிபூதிச் செல்வத்தையும் உடையவனாயிருப்பவன் என்பதைக் கோட்சொல்லித் தரும் சிவந்த திருக்கண்களையுடைய நீயன்றோ ஒரு க்ஷுத்ரனிடம் உன் விபூதியையே யாசித்துப் பெற்றாய்! (நெடியானே!) ஒருவராலும் அளவிடவொண்ணாத பெருமையையுடைய நீயன்றோ அனைத்திலும் தாழ்ந்த யாசகவேஷத்தை மேற்கொண்டாய்! (எங்கள் பெருமானே!) எங்களைப்போன்ற அநந்யப்ரயோஜனர்களுக்கு ஸ்வாமியான நீயன்றோ ப்ரயோஜநாந்தரபரனான இந்திரன் காரியம் செய்வதற்காக உன்னை இப்படித் தாழ்த்திக்கொண்டாயே! (நீ இதனைப் பேசு) இப்படி அனைத்திலும் பெரியவனான நீயே இதை அருளிச்செய்யவேணும். 'எத்திறம்!' [திருவாய் 1-3-1] என்ற நம்மாழ்வாரைப்போலே இந்நீர்மையிலே ஈடுபடுகிறார். ப்ரயோஜநாந்தரபரனான இந்திரன் 'குடியிருப்பைத் தரவேணும்' என்று பல்லைக்காட்டினதற்கு இரங்கி, உன் ஆச்ரிதபக்ஷபாதத்தாலே இச்செயலைச் செய்த நீ அநந்யப்ரயோஜனரான எங்களுடைய காரியத்தை அவசியம் தலைக்கட்டித்தருவாய் என்று கருத்து. 20.

**வாசம் மலர் துழாய் மாலையான்**—மணம்மிக்க பூக்களோடு கூடின திருத்துழாய் மாலையை அணிந்தவனும். **தேசு உடைய சக்கரத்தான்**—ஒளியையுடைய திருவாழியை தரித்தவனும். **சங்கினன்**—ஸ்ரீபாஞ்சஜந்யத்தை ஏந்தியவனும். **சார்ங்கத்தான்**—சார்ங்கவில்லையுடையவனும். **பொங்கு அரவம் வக்கரனை கொன்றான்**—மிக்க ஆரவாரமுடையனாய் வந்த தந்தவக்ரனைக் கொன்றொழித்தவனுமான எம்பெருமானுடைய, **வடிவு**-இயல்வுகள் (எப்படிப்பட்டவையென்னில்) **பேசுவார் எவ்வளவு பேசுவர் அவ்வளவே**—பேசுகின்ற அவரவர்கள் எவ்வெவ்வளவு பேசுகின்றார்களோ அவ்வவ்வளவேயாம்.

அவ:— (பேசுவார்) கீழ் திருவுலகளந்தருளினவிடம் ப்ரஸ்துதமாகையாலே அப்படி வரையாதே பரிமாறும் க்ருஷ்ணாவதாரத்தைச் சொல்லுகிறார்.

வ்யா:— (பேசுவாரித்யாதி) பேசுமவர்களுக்கு யாதோரளவுண்டு அவ்வளவு பேசிப்போமத்தனை. விஷயத்தைப்

---

அவ:— அவனை ஒருவராலும் அளவிட்டுப் பேசவொண்ணாது கிடீரென்கிறார்.

உரை:— பரிமளம் அலையெறியாநின்றுள்ள பூத்தாரையுடைத்தாய். ஐஸ்வர்யஸூசகமான திருத்துழாய்மாலையாலே

---

21. அவ:— கீழே வஸிஷ்டசண்டாள விபாகமற எல்லார் தலையையும் திருவடிகளாலே தடவிக்கொடுத்த திரிவிக்கிரமனைப் பற்றிப் பேசுகையாலே, அவனைப்போலே வாசிபாராமல் பெண்ணுக்கும் பேதைக்கும் கட்டவும் அடிக்கவுமாம்படி தன்னை அளித்த கண்ணனைப் பேசத்தொடங்கி, 'அவனை ஒருவராலும் அளவிட்டுப் பேசமுடியாது கிடீர்' என்கிறார்.

வ்யா:—(பேசுவார்) அவனுடைய ஸ்வரூபரூபகுணவிபூதிகளை இதற்குமேல் பேசவொண்ணாது' என்னும்படி பரிபூர்ணமாகப் பேசவல்ல வால்மீகி, வியாஸர், பொய்கையார், பூதத்தார்

பரிச்சேதித்துப் பேசப்போகாது. (வாசமித்யாதி) பரிச்சேதிக்கப்போகாமைக்கு இவை தனித்தனியே ஹேதுக்கள்.

---

அலங்க்ருதனாய், நிரவதிகதேஜஸ்ஸையுடைத்தான திருவாழி பாஞ்சஜந்யம் ஸ்ரீசார்ங்கம் இவற்றையுடையனாய். பெரிய கிளர்த்தியோடே எங்கேயெங்கேயென்று பெரிய ஆரவாரத்தைப் பண்ணிக்கொண்டுவந்த துந்தவக்ராஸுரனை

---

போல்வார்; 'இன் கவிபாடும் பரமகவிகள்' என்றும், 'பாலேய் தமிழர்' என்றும் போற்றப்படுகிறவர்கள். (எவ்வளவு பேசுவர்) தங்கள் ஜ்ஞானசக்திகளைக் கொண்டு எவ்வளவு பேசவல்லவர்களாயிருக்கிறார்களோ; (அவ்வளவே) அவ்வளவு பட்டவனாகத் தன் ஸ்வரூப ஸ்வபாவங்களை அமைத்துக்கொள்ளுகிறான் ஸர்வேஸ்வரன்; இப்படி அவன் தன்னை அமைத்துக் கொள்வதாலே அவர்களும் அவனைப் பேசியவர்களாகக் கொண்டாடப் படுகிறார்களேயல்லாமல், அவர்கள் அவனை உள்ளபடி பேசிமுடித்துவிட்டார்கள் என்றோ, அவர்களுடைய பேச்சுக்குள் அவன் பெருமை அடங்கிவிட்டதென்றோ பொருளல்ல. இனி, பாசுரத்தின் எஞ்சிய பகுதியாலே, அவனுடைய பெருமைகள் அளவிடவொண்ணாதவை என்பதற்கு ஐந்து ஹேதுக்களைக் காட்டுகிறார். (வாசமலர்த்துழாய் மாலையான்) பரிமளம் அலையெறியா நிற்கும் மலர்களையுடையதாய், 'இவனே ஸர்வேஸ்வரன்' என்பதைக் காட்டித்தருவதான துழாய்மாலையாலே அலங்கரிக்கப் பெற்றவன்.

"நாறு இணர்த் துழாயோன் நல்கின் அல்லதை
ஏறுதல் எளிதோ வீறு பெறு துறக்கம்" [பரிபாடல்]

என்று சங்கத்தமிழர்சொல்லியபடியே, முளைக்கும்போதே மணத்துடன் முளைக்கும் இதன் நறுமணமே இதைத் தனிமாலையாகக்கொண்டவன் மோக்ஷமளிக்கவல்ல பரம்பொருள் என்று காட்டித்தருமன்றோ.

"வாராயின முலையாள் இவள் வானோர் தலைமகனாம்
சீராயின தெய்வநன்னோயிது. தெய்வத்தண்ணந்துழாய்த்
தாராயினும், தழையாயினும் தண் கொம்பதாயினும் கீழ்
வேராயினும், நின்ற மண்ணாயினும் கொண்டு வீசுமினே"
[திருவிருத்தம் 54]

(பொங்கரவ வித்யாதி)விஸ்த்₃ருஶமான சப்தத்தையுடையனை தந்தவக்த்ரனைக் கொன்றவனுடைய வடிவு பேசுவாரெவ்வளவு பேசுவர்; அவ்வளவே. 21.

---

*முடித்துப் பொகட்டவனுடைய ப்ரகாரம் மறுபாடுருவப் பேசுகைக்கு ஶக்தராயிருக்குமவர்கள் தங்கள் ஜ்ஞான சக்திகளைக்கொண்டெவ்வளவு பேசவல்லவர்கள், அவ்வளவே யாயிருக்குமல்லது உள்ளபடி கண்டு பேசவொண்ணு தென்கை. 21.*

---

என்று ஆழ்வார் அருளியபடியே தாரோடு, தழையோடு, தண்கொம்போடு, கீழ் வேரோடு, நின்ற மண்ணோடு வாசியற நறு மணம் வீசும் சிறப்புடையதாய் தண்மை மிக்கதாய், தெய்வத் தன்மையுடையதாய், ஸகல வியாதிகளையும் போக்கடிப்பதாயிருப்ப தன்றோ வாசமலர்த்துழாய். வேறு எந்தப் புஷ்பமும் இப்பெருமை களை உடையதல்லாமையாலே, இதைத் தனிமாலையாய் உடைய வனே பரம்பொருள் என்பதை எளிதில் நிர்ணயிக்கலாம் என்று கருத்து. (தேசுடைய சக்கரத்தான்) கோடி ஸூர்யப்ரகாஶமான சக்கரத்தாழ்வானை தரிக்கவல்லவனுகையாலும் இவனே எவராலும் பேசவொண்ணுத பரம்பொருள் என்பது விளங்கும் என்றபடி. (சங்கினன்) " ஸ கோ₄ஷோ தா₄ர்த்தராஷ்ட்ராணும் ஹ்ருத₃யாநி வ்ய தா₃ரயத் " [கீதை 1-19] [அந்தப் பாஞ்சஜந்ய முழக்கம் திருத ராஷ்டிர புத்திரர்களின் நெஞ்சங்களைப் பிளந்தது.] " படைபோர் புக்கு முழங்கும் அப்பாஞ்சசன்னியம் " [திருப்பல்.2] "பெருமுழக்கால் அடங்காரை எரியழலம்புகவூதி " [திருவாய் 4-4-8] என்கிறபடியே போரிலே எதிரிகளின் நெஞ்சங்களைப் பிளந்து எரிக்க வல்ல முழக்கத்தையுடைய வலம்புரிச்சங்கத்தை ஏந்தியமையாலும் இவனே எவராலும் பேசிமுடிக்கவொண்ணுத பரம்பொருளாகிறுன் என்று கருத்து. (சார்ங்கத்தான்) " சார்ங்கம் என்னும் வில் லாண்டான் " [திருப்பல் 12] "தாழாதே சார்ங்கமுதைத்த சரமழை" [திருப்பாவை 4] என்கிறபடியே தொடுத்துவிட்டால் தன்னுலல்லது எவராலும் நிறுத்தவொண்ணுத சரமழையைப் பொழியும் சார்ங்க மென்னும் வில்லாண்டவனுயிருக்கையாலும் இவனே எவராலும் பேசிமுடிக்கவொண்ணுத பரம்பொருளாகமுடியும் என்று கருத்து. இப்படி அலங்காரப்பெருமையும், ஆயுதப்பெருமையும் மாத்திர மன்று, இவனுடைய ஶத்ருநிரஸநஸாமர்த்தியத்தைப் பார்த்தாலும்,

22. வடிவார் முடிகோட்டி வானவர்கள் நாளும்
கடியார் மலர்தூவிக் காணும்—படியானை
செம்மையாலுள்ளுருகிச் செவ்வனே நெஞ்சமே
மெய்ம்மையே காண விரும்பு.

---

இதைத் தெளிவாக அறியலாம் என்கிறார்,— (பொங்கரவ வக்கரனைக் கொன்ருன்) மிகவும் பொங்கிக் கிளர்ந்தவனாய், 'கண்ணன் எங்கே எங்கே' என்று பெரிய ஆரவாரத்தைப் பண்ணிக்கொண்டு வந்த த₃ந்தவக்ரன் என்ற அஸுரனை அவலீலையாகக் கொன்ற வனுகையாலும் இவனே பேசவொண்ணுத பரம்பொருள் என்று கருத்து. கண்ணன் ருக்மிணியைத் தேரேற்றிச்சென்றபோது சிசுபாலனுக்குப் பரிந்து வந்தவன் தந்தவக்ரன். (வடிவு) இத் தகையவனுடைய ஸ்வரூபஸ்வபாவங்கள் பேசவல்லவர்கள் எவ்வளவு பேசமுடியுமோ அவ்வளவாக அமைக்கப்பட்டிருக்கும் என்று கீழோடே அந்வயம். சிறந்த ஞானிகள் பேசினுல் அவை அவர்களுடைய ஞானத்தின் அளவுக்குத்தக்கபடியிருக்கும். நம்மைப் போன்ற ஞானத்திற் குறைந்தவர்கள் பேசினுல், நமது சிறிய ஞானத்துக்கும் தக்கபடி அமைக்கப்படும். ஞானத்திற் சிறந்த வர்களோடு குறைந்தவர்களோடு வாசியற அவன் வடிவைப் பேசித் தலைக்கட்டமுடியாதவர்கள் என்னும் விஷயத்தில் ஒருபடிப்பட்ட வர்களே என்று பாசுரத்தின் திரண்டபொருள்.

யத்₃வா ஶ்ரமாவதி₄ யத₂ாமதி வாப்யஶக்த:
ஸ்தௌம்யேவமேவ க₂லு தேऽபி ஸதா₃ ஸ்துவந்த: ।
வேதா₃ஸ்சதுர்முக₂முக₂ாஸ்ச மஹார்ணவாந்த:
கோ மஜ்ஜதோரணுகுலாசலயோர் விஶேஷ: ॥

[ஸ்தோ-ர-8]

[அன்றிக்கே, ஶக்தியற்ற யான் களைப்பு உண்டாகும் வரையிலாவது, புத்திக்குத் தெரிந்த வரையிலாவது துதிக்கிறேன். எப்போதும் துதிக்கும் அந்த வேதங்களும், நான்முகன் முதலியவர்களும் இப் படியேயல்லவோ துதிப்பது; பெரிய கடலினுள்ளே முழுகிப் போகிற (சிறிய) அணுவுக்கும், (பெரிய) குலமலைக்கும் என்ன வித்தியாசம்?] என்று ஆளவந்தார் அருளியதும் இங்கு அறியத்தக்கது.

நெஞ்சமே—ஓ மனமே!. வானவர்கள்—நித்யஸூரிகள். வடிவு ஆர்—அழகு நிறைந்த. முடி—கிரீடங்களை. கோட்டி—வணங்கச்செய்து. கடி ஆர் மலர்—மணம் பொருந்திய பூக்களை. நாளும்—நாள்தோறும். தூவி—முறைகெட இட்டு. காணும் படியானை—(எப்போதும்) காணப்பெற்ற திரு மேனியையுடையனை எம்பெருமானை. செம்மையால்—முறைப்படியே. உள் உருகி-மனம் உருகி. செவ்வனே—நேரான வழியாலே. மெய்ம்மெயே—உள்ளபடியே. காண—ஸேவிப்பதற்கு. விரும்பு—ஆசைப்படு.

அவ:—(வடிவார்) அவன்படி பரிச்சேதிக்கப் போகாத பின்பு அவன்தானே காட்டக்காணென்கிறார்.

வ்யா:—(வடிவாரித்யாதி) தர்சநீயமாயிருந்துள்ள முடி களைவணக்கித் தேவர்கள் நாள்தோறும் பரிமளம் மிக்கிருந்

அவ:—ஒருவராலும் அவனையளவிட்டுப் பேசவொண்ணா தென்றவர் தன் திருவுள்ளத்தைக்குறித்து "நீ முன்ன மவனை அழகிதாக ஸாக்ஷாத்கரிக்கையிலே ப்ரத்நத்தைப்பண்ணு கிடாய்' என்கிறார்.

உரை:—அழகுமிக்கிருந்துள்ள அபிஷேகங்களை வணக்கி நித்யஸூரிகள் நாடோறும் பரிமளம்மிக்கிருந்துள்ள புஷ்பங்களை அக்ரமமாகப் பணிமாறி "सदा पश्यन्ति" (ஸதா

22. அவ:— அவனுடைய ஸ்வரூபஸ்வபாவங்கள் அளவிட்டுப் பேசமுடியாதவையானபின்பு, 'அவன் தானே தன்னைக் காட்ட, அழகாகக் காணவேணும்' என்று விருப்பத்தைச் செய்வாயாக என்று தம் திருவுள்ளத்தைக் குறித்து அருளிச்செய்கிறார்.

வ்யா:—(வடிவார் முடிகோட்டி) அழகு நிறைந்த முடிகளைச் சாய்த்து. கோட்டுதல்-வளைத்தல்; வணக்குதல். (வானவர்கள்) "யத்ர பூர்வே ஸாத்யா: ஸந்தி தேவா:" [பு. ஸூ] [யாதொரு பரமபதத்தில் அநாதிஸித்தர்களாய், ப்ராப்யர்களான தேவர்கள் உள்ளனரோ] "யத்ர ருஷய: ப்ரதமஜா யே புராணா:" [எந்தப்

துள்ள புஷ்பத்தைக் கார்ய புத்தியின்றிக்கே திருவடிகளிலே பொகட்டுக்காணும் ஸ்வபாவத்தையுடையவனுயுள்ளவனே. (செம்மையாலுள்ளுருகி) " அவன் சேஷி-நான் சேஷபூ₄தன் "

---

பஶ்யந்தி) என்கிறபடியே இதை விடாமற்கண்டநுபவிக்கும் வடிவழகையுடையவனே. அவன் சேஷி நாம் சேஷபூ₄தரென்னும் முறையாலே தத்₃வைலக்ஷண்யத்தை அநுஸந்தி₄த்து ஹ்ருத்₃யம் ஶிதி₂லமாய். நாம் ஒரு யத்நம் செய்யாதிருக்கத்தானே தன்னைக்கொடுவந்து காட்டக்காண்

---

பரமபதத்தில் முன்னமே சென்ற முக்தர்களும், அநாதிகாலமாயிருக்கும் நித்யர்களும் பகவதனுபவம் செய்கின்றனரோ] என்று வேதங்களிற் கூறப்படும் அப்ராக்ருதரான நித்யமுக்தர்களைச் சொல்லுவதாகவும் கொள்ளலாம். ப்ராக்ருதாலோகத்திலுள்ள பிரமன் முதலான தேவர்களைச் சொல்லுவதாகவும் கொள்ளலாம். (நாளும் கடியார் மலர்தூவி) தினந்தோறும் பரிமளம் நிறைந்த புஷ்பங்களை அத்யந்தபக்தியாலே முறைகெடத்தூவி. " அத்யந்த ப₄க்தி யுக்தஸ்ய ந ஶாஸ்த்ரம் நைவ ச க்ரம: " [அதிகமான பக்தியோடு கூடியவனுக்கு சாஸ்திரமுமில்லை; கிரமமுமில்லை.] என்று சொல்லப்படுகிறதன்றோ. (நாளும் காணும் படியானை) " தத்₃ விஷ்ணோ: பரமம் பத₃ம் ஸதா₃ பஶ்யந்தி ஸூரய: " [விஷ்ணு ஸூக்தம்] [விஷ்ணுவின் அந்த மேலான பதத்தை நித்ய ஸூரிகள் எப்போதும் காண்கிருர்கள்] என்று வேதங்களில் சொன்னபடியே எப்போதும் காணும் திவ்யமங்கள விக்ரஹத்தையுடையவனே; படி—விக்ரஹம்; எப்போதும் காணப்படும் இயல்வை உடையவனே என்றும் கொள்ளலாம்; படி—ஸ்வப₄ாவம்; இயல்வு. ' நாளும் ' என்பதை நாளும் தூவி நாளும் காணும் ' என்று இரண்டு இடங்களிலும் அந்வயிக்கலாம். வானவர்கள் ' என்றதற்கு பிரமன் முதலான தேவர்களைப் பொருளாகக் கொள்ளும்போது " தினந்தோறும் வணங்குதல், மலர்தூவி அர்ச்சித்தல் முதலான ஸாதனங்களைச் செய்து, மிக்க முயற்சியாலே ஒருகால் காணும் படியை உடையவன் " என்று பொருள் கொள்ளவேணும். "நேரே கடிக்கமலத்துள்ளிருந்தும் காண்கிலான் கண்ணன் அடிக்கமலம் தன்னை அயன்" [முதல்திருவ 56] என்கிறபடியே பெரும்பாலும் அவனைக் காணுதவர்களாய், மிகமுயன்று ஓரொருகால் காண்பவர்களாயிருப்பவர்களன்றோ ப்ரஹ்மாதி தேவர்கள். இப்படி நித்யஸூரி

என்னும் முறையாலே ஹ்ருதயம் சிதிலமாய். (செவ்வனே) அவன் காட்டும் வழியாலே. (நெஞ்சமே மெய்ம்மையே காண விரும்பு) ப்ரயோஜந நிரபேக்ஷமாகக் காண ஆசைப்படு. 22.

---

கிற செவ்வைவழியாலே, மனஸ்ஸே! ஒரு குணவிஷ்கார மாத்ரத்திலே தெகுட்டிவிடாதே பத்தும்பத்தாக ஸாக்ஷாத் கரிக்கையிலே விருப்பத்தைப்பண்ணு. வானவர்களென்று ப்ரஹ்மாதிகளாகவுமாம். படி—விக்ரஹம். 22.

---

கள் ஸதாநுபவம் பண்ணும்படியாகவும், ப்ரஹ்மாதி தேவர்கள் மிகமுயன்று காணும்படியாகவுமிருப்பவனை, நீ அவன் காட்டக் காண விரும்புவாய் என்கிறார்,— (செம்மையால் உள்ளுருகி) "அவன் உடையவன்; நாம் உடைமை; உடைமையைப்பெற உடையவன் முயலவேணுமேயல்லது; உடையவனைப்பெற உடைமை முயலவேணுமோ" என்று முறையறிந்து, இவ்வனுஸந்தானத்தாலே இம்முறையின் சிறப்பையறிந்து நெஞ்சுடைந்து உருகி; (செவ்வனே காண விரும்பு) இம்முறையை அறிந்தார்க்கு அவன் தானே தன்னைக் காட்டுவானாகையாலே, ஓர் முயற்சியுமில்லாமல் அவன் தானே தன்னைக் காட்டக் காண்கையாகிற நேர்வழியாலே அவனைக் காணவிரும்புவாய். தம் முயற்சியால் அவனைக் காண்பது கரடு முரடான சுற்றுவழியென்றும், அவனாலே அவனைக் காண்பது ராஜபாட்டையான நேர்வழியென்றும் கருத்து. (மெய்ம்மையே காண விரும்பு) ஒரு குணத்தை அவன் காட்டிய மாத்திரத்தாலே போதுமென்று நினைத்துவிடாமல், பரிபூர்ணமாக ஸாக்ஷாத்கரிக்க விருப்பத்தைச் செய். மெய்ம்மையே—பரிபூர்ணமாக, அன்றிக்கே, மற்றொரு ப்ரயோஜனத்தைக்கருதி அவனைக் காணவிரும்புவதைப் பொய்க்காட்சியாகக்கொண்டு, வேறு ஒரு பயனைக் கருதாமல் அவனைக் காண்பதையே பயனாகக்கொண்டு காணும் மெய்க் காட்சியைக் காண விரும்புவாயாக என்பதாகவும் கொள்ளலாம். (நெஞ்சமே) என்னிலும் முற்பட்டுநிற்கும் நெஞ்சமே! ஶேஷஶேஷி பாவத்தை நன்கறிந்த நெஞ்சமே! தம் முயற்சியால் மாத்திரம் எவராலும் அவனைக் காணமுடியாது என்றறிந்த நெஞ்சமே! என்று பலவாறாகக் கருத்துரைக்கலாம். ஆக, அவன் தானே தன்னைக்காட்டவேணும் என்று விரும்பித் தன் முயற்சியினின்றும் கைவாங்கிநிற்பதே ப்ரபன்னனுக்கு ஸ்வரூபம் என்றதாயிற்று. 22.

23. விரும்பிவிண் மண்ணளந்த அஞ்சிறைய வண்டார்
சுரும்பு துளையில் சென்றூத—அரும்பும்
புனந்துழாய் மாலையான் பொன்னங் கழற்கே
மனந்துழாய் மாலாய் வரும்.

அம் சிறைய வண்டு—அழகிய சிறகுகளையுடைய பெண் வண்டுகளும். ஆர் சுரும்பு—அவற்றைப் பிரியாத ஆண் வண்டுகளும். துளையில் சென்று ஊத—நரம்புகளில் படிந்து ஊத (அதனால்). அரும்பும்—மலரப்பெற்ற. புனம் துழாய் மாலையான்—புனத்திற்போலே செவ்விமாறாத திருத்துழாய் மாலையை அணிந்தவனான எம்பெருமானுடைய. விரும்பி விண் மண் அளந்த பொன் அம் கழற்கே—ஆசைப்பட்டு விண்ணுலகத்தையும் மண்ணுலகத்தையுமளந்த மிகவழகிய திருவடிகள் விஷயத்திலே. மனம்—எனது நெஞ்சானது. துழாய்-ஆழ்ந்து. மால் ஆய் வரும்-மிகமயங்கிக் கிடக்கின்றது.

அவ:— (விரும்பி) உபதேசம் பலித்தபடி சொல்லுகிறது.

வ்யா:— (விரும்பி யித்யாதி) பொன்னங்கழற்கே விரும்பி என்னவுமாம். விருப்பத்தோடே விண்ணும் மண்ணுமளந்த

---

அவ:— "காணவிரும்பு" என்று இவர்சொன்ன வாய் மூடுவதற்கு முன்னே. திருவுள்ளம் அவன் திருவடிகளிலே பிச்சேறி விழுகிறபடியைக் கண்டு விஸ்மிதராகிறார்.

உரை:—அழகிய சிறகையுடைத்தான வண்டும், அத்தை விட்டு நீங்காதே சேர்ந்து வர்த்திக்கக்கடவ சுரும்புமாகிற

---

23. அவ:—'காண விரும்பு' என்று இவர் உபதேசித்து வாய் மூடுவதற்கு முன்னே, இவர் மனம் அவன் திருவடிகளிலே பெருங் காதலைச் செய்கின்றபடியைக்கண்டு ஆச்சர்யப்படுகிறார்.

வ்யா:-(அம் சிறைய வண்டு ஆர் சுரும்பு) அழகிய சிறகையுடைய பெண் வண்டும், அதை விட்டுப்பிரியாது பொருந்திவாழும் ஆண்வண்டுமாகிற இரண்டும். 'வண்டு' என்னும் சொல் வண்டுகள் அனைத்தையும் குறிக்குமாயினும், சுரும்பாகிற ஆண்வண்டைத் தனியே எடுக்கையாலே, இங்கு பெண்வண்டைக் குறிக்கிறது.

அழகிய சிறகையுடைத்தான வண்டார்க்கும் சுரும்பு நரம்பறிந் தூத அரும்பாநின்றுள்ள புனந்துழாய் மாலையானுடைய விலக்ஷணமான கழலிலே மநஸ்ஸானது வ்யாமோஹத்தைப் பண்ணித் துழாவி வாராநின்றது. 23.

---

*இவை ரஸஸிரைகளிலே வாய்வைத்தூத, அவற்றாலே கணுக்தோறும் அரும்பிச்செல்லாநிற்பதாய், திருமேனியின் ஸ்பர்சத்தாலே தன்னிலத்தில் நின்றாற்போலே செவ்வி பெற்றுச் செல்லுகிற திருத்துழாய்மாலையாலே அலங்க்ருதனானவனுடைய, ஆகாசம், பூமி முதலானவற்றை உகந்து அளந்துகொண்ட ஸ்ப்ருஹணீயமான திருவடிகளிலே மனஸ்ஸானது முன்னடி தோன்றாமல் நின்ற நிலம் துழாவிக் கொண்டு பிச்சேறி வாராநிற்கும். மனம் விரும்பித்துழாய் மாலாய் வருமென்று மனஸ்ஸோடே சேர்க்கவுமாம். 23.*

---

(விரும்பித்துளையில் சென்றுஊத) தேனில் விருப்பத்தாலே நரம்பறிந்து ரஸ நரம்புகளிலே வாய்வைத்து ஊத. 'விரும்பி' என்பதை 'விரும்பி ஊத' 'விரும்பி அளந்த' 'விரும்பி மாலாய் வரும்' என்று மூன்றிடங் களிலும் அந்வயித்துக்கொள்ளலாம். (அரும்பும் துழாய் மாலையான) இப்படி வண்டூதுவதாலே கணுத்தோறும் அரும்பு விடுகின்ற துழாய் மாலையை உடையவன். (புனந்துழாய் மாலையான்) தன்னிலத்தில் நின்று பறித்தால் வாடும் இயல்வுமாறி; திருமேனியில் ஸ்பர்ஶத் தாலே அப்புனத்திற்போலவே வாடாமல் செழித்துப் புதுமைபெற்று நிற்கும் துழாய் மாலையை உடையவன். (விரும்பி விண்மண் அளந்த பொன் அம் கழற்கே) 'மாவலிக்கும் அழிவு வாராமல் இந்திரன் காரியம் செய்யப்பெற்றோமே' என்னும் ஆனந்தத்தாலே பெருதது பெற்றாற்போன்ற விருப்பத்துடன் தன்னுடையதான விண்ணையும் மண்ணையும் அளந்துகொண்டதாய், பொன்போலே ஆசைப்படத் தக்கதாய், அழகியதான திருவடியிணைக்கே. முதலடியிலுள்ள 'விண் மண் அளந்த' என்னும் தொடர் அர்த்தஸ்வாரஸ்யத்தை நோக்கிப் பின்னடியிலுள்ள 'பொன்னங்கழற்கே' என்றதற்கு விஶேஷணமாகக் கொள்ளப்பட்டது. ஶப்தஸ்வாரஸ்யத்தைக் கொண்டு 'விண்மண் அளந்த அஞ்சிறைய வண்டு' என்று கூட்டிப் பொருள் கொண்டால், ஆகாயத்திலும், பூமியிலும் எங்கும் சுற்றித்திரிகிற

24. வருங்கா லிருநிலனும் மால்விசும்பும் காற்றும்
நெருங்குதீ நீருருவுமாஞன்—பொருந்தும்
சுடராழி யொன்றுடையான் சூழ்கழலே நாளும்
தொடராழி நெஞ்சே தொழுது.

ஆழி நெஞ்சே—*கடல்போன்ற மனமே!* இரு நிலனும்—*பரப்புடைய பூமியும்.* மால் விசும்பும்—*அளவிறந்த ஆகாசமும்.* காற்றும்—*வாயுவும்.* நெருங்கு தீ—*பிரிக்க முடியாது சேர்ந்திருக்கும் தேஜஸ்ஸும்.* நீர் உருவும் ஆஞன்—*ஜலதத்துவமும் ஆகிய பஞ்சபூதங்களுக்கும் அந்தர்யாமியானவனும்.* பொருந்தும் சுடர் ஆழி ஒன்று உடையான்—*தனக்குப் பொருந்திய ஒப்பற்ற சோதியுடைய சக்கரத்தையுடையவனுமான எம்பெருமானுடைய.* சூழ் கழலே—*அடியாரை வசப்படுத்திக்கொள்ளுகிற திருவடிகளையே,* வருங்கால் நாளும்—*மேலுள்ள காலமெல்லாம்,* தொழுது—*வணங்கி.* தொடர்—*பின்பற்றியிரு.*

அவ:— (வருங்கால்) ஆசைபிறந்தபின் விச்சே₂த₃மின்றிக்கே அநுபவிக்கப்பார்.

---

அவ:— *அபி₄நிவிஷ்டராய்க்கொண்டு எல்லாம் செய்தோமிறேயென்று இறுமாந்திராதே. நெஞ்சே! மேல்விழுந்து அவனை ஆம்ரயிக்கப் பார்கிடாயென்கிருர்.*

---

அழகிய சிறகையுடைய வண்டு' என்று பொருள்படுகிறது. (மனம் விரும்பித்துழாய் மாலாய் வரும்) மனமானது விருப்பத்தைச் செய்து, அவ்விருப்பத்தாலே முன்னடி தெரியாமல், நின்ற நிலத்தைத் துழாவிக்கொண்டு, மயக்கமே ஓர் வடிவெடுத்ததோ என்னும்படி அத்திருவடிகளிலே மயங்கி நிற்கும். ஆக காணவிரும்பு' என்று உபதேசித்தவுடன். விருப்பத்தின் உச்சநிலையில் தம்மனம் நிற்பதைக்கண்டு ஆச்சரியப் பட்டுப் பாசுரம் அருளிச் செய்தாராயிற்று. 23.

24. அவ:-"நெஞ்சே! பெருங்காதல்கொண்டு எம்பெருமானிடம் ஈடுபட்டுவிட்டோம்; இனிச்செய்யவேண்டியதில்லை" என்று கர்வங் கொண்டிராமல், மேல் விழுந்து அவனை ஆம்ரயித்து,. ஏற்பட்ட

வ்யா:— (இருநிலனுமித்யாதி) காரணமான பூ₄தபஞ்சகமும் லீலாவிபூ₄திக்குமுபலக்ஷணம். (பொருந்துமித்யாதி) நித்யவிபூ₄திக்கும் உபலக்ஷணம். உப₄ய விபூ₄தியுக்தனுடைய சூழ்

உரை:— பரப்பையுடைத்தான பூ₄மியும், அபரிச்சே₂த்₃யமான ஆகாசமும், வாயுவும், செறிந்த தேஜஸ்தத்வமும் ஜலமுமாகிற இவ்விவபத₃ார்த்த₂ங்களுக்கு அந்தராத்மாவாய் நிற்கையாலே லீலாவிபூ₄திவிஶிஷ்டனாய், திருக்கையிலே பொருந்தியிருக்கும் அத்₃விதீயமான தேஜோரூபமான திருவாழியையுடையனாகையாலே நித்யவிபூ₄திவிஶிஷ்டனாயிருக்

அநுபவத்திற்கு இடைவெளி ஏற்படாதபடி தொடர்ந்து அவனை அனுபவிக்க முயல்வாய்'' என்று நெஞ்சைப்பார்த்து அருளிச் செய்கிறார்.

வ்யா:— (ஆழி நெஞ்சே) கடல்போலே ஆழமும, அளவுமுடைய நெஞ்சே! இனி, உப₄யவிபூ₄தியையும் உடையவனாகையால், இத்தகைய நெஞ்சால் காலமெல்லாம் அநுபவிக்கத்தக்க விஷயமுடையவன் என்று காட்டுகிறார் முதல் மூன்று அடிகளாலே,—(இருநிலனும்) பெரும் பரப்பை உடையதான பூமியும். (மால்விசும்பும்) அந்த பூமியைப்போலே அளவிட முடியாதபடி மிகப்பெரிதான ஆகாயமும். (காற்றும்) அந்த பூமியிலும், ஆகாயத்திலுமுள்ளார்க்கு உயிரளிக்கும் வாயுவும். (நெருங்கு தீ) பூமி வாயுக்களைப்போலே ஸந்ததிரூபமாகவேயிருந்தபோதிலும், பிரித்து எடுக்கமுடியாதபடி நெருங்கிநிற்கும் தேஜஸ்தத்துவமும். (நீர்) இவையனைத்தையும் சேர்த்துவைக்கும் நீரும். (நீருருவும் ஆனான்) இப்படிப் பஞ்சபூதமும் இவனே என்னும்படி அவற்றுக்கு அந்தர்யாமியாய் நிற்பவன். இப்படி லீலாவிபூதிகாரணமான ஐம்பெரும் பூதங்களையும் சொன்னது லீலாவிபூ₄தி முழுவதற்கும் உபலக்ஷணமாகையாலே ப்ராக்ருதமான இந்த எல்லா உலகங்களையும் சரீரமாக உடையவன் என்றதாயிற்று. (பொருந்தும் சுடராழி ஒன்றுடையான்) முற்கூறிய ப்ராக்ருதப் பொருள்களைப்போலே இவனுடைய தூய்மையோடு சேராதபடியிராமல், இவனைப்போலே அப்ராக்ருதச் சோதிமயமாயிருக்கையாலே இவனோடு சேர்ந்திருக்கும் ஒப்பற்ற திருவாழியாழ்வானை உடையவன். இங்கு நித்யவிபூதியிலுள்ள ஸூரிகளில் தலைவனான திருவாழியாழ்வானைச் சொன்னது நித்யவிபூதி முழுவதற்கும் உப

கழலே வருங்கால் நாளுமாழி நெஞ்சே! தொழுது தொடா. கீழ் விச்சேதித்து அநர்த்தப்பட்டது போரும். முறையாலே ஆஶ்ரயி. 24.

25. தொழுதால் பழுதுண்டே? தூநீ ருலகம்
முழுதுண்டு மொய்குழலா ளாய்ச்சி—விழுதுண்ட
வாயானை மால்விடையேழ் செற்றானை வானவர்க்கும்
சேயானை நெஞ்சே சிறந்து.

தூ நீர் உலகம்—தூய்மையான நீரையுடைய கடலோடு கூடின உலகங்களை. முழுது—முழுவதும். உண்டு—திரு வயிற்றிலே வைத்தவனும், மொய் குழலாள் ஆய்ச்சி—நெருங்கிய கூந்தலையுடையளான யசோதையினுடைய.

...ற ஸர்வேஶ்வரனுடைய. ஆஶ்ரிதரை ஸ்வவைலக்ஷண்யத்தாலே தப்பாதபடி சூழ்ந்துக்கொள்ளுகிற திருவடிகளையே. ...னுடைய நெஞ்சே! ஸ்வரூபாநுரூபமாகத்தொழுது மேல்வரும் காலமெல்லாமறியிராதே நாள்தோறும் பின்பற்றி ஆஶ்ரயி. 24.

லக்ஷணமாகையாலே, அப்ராக்ருதமான் நித்யவிபூதியையும் சரீரமாக உடையவன் என்று சொல்லிற்றாயிற்று. இதற்குமேலே, ஆஶ்ரிதரை அடிமைப்படுத்திக்கொள்ளும் திவ்யமங்களவிக்ரஹத்தையும் உடையவன் என்கிறார் மேலே.—(உடையான் சூழ் கழலே) இப்படி உபயவிபூதி விஶிஷ்டனாகையாலே ஸர்வேஶ்வரனாய்,வகுத்தஸ்வாமியாயிருப்பவனுடையதாய், அடியாரைத் தன் அழகாலே தப்பமுடியாதபடி வசப்படுத்திக்கொள்வதான திருவடியையே. கைக்குழந்தைக்குத் தாய்முலைபோலே, ஶேஷபூதனுக்கு தாரகபோஷகபோக்யமாயிருக்கையாலே திருவடிகளையிட்டுத் திருமேனியை உபலக்ஷிக்கிறார். (தொழுது) ஶேஷமான உன் ஸ்வரூபத்துக்குத் தக்கவாறு ஶேஷியான அவனை வணங்கி. (வருங்கால் நாளும் தொடர்) மேல் வரும் காலமெல்லாம் ஒருகணநேரமும் ஆறியிராமல், தினந்தோறும் அத்திருவடிகளையே பின்பற்றி ஆஶ்ரயித்து அநுபவிப்பாயாக. இதற்கு முன் அநாதிகாலமாக அத்திருவடியை நினையாமல் அநர்த்தப்பட்டது போதும்; இனியாவது, இடைவெளிவிடாமல் முறைப்படி ஆஶ்ரயிப்பாயாக என்று நெஞ்சுக்கு அறிவுறுத்துகிறார். 24

விழுது—வெண்ணெயை, **உண்ட வாயானை**—அமுதுசெய்த வாயையுடையவனையும். **மால் விடை ஏழ் செற்றானை**—கொழுத்த காளைகள் ஏழையும் முடித்தவனையும். **வானவர்க்கும் சேயானை**—பிரமன் முதலிய தேவர்களுக்கும் எட்டாத வனையுமுள்ள எம்பெருமானை. **நெஞ்சே**—நெஞ்சமே!. **சிறந்து**—சிறப்புற. **தொழுதால்**—வணங்கினால், **பழுது உண்டே**—குறை ஏதும் ஏற்படுமோ?

அவ:— (**தொழுதால்**) நான் சொல்லுகிறது தப்புண்டோ வென்கிறார்.

வ்யா:— ( **தூநீருலகம்முழுதுண்டு** ) சூழ்ந்தகடல் அலையாதபடிக்கீடாக லோகத்தையெல்லாம் வயிற்றிலே வைத்து.

---

அவ:— இவர் இப்படி உபதேசிக்கச் செய்தேயும் பூர்வ வ்ருத்தத்தை ஸ்மரித்துத் திமிர்த்திருக்கிற திருவுள்ளத்தைக் குறித்து, 'அவனை நீ கிட்டி ஆஶ்ரயித்தால் உனக்கு வருவதொரு குறையில்லை காண்' என்கிறார்.

உரை:— நிர்மலமான ஜலத்தையுடைத்தான கடலோடு கூடின பூம்யாதி₃லோகங்களை ஒன்றும் பிரிகதிர்ப்படாதபடி கடலின் நீரும் கலங்காமல் இருந்த கட்டளையிலே எடுத்து

---

25. அவ:— இவர் இப்படி உபதேசித்தபோதிலும், அநாதிகாலமாக இத்திருவடியை ஆஶ்ரயிப்பதற்கு ஏற்பட்ட இடையூறுகளை நினைத்து, 'இனியும் எனனென்ன இடையூறுகள் ஏற்படுமோ' என்று பயந்திருக்கிற நெஞ்சைப்பார்த்து, 'அவனை நீ அணுகி ஆஶ்ரயித்தபின்பு எல்லா இடையூறுகளும் அகலும்; உனக்கு எக் குறையும் ஏற்படாது' என்று தெளிவிக்கிறார்.

வ்யா:— (நெஞ்சே!) அவனுடைய தன்மையை அறிந்திருந்தும் மறந்து பயங்கொள்ளும் நெஞ்சே! உன்னை வசப்படுத்துவதற்காக அவன் செய்த செயல்களைக் கண்டாயோ? என்று அவற்றை நினைவுறுத்துகிறார் பாசுரத்தின் பெரும்பகுதியாலே. ( தூநீருலகம் முழுதுண்டு ) அழுக்கற்ற நீராலே சூழப்பெற்ற பூமி முதலான உலகங்களை ஒன்றும் வெளிப்படாதபடி இருந்தபடியே எடுத்துத்

(மொய்குழலித்யாதி) அநுகூலருடைய த்₃ரவ்யத்தாலல்லது தரியாதவனே. (மால்விடையேழ் செற்ருனே) நப்பின்னைப் பிராட்டியுடைய ஸம்ஶ்லேஷத்துக்கு விரோதியான மதித்த எறேழையும் செற்றவனே. (வானவர்க்குஞ்சேயானே) ஸ்வயத் ;தால் காண்பார்க்கு மநஸ்ஸுக்கும் வாக்குக்கும் தூ₃ர ஸ்த₂ஞனவனே. (சிறந்து நெஞ்சே தொழுதால் பழுதுண்டே)

---

திருவயிற்றிலேவைத்து. அவ்வளவிலும் வயிறு நிறையாமை யாலே. அழகியகுழலையுடையளான ய்சோதைப்பிராட்டி யுடைய வெண்ணெயை அமுதுசெய்த திருப்பவளத்தை யுடையனுய். நப்பின்னைப் பிராட்டியைக் கைப்பிடிக்கைக்கு இடைச்சுவரான முரட்டு ரிஷப₄ங்களேழையும் முடித்துப் பொகட்டவனுய். மிகைமிடுக்காலே காணவொருப்படும் ப்ரஹ்மாதிகளுக்கும் சால தூ₃ரஸ்த₂னுயிருக்கிறவனே.

---

திருவயிற்றிலே வைத்து. 'தூநீருலகம்' என்று விஶேஷணமிடுகை யாலே, பூமியைச் சூழ்ந்திருப்பதாய், காற்றடித்தாலும் அலையெறிந்து கலங்கும் இயல்வுடையதான கடலும் அலையாமலும், கலங்காமலும் (தூய்மை குன்ருமலும்) வயிற்றிலே வைத்த அக₄டிதக₄டநாஸாமர்த்₂ யத்தைச் சொல்லுகிறது. (மொய்குழலாள் ஆய்ச்சி விழுதுண்ட வாயானே) ஏழுலகும் உண்டும் இடமுடைய வயிருகையாலே, தூநீருலகம் முழுதுண்டதிலும் நிரம்பாத வயிறை நிரப்புவதற்காக அழகிய குழலையுடைய யசோதைப்பிராட்டியின் கைபட்ட வெண்ணெயைக் களவாடித்தின்று அக்களவு தன் வாயிலேயே வெளிப்படும்படி நின்றவனே, அன்புடையார் தொட்ட பொருள் அற்பமாயினும், அதைப் பெருவிடில் தரியாதவனுய், அதைத் தகாத வழியிலாவது உண்டபின்பே வயிறுநிரப்பும் இயல்வுடையவன் என்று காட்டுகிருர். (மால்விடையேழ் செற்ருனே) நப்பின்னைப் பிராட்டியைக் கைப்பிடிப்பதற்குத் தடையாயிருந்த முரட்டுக்காளைகள் ஏழையும் ஒன்ருக அழித்தவனே. இத்தால் நமது இடையூறுகளை யும் அழிக்கவல்லவன் என்று உணர்த்துகிருர். (வானவர்க்கும் சேயானே) இப்படி ஆய்ச்சிகளுக்கு எளியவனுயினும், தமக்குள்ள அதிகமான ஜ்ஞாநஶக்திகளால் அவனை அடையப்பார்க்கும் பிரமன் உருத்திரன் முதலான தேவர்களுக்கு மனத்துக்கும் வாக்குக்கும் எட்டாதவனே. இத்தால், எளியவர்க்கே எளியவன் என்று

ஸம்ஸாரிதர்க்கு ஸௌலப்யனவனைக் கிட்டித்தொழுதால் பழுதுண்டோ? 25.

26. சிறந்தவென் சிந்தையும் செங்க ணரவும்
நிறைந்தசீர் நீள்கச்சி யுள்ளும்—உறைந்ததுவும்
வேங்கடமும் வெஃகாவும் வேளுக்கைப் பாடியுமே
தாங்கடவார் தண்டுழா யார்.

தண் துழாயார் தாம்—குளிர்ந்த திருத்துழாய் மாலையை அணிந்துள்ள எம்பெருமான். கடவார்—ஒருநாளும் விட்டு நீங்காதவனுயக்கொண்டு. உறைந்ததுவும் — நித்யவாஸம் பண்ணுமிடங்கள் (எவையென்றால்). சிறந்த என் சிந்தையும்—(அனைத்திலும்) சிறந்ததான என்னுடைய நெஞ்சமும், செம் கண் அரவும்-சிவந்த கண்களையுடைய திருவனந்தாழ்வானும். நிறைந்த சீர்—நிறைந்த செல்வத்தையுடைய, நீள்—பெரிய. கச்சியுள்ளும்—கச்சித்திருப்பதியும், வேங்கடமும்—திருமலையும். வெஃகாவும்—திருவெஃகாவும். வேளுக்கைப் பாடியுமே—திருவேளுக்கைத் திருப்பதியுமாம்.

---

நெஞ்சே! ஸம்பந்தத்தை நினைத்து அங்குத்தைக்குத் தகுதியாய்க்கொண்டு ஆச்ரயித்தால் உனக்கு வருவதொரு தப்புண்டோ. 25.

---

உணர்த்துகிறார். (சிறந்து தொழுதால் பழுதுண்டே) அவனுக்கும் நமக்குமுள்ள உறவை நினைத்து, நம் சேஷத்வ ஸ்வரூபத்துக்குத் தக்கபடி தொழுதால் உனக்கு எந்த இடையூறு நேரும்? நம்முடைய ஆபத்துக்காலத்தில் நம்மை வயிற்றிலேவைத்து நோக்குகிறபடியையும், அடியார்க்கு எளியனுயிருக்கும்படியையும், அடியாரை அடையத் தடையாயிருப்பவற்றைப் போக்கும் தன்மையுடையனுயிருப்பதையும், எளியவர்க்கே எளியவனுயிருக்கும் படியையும் அநுஸந்தித்தால், 'இடையூறு நேருமோ' என்று கலங்குவதற்கே இடமில்லை என்று நெஞ்சைத் தேற்றினாராயிற்று. 25.

வ்யா:-(சிறந்த வித்யாதி) என்னுடைய சிந்தையுள்ளும் திரு வனந்தாழ்வான் மேலும் கச்சியுள்ளும் ஸாதரமாகவுறைந்தது.

அவ:— இப்படிகிட்டி ஆஶ்ரயித்த தம் திருவுள்ளத்தை உகந்தருளின நிலங்களிலுங்காட்டில் அவன் விரும்பின படியையருளிச் செய்கிறார்.

உரை:-ஐஶ்வர்யஸூசகமான குளிர்ந்த திருத்துழாயாலே அலங்க்ருதனான பெருமையையுடைய தாம். திருவுள்ளத்தில் உகப்புடனே நித்யவாஸம் பண்ணியருளிற்றும். தாம் விரும்பி மேல்விழுகைக்குத்தகுதியான என்னுடைய ஹ்ருதயத்திலும்,

26. அவ:— இப்படிச் சிறந்து தொழுத தம் திருவுள்ளத்தை, நித்ய ஸூரிகளிலும், உகந்தருளின நிலங்களிலுங்காட்டிலும் அவன் விரும்பி நின்றபடியை அருளிச்செய்கிறார்.

வ்யா:— (தண் துழாயார் தாம்) இவனே உபயவிபூதிநாயகன் என்பதைக் காட்டித்தரும் குளிர்ந்த திருத்துழாய்த்தனிமாலையாலே அலங்கரிக்கப்பெற்ற பெருமையையுடையவர் தாம். (உறைந்ததுவும்) திருவுள்ளத்தில் உகப்புடன் நித்யவாஸம் செய்தருளிய விடங்களாவன,- (சிறந்த என் சிந்தையும்) பின் சொல்லப்போவது அனைத்திலும் சிறந்த என் நெஞ்சும். திருவனந்தாழ்வான் முதலான நித்யஸூரிகளையும், திருப்பதிகளையுங்காட்டிலும் எம்பெருமான் தம் நெஞ்சையே அதிகமாக விரும்பி மேல்விழுகிறானகையாலே 'சிறந்த' என்று அதை விசேஷிக்கிறார். இக்கருத்தினாலேயே, 'ஹ்ருதயம் தத்விஜ்ஞேயாத் விஶ்வஸ்யாயதநம் மஹத்' [தை-நா] "நெஞ்சமே நீள் நகராக இருந்த" [திருவாய்3-8-2] என்று தென்மொழி வடமொழி வேதங்களிலே ஓதப்பட்டது.

அனந்தன்பாலும் கருடன்பாலும் ஐதுநொய்தாக வைத்து. என்
மனந்தனுள்ளே வந்துவைகி வாழச்செய்தா யெம்பிரான்.
பனிக்கடலில் பள்ளிகோளைப் பழகவிட்டு. ஓடிவந்தென்
மனக்கடலில் வாழவல்ல மாயமணாள நம்பீ.
வடதடமும் வைகுந்தமும் மதிள் துவராபதியும்.
இடவகைகளிகழ்ந்திட்டென்பால் இடவகை கொண்டனையே.

என்றார் பெரியாழ்வாரும். [பெரியாழ்திரு 5-4-8, 9, 10]

( வேங்கடமித்யாதி ) திருமலையிலும் திருவெஃகாவிலும் வேளுக்கைப்பாடியிலும் கடவரானமாத்ரம். கடவரானமாத்ர மென்று சொன்ன உரமெத்தாலே யென்னில்: ( தண்டுழா யார் ). நிறைந்த சீர் நீள்கச்சியுள்ளும். வேங்கடமும் வெஃகா வும் வேளுக்கைப்பாடியுமுறைந்ததுவும். சிறந்தவென்சிந்தை

---

மதுபானமத்தரைப்போலே நிரந்தரானுபவத்தாலே சிவந்த கண்களையுடையனை திருவனந்தாழ்வான் பக்கலிலும். திருப்பதிகளாலே நிறைந்த ஐச்வர்யத்தையுடைத்தாய். போக்யதை அளவிறந்திருந்துள்ள திருக்கச்சியிலுமாயிருக் கும்; திருமலையும் திருவெஃகாவும் திருவேளுக்கைப்பாடியு மாகிற இவ்விடங்களை. 'நிர்வாஹகரான நமக்கு விட

---

இனி, இப்படி அனைத்திலும் சிறந்த சிந்தையைப் பெறுவதற்கு உறுப்பாக அவன் உறைந்த இடங்களைப் பேசுகிறார். (செங்கண் அரவும்) மதுவைப்பருகி மயங்கிநிற்பாரைப்போலே, மதுவித்யா ப்ரதிபாத்யனை, தேவர்களுக்கு மதுவைப்போல் இனியவன் என வேதாந்தங்களில் முழங்கப்படும் ஆராவமுதை எப்போதும் அநுபவிக்கையாலே சிவந்த திருக்கண்களை உடையவனை திரு வநந்தாழ்வானிடத்திலும் உகப்புடன் உறைந்தருளினான். இங்கு திருவனந்தாழ்வானைச் சொன்னது நித்யஸூரிகள் அனைவர்க்கும் உபலக்ஷணம.

"சென்றால் குடையாம் இருந்தால் சிங்காசனமாம்
நின்றால் மரவடியாம் நீள்கடலுள்—என்றும்
புணையாம் மணிவிளக்காம் பூம்பட்டாம் புல்கும்,
அணையாம் திருமாற்கு அரவு" [முதல்திருவ 53]

என்று எல்லாக் கைங்கர்யங்களையும் இடைவிடாமல் செய்கின்ற வனாகையாலே அவனை யிட்டு நித்யஸூரிகளை உபலக்ஷிக்கிறார். ( நிறைந்த சீர் நீள் கச்சியுள்ளும் ) திருப்பதிகள் பலவற்றாலே நிறைந்த செல்வத்தையுடையதாய், இனிமையிலே எல்லையற்று நீண்டிருக்கும் திருக்கச்சியிலும் உகப்புடன் உறைந்தருளினான். பல திவ்யதேசங்கள் நிறைந்திருக்கையாலே ஆழ்வாரைப்போலே பல சேதனர்களைத் திருத்த உறுப்பாகும் என்று மற்ற திவ்ய

யும் செங்கணரவும் தாங்கடவார். உகந்த படுக்கையான திருவனந்தாழ்வானேபோதி என்னுடைய நெஞ்சை அதிக்ரமியார். அன்றிக்கே, திருவனந்தாழ்வானையும் என்னுடைய நெஞ்சையும் தம்மதாக அபிமானித்திருப்பது; அல்லாதவற்றிலுறைந்த மாத்ரமேயென்றும் அருளிச்செய்வர். 26.

---

வொண்ணுதே!' என்று ப்ராப்தி மூலமாக விரும்பியிருப்பர். திருக்கச்சி முதலான திருப்பதிகளிலும் ஸூரிகளில் ப்ரதாநனை திருவனந்தாழ்வானிலுங்காட்டில் தம் திருவுள்ளத்தை மிகவும் விரும்புகையாலே மூந்துறத்திருவுள்ளத்தையருளிச் செய்தார். 26.

---

தேசங்களைக் காட்டிலும் கச்சியிலே மிகுந்த உகப்பைச்செய்தருளினுன் என்று கருத்து. ஆக, என் சிறந்த சிந்தையையும், அதைப் பெறுவதற்கு உறுப்பாக ஆதிசேஷன் முதலான நித்யஸூரிகளையும், கச்சிப்பதியையும் மிகவும் உகந்தருளினுன் என்ருராயிற்று. மற்றுமுள்ள தனித்தனித் திருப்பதிகளில் அவனுடைய உகப்பு எத்தகையது? எனில்: (வேங்கடமும் வெஃகாவும் வேளுக்கைப் பாடியுமே தாம் கடவார்) வேங்கடம், வெஃகா, வேளுக்கைப்பாடி போன்ற தனித்திருப்பதிகளை, 'இவற்றுக்குக் கடவரான (நிர்வாஹகரான) நம்மால் இவற்றை விடவொண்ணுதே!' என்று அவை தனக்கு உடைமையாகவும், தான் அவற்றுக்கு ஸ்வாமியாகவுமிருக்கும் தொடர்பைநோக்கி அவற்றைவிட்டு நீங்காமலிருப்பர். ஆக, வேங்கடம், வெஃகா, வேளுக்கைப்பாடி போன்ற ஓரொரு திருப்பதிகளைக் காட்டிலும், பல திருப்பதிகள் நிறைந்த கச்சி, நித்யஸூரிகளில் சிறந்த திருவநந்தாழ்வான், ஸாதநஸ்தலங்களான இவற்ருல் ஸாதிக்கப்படும் ஸாத்யஸ்தலமான தன் நெஞ்சு ஆகியவற்றிலே மிகச்சிறந்த உகப்பைச் செய்திருப்பான் எம்பெருமான்; இதற்குக் காரணம் ஆச்ரிதரக்ஷணத்திற்காகவே திருத்துழாய் மாலையை தரித்திருக்கையே என்று அருளிச்செய்தாராயிற்று.

இப்படியல்லாமல், வேறுவகையாகவும் அந்வயித்துப் பொருள் கொள்ளலாம். அதாவது,— (நிறைந்த சீர் நீள் கச்சியுள்ளும், வேங்கடமும், வெஃகாவும், வேளுக்கைப்பாடியுமே உறைந்ததுவும்; தண்டுழாயார்தாம் சிறந்த என் சிந்தையும் செங்கணரவும் தாம்

27. ஆரே துயருழந்தார் துன்புற்று ராண்டையார்
காரேமலிந்த கருங்கடலை—நேரே
கடைந்தானைக் காரணனை நீரணைமேல்பள்ளி
அடைந்தானை நாளு மடைந்து.

கார் மலிந்த கரு கடலை—மேகங்கள் நிறைந்த கறுத்த கடலை, நேரே கடைந்தானை—தானே முன்னின்று கடைந்தவனும். காரணனை—ஸர்வ ஜகத்காரணனும். நீர் அணை மேல் பள்ளி அடைந்தானை—திருப்பாற்கடலில் (ஆதிசேஷனாகிற) படுக்கையின்மேல் பள்ளிகொண்டிருப்பவனுமான எம்பெருமானை. அடைந்து—ஆம்ரயித்து (இருப்பவர்கள்). நாளும் துயர் உழந்தார் ஆர்—ஒருநாளாவது துன்பமடைந்தவர் எவர்? துன்பு உற்றார் ஆண்டையார் — (அப்படி) துக்கங்களை அநுபவித்தவர்கள் எங்கிருக்கிறார்கள்.

அவ:— (ஆரே) அவன்படியிதுவான பின்பு அவனை ஆம்ரயித்தும் தாங்கள் பண்ணின பாபத்தின் பலம் புஜிப்பாருண்டோ? என்கிறார்.

---

அவ:— இப்படிப்பட்ட அவனை ஆம்ரயித்தவர்களில் ஆரேனுமொருத்தர். தாங்கள் பண்ணின பாபபலம் புஜித்தார்களாகக் கேட்டறிவதுண்டோ? என்கிறார்.

---

கடவார்) கச்சிப்பதியிலும், வேங்கடத்திலும், திருவெஃகாவிலும், வேளுக்கையிலும் தவிர்க்கமுடியாதபடி வாழ்ந்தவித்தனையே, ஆம்ரித ரக்ஷணத்திற்காகத் தனிமாலை தரித்திருப்பவன் உகந்த படுக்கையான திருவனந்தாழ்வானைப்போலே என்னுடைய சிறந்த நெஞ்சையும் கடக்கமாட்டாதவனாயிருப்பான் என்றபடி. இந்த நிர்வாஹத்தில் நீள்கச்சியென்றது கச்சிப்பதியிலுள்ளதாய், திருவெஃகாவையும், வேளுக்கைப்பாடியையும் தவிர்ந்ததான ஒரு திவ்யதேசத்தைக் காட்டுகின்றது. 'தாம் கடவார்' என்றதற்குத் தம்மதாக அபிமானித்திருப்பார் என்றும் பொருள் கொள்ளலாம். ஆக, இப்படி மூன்று விதமான நிர்வாஹத்திலும், திருப்பதிகளையும், நித்யஸூரிகளையுங்காட்டிலும் தம் நெஞ்சையே மிக விரும்பியிருப்பான் எம்பெருமான் என்று அருளிச்செய்தாராயிற்று. 26.

27. அவ:— அவனுடைய தன்மை இதுவானபின்பு, அவனை அடைந்தவர்களில் யாரேனுமொருவர் தாங்கள் பண்ணின

வ்யா:— ( காரேமலிந்தகருங்கடலை நேரேகடைந்தானை ) மேலேபடிந்த மேகங்கள் சலியாதபடி அம்ருதம்படும்படிக் கிடாகக் கடலைக்கடைந்தானை. ( காரணனை ) ஜகத்காரண பூதனை. (நீரணைமேல் பள்ளியடைந்தானை) ஆஶ்ரிதர்கார்யஞ் செய்கைக்காகத் திருப்பாற்கடலிலே கிட்டவந்து கிடந்தவனை. ( நாளுமடைந்து ஆரேதுயருழந்தார் துன்புற்றாராண்டையார் )

---

உரை:— மேகங்களாலே நிறைந்த பெரியஸமுத்ரத்தை, மேற்படிந்த மேகங்கள் சலியாதபடி நேர்கொடுநேரே நின்று கடைந்தவனும், ஜகத்காரணத்வப்ரயுக்தமான உறவை யுடையனும், இவற்றை ரக்ஷிக்கைக்கு அவஸரப்ரதீக்ஷனும்க் கொண்டு கடைந்த கடலின் நீரிலே திருவனந்தாழ்வானுகிற படுக்கையின் மேலே கண்வளர்ந்தருளுகிறவனை, தேவையாக வன்றிக்கே போகரூபமாக நாள்தோறும் ஆஶ்ரயித்து

---

பாபத்தின் பலமான துன்பத்தை அநுபவித்தார்கள் என்று கேட்டறிந்ததும் இல்லையென்பதில் ஆச்சரியமில்லை என்கிறார்.

வ்யா:— (காரே மலிந்த கருங்கடலை நேரே கடைந்தானை) மேகங்களாலே நிறைந்த பெரிய கடலை, ஆழியுட்புக்கு முகந்து கொடு போவதற்காகக் கடலின்மேலே படிந்த மேகங்கள் சிறிதும் அசையாதபடி தான் நேரே கடைந்த ஸமர்த்தனை. கருங்கடல்-பெருங்கடல், "நீலக்கடல் கடைந்தாய்" [திருவாய் 10-10-7] என்கிறபடியே திருமேனியொளியாலே பாற்கடல் கருங்கடலாயிற்று என்றும் கொள்ளலாம். தன்னைச் சரணடைந்த தேவர்க்க[illegible] உடம்பு நோவக் கடல்கடைந்து அமுதை எடுத்து அவர்கள் துன்பத்தைத் தீர்த்தவனன்றோ இவன்; இவனையடைந்தார் துன்புற முடியுமோ? என்று கருத்து. இப்படி இவர்களுக்காகப் பாடுபடுகைக்குக் காரணம் உறவுடையனுகையே என்கிறார் மேலே,—(காரணனை) அனைவரையும் படைத்த பிதாவாகையாலே இவனையடைந்தவர் துயருறமுடியாது என்று கருத்து. துன்பம் வந்தபோது இவனைத் தேடிப்போகமுடியாதபடி பரமபதத்திலிருப்பவனே? எனில், அடியார் துயர் கேட்கைக்காகத் திருப்பாற்கடலில் வந்து கண்வளர்ந்தருளுகிறவன் என்கிறார்,— ( நீரணைமேல் பள்ளி அடைந்தானை ) தேவர்களுடைய கூப்பிடு கேட்கைக்காக, 'ரக்ஷிக்க இடமுண்டோ?'

தாந்தாம் பண்ணின நிஷித்₃த₄கர்மத்தினுடைய ப₂லமான துக்கத்தை அவனை ஆச்ரயித்து அநுப₄விப்பாருண்டோ? ''ஆண்டையார்'' என்றது-எங்குள்ளாரென்றபடி. ''நாளும்'' என்றது-எக்காலத்திலென்றபடி. எக்காலத்தில் எத்தேசத்தில் ஆர் அவனைப்பற்றி துஷ்கர்மபலத்தை அநுப₄வித்தார்? 27.

வைத்து, து₃:க்க₂ஹேதுவான பாபங்கள், உச்சிவீடுவிடாதே பண்ணினவர்களில் ஆர்தான் அந்தப் பாபப₂லமான து₃:க்க₂த்தை அநுப₄வித்தார்? அவர்கள்தான் எக்காலத்திலுள்ளவர்கள்? ப₄க₃வத்ஸமாஶ்ரயணம் பண்ணுகைக்கும் பாபப₂லமநுப₄விக்கைக்கும் அக்₃நிநீரெஞ்சேத்போலேயென்ன சேர்த்தியுண்டு? என்றபடி. 27.

என்று எதிர்பார்த்துக்கொண்டு, இவர்களால் கடையப்பெற்ற கடலின் நீரிலேயே, அந்நீர் உறுத்தாமைக்காகத் திருவநந்தாழ்வானை மெத்தையாக விரித்து, ஜகத்₃ரக்ஷணசிந்தையுடன் அதன்மேல் பள்ளிகொண்டருள்கின்றவனை. (நாளும் அடைந்து) தினந்தோறும் ஆச்ரயித்து. தங்கள் காரியம் சாதிப்பதற்காக அவனை அடைவதாகில், ஒருதரம் அடைந்தாலே போதுமானது; ஸ்வயம் ப்ரயோஜநமாக போ₄க₃ரூபமாக அடைகிறார்களாகையாலே, தினந்தோறும் ஆச்ரயிக்கிறார்கள் என்று கருத்து. அன்றிக்கே, 'நாளும்' என்பதை முதலடியோடு கூட்டிக்கொள்ளவுமாம்; (அடைந்து) இப்படி ஸர்வரக்ஷகனானவனை ஒருகால் ஆச்ரயித்து, (நாளும் ஆரே துயர் உழந்தார்) எக்காலத்தில் யார் துன்புற்றார்கள்? (ஆரே) ''நானே நானாவித நரகம்புகும் பாவம் செய்தேன்'' [பெரியதிரு 1-9-2] என்கிறபடியே இடைவிடாமல் துக்கஹேதுவான பாபங்களைபுரிந்த மஹாபாபிகளாயினும் பாபப₂லம் அநுப₄வியார்கள் என்று கருத்து. (துன்புற்றார் ஆண்டையார்) அவனை அடைந்து துன்புற்றவர்கள் எந்த தேசத்தில் உள்ளனர்? ப்ரஹ்மருத்ராதிகளை அடைந்து துன்புற்றவர்கள் பல தேசங்களிலும் பல காலங்களிலும் இருந்திருக்கின்றனர் என்பதை ஹிரண்யன் ராவணன் ப₄ஸ்மாஸுரன் முதலான பல அஸுரராக்ஷஸர்களின் கதைகளில் கேட்டிருக்கிறோம். அச்யுதனான இவனை அடைந்து ஒருவன் துன்புற்றதாக எக்காலத்திலும் எந்த தேசத்திலும் கேள்விப்பட்டதுகூட இல்லையே! என்று கருத்து. 'பகவானை அடைந்தவன் பாபப₂லத்தை அநுப₄வித்தான்'

28. அடைந்த தரவணைமேல் ஐவர்க்காய் அன்று
மிடைந்தது பாரத வெம்போர்—உடைந்ததுவும்
ஆய்ச்சிபால் மத்துக்கே அம்மனே! வாளெயிற்றுப்
பேய்ச்சிபா லுண்ட பிரான்.

வாள் எயிறு — வாள்போன்ற பற்களையுடையளான. பேய்ச்சி—பூதனையினுடைய. பால்—முலைப்பாலை. உண்ட—உண்டு அவளை அழித்தவனான. பிரான்—உபகாரகனானவன், அடைந்தது—பள்ளிகொண்டது. அரவு அணைமேல்—சேஷ சயனத்தின் மேலாம்; அன்று—முன்னொரு காலத்தில், ஐவர்க்கு ஆய்—பஞ்சபாண்டவர்களுக்காக. மிடைந்தது—நெருங்க நடத்தினது. வெம் பாரதம் போர்—கடுமையான பாரத யுத்தமாம்; உடைந்ததுவும்—அஞ்சி நடுங்கியதும். ஆய்ச்சிபால்—இடைச்சியான யசோதைப் பிராட்டியினிடத்துண்டான, மத்துக்கே—மத்துக்காகவாம்; அம்மனே—என்ன ஆச்சரியம்!

வ்யா:— (அடைந்ததரவணைமேல்) உகந்தார்க்குடம்பு கொடுப்பது. (ஐவர்க்காயித்யாதி) ஆஸ்ரிதர்க்காகத் தன்

---

அவ:— இவனைப் பற்றினார்க்குப் பாபபூலமநுபவிக்க வேண்டுவது. பாண்டவர்கள் தங்கள் சத்ருக்களைத் தாங்கள் நிரஸிக்குமன்றன்றோவென்கிறார்.

உரை:— பருவம் நிரம்பாதேயிருக்கச்செய்தே வாள் போலேயிருந்துள்ள எயிற்றையுடையளான பூதனையுடைய

---

என்று கூறுவது 'நெருப்பினால் நனைக்கிறான்' என்று சொல்லுவது போல் நடக்கமுடியாததொன்று என்றபடி. 27.

28. அவ:— இவனை அடைந்தவர்கள் துன்புறுவது, பஞ்ச பாண்டவர்களைத் தங்கள் சத்ருக்களைத் தாங்களே அழிக்க விட்டிருந்தாலன்றோ என்கிறார்.

வ்யா:- (அடைந்தது அரவணைமேல்) தான் அடைந்தவர்களுக்கு இன்பத்தையே அளிப்பவன் என்பது தோற்ற, தன் ஸ்பரிசத்தைப் பெற்றாலல்லது தரிக்கமாட்டாத திருவனந்தாழ்வானமேலே, அவனைப்

னுடம்பை அழியமாறி அம்பேற்பது. (உடைந்ததுவுமித்யாதி) பரிஹாரமின்றிக்கே ஒழிந்ததுவும் யசோதைப்பிராட்டிக்குப் பயப்பட்டு. (வாளெயிற்று இத்யாதி) பருவம் நிரம்பாதே யிருக்கச்செய்தே வாள்போலே யிருந்துள்ள எயிற்றையுடைய

---

பாலை வேற்று முலையென்று வாசியறிந்தமுதுசெய்து, ஜகத்துக்கொரு சேஷியைத்தந்த உபகாரகனானவன், தன்னை லல்லது செல்லாத திருவனந்தாழ்வானாகிற படுக்கையின் மேலேயாய்த்து தன் செல்லாமை தோற்றப்பள்ளி கொண்டருளிற்று. ஆஶ்ரிதரான தூர்மபுத்ராதி₃களுக்காக அவர்கள் வெறுவியரானவன்று தன்னையழியமாறி மேன் மேலென நெருங்கி ப்ரவர்த்தித்தது பூ₄ரதமாகிற கொடிய

---

பிரிந்தால் தான் தரிக்கமாட்டான் என்பது விளங்கும்படியாக எல்லாக்காலத்திலும் ஆதரத்தோடு பள்ளிகொண்டிருப்பது. அவதரித்த நிலையிலும் அடியார் துன்பம் தவிர்க்கத் தான் துன்புற்றானன்றோ என்கிறார் மேலே,— (ஐவர்க்காய் அன்று மிடைந்தது பாரத வெம்போர்) ''க்ருஷ்ணாஶ்ரயா: க்ருஷ்ணப₃லா: க்ருஷ்ணநாதா₂ஶ்ச பாண்ட₃வா:'' [கண்ணனையே பற்றுக்கொம்பாகவும், ப₃லமாகவும், ஸ்வாமியாகவும் கொண்டிருந்தவர்கள் பாண்டவர்கள்] என்கிறபடியே தன்னையே உபாயமாக உறுதிபூண்ட பஞ்சபாண்டவர்களுக்காக, அவர்கள் அனைத்தையுமிழந்து நின்றவன்று, ஸர்வேஶ்வரனான தான் தன் ஸ்வரூபத்தைத் தாழவிட்டுக் கொண்டு தூது நடந்தும், தேர்ப்பாகனாகியும், மார்பிலே அம்பேற்றும் இப்படி மேன்மேலே அவர்கள் காரியத்திலே நெருங்கி ஈடுபட்டதும் பாரதமாகிற கொடிய யுத்தம். இம்மட்டோ? (உடைந்ததுவும் ஆய்ச்சிபால் மத்துக்கே) தன் எதிரிகள் தனக்கு அஞ்சுவதுபோலே தான் அஞ்சிநடுங்கியதும் யசோதையாய்ச்சியினிடமுள்ள (தயிர் கடையும்) மத்துக்கேயாம். (அம்மனே!) இது என்ன ஆச்சரியம்! எத்தனை பெருமையுடையவன் இந்நீர்மைச் செயல்களைச் செய்தான்! அப்படிப்படிப்பட்ட பெருமைதான் யாது எனில்,— (வாள் எயிற்றுப்பேய்ச்சிபால் உண்டபிரான்) பருவம் நிரம்பாத பச்சிளங்குழந்தையாயிருந்தபோது, வாள்போலே கூரிய பற்களையுடைய பேயான பூதனையுடைய விஷங்கலந்த முலைப்பாலை, வேற்று முலை என்று வாசியறிந்து, விஷத்தோடு, பாலோடு, அவளுடைய உயிரோடு வாசியற அனைத்தையும் அமுதுசெய்து தன்னைமுடிக்க

பூதனையை முடித்த உபகாரகன் அநுகூலையாயிருப்பாளொரு இடைச்சிக்குப் பயப்பட்டு, பரிஹாரமின்றிக்கேயிருப்பதே! (அம்மனே) எத்திறம்! 28

29. பேய்ச்சிபா லுண்ட பெருமானைப் பேர்ந்தெடுத்து
ஆய்ச்சிமுலை கொடுத்தாள் அஞ்சாதே—வாய்த்த
இருளார் திருமேனி யின்பவளச் செவ்வாய்
தெருளா மொழியானைச் சேர்ந்து.

பேய்ச்சி—பூதனையினுடைய. பால்—முலைப்பாலை, உண்ட—அமுதுசெய்த. பெருமானை—ஸர்வேஶ்வரனாய் வாய்த்த இருள் ஆர் திரு மேனி—பொருந்திய இருள்போன்ற திருமேனியை யுடையவனாய், இன் பவளம் செம் வாய்—இனிய பவழம் போற்சிவந்த வாயையுடையவனாய், தெருளா மொழியானை—உருத்தெரியாத மழலைச் சொற்களைச் சொல்லும் சிறு குழந்தையான கண்ணபிரானை, சேர்ந்து—கிட்டி, ஆய்ச்சி—யசோதையானவள், பேர்ந்து எடுத்து—வாரியெடுத்தணைத்துக் கொண்டு, அஞ்சாதே—சிறிதும் பயப்படாமல், முலை கொடுத்தாள்—தன் முலையை உண்ணக் கொடுத்தாள்.

---

பூசல். யசோதைப்பிராட்டி பக்கலுண்டான மத்துக்கே யொக்கும் தனக்கு சத்ருக்கள் அஞ்சுமாப்போலே தான் அஞ்சி சிதிலனாயிற்றதுவும். அம்மே! இவன் வல்லபடி யென்னென்று வயிறு பிடிக்கிருர். 28.

---

நினைத்த அவனைமுடித்து உலகிற்கு ஸ்வாமியான தன்னை நமக்குத் தந்த உபகாரகன் கிடீர் இந்நீர்மைச்செயலைச் செய்தது. பருவம் நிரம்பாதபோது ஒரு பேய்ச்சியை முடித்தவன், ஓராய்ச்சிக்கு பயப்பட்டுச் செயலற்று நிற்பதே! சிலர்க்கு தூத்யஸாரத்யங்களைச் செய்வதே! என்று வியப்புறுகிருர். ஆக அடியார்க்கு உடம்பு கொடுப்பவனாய், அவர்களுக்காகத் தன்னை அழியமாறிக் காரியம் செய்பவனாய், அவர்கள் கட்டினாலும், அடித்தாலும் எதுவும் செய்யமாட்டாதவனாய், அவர்களுடைய எதிரிகளை அவலீலையாகப் போக்குமவனான இவனை அடைந்தவர்களுக்கு எத்துன்பமும் நேர இடமில்லை என்று கூறிச் சென்ற பாசுரத்தை விளக்கிறாயிற்று.28.

அவ:-(பேய்ச்சிபால்) அச்சத்துக்கு இவனுக்கொப்பில்லா தாற்போலே ஸ்நேஹத்துக்கு யசோதைப்பிராட்டிக்கு ஒப்பில்லை என்கிறது.

வ்யா:— (பேய்ச்சிபாலுண்ட பெருமானை) பூதனையை முடித்தவனே. (வாய்த்த இருளார் திருமேனி இன்பவளச் செவ்வாய்) பூதனையுடைய மடியிலே ஸ்ரம்ஹரமான வடிவை

---

அவ:— ப்ரஸ்துதையான யசோதைப் பிராட்டியி னுடைய ஸ்நேஹகுணங்களைச்சொல்லி அவளுமொருத்தியே! என்று கொண்டாடுகிறார்.

உரை:— பூதனைபக்கலுண்டான முலைப்பாலை உண்டு அவளை முடித்து, ஜகத்துக்கு ரக்ஷியான தன்னையுண்டாக்கித் தந்த உபகாரகனாய், அவள் மடியிலேயிருந்து முலையுண்கிற போது ஆகர்ஷகமாய்த் தோற்றுகிற அழகிய இருளோ டொத்த திருமேனியையும், உகப்புத்தோற்ற ஸ்மிதம்

---

29. அவ:— சென்ற பாசுரத்தில் "உடைந்ததுவும் ஆய்ச்சி பால் மத்துக்கே" என்று யசோதைப்பிராட்டியிடம் இவன் பயப் பட்டதைப்பற்றிப் பேச்சு ஏற்படுகையாலே, "அவளிடம் அச்ச முடைமை விஷயத்தில் இவனுக்கு ஒப்பில்லை தாற்போலே, இவனிடம் அன்புடைமை விஷயத்தில் அவளுக்கு ஒப்பில்லை" என்று கூறி அவளுடைய குணத்திலே ஈடுபடுகிறார்.

வ்யா:— (பேய்ச்சி பால் உண்ட பெருமானை) தன்னைக்கொல்ல நினைத்த பூதனையாகிற பேய் மகளுடைய விஷங்கலந்த முலைப் பாலைத் தாய்ப்பால்போலே அமுதாக நினைத்து அமுதுசெய்து அவளை அழித்து, உலகிற்கு ஸ்வாமியான தன்னைத் தானே ரக்ஷித்துக்கொடுத்த உபகாரகனை. 'அப்போது இவன் இருந்த நிலைதான் என்னே!' என்று ஈடுபட்டு அந்நிலையை வருணிக் கிறார்.— (வாய்த்த இருளார் திருமேனி) இருளிலே ஒரு இருள் கலந்தாற்போலே அவளுடைய இருண்ட மேனியின்மேலே பொருந்தி நிற்கும் இருளன்ன மாமேனியை உடையவனாயன்றோ இருந்தான்! (திருமேனி) அடியார் களைப்பையாற்றும் திருமேனியாலே ஒரு

யுடையனாய், பவளம் போன்றிருந்துள்ள அத₄ரத்தை யுடையனாய். (தெருளாமொழியானைச் சேர்ந்து போர்ந்தெடுத் தாய்ச்சி முலை கொடுத்தாளஞ்சாதே) பூதனைமுகத்திலே முக்₃த₄ஜல்பிதம் பண்ணுகிறவனைக்கிட்டிக் கால்நடைதந்தெடுத் துத் தாயானவள் அஞ்சாதே முலையைக் கொடுத்தாள். ஸ்வ

---

செய்த அழகிய பவளம்போன்ற சிவந்த திருவத₄ரத்தையு முடையனாய். அத்தசையில் அவள் முகத்தைப் பார்த்து "ஆச்சி ஆச்சி" என்றாற்போலே சொல்லுகிற அறிவு கலசாத முக்₃த₄ஜல்பிதங்களையுடையனுமானவனை. தாய் தன்னிடத்தினின்றும் போந்து கால்நடைதந்து வந்து கிட்டி யதா₂பூர்வம் ஸாத₃ரமாக எடுத்துக்கொண்டு ஸ்த்ரீத்வ ப்ரயுக்தமாயும். ஜந்மமடியாயும். வரக்கடவ ப₄யத்தை

---

பேய்ப் பிணத்தைத் தழுவுவதே! என்கிறார். இருளிலே இருள் கலந்தால் எவராலும் பிரித்தறிய முடியாதே? எனில், பிரித்தறிய லாம் இன்பவளச் செவ்வாயைக்கொண்டு என்கிறார்,— (இன்ப வளச் செவ்வாய்) அவள் மடியிலேயிருந்து முலையுண்ணும்போது உகப்புத்தோற்றப் புன்முறுவல் செய்யும் அழகிய பவளம்போன்ற சிவந்த அத₄ரங்களை (உதடுகளை) உடையவனாயிருந்தமையாலே இவனைப் பிரித்தறியலாம் என்று கருத்து. அவ்வாய்தான் வெறு மனேயிருந்ததோ? யசோதையிடம் பேசும் பேச்சை இவளிடம் பேசிக்கொண்டன்றோ இருந்தது! என்று ஈடுபடுகிறார் மேலே,— (தெருளாமொழியானை) அந்நிலையிலே பிணமான பேய்ச்சியான அவள் முகத்தைப் பார்த்து, யசோதைப்பிராட்டியிடம் பேசுவது போலே, "ஆய்ச்சி! ஆய்ச்சி!" என்றாற்போன்ற சிறுபிள்ளை மழலைப்பேச்சுக்களைப் பேசிக்கொண்டிருப்பதே! என்று ஆஶ்சர்யப் படுகிறார்.. (போர்ந்து சேர்ந்து) தாயான யசோதைப்பிராட்டி கோரமான இந்த விருத்தாந்தத்தைக்கேட்ட பின்பும் தன் இடத்தி லிருந்து பதறி ஓடிவந்தாள். பிணத்திடம் பால்குடித்துக்கொண்டு மழலைபேசும் குழந்தையைக் கண்டபின்பும் அவனை அணுகினாள்! (எடுத்து) அணுகியபின்பும் இவளையறியாமல், அவளிடமே ஒட்டிக்கொண்டிருக்கும் அக்குழந்தையை எப்போதும்போல் அன் போடு எடுத்துக்கொண்டாள்! இத்துடன் நின்றாளோ? (அஞ்சாதே முலைகொடுத்தாள்) இத்தனை கோரக்காட்சிகளைக் கண்டபின்பு

நபத்தை அழியமாறி முலையைக் கொடுத்தாள். ஸ்த்ரீத்வ ப்ரயுக்தமிறே அச்சம். 29.

30. சேர்ந்த திருமால் கடல்குடந்தை வேங்கடம்
நேர்ந்த வென்சிந்தை நிறைவிசும்பும்—வாய்ந்த
மறைபாடக மனந்தன் வண்டுழாய்க் கண்ணி
இறைபாடி யாய விவை.

கடல்—திருப்பாற்கடலென்ன. குடந்தை—திருக்குடந்தையென்ன. வேங்கடம்—திருவேங்கடமென்ன. நேர்ந்த என் சிந்தை—நேர்பட்ட எனது ஹ்ருதயமென்ன. நிறை விசும்பும்—நிறைவுடைய பரமபதமென்ன. வாய்ந்த மறை—வாய்ப்புடைய வேதமென்ன. பாடகம்—திருப்பாடகமென்ன. அனந்தன்—ஆதிசேஷனென்ன. ஆய இவை—ஆகிய இவையெல்லாம். வண் துழாய் கண்ணி—அழகிய திருத்துழாய் மாலையை அணிந்துள்ள. திருமால் சேர்ந்த-ஸ்ரீமந்நாராயணன் பொருந்திக் காட்சிதரும். இறைபாடி—ராஜதானிகளாம்.

---

யுடையளன்றிக்கே. உண்ட நச்சுப்பாலுக்கு ப்ரத்யௌஷதமாக முலைகொடுத்தாள். கெட்டேன்! ஒருத்தியுடைய ஸ்நேஹமிருக்கும்படியே! என்று வித்தராகிறார். 29.

---

அஞ்சி மயங்கி விழவேண்டியிருக்க, சிறிதும் பயப்படாமல், அவள் கொடுத்து அவனுண்ட விஷப்பாலுக்கு முறிவாகத் தன்னுடைய அமுதன்ன முலைப்பாலைக் கொடுத்தாள். இவ்வளவையும் செய்தவள்தான் யார்? (ஆய்ச்சி) ஓர் பெண்பிள்ளை; அதிலும் இடக்கையும், வலக்கையுமறியாத ஆயர்குலப் பெண்பிள்ளையன்றோ இவ்வருஞ்செயலைச் செய்தது! இவளை இவ்வருஞ்செயலைச் செய்ய வைத்தது இவளுக்கு இவனிடமுள்ள பரிவன்றோ! இப்படியும் பரிவுடையவளாய் ஒருத்தியிருப்பதே! என்று ஆஶ்சர்யப்படுகிறார். 29.

அவ:— (சேர்ந்த) அவன் ஸந்நிஹிதனுகையாலே ஸ்நேஹித்தாள்; இப்போது நமக்கு ஸந்நிஹிதனன்றேயென்னில்; அவன் ஸந்நிஹிதனுன இடங்கள் சொல்லுகிருர்.

வ்யா:— (கடலித்யாதி) ஸ்வாமிக்குப்படைவீடான இவை ஶ்ரிய:பதிசேர்ந்த பாடியாய இவை. இறையாயதிருமால் சேர்ந்த என்னவுமாம். "சிந்தை" என்கையாலே இத்

---

அவ:— அன்று அங்ஙனே அவளொருத்திக்கும் எளியனுன நிலை எல்லாக் காலத்திலும் எல்லார்க்குமுண்டாம்படி கோயில்களெங்கும் வந்து நின்றருளினபடியை அருளிச் செய்கிருர்.

உரை:— திருப்பாற்கடல், திருக்குடந்தை, திருமலை இவற்றிலுங்காட்டில் ஆதரிக்கும்படி நேர்பட்ட என்னுடைய ஹ்ருதயம், 'த்ரிபாத்விபூதி' என்னும்படி பரப்பையுடைத்தாய், பரமாகாஶஶப்தவாச்யமான பரமபதம், அவனை

---

30. அவ:— அவன் அவளுக்கு அப்படி எளியனுயிருந்தபடியாலே அவள் அவனிடம் அப்படி அன்பு வைத்தாள்; நமக்கு அப்படி எளியனுகவில்லையே? என்னும் கேள்வியெழ, அதைவிட எளியனுயிருக்கும் இடங்களைச் சொல்லுகிருர்.

வ்யா:— "திருமால் சேர்ந்த கடல் முதலானவை இறைபாடி—ஸ்வாமியான அவனுக்கு ராஜதானி" என்றே, "கடல்...இவை இறையாய திருமால்சேர்ந்த பாடி—ராஜதானி" என்றே, கூட்டிப் பொருள் கொள்ளலாம். (திருமால் சேர்ந்த கடல்) "பஶ்யதாம் ஸர்வதேவாநாம் யயௌ வக்ஷ:ஸ்தலம் ஹரே:" [வி·பு] என்கிறபடியே பிராட்டி தனக்குப் பிறந்தவீடாகையாலே உரிமையோடு பிராட்டியும் பெருமாளும் குடியிருக்குமிடம். முதல் அந்வயத்தில் 'திருமால் சேர்ந்த' என்பதை, கடல் தொடங்கியுள்ள எல்லாவிடங்களிலும் கூட்டிக்கொள்ளலாம். (குடந்தை) ஆராவமுதையுடைய திருக்குடந்தை. (வேங்கடம்) ஸ்ரீநிவாஸன் வாழும் திருவேங்கடமாம் திருமலை. (நேர்ந்த என் சிந்தை) முன்னும்பின்னும் சொல்லப்படும் அனைத்தைக் காட்டிலும் தான் ஆதரிக்கும்படி நேர்பட்ட என்னுடைய ஹ்ருதயம். 'நேர்ந்த' என்கையாலே, "இவ்விடம் நேர்படுமோ?" என்று

ருப்பதிகளிலே வந்திருக்கிறதெல்லாம் என் ஹ்ருதயத்
ுள்ளே புகுருகைக்கென்கிறது. "வாய்ந்த மறை" என்றத்
ாலே ப்ரமாணமான வேதத்திலே நின்றத்தோடு கண்ணாலே

---

ள்ளபடி ப்ரதிபாதிக்கவல்ல அழகிய வேதம், திருப்பாடகம்
ந்தாழ்வாருகிற இத்திருப்பதிகளெல்லாம் அழகியதிருத்
ழாய்மாலையாலே அலங்கரித்துக்கொண்டிருக்கிற ஸர்வ

---

புக இடம்பார்த்துக்கொண்டே அவன் மற்ற இடங்களில்
ிருக்கிறான் என்று விளங்குகிறது. (நிறை விசும்பும்) பரம
தறுவற பரமாகாசமும். "பாதோ₃(அ)ஸ்ய விஶ்வாபூ₄தானி
த்₃ஸ்யாம்ருதம் தி₃வி" [பு-ஸூ] [இவ்வுலகனைத்தும் அவ
ைய செல்வத்தில் கால்பகுதி; அவன் செல்வத்தில் முக்கால்
அழியாததாய்ப் பரமபதத்தில் உள்ளது] என்கிறபடியே
ிலும் மும்மை பெரிதாகையாலே த்ரிபாத்₃விபூ₄தி எனப்
தாய், குறைவாளர்கள் நிறைந்த இவ்வுலகைப் போலல்லாமல்
ையவர்களே வாழப்பெற்றதாய், "பரமே வ்யோமந்"
ிரீயம்] என்கிறபடியே பரமாகாச ஶப்தத்தாலே உபனிஷத்
ில் சொல்லப்படும் பரமபதமும். எளிய இடங்கள் சொல்லும்
ல் அடைய அரிதான இதைச் சொல்லலாமோ? எனில்:
விசும்பாகிற இதில் எப்படி அவன் நிறைந்திருக்கிறானோ,
யே மற்றவிடங்களிலும் பூர்ணனாயிருக்கிறான் என்று
ுகைக்காகச் சொல்லுகிறது. (வாய்ந்த மறை) மனிதனால்
பெற்ற நூல்களைப்போலே இருள் துயக்குமயக்குமறப்புக்
இடமில்லாமல், அவனை உள்ளபடி சொல்லும் வாய்ப்
அபௌருஷேயமான வேதம். "வாய்ந்த மறை" என்கை
ப்ரமாணமான வேதத்தில் நின்றதோடு, கண்ணாலே காணப்
திருப்பதிகளோடு வாசியறத் தமக்கு ஏகரீதியாக ஸேவை
ையைக் காட்டுகிறார். (பாடகம்) பாண்டவ தூதனாய்
ிருக்கும் திருப்பாடகமும். (அனந்தன்) ஆதிசேஷ
படுக்கையும். "சென்றால் குடையாம்" [முதல்திருவ 53]
டியே இவன் எங்கு சென்றாலும் தொடர்ந்து இவனுக்கு
மாயிருப்பவனாகையாலே திருப்பாற்கடலை எடுத்ததோடு
யாமல் தனியே எடுக்கிறார். (வண்டுழாய்க்கண்ணி)
க்க துழாய்மாலை. "துளஸீகாநநம் யத்ர தத்ர ஸந்நிஹிதோ
[துளஸிகானனம் இருக்குமிடமெல்லாம் ஹரி இருக்கிறான்]

காணப்படுகிற திருப்பதிகளோடு வாசியற இவர்க்கு ப்ரகாசமாயிருக்கிறபடி. 30.

31. இவையவன் கோயில் இரணியன தாகம்
அவைசெய் தரியுருவ மானான்—செவிதெரியா
நாகத்தான் நால்வேதத் துள்ளான் நறவேற்றான்
பாகத்தான் பாற்கட லுளான்.

**இரணியனது**—*ஹிரண்யாஸுரனுடைய.* **ஆகம்**—*மார்பை.* **அவைசெய்து**—*பலபிளவாக்கிடுவதற்காக.* **அரி உருவம் ஆனான்**—*நரசிங்கமாக அவதரித்தவனும்.* **செவி தெரியா நாகத்தான்**—*கண்ணையே செவியாகவுடையனாகை யாலே தனிப்பட செவிதெரியாமலிருக்கிற திருவனந்தாழ் வானைப் படுக்கையாகவுடையவனும்.* **நால்வேதத்து உள்ளான்**-*நான்கு வேதங்களுக்கும் உள்ளேயிருப்பவனும்.* **நறவு ஏற்றான் பாகத்தான்**—*தேன்போன்ற கங்கையை ஏற்றுக்கொண்ட வனான ருத்ரனைத் திருமேனியின் ஒரு பாதியிலே உடைய வனும்.* **பாற்கடலுளான்**—*திருப்பாற்கடலில் பள்ளிகொள்ப வனுமான.* **அவன்**—*அப்பெருமானுடைய.* **கோயில் இவை**—*கோயில்கள் கீழ்ப்பாட்டில் சொன்ன திருப்பதிகளாம்.*

---

*ஸ்வாமியான ஶ்ரிய:பதி அத்யபி₄நிவிஷ்டனாய்ச் சேர்ந்து வர்த்திக்கிற ராஜத₄ாநியாயிருக்கும்.* 30.

---

என்கையாலே இதையும் தனியே எடுக்கிறார். அன்றிக்கே, இருப் பிடங்களை அனந்தனோடு நிறுத்தி, 'வண்டுழாய்க்கண்ணி இறை' என்று கூட்டிப்பொருள் கொள்ளவுமாம். (ஆய இவை) முற்கூறிய அனைத்தும். (வண் துழாய்க்கண்ணி இறை திருமால்சேர்ந்த பாடி) அழகிய திருத்துழாய் மாலையாலே அலங்கரித்துக்கொண்டிருப்ப வனாய், அதனாலேயே ஸர்வஸ்வாமியென்று பறைசாற்றிகொண்டி ருப்பவனான திருமால் மிகவும் ஆதரத்துடன் சேர்ந்து வாழ்கிற ராஜத₄ானிகளாயிருக்கும். ஆக, இவன் எளியனாக வாழும் இடங் களைக் காட்டினாராயிற்று. 30.

வ்யா:—(இரணியனித்யாதி) உபசயாத்மகமான ஹிரண்யனுடைய சரீரத்தைப் பலவாகச்செய்து ஸிம்ஹரூபியானன்.

அவ:—"இவ்விவ்விடங்களிலே வந்துநிற்கிறவன் ஆஶ்ரித விரோதி₄களைப்போக்கி. து₃ர்மானிகளோடும் புறையறக் கலக்கும் ஶீலவான் கிடீர்" என்கிறார்.

உரை:— அவனுகந்து நித்யவாஸம் பண்ணுகிற ஸ்த₂லங்களாயிருக்கும் கீழ்ச்சொன்ன இந்தத் திருப்பதிகளெல்லாம். ஹிரண்யனுடைய முரட்டுடம்பை சி₂ன்னபி₄ன்னமென்னும்படி பல கூறும்படிபண்ணி, அவன் வரத்துக்குள்ளடங்

31. அவ:—"இவ்விடங்களிலே வந்து நிற்பவன் அடியார்களின் விரோதிகளைப் போக்குகிறவனாய், து₃ரஹங்காரமுடையவர்களோடும் ஒருநீராகக் கலக்கும் சீலகுணமுடையவனாயிருப்பவனன்றோ!" என்கிறார்.

வ்யா:— (இவை அவன் கோயில்) கீழ்ச்சொன்ன இந்தத் திருப்பதிகள் எல்லாம் அவன் உகந்து என்றும் வாழும் இருப்பிடங்களாயிருக்கும்; அவனிருந்து அரசாட்சி செலுத்தும் ராஜத₄ானிகளாயிருக்கும் என்றார் சென்ற பாசுரத்தில்; அவன் உகந்து வாழும் இருப்பிடங்களாயிருக்கும் என்கிறார் இப்பாசுரத்தில். ஆகையாலே புநருக்தியில்லை. அன்றிக்கே, "இத்தனையிடங்களில் அவன் நமக்காக நித்யவாஸம் செய்யும்போது, அவனைக் கைவிட்டுவிடாதே கிடாய்!" என்று தம் நெஞ்சுக்கு வலியுறுத்துவதற்காக மறுபடியும் கூறுகிறார் என்றும் கொள்ளலாம். "இவை அவன் கோயில்" என்று ஒரு வாக்யமாகவும், மேல் உள்ளதெல்லாம் ஒரு வாக்யமாகவும் கொள்ளலாம். அன்றிக்கே, "இரணியனதாகம்...அரியுருவமானன்...பாற்கடலுளான் அவன் கோயில் இவை" என்று ஒரே வாக்யமாகவும் கொள்ளலாம். "இரணியனதாகம்" என்று தொடங்கி, அவனுடைய ஆஶ்ரிதவிரோதி₄ நிரஸநஸ்வபா₄வத்தையும், ஆஶ்ரிதரக்ஷணஸ்வபா₄வத்தையும் அநுப₄விக்கிறார்: (இரணியனதாகம் அவைசெய்து அரியுருவமானன்) தின்று கொழுத்து வளர்ந்திருந்த இரணியனுடைய முரட்டு உடம்பைப் பலகூறாகச் செய்வதற்காக, அவன் வரத்துக்குள் அடங்காத நரசிங்கவுருக் கொண்டான். 'அது' என்னும் நிலைபோய் 'அவை' என்னும் நிலைவரும்படி சி₂ன்னபி₄ன்னமாகக் கிழிக்கையாலே 'அவை செய்து' என்கிறார். அரியுருவமானதற்கும், அவனுடம்பைக் கிழித்ததற்குப்

( செவிதெரியாநாகத்தான் ) ஒரு இந்த்₃ரியத்தாலே எல்லா வற்றையும் க்₃ரஹிக்குமவன். சக்ஷுஶ்ஶ்ரவாவிறே. (நால் வேதத்துள்ளான்) நாலு வேதங்களாலும் ப்ரதிபாதி₃க்கப் பட்டவன். ( நறவேற்றான்பாகத்தான் ) நறவையேற்றவன்.

---

காத நரஸிம்ஹரூபியானவனாய், சக்ஷு:ஶ்ரவாவாகையாலே சக்ஷுரிந்த்₃ரியங்கொண்டே ஶ்ரோத்ரேந்த்₃ரிய கார்யமும் கொள்ளவல்லவனாகையாலே செவியால் தெரியும் தெரிவின் றிக்கேயிருக்கிற திருவனந்தாழ்வானுடைய திருமேனியிலே நிரந்தரஸம்ஶ்லேஷம்பண்ணி வர்த்திக்குமவனாய் நிர்த்தோ₃ஷ ப்ரமாணமான நாலு வேதங்களுக்கும் ப்ரதிபாத்₃யனாய்

---

இடைவெளி அதிகமில்லாமை தோற்றுவதற்காக 'அவை செய்து அரியுருவமானான்' என்று முன்பின்னாகக் கூறுகிறார். இத்தால் இவனுடைய ஆஶ்ரிதவிரோதி₄நிரஸநஸ்வபா₄வத்வம் கூறப் பட்டது. இனி, ஆஶ்ரிதஸம்ஶ்லேஷஸ்வபா₄வத்வமும், ஆஶ்ரிதரக்ஷண ஸ்வபா₄வத்வமும் கூறப்படுகின்றன. ( செவிதெரியா நாகத்தான் ) '' சக்ஷு:ஶ்ரவா: '' [கண்ணையே செவியாக உடையவன்] என்று வடமொழியிலும், 'கட்செவி' என்று தமிழிலும் பாம்புக்குப் பெய ருண்டாகையாலே, கண்ணைக்கொண்டே காதின் காரியமான கேட்டலையும் செய்யக்கூடியவனாகையாலே, செவியால் தெரியும் தெரிவு ( அறிவு ) இல்லாதவனான திருவனந்தாழ்வான் 'செவி தெரியா நாகம்' எனப்படுகிறான்; அவனுடைய திருமேனியை எப் போதும் உகந்திருப்பவனாகையாலே 'செவிதெரியாநாகத்தான்' எனப்படுகிறான் ஸர்வேஶ்வரன். ( செவிதெரியா நாகம் ) ''ஸஶ்ருணோத்யகர்ண:'' [அப்பரம்பொருள் காதில்லாமலே கேட்கக் கூடியது] என்ற பரமனை ஒருபுடை ஒத்திருப்பவன். (நாகத்தான்) இத்தால் இவனுடைய ஆஶ்ரிதஸம்ஶ்லேஷஸ்வபா₄வத்வம் சொல்லப் பட்டது. '' செவிதெரியானாகத்தான் '' என்று பாடங்கொண்டு, செவிதெரியானை திருவனந்தாழ்வானின் ஆகத்திலே - திருமேனி யிலே இருப்பவன் என்று பொருள் கொண்டார் அரும்பதவுரைகாரர். இவன் செவிதெரியா நாகத்தானாயிருக்கும்படியை எங்கே காண லாம் எனில்,— (நால்வேதத்துள்ளான்) ''அமிதௌஜா: பர்யங்க:'' [கௌஷிதகீ] [அளவற்ற பலத்தையுடைய அனந்தன் பரம் பொருளுக்குப் படுக்கையாவன்] முதலானவிடங்களில் குற்ற மற்ற ப்ரமாணமான நாலுவேதங்களிலும் இவனுடைய ஆஶ்ரிதஸம்ஶ்லேஷஸ்வபா₄வத்வம் பேசப்பட்டது என்று கருத்து.

நறவையும் ஏற்றையுமுடைய ருத்ரனுக்குத் திருமேனியிலே இடங்கொடுத்த ஶீலவான். (பாற்கடலுளான்) திருப்பாற் கடலிலேயுள்ளவன். (இவையவன்கோயில்) கீழ்ச்சொன்னவை. நெஞ்சை வருந்தியநுஸந்தித்தபடி. 31.

---

வர்த்திக்குமவனாய். ஹேயமான மது₄வையும் ருஷப₄த்தையு முடைய து₃ர்மானியான ருத்₃ரனைத் தன் திருமேனியின் ஒரு பார்ஶ்வத்திலே உடையனாகையாலே அத்யந்தம் ஸுஶீ லனுமான ஸர்வேஶ்வரன் ப்₃ரஹ்மாதி₃களுக்கு ஆஶ்ரயணீயனாய்க்கொண்டு திருப்பாற்கடலிலே கண் வளர்ந்தருளினான். 31.

---

தன்னை ஒருபடி ஒத்திருக்கும் திருவனந்தாழ்வானோடு ஸம் ஶ்லேஷிப்பது ஒருபுறமிருக்கட்டும்; தன்னில் மிகத்தாழ்ந்தவனாய், தமோநிஷ்ட₂னான உருத்திரனோடுகூடவல்லவா இவன் ஒருநீராகக் கலந்து பரிமாறுகிறான்! என்று ஈடுபடுகிறார் மேலே.—(நறவேற்றான் பாகத்தான்) தாழ்ந்தநாள கள்ளைக் கைக்கொண்டவனைத் தன் திருமேனியிலே ஒரு பகுதியிலே உடையவன், நறவு-கள்; அதை ஏற்றவன் நறவேற்றான். ஶ்மஶானத்தில் சாம்பலைப் பூசிக்கொண்டு கள்ளைக் கைக்கொண்டு கூத்தாடுவது உருத்திரனின் லக்ஷண மன்றோ. நறவு என்று தேனாய். தேன்போலினிய கங்கையைத் தலையில் ஏற்றவன் நறவேற்றான் என்று அரும்பதவுரைகாரர் பொருள் கொண்டார். நறவேற்றான் என்றது நறவையும் ஏற்றை யும் உடையவன் என்றுமாம், ஏறு-மாடு. அறிவு மயக்கத்தை விளைக்கும் கள்ளைக் கைக்கொண்டு, அறிவுகேட்டுக்கு உதாரணமாக உலகில் கூறப்படும் மாட்டின்மேல் ஏறியிருப்பவனுக்குத் தன் அடியான் என்ப தையே பார்த்துத் தன் அறிவுமயமான திருமேனியின் ஒரு பகுதியிலே இடங்கொடுப்பதே! இதுவும் ஒரு குணமே! என்று பெரியவன் தாழ்ந்தாரோடு ஒருநீராகக் கலக்கையாகிற நீர்மைக்குணத்திலே ஈடு படுகிறார். இத்தகைய சீலமெல்லையிலான் க்ஷுத்ரப்ரயோஜனங்களைப் பெற்றுப்போகைக்கு வரும் பிரமன் முதலானார்க்கு முகம் காட்டு வதற்காகத் திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளுகிறான் என்கிறார்,— (பாற்கடலுளான்) க்ஷுத்₃ரப்ரயோஜனங்களைப் பெறுவதற்காவது தேவர்கள் தன்னிடம் வரமாட்டார்களா! என்று எதிர்பார்த்துக் கொண்டு கூப்பீடுகேட்டுமிடமான திருப்பாற்கடலிலே சயனித்திருப்

32. பாற்கடலும் வேங்கடமும் பாம்பும் பனிவிசும்பும்
நூற்கடலும் நுண்ணூல தாமரைமேல் — பாற்பட்
டிருந்தார் மனமும் இடமாகக் கொண்டான்
குருந்தொசித்த கோபால கன்.

குருந்து—குருந்த மரத்தை. ஒசித்த— முறித்தொழித்த **கோபாலகன்** — ஆநிரைகாக்கும் கண்ணபிரான். **பால் கடலும்**- திருப்பாற்கடலையும், **வேங்கடமும்**– திருமலையையும். **பாம்பும்**- திருவனந்தாழ்வானையும், **பனி விசும்பும்**—(ஸம்ஸார தாபங்கள் தட்டாமல்) பனிபோல் குளிர்ந்திருக்கிற பரம பதத்தையும், **நூல் கடலும்**—கடல்போற் பரந்த ஶ்ருதி முதலிய ஶாஸ்த்ரங்களையும், **நுண் நூல தாமரை மேல்பால் பட்டிருந்தார் மனமும்**– ஸூக்ஷ்மமான அந்த ஶாஸ்த்ரங்களால் சொல்லப்பட்ட ஹ்ருதயகமலத்திலே இந்திரியங்களெல்லாம் ஊன்றியிருக்கும்படி யோகத்தில் நிலைநின்ற யோகிகளினுடைய நெஞ்சையும். **இடம் ஆக கொண்டான்**—இருப்பிடமாகக்கொண்டிருக்கிறான்.

**வ்யா:**— (**பாற்கடலித்யாதி**) (**நூற்கடலும்**) இதிஹாஸ புராணங்களாகிற கடலும். (**நுண்ணூலித்யாதி**) இதிஹாஸ

---

**அவ:**— "இப்படி ஶீலவானான அவன் எழுந்தருளியிருக்குமிடங்களுக்கு ஓரெல்லையில்லை" என்கிறார்.

**உரை:**— குருந்தத்தை அநாயாஸேந முறித்துப் பொகட்ட கோ₃ப குலே ஸவதீர்ணனான க்ருஷ்ணன்; திருப்பாற்

---

பவன். இத்தனையிடங்களில் இவ்வளவு சீலகுணமுடையவனாய் அவன் நமக்காக உகந்துவாழும்போது, நெஞ்சே! நீ அவனைக் கைவிட்டுவிடலாமோ? என்று கருத்து. 31.

32. **அவ:**— கீழ்ச்சொன்ன இடங்கள் மாத்திரமோ? பரம ஸௌஶீல்யகு₃ணமுடையவனாய் அவன் எழுந்தருளியிருக்கும் இடங்களுக்கு ஓர் எல்லையில்லை என்கிறார்.

**வ்யா:**— (**குருந்து ஒசித்த கோபாலகன்**) அஸுரனால் ஆவேஶிக்கப்பட்டிருந்த குருந்தமரத்தை விளையாட்டாக முறித்துப்போட்டு,

புராணங்களிலே ஹ்ருதயகமலமென்று சொல்லப்படுகிறதின் மேலே வைக்கப்பட்ட இந்த்ரியங்களையுடையவர்களுடைய மநஸ்ஸைத் தனக்கிருப்பிடமாகக்கொண்டான். (குருந் தொசித்த கோபாலகன்) விரோதியைப்போக்கி ஸுலப₄னவன். இவனுடைய உண்மையெல்லாம் பரார்த்த₂மென்கிறது. 32.

---

கடலும், திருமலையும், திருவனந்தாழ்வானும், ஸம்ஸார வெக்காயந்தட்டாதபடி குளிர்த்திமிக்கு நிரதிஶயபோ₄க்₃யமான ஸ்ரீவைகுண்ட₂மும், ஶ்ருதிஸ்ம்ருத்யாதி₃களான ஶாஸ்த்ரஸமுத்₃ரமும், "पद्मकोशप्रतीकाशं हृदयं चाप्यधोमुखम्" "பத்₃மகோஶப்ரதீகாஶம் ஹ்ருத₃யம் சாப்யதோ₄முக₂ம்" என்று அதிஸூக்ஷ்மமான வேதாந்த ஶாஸ்த்ரஸித்₃த₄மான ஹ்ருதயகமலத்தின்மேலே ஸமஸ்தகரணங்களும் ப்ரவணமாம்படி யோகத்திலே ஸுப்ரதிஷ்டி₂தராயிருக்கிற பரமயோகிகளுடைய மனஸ்ஸுமாகிற இவ்விவஸ்த₂லங்களை அபி₄மதமான இருப்பிடமாகக் கொண்டான். 32.

---

பசுக்களைக் காப்பாற்றவே ஆய்க்குலத்தில் அவதரித்த கண்ணன். திருவாய்ப்பாடியில் மூளைக்கும் பூண்டுகளெல்லாம் அஸுராவிஷ்டாமாயன்றோ இருந்தன. இப்படி ஆஶ்ரிதவிரோதி₄களை நிரஸிப்பதையே இயல்வாகக்கொண்டவன் நித்யவாஸம் செய்யும் இடங்களைச் சொல்லுகிறார் பாசுரத்தின் எஞ்சிய பகுதியாலே,— (பாற் கடலும்) கூப்பீடு கேட்குமிடமான திருப்பாற்கடலையும். (வேங்கடமும்) கானமும் வானரமும் வேடுமுடையதாய், மந்திகளோடு வானவர்கள் சந்திசெய்ய நிற்பதான வேங்கடத்தையும். (பாம்பும்) 'சென்றால் குடையாம்' என்ற பாசுரத்தின்படியே ஒழிவில்காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை செய்யும் திருவனந்தாழ்வானையும். (பனி விசும்பும்) ஸம்ஸாரத்திலுள்ள தாபத்ரயங்களாலும் தொடப்படாததாகையாலே, பனிபோலே தண்மைமிக்கு மிக இனிதாய் விளங்கும் பரமாகாஶமெனப்படும் பரமபதத்தையும்; (நூற்கடலும்) ஶ்ருதி, ஸ்ம்ருதிகள், இதிஹாஸங்கள், புராணங்கள் ஆகிய கடல்போன்ற சாஸ்திரங்களையும். (நுண்ணூல தாமரைமேல் பால்பட்டிருந்தார் மனமும்) அதிஸூக்ஷ்மமான அந்த ஶாஸ்திரங்களிலே "பத்₃மகோஶப்ரதீகாஶம் ஹ்ருத₃யம் சாப்யதோ₄முக₂ம்"

33. பாலகனாய் ஆலிலைமேல் பைய உலகெல்லாம்
மேலொருநா ளுண்டவனே மெய்ம்மையே—மாலவனே
மந்தரத்தால் மாநீர்க்கடல் கடைந்து வானமுதம்
அந்தரத்தார்க் கீந்தாய்நீ யன்று.

**மேல் ஒரு நாள்**—முன்னொரு காலத்தில். **பாலகன் ஆய்**—சிறு குழந்தை வடிவமுடையவனாகி. **ஆல் இலை மேல்**—ஆலந்தளிரிலே. **உலகு எல்லாம்**—உலகங்களையெல்லாம். **பைய**—மெல்ல. **மெய்ம்மையே**—உண்மையாகவே. **உண்டவனே**—அமுதுசெய்து கிடந்தவனே!. **மாலவனே**—மிகப்பெரியவனே! **நீ**—இப்படிப்பட்ட நீ. **அன்று**—அன்றொருநாள். **மந்தரத்தால்**—மந்தரமலையைக் கொண்டு. **மா நீர் கடல் கடைந்து**—மிகுந்த நீரையுடைய கடலைக் கடைந்து, **வான் அமுதம்**—சிறந்த அமிருதத்தை. **அந்தரத்தார்க்கு**—தேவர்களுக்கு. **ஈந்தாய்**—அளித்தாய்.

---

**அவ:**— இப்படியிருக்கிறவன் அபேக்ஷித்தார் அபேக்ஷிதத்தையெல்லாம் கொடுக்குமவன் கிடீரென்கிறார்.

---

[தை·நா] [தலைகீழாயிருக்கும் தாமரைபோன்ற இருதயம்] முதலான இடங்களிலே இருதயகமலம் என்று கீர்த்திக்கப்படும் நெஞ்சத் தாமரையின்மேலே தம்முடைய எல்லா இந்திரியங்களும் ஈடுபடும்படி யோகாப்யாஸத்திலே நிலைநிற்கும் பரமயோகிகளுடைய மனத்தையும். (இடமாகக்கொண்டான்) தான் மிகவிரும்பும் இடங்களாகக் கொண்டவன். இத்தனையிடங்களில் தன்னைப் பிறர்க்கேயாக்கிக் கொண்டு அவன் வாழும்போது அவனுடைய எளிமையில் ஐயமுற இடமில்லை என்று கருத்து. 32.

33. **அவ:**— எளியவனாயிருக்கட்டும்; ' நாம் விரும்புகிறவற்றை நமக்கு அருளுவானோ? எனில்: நாம் விரும்பாமலிருந்தகாலத்திலும் நமக்கு நன்மை செய்தவனாய், தாழ்ந்த பொருள்களை விரும்புகிறவர்களுக்கும் உடம்புநோவக்காரியம் செய்து விருப்பத்தையெல்லாம் அளிப்பவனாயிருப்பவனன்றோ அவன் என்கிறார்.

**வ்யா:—(பாலகனித்யாதி) ஒரு பவனுயிருப்பதோராலிலை யின் மேலே பருவம் நிரம்பாப் பிள்ளையாய். (மேலொரு நாளுலகெல்லாம் பைய உண்டவனே) லோகங்களையெல் லாம் நோவுபடாமல் மெள்ளத் திருவயிற்றிலே வைத்தவன். (மெய்ம்மையே)ஐந்த்ரஜாலிகரைப்போலேயன்றிக்கே ஸத்யமே.**

---

**உரை:—** தனக்குச்சிலர் பரியவேண்டும்படி முக்₃த₄ஶிஶு வான விக்ரஹத்தையுடையனுய்க் கொண்டு பவனுயிருப்ப தோராலந்தளிரின்மேலே பூர்வகாலத்திலே லோகங்களெல்லா வற்றையும் நெருக்குப்படாதபடி மெள்ள இந்த்₃ரஜாலமாக வன்றிக்கே பரமார்த்த₂மாகத் திருவயிற்றிலே வைத்து நோக்கினவனுய். இந்த அக₄டிதக₄டனுஸாமர்த்₂யத்தாலே ஸர்வாதிகனென்று தோற்றவிருக்கிறவனே! ஏவம்வித₄மான ஶக்திமாஹாத்ம்யத்தையுடையநீ. தேவர்கள், "சாகாமைக்கு

---

வ்யா:— (பாலகனுய்) ' இப்பச்சிளங்குழந்தை ப்ரளயஜலத்தின் நடுவில் ஓராலிலையிலே கரணம் தப்பினல் மரணமாம்படி கண் வளரு வதே' என்று தனக்குச் சிலர் பரியவேண்டும்படி பச்சிளங்குழந்தை யின் வடிவையுடையவனுய். (ஆலிலைமேல்) அன்றே துளிர்விட்ட ஆலந்தளிரின் மேலே கிடந்து. (மேலொருநாள்) நம் ரக்ஷணத்தை நாம் விரும்பாமலிருந்த காலத்திலேயேயன்றோ நம்மை ரக்ஷித்தது. (உலகெல்லாம் உண்டவனே!) ஒருபொருள் புறப்பாடின்றி உல கனைத்தையும் தாயிருக்கும்வவண்ணமே வயிற்றிலே வைத்து ரக்ஷித் தவனல்லோ நீ! உருத்திரனைப்போலே கோரஸம்ஹாரதாண்டவமாடி உலகை நொறுக்குகிறவனன்றே! (பைய உண்டவனே!) அப்படி வயிற்றிலே வைக்கும்போதும் நெருக்குண்டு நோவுபடாதபடி மெள்ளத் திருவயிற்றிலே வைத்தவனே! (மெய்ம்மையே உண்ட வனே!) இந்திரஜாலம் செய்பவரைப்போலே பொய்த்தோற்றமா யிராமல், உண்மையிலேயே உலகனைத்தையும் சிறிய திருவயிற்றிலே அடக்கியவனே! (மாலவனே!) இந்த அக₄டிதக₄டநாஸாமர்த்₂யத் தாலே,. தன் வயிற்றில் புகுந்த நெற்றிமேல்கண்ணனும், நிறை மொழிவாய் நான்முகனும், நீண்ட நாலவாய் ஒற்றைக்கை வெண்ப கட்டின் ஒருவனையும் உள்ளிட்ட அமரரையுங்காட்டிலும் தானே சிறந்த பரம்பொருள் என்பது தோற்ற நிற்பவனே! மால்— பெரியவன். இப்படி நாம் ரக்ஷணத்தை விரும்பாமலிருந்தவன்று

(மாலவனே) ப்ராணனைக்கொடுக்கவல்ல மிடுக்கையுடைத் தான அம்ருதத்தை. (அந்தரத்தித்யாதி) ஆகாசத்தே நிற்கிற வர்களுக்குக் கொடுத்தாய் நீ அன்று. 33.

34. அன்றிவ்வுலகம் அளந்த வசவே கொல்
நின்றிருந்து வேளுக்கை நீணகர்வாய்—அன்று
கிடந்தானைக் கேடில் சீரானை முன்கஞ்சைக்
கடந்தானை நெஞ்சமே காண்.

---

மருந்து தேடித்தரவேணும்'' என்று அர்த்திக்கவன்று மந்தரபர்வதத்தாலே, மிக்க ஜலத்தையுடைத்தான திருப் பாற்கடலைக் குளப்படி போலே கலக்கி. உடம்பைப்பூண்கட் டிக்கொடுக்கு மூரப்பையுடைத்தான அம்ருதத்தை ஸ்வர்க்க வர்த்திகளான தேவர்களுக்குக் கொடுத்தருளினாய். 33.

---

நம்மை வயிற்றிலே வைத்து ரக்ஷித்ததோடல்லாமல், தன்னை விரும் பாமல் தாழ்ந்த பொருள்களை விரும்புவார்க்கும் உடம்பு நோவக் காரியம் செய்து விரும்பியதைக் கொடுப்பவனன்றோ என்கிறார் மேலே,—(நீ) இத்தகைய சக்திப்பெருமையை உடைய நீ. (அன்று) தேவர்கள் 'சாகாமைக்கு மருந்தான அமுதத்தைத்தரவேணும்' என்று உன்னை வேண்டிய அன்று. உயிர் சாகாமைக்கு மருந்தான உன்னை விட்டு, உடம்பு சாகாமைக்கு மருந்தொன்றைக் கேட்ட அன்று. (மந்தரத்தால் மாநீர்க் கடல் கடைந்து) தன் பெரும் சக்தியாலே, மந்தர மலையாலே மிகுந்த ஜலத்தையுடையதான திருப்பாற்கடலை ஒரு குளம்படியைப்போலே கலக்கி. (வானமுதம் அந்தரத்தார்க்கீந்தாய்) உடம்பைப் பூண்கட்டித்தரும் உரப்பு, செத்தவர்களுக்கும் ப்ராணனைக் கொடுக்கவல்ல பெருமை முதலான சிறப்புக்களைப் பெற்றிருக்கும் அமுதத்தை ஆகாசத்திலுள்ள ஸ்வர்க்கவாஸிகளான தேவர்களுக்குக் கொடுத்தாய்! வான்–சிறந்த. அந்தரம்— ஆகாசம்; (இங்கு) ஆகாசத்திலுள்ள ஸ்வர்க்கம். அந்தரத்தார்—ஸ்வர்க்கவாஸிகளான தேவர்கள். இப்படிப்பட்டவன் தாம் விரும்பியதைக் கொடுக்காமலிருப்பனோ? என்று கருத்து. 33.

நெஞ்சமே—மனமே! அன்று—முன்பொருகாலத்தில். நின்று — நின்றுகொண்டே. இவ்வுலகம் — இவ்வுலகங்களை யெல்லாம். அளந்த—அளந்ததனாலுண்டான. அசவே கொல்—சிரமத்தினாலேயோ. வேளுக்கை — திருவேளுக்கையிலே. இருந்து—வீற்றிருந்து. நீள் நகர் வாய்—(திருவெஃகாவென்கிற) பெரிய திருப்பதியில். அன்று—ஒரு காலத்தில், கிடந்தானை-பள்ளிகொண்டவனாய். கேடு இல் சீரானை-ஒருநாளும் அழிவில்லாத கல்யாண குணங்களையுடையவனாய், முன்—முன்னொருகால். கஞ்சை—கம்ஸனை. கடந்தானை—கொன்றொழித்தவனை பெருமானை. காண்—அநுஸந்திப்பாய்.

அவ:—(அன்றிவ்வுலகம்) அவனுடைய ஸத்தை பரார்த்தமான பின்பு அவனைக்காண ஆசைப்படாய்' என்று தம் முடைய நெஞ்சைக்குறித்துச் சொல்லுகிறார்.

வ்யா:— அன்றிவ்வுலகமளந்த அசைவேகொல் நின்றிருந்து வேளுக்கை நீணகர்வாய்க் கிடந்து. (கேடில் சீரானை)

---

அவ:— காஞ்சீபுரத்திலே பலதிருப்பதிகளிலும் நிற்பது. இருப்பது. கிடப்பதாகிற அவன்படியை அநுஸந்தித்து முன்பு திருவுலகளந்தருளினபோதை ஶ்ரமத்தாலே வந்ததாகக்கொண்டு அஞ்சுகிறார்.

உரை:— திருவேளுக்கையிலே எழுந்தருளியிருந்து. மஹாநகரமான திருவெஃகாவிலே சாய்ந்தருளினவனாய், நித்ய

---

34. அவ:— இவ்வண்ணமாகத் தன் ஸத்தாஸ்திதி ப்ரவ்ருத்திகளையெல்லாம் அடியார்க்காகவே அவன் ஆக்கிவைத்திருக்கும்போது. அவனிடத்தில் பரிவுகொண்டு அவனைக்காண ஆசைப்படவேண்டாவோ? என்று நெஞ்சைக்குறித்துச் சொல்லுகிறார்.

வ்யா:— (அன்று இவ்வுலகம் நின்று அளந்த அசவேகொல் அன்று வேளுக்கை இருந்து நீணகர்வாய்க்கிடந்தான்) நாம் அபேக்ஷியாமலிருக்கும்போதே நம்முடைய தலைகளிலே தன் திருவடியை வைத்துத் திருவுலகளந்தருளிய அன்று. இவ்வுலகத்தை நின்றுகொண்டே அளந்த சிரமத்தினால்தானோ வேளுக்கையிலே இருப்பதையும். திருவெஃகாவாகிற பெரிய நகரத்திலே பள்ளிகொள்வதையும் செய்தான்? நீண்ட நேரம் நின்றுகொண்டே காடும் மேடுமான இவ்வுலகை அளந்த சிரமம் போவதற்காகவே காஞ்சீபுரத்திலே வேளுக்கையென்னும் திவ்யதேசத்திலேவீற்றிருப்பதையும்,

நித்யஸித்தமான கல்யாணகுணங்களையுடையவனை. (முன் கஞ்சைக்கடந்தானை நெஞ்சமே) கம்ஸன் நினைத்த வஞ்சனையை அவன்தன்னோடு போம்படி முடித்து உபகாரகனானவனை. பூமி யடங்கலும் நின்றளந்த வருத்தத்தாலேயோ திருவெஃகாவில் கண்வளர்ந்தருளுகிறதும். திருவேளுக்கையில் இருக்கிறதும் என்று நெஞ்சே! அநுஸந்தி. 34.

---

ஸித்தமான கல்யாண குணங்களையுடையனாய், முன்பொரு நாளிலே விரகிலே நலியப்பார்த்த கம்ஸனை முடித்துப் பொகட்டுத்தன்னை நோக்கித்தந்தவனை. நினைவற எல்லார் தலையிலும் திருவடிகளை வைக்கிறவன்று அநாயாஸேந நின்று காடுமோடையுமான இஜ்ஜகத்தை அளந்துகொண்ட அலசுதலாலேயோ இருப்பது கிடப்பதாகிறதென்று வயிறெரிச்சலாலே நெஞ்சே! அநுஸந்திக்கப்பார். 34.

---

திருவெஃகா என்னும் நீணகரிலே பள்ளிகொள்வதையும் செய்கிறானே? என்று பரிவு காட்டுகிறார்.

''தாளால் உலகம் அளந்த அசவே கொல்
வாளா கிடந்தருளும் வாய்திறவான்—நீளோதம்
வந்தலைக்கும் மாமயிலை மாவல்லிக்கேணியான்
ஐந்தலைவாய் நாகத்தணை?'' [நான்-திருவ 35]

''நடந்த கால்கள் நொந்தவோ நடுங்கஞாலம் ஏனமாய்
இடந்த மெய் குலுங்கவோ விலங்குமால் வரைச்சுரம்
கடந்த கால்பரந்த காவிரிக்கரைக் குடந்தையில்
கிடந்தவாறெழுந்திருந்து பேசுவாழிகேசனே!'' [திருச்சந்த61]

என்று திருமழிசையாழ்வாரும்,

''கொடியார் மாடக் கோளூரகத்தும் புளிங்குடியும்
மடியாதின்னே நீ துயில்மேவி மகிழ்ந்ததுதான்
அடியாரல்லல் தவிர்த்த அசவோ அன்றேல் இப்
படிதான் நீண்டு தாவிய அசவோ பணியாயே'' [திருவாய்8-3-5]

என்று நம்மாழ்வாரும் இப்பாசுரத்தையே அடியொற்றிப் பரிவு காட்டினார்களன்றே. (இருந்துகிடந்தானை) இப்படித் திருப்பதிகளிலே களைப்பாற இருப்பதும் கிடப்பதும் செய்தவனை. (ஏடில் சீரானை) குற்றமற்றவையாய், அழிவில்லாதவையான கல்யாண குணங்களை உடையவனை. (முன் கஞ்சைக் கடந்தானை) முன்பொரு நாளிலே தன்னைப் பல வழிகளிலே கொல்லப்பார்த்த தீயபுந்திக் கஞ்சனை அழித்து, அவன் நினைவை அவனுக்கேயாம்படி செய்து தன்னை நமக்கு உபகரித்தவனை. (நெஞ்சமே காண்) நெஞ்சமே! இப்படிப் பரிவோடு அநுஸந்திக்கப்பார். 34.

35. காண்காணென விரும்பும் கண்கள் கதிரிலகு
பூண்டாரகலத்தான் பொன்மேனி—பாண்கட்
டொழில்பாடி வண்டறையும் தொங்கலான் செம்பொற்
கழல்பாடி யாம்தொழுதும் கை.

**கண்கள்**—என்னுடைய கண்களானவை, **கதிர் இலகு**-ஒளிவிளங்கா நின்றுள்ள. **பூண்**—திருவாபரணங்களையும், **தார்**-மாலையையும், **அகலத்தான்**-திருமார்விலே உடையனை எம்பெருமானுடைய. **பொன் மேனி**— பொன்போன்ற திருமேனியை. **காண் காண் என விரும்பும்**—' காணவேணும் காணவேணும் ' என்று ஆசைப்படாநின்றன; **வண்டு**—வண்டுகளானவை. **அறையும்**-ஒலிசெய்யப்பெற்ற. **தொங்கலான்**-மாலையையுடையனை அப்பெருமானுடைய, **தொழில்**-சேஷ்டிதங்களை, **பாண் கண் பாடி**—ராகத்திலே அமைத்துப் பாடி, **செம் பொன் கழல்**—சிவந்த பொன்போன்ற திருவடிகளை. **யாம்**—நாம். **கை**—கைகளினாலே. **பாடி தொழுதும்**—பாடி வணங்குவோம்.

**அவ:— ( காண்காணென ) 'நெஞ்சமே! காண்'என்று உபதேசித்தார் கீழ். இந்த்ரியங்கள் தாம் முற்பட்டு இவரை மூட்டுமளவாயிற்று என்கிறது.**

---

அவ:— ''நெஞ்சமே காண்'' என்று உபதேசித்து இவர் வாய்மூடுவதற்கு முன்னே சக்ஷுராதியான பாஹ்ய கரணங்கள்தாம் முற்பட்டுத் தம்மையும் ப்ரேரித்துக் கொண்டு அங்கே மேல்விழுகிறபடியைக்கண்டு ஆஶ்சர்யப் படுகிறார்.

---

35. அவ:— சென்ற பாசுரத்தில் ' நெஞ்சமே காண் ' என்று நெஞ்சுக்கு உபதேசித்து இவர் வாய்மூடுவதற்கு முன்னம் நெஞ்சுக்கு வசப்பட்ட கண் முதலான வெளியிந்திரியங்களுங்கூடத் தாமே முற்பட்டு, அவற்றுக்கு நியாமகரான தம்மையும் நியமித்துக் கொண்டு பகவத்விஷயத்திலே மேல்விழுகிறபடியைக் கண்டு ஆஶ்சர்யப்படுகிறார்.

வ்யா:— (கதிரிலகு பூண்டாரகலத்தான் பொன்மேனி காண்காணென விரும்பும் கண்கள்) ஒளிவிடாநின்ற ஹாரத்தையும் தாரையுமுடைத்தான திருமார்பையுடையவனுடைய ஸ்ப்ருஹணீயமான திருமேனியைக் கண்கள் காண்காணென விரும்பாநின்றது. (பாணித்யாதி) பாட்டிலே தொழிலுண்டாகப்

---

உரை:— என்னுடைய கண்களானவை புகர் ஒளிவிடாநின்றுள்ள ஆபரணங்களையும் திருமாலையையுமுடைத்தான அகன்ற திருமார்வையுடைத்தானவனுடைய பொன்மலை போலே ஸ்ப்ருஹணீயமான திருமேனியைக் காணவேணும் காணவேணுமென்று, க்ஷாமகாலத்தில் சிறுப்ரஜைகள் சோறு சோறு என்றலையுமாபோலே மிகவுமாசைப்படாநின்றன. பாட்டினிடத்திலே அவனுடைய திவ்யசேஷ்டிதங்களை வைத்துப்பாடி. மத்4யானமத்தமாய்க்கொண்டு

---

வ்யா:— (காண் காண் என விரும்பும் கண்கள்) எனக்கு வசப்பட்டு இருக்கவேண்டிய என் கண்கள், என்னையும் நியமித்துக்கொண்டு, சேதனஸமாதி4யாலே 'பகவத்விஷயத்தைக் காணவேணும் காணவேணும்' என்று ஆசைபடத்தொடங்கின. (காண் காண் என விரும்பும்) பஞ்சகாலத்திலே சிறுகுழந்தைகள் 'சோறு சோறு' என்று அலைவதுபோலே, இவையும் உண்ணும் சோறுபருகுநீர் தின்னும் வெற்றிலையான பகவத்விஷயத்தைக் காண ஆசைப்படாநின்றன. அப்படி உண்ணும்சோறு முதலானவற்றைப்போலே ஆசைப்படக்கூடிய விஷயமோ அது? என்ன,- (கதிரிலகு பூண் தார் அகலத்தான பொன்மேனி) சுடர் ஒளிவிடும் திருவாபரணங்களையும், வைஜயந்தியெனும் வனமாலையையும் உடைய அகன்ற திருமார்பையுடைய பொன்மலைபோலே ஆசைப்படத்தக்க திருமேனியன்றோ அது; ஆகையாலே அதைக் காண் காண் எனக் கண்கள் விரும்பாநின்றன என்கிறார். இப்படிக் கண்கள் மாத்திரமல்ல; வாய் அவனைப் பாடவும், கை அவனைத் தொழவும் விரும்புகையாலே அவை சொல்லுகிறபடியும் நாம் கேட்போம் என்கிறார் பாசுரத்தின் எஞ்சிய பகுதியாலே,—(யாம்) இந்திரியங்களை நியமிக்கும் நிலைபோய், இந்திரியங்களால் நியமிக்கப்படும் நிலையை அடைந்த நாம். (பாண் கண் தொழில்பாடி) பாட்டினிடத்திலே அவனுடைய திவ்ய சேஷ்டிதங்களை வைத்துப் பாடி. (தொழில் பாடி) ஏறடர்த்ததும், ஏனமாய் நிலம் கீண்டதும்,

பாடி; பாண்தொழிலுண்டாகப்பாடியென்றுமாம். அவனுடைய தொழிலைப்பாட்டிலேவைத்துப் பாடியென்னவுமாம். (வண்டறையுந்தொங்கலான்) வண்டுகள் சப்தியாநின்றுள்ள மாலையையுடைய ஸ்ப்ருஹணீயமான திருவடிகளைக் கையாலே தொழுவோம். 35.

---

வண்டுகள் சப்$_3$தி$_3$யாநின்றுள்ள திருமாலையாலே அலங்க்ருதனானவனுடைய. சிவந்த பொன்போலே அதிஸ்லாக்$_4$யமான திருவடிகளை நாம் வாயாரப்பாடி. கையாலே அத்யபி$_4$நிவேசமடங்கும்படி தொழுவோம். பாணென்று பாட்டாய். கண்ணென்று இடமாய். பாட்டினிடத்திலே தொழிலைவைத்துப்பாடியென்றபடி. அன்றிக்கே பாணென்று அழகாய் அழகிய தொழிலைப்பாடியென்னவுமாம். பாணருடைய தொழிலிலே-ரீதியிலே பாடியென்னுதல். பாட்டுக்களைத் தொழிலுடைத்தாம்படி பாடியென்னவுமாம். 35.

---

முன் இராமனாய் மாறடர்த்ததும், மண்ணளந்ததும்' [பெருமாள் திருமொழி 2-3] முதலான அவனுடைய ஆணைத்தொழில்களைப்பாடி. 'பாண்' என்று பாட்டு; 'கண்' என்று இடம். அப்படியல்லாமல், 'பாண்'என்று அழகாய், 'கண்'என்று இடமுடைமையாகிற பரப்பாய், அழகியதாய், மிகப்பரந்த அவனுடைய தொழிலைப் பாடி என்றும் பொருள் கொள்ளலாம். அப்படியுமல்லாமல், 'பாண் தொழில்கண் பாடி' என்று கூட்டி, பாணருடைய தொழிலிலே—வழியிலே பாடி என்றும் பொருள் கொள்ளலாம். அப்படியுமல்லாமல் (பாண் கண் தொழில் பாடி) என்று பாட்டினிடத்திலே தொழிலுண்டாகும்படி லக்ஷணமுண்டாகும்படியும், ஸ்வரமுண்டாகும்படியும்—பாடி என்றும பொருள்கொள்ளலாம். அப்படியுமல்லாமல் 'பாண் தொழில் கண் பாடி', என்று, சிஷ்ட பரிக்$_3$ரஹத்தாலும், வகுத்த விஷயத்தினாலும் பாடும் தொழில் ஸத்தைபெற்று நிறமும் பெறும்படி பாடி என்றும் பொருள் கொள்ளலாம். இப்படிச் சேஷ்டிதங்களைப் பாடுவதோடு வாய் திருப்தியடைந்துவிடுவதில்லை: அவன் திருவடிகளையும் பாடவைக்கிறது என்கிறார்,— (வண்டு அறையும் தொங்கலான் செம் பொன் கழல்பாடி) வண்டுகள் ஒலி செய்யும் திருமாலையை உடையவனுடையதாய், சிவந்ததாய் (அல்லது நேர்மையுடையதாய்) செய்பொன்போலே மிகச்சிறந்ததாய், ஆசைப்

36. கைய கனலாழி கார்க்கடல்வாய் வெண்சங்கம்
வெய்யகதை சார்ங்கம் வெஞ்சுடர்வாள்—செய்ய
படைபரவை பாழி பனிநீ ருலகம்
அடியளந்த மாய ரவர்க்கு.

**பனி நீர் உலகம்**— *குளிர்ந்த நீரையுடைய கடல்சூழ்ந்த உலகங்களை.* **அடி**–*தனது திருவடிகளினுலே.* **அளந்த**–*அளந்து கொண்ட.* **மாயர் அவர்க்கு**— *ஆச்சரியச் செய்கையை யுடையரான அப்பெருமாளுக்கு.* **கைய**–*கையிலுள்ள,* **கனல் ஆழி**–*சுடர்விடும் சக்கரமும்,* **கார் கடல் வாய் வெண் சங்கம்**– *கருங்கடலில் தோன்றின வெளுத்த சங்கும்.* **வெய்ய**— *வெம்மையுடைய,* **கதை**–*கதையும்,* **(வெய்ய)**—*வெம்மையை யுடைய,* **சார்ங்கம்**—*சார்ங்க வில்லும்,* **வெம் சுடர் வாள்**— *வெம்மையுடைய சுடரையுடைய நாந்தகவாளும் ஆகியவை,* **செய்ய படை**—*அழகிய திவ்யாயுதங்களாம்;* **பரவை**–*கடலானது,* **பாழி**–*படுக்கையாம்.*

---

**அவ:**— *"யாம் தொழுதும்" என்று மநோரதித்த படியே அநுபவிக்கிறுர்.*

---

படத்தக்கதான திருவடிகளை வாயாரப்பாடி. இங்கு திருவடிகளைச் சொன்னது திருமேனி, திவ்யதேசம் முதலானவற்றுக்கு உபலக்ஷணம். (பாடி) கண்களுக்கு இரையிட்டதுபோலே, வாய்க்கும் இரையிடக்கடவோம். (கை தொழுதும்) நம் ஆர்வமெல்லாம் அடங்கும்படி கையால் அவன் கழல்களைத் தொழுவோம். கண்களுக்கும், வாய்க்கும் இரையிட்டதுபோலே கைகளுக்கும் இரையிடுவோம். "வண்டு பாடி அறையும் தொங்கலானுடைய பாண்கண் தொழிலையும், செம்பொன் கழலையும் பாடிக் கை தொழுதும்" என்று கூட்டியும் பொருள் கொள்வாருண்டு. 35.

36. அவ:— சென்ற பாசுரத்தில் "பாடக்கடவோம்" என்று மநோரதித்தபடியே, அவனுடைய பெருமையைப்பாடி அநுபவிக்கிறுர் இப்பாசுரத்தில்.

வ்யா:—(கைய கனலாழியித்யாதி) (செய்ய படை கைய) இவை கையிலேயுள்ளன. "செய்ய" என்று ஆப₄ரணமான போது புகரைச் சொல்லுகிறது; ஆயுத₄மானபோது விதே₄ய மான ஆயுத₄ங்களைச் சொல்லுகிறது. (பரவை பாழி) திருப்

---

உரை:— குளிர்ந்த நீரையுடைத்தான கடல் சூழ்ந்த பூமியைத் திருவடிகளாலே அளந்துகொண்ட ஆஸ்சர்ய பூ₄தனான அந்த ஸர்வேஸ்வரனுக்கு ப்ரதிபக்ஷத்தின் மேலே நெருப்பையுமிழாநின்றுள்ள திருவாழி. கறுத்த நிறத்தை யுடைத்தான கடலிடத்தே பிறந்த வெளுத்த நிறத்தை யுடைத்தான ஸ்ரீபாஞ்சஜன்யம், வெவ்விதான ஸ்ரீக₃தை₃, அப்படியிருந்துள்ள ஸ்ரீஸார்ங்கம், வெவ்விய தேஜஸ்ஸை யுடைய திருக்குத்துடைவாள் இவையாகிற அழகிய திவ்யா

---

வ்யா:— (பனி நீர் உலகம் அடியளந்த மாயர் அவர்க்கு) குளிர்ந்த நீரை உடையதான கடல்சூழ்ந்த பூமியைத் திருவடி களாலே அளந்துகொண்ட ஆஸ்சர்யச்செயலையுடைய அந்த ஸர்வேஸ்வரனுக்கு. 'தொழில் பாடுவோம்' என்று சென்ற பாசுரத்தில் ஆசைப்பட்டதுபோலே அவனுடைய உலகளந்த தொழிலைப் பாடுகிறார். 'கழல்பாடி' என்று சென்ற பாசுரத்தில் ஆசைப்பட்டதுபோலே கழலாலே உபலக்ஷிதமான அவனுடைய திவ்யாயுதங்களையுடைய திருமேனியையும், பள்ளிகொள்ளுமிடத்தை யும் பாடுகிறார் முதல் அடிகளாலே.— (கனல் ஆழி, கார்க்கடல் வாய் வெண் சங்கம், வெய்ய கதை, சார்ங்கம், வெஞ்சுடர் வாள் செய்ய படை கைய) எதிரிகளின்மேலே நெருப்பை உமிழும் ஸுத₃ர்ஸன சக்ரம், கறுத்த நிறத்தை உடைய கடலில் பிறந்த வெளுத்த நிறத்தையுடைய பாஞ்சசன்னியமாகிற சங்கு, எதிரி களுக்கு வெம்மைமிக்கதான கௌமோதகியெனும் கதை. அதைப் போலவே எதிரிகளுக்கு வெம்மைமிக்க சார்ங்கமென்னும் வில், அதுபோலவே எதிரிகளுக்கு வெம்மைமிக்கதாய், கூர்மையாலே சுடர்விடாநிற்பதான நாந்தகமென்னும் குத்துவாள் ஆகிய செம்மை மிக்க திவ்யாயுதங்கள் கையிலே உள்ளன. செம்மையாவது.— எதிரிகளுக்கு ஆயுதங்களாம்போது எம்பெருமான் கருதுமிடம் பொருகையாகிற விதே₄யத்வமும், அடியார்க்கு ஆபரணமாம்போது ஒளியுமாகும். (பரவை பாழி) திருப்பாற்கடல் பள்ளிகொள்ளு

பாற்கடல் படுக்கை. (பணி நீருலகமடியளந்த மாயரவர்க்கு) கடல் சூழ்ந்த பூமியளந்த ஸர்வேஶ்வரனுக்கு. 36.

37. அவற்கடிமை பட்டேன் அகத்தான் புறத்தான்
உவர்க்குங் க்ருங்கடல் நீருள்ளான் — துவாக்கும்
பவளவாய்ப் பூமகளும் பன்மணிப் பூணாரம்
திகழுந் திருமார்வன் தான்.

**அவற்கு**—அப்படிப்பட்ட எம்பெருமானுக்கு, **அடிமை பட்டேன்**—ஆட்பட்டவனுனேன். **உவர்க்கும் கருங்கடல நீர் உள்ளான்**—உப்புக்கரிக்கின்ற கரிய கடல்நீரில் சயனித்திருப்பவனுய், **துவர்க்கும் பவளம் வாய் பூ மகளும்**—சிவந்த பவளம் போன்ற வாயையுடையளான பிராட்டியும், **பல் மணி பூண்**-பலவகையான ரத்னங்களழுத்தின திருவாபரணங்களும், **ஆரம்**-ஹாரங்களும், **திகழும்**-விளங்கப்பெற்ற, **திருமார்வன் தான்**—திருமார்பையுடையவனுன எம்பிரான், **அகத்தான் புறத்தான்**—(**என்னுடைய**) **உள்ளிலும்** வெளியிலும் வாசியறக் கலந்திருக்கின்ருன்;

அவ:— (அவற்கு) நான் அடிமையிலே அந்வயிக்க. ஸௌப₄ரியைப்போலே அநேகம் வடிவுகொண்டு பு₄ஜிக்க ஆசைப்படா நின்ருன் என்கிறது.

---

யுதங்கள் திருக்கையிலேயுளவாயிராநின்றன; திருப்பாற் கடல் படுக்கையாயிராநின்றது—என்று வித்₃த₄ராய் அநுப₄விக்கிருர். 36.

அவ:— இப்படி தாம் அவனையநுபவிக்கப்புக்கவாறே. அவனும் தன் பெருமையைப் பாராமல் தம் பக்கலிலே

---

மிடமாயிருககிறது. இப்படியும் சில செய்ய படைகளிருப்பதே! இப்படியும் ஓர் படுக்கையிருப்பதே! என்று ஆஶ்சர்யத்துடன் பாடி, அனுபவிக்கிருர். பதவுரையிற்போலே, 'கைய கனலாழி...... வாள செய்ய படை; பரவை பாழி' என்று கூட்டியும் பொருள் கொள்ளலாம். 36.

37. அவ:— முப்பத்தைந்தாம் பாசுரத்தில் ஆசைப்பட்டபடி பாடுவதுடன் நில்லாமல், கைதொழுகை முதலான ஶேஷவ்ருத்தி

(அன்றித்யாதி) இதுக்குபாத₃ாநகாரணமானவன். "एको हवै नारायण आसीत्" (ஏகோ ஹவை நாராயண ஆஸீத்) 46.

---

க₄டஶராவாதி₃களுக்குக் காரணமான ம்ருத்பிண்டம்போலே "एकमेव" (ஏகமேவ) என்னும்படி பிண்ட₃மாய் ஸகலகார்யங்களும் தன்னோடே ஒன்றி நாமரூபவிப₄ாக₃ாநர்ஹஸூக்ஷ்ம சித₃சித்₃விஶிஷ்டனாய்க்கொண்டு நிகி₂ல ஜக₃து₃பாத₃ாந காரணபூ₄தனாய் நின்ற உபகாரகன்கிடீர். 46.

---

மூவகைக்காரணத்துக்கும் உபலக்ஷணம். "ஸதே₃வ ஸோம்யேத₃மக்₃ர ஆஸீதே₃கமேவ அத்₃விதீயம்" [சாந்தோக்யம் 6-2-1] [குழந்தாய்! இவ்வுலகனைத்தும் முதலில் 'ஸத்' எனப்படும் ப்ரஹ்மமாகவே இருந்தது; ஒன்றாகவேயிருந்தது; இரண்டற்றதாயிருந்தது.] "ஏகோ ஹவை நாராயண ஆஸீத் நப்₃ரஹ்மா நேஶாந: நேமே த்₃யாவாப்ருதி₂வீ" [மஹோபனிஷத்] [நாராயணன் ஒருவனேயிருந்தான்; பிரமன், சிவன், இவ்வுலகங்கள் ஆகிய எதுவுமில்லை] "யதா₂ ஸோம்ய ஏகேந ம்ருத்பிண்டே₃ந ஸர்வம் ம்ருண்மயம் விஜ்ஞாதம் ஸ்யாத்" [சாந் 6-1-4] [குழந்தாய்! எப்படி ஒரு மண்பிண்டத்தை அறிந்தால் மண்ணாலானது அனைத்தும் அறியப்பட்டதாகிறதோ (அப்படியே உபாத₃ானகாரணமான ப்₃ரஹ்மத்தை அறிந்தால் அதன் கார்யமான அனைத்தும் அறியப்பட்டதாகிறது)] முதலான ப்ரமாணங்களில் நாராயணனே பிண்டத்தைப்போலே உபாத்₃ானமாகவும், குயவனைப் போலே நிமித்தமாகவும், த₃ண்ட₃சக்ரங்களைப்போலே ஸஹகாரியாகவும், ஆக மூவகைக்காரணமாகவும் ஆகிறான் என்று உத்கோஷிக்கப்பட்டதன்றோ. இப்படி ஸகலஜக₃த்காரணமாயிருந்தும், ப்ரயோஜநாந்தரபரர்க்கும் உடம்பு நோவக் கார்யம் செய்பவனாகையாலே, அநந்யப்ரோஜனரான நம் காரியத்தைத் தன் காரியமாகக் கொண்டு செய்வான் என்று கருத்து. இவ்வாழ்வாருடைய சீடரான திருமழிசையாழ்வார் தம் நான்முகன் திருவந்தாதியில் பின்வரும் (49-ம்) பாசுரத்தில் இப்பாசுரத்தைப் பெரும்பாலும் பின்பற்றியிருப்பது காணத்தக்கது.

மலையாமை மேல் வைத்து வாசுகியைச் சுற்றித்
தலையாமை தான் ஒருகை பற்றி—அலையாமல்
பீறக்கடைந்த பெருமான் திருநாமம்
கூறுவதே யாவர்க்கும் கூற்று. [நான்-திருவ49] 46.

47. நின்ற பெருமானே நீரேற்று உலகெல்லாம்
சென்ற பெருமானே செங்கண்ணா—அன்று
துரகவாய்கீண்ட துழாய் முடியாய் நங்கள்
நரகவாய் கீண்டாயும் நீ.

நீர் ஏற்று நின்ற பெருமானே—(மாவலியிடம்) தானநீர் வாங்கிக்கொண்டு நின்ற பெருமானே! உலகு எல்லாம் சென்ற பெருமானே—எல்லா உலகங்களையும் அளந்த பெருமானே! செம் கண்ணா—செந்தாமரைக் கண்ணனே! அன்று—முன்பொரு காலத்தில். துரகம்—குதிரைவடிவு கொண்டு துன்புறுத்த வந்த கேசியென்னும் அசுரனுடைய, வாய்—வாயை. கீண்ட—கிழித்தொழித்தவனாய். துழாய் முடியாய்—திருத்துழாயணிந்த திருமுடியையுடையவனே! நங்கள்—எங்களுடைய. நரகம் வாய்—(ஸம்ஸார) நரக மார்க்கத்தை. கீண்டாயும் நீ—அழித்தவனும் நீயேயன்றோ?

வ்யா:—(நின்ற பெருமானே நீரேற்று) மஹாபலிபக்கலிலே நீரேற்று ஶேஷித்வம் தோற்றும்படி நின்றவனே! (உலகித்யாதி)

அவ:—தேவர்களுடைய அபேக்ஷிதம் செய்தவனேகிடீர் நம் விரோதிகளைப்போக்கி அடிமை கொள்ளுவான் என்கிறார்.

உரை:—மஹாபலி பக்கலிலே சென்று உதகஜலத்துக்குக் கையேற்றுக்கொண்டு ஶேஷித்வம் தோற்ற நின்றருளின

47. அவ:-தேவர்களுக்கு அநிஷ்டங்களைப்போக்கி இஷ்டங்களை அளித்ததுபோலே, நமக்கும் அநிஷ்டங்களைப் போக்கி இஷ்டங்களை அளிப்பவன் நீயே என்று முன்னிலைப்படுத்திக் கூறுகிறார்.

வ்யா:—(நீரேற்று நின்ற பெருமானே) நாலு கைகளாலும் நாலு புருஷார்த்தங்களையும் கொடுத்துப் பழக்கப்பட்ட அமைம் புரிந்த நெடுந்தடக்கைகளை உடைய பெருமானை நீ. மாவலியிடம் சென்று தானநீருக்குக் கையேற்றுக்கொண்டு நின்றாயன்றோ! (நின்ற பெருமானே) ஒருவனிடம் தானம் வாங்கும்போது கூனிக் குறுகி நின்று தானம் வாங்குவது உலக வழக்கம். உன் உடைமையை தானம் என்னும் வியாஜத்தாலே பெறப்போகிறவனாகையாலே,

லோகத்தை யெல்லாமளந்து உடையவனென்று தோற்றும்படி நின்றவனே ! (செங்கண்ணு) ஸ்நேஹந்தோற்றும்படி நின்ற வனே! (அன்றித்யாதி) வைத்த வளையம் வாடாமல் கேசி வாயைக்கிழித்தவனே ! (ஙங்களித்யாதி) ஒருகேசிவாயைக் கிழித்தது ஆமூசர்யமோ எங்கள் நரகத்தின் வாயைக் கிழித்தவுனக்கு? 47.

---

வனுய். அவன் உதகம் பண்ணின அநந்தரம் ஸகலலோகங் களிலும் சென்று அளந்துகொண்ட ஸர்வஸ்மாத்பரனுய். இந்த்ரன் கார்யம் தலைக்கட்டப்பெற்ற ப்ரீதிப்ரகர்ஷத்தாலே சிவந்த திருக்கண்களையுடையனுய். ஜகத்து அஸ்தமிதமாகப் புக்கவன்று குதிரைவடிவு கொண்டு வந்த கேசியினுடைய வாயை கிழித்துப்போகட்டவனுய். அத்தசையிலும் திருத் துழாயாலே அலங்க்ருமான திருவபிஷேகத்தையுடையனுய்க் கொண்டு அவ்வொப்பனைக்குறி அழியாதே நின்றவனே !

---

தானம் வாங்கும்போதும் உலகம் அனைத்தும் உன்னுடைமை என்று தோற்றவன்றே நின்ருய். (நீரேற்று நின்ற பெருமானே) தன்னுடைமையை மற்ருெருவன் தன்னதென்று அபிமானிக்க, அவ னிடம் நீரேற்று அதைப் பெற்றபின்பே தரையில் காலூன்றிப் பெருததுபெற்ற பெருமானுய் நின்ருன் என்றுமாம். (நீரேற்று உலகெல்லாம் சென்ற பெருமானே) தான நீரைக் கையில் ஏற்ற அடுத்த கணமே எல்லாவுலகங்களிலும் வளர்ந்து அனைத்துலகையும் அளந்து, அதனுலேயே அனைத்துலகுக்கும் ஸ்வாமி நீயே என்பது விளங்க நின்றவனே! (செங்கண்ணு) இந்திரன் காரியத்தை முடித்த உகப்பாலும், இழந்த உடைமையைப் பெற்ற உகப்பாலும், அதைத் திருவடியாலே தடவிக் கொடுத்த உகப்பாலும் சிவந்த திருக்கண்களை உடையவனே! (அன்று) குதிரையுருக் கொண்டு வந்த கேசியென்னும் அசுரனுலே உலகமே அழியப் புகுந்த அன்று. (துரகவாய் கீண்ட) அக்குதிரையின் வாயிலே கையை விட்டு அதைக்கிழித்துத் தன் உடைமையான உலகிற்கு வந்த ஆபத்தை நீக்கினுன் என்று கருத்து. (துழாய் முடியாய்) பெரும்பலங்கொண்ட அவ்வசுரனின் வாயைக் கிழிக்கும்போதும், திருத்துழாயாலே அலங்கரிக்கப்பட்ட கிரீடத்தை உடையவனுய், சூடர்முடிமேல் புனைந்த அத்தண்ணந்துழாய் வளையம், அந்நிலையிலும் குறியழியாமலும் வாடாமலுமிருக்கப் பெற்றவனே!

48. நீயன்றே நீரேற்று உலகமடி யளந்தாய்
நீயன்றே நின்று நிரைமேய்த்தாய்—நீயன்றே
மாவா யுரம்பிளந்து மாமருதி னூடுபோய்
தேவாசுரம் பொருதாய் செற்று.

நீர் ஏற்று—(மாவலியிடம்) தானநீர் வாங்கி. உலகம்—உலகங்களை, அடி அளந்தாய் நீ அன்றே—திருவடியால் அளந்தவன் நீயன்றோ? நின்று—ரக்ஷிப்பதில் நிலைத்து நின்று. நிரை—பசுக்கூட்டங்களை. மேய்த்தாய் நீ அன்றே—மேய்த்தவனும் நீயன்றோ? மா—குதிரைவடிவுகொண்டுவந்த கேசியென்னும் அசுரனுடைய. வாய் உரம்—வாயின் வலிமையை. பிளந்து-ஒழித்து. மா மருதின் ஊடு போய்-பெரிய இரட்டை மருத மரங்களிடையே தவழ்ந்து அவற்றை முறித்துத் தள்ளி. தேவாசுரம்—தேவாஸுரச் சண்டையிலே. செற்று—(அசுரர்களை) அழியச்செய்து. பொருதாய் நீ அன்றே—போர் செய்தவனும் நீயன்றோ.

---

இப்படி விரோதிநிரஸனசீலனாயிருக்கிற நீயேயாயிருக்கும் அநந்ய ப்ரயோஜநரான எங்களுடைய ஸம்ஸாரமாகிற நரகத்தினுடைய வாயைக் கிழித்துப் போகட்டாயும். 47.

---

(நங்கள் நரகவாய் கீண்டாயும் நீ: இப்படி உலகிற்கு உண்டான விரோதியைப் போக்கினாற்போலே, உன்னையே பயனாக்கொண்ட எங்களுக்கு உன்னைப்பெறத் தடையான நரகமாயிருக்கும் இந்த ஸம்ஸாரத்தின் வாயைக் கிழித்துப்போட்டவனும்நீயே. இந்த ஸம்ஸார வழியில்நாங்கள் செல்லமுடியாதபடி செய்தாய் என்றபடி. வேறு எவராலும் அழிக்கவொண்ணாத இந்த ஸம்ஸார வெந்நரகையும் அழித்த உனக்கு ஒரு கேசியின் வாயைக் கிழித்தது ஓராஶ்சர்யமல்ல என்று கருத்து. இங்கு நரகவாய் கீண்டதாகிற அநிஷ்ட நிவ்ருத்தியைச் சொன்னது, அடிமைகொள்ளுகையாகிற இஷ்டப்ராப்திக்கும் உபலக்ஷணம். தேவர்களுக்கும், ஆய்ப்பாடி மக்களுக்கும் அநிஷ்ட நிவ்ருத்தியையும், இஷ்டப்ராப்தியையும் செய்ததுபோலே நமக்கும் செய்வான் என்பது பாசுரத்தின் திரண்டபொருள். 47.

வ்யா:— (நீயன்றேயித்யாதி) உன்னுடைமைக்கு மஹா பலிபக்கலிலே நீரேற்று அத்தைத் திருவடிகளாலே அளந் தாய். (நீயன்றேயித்யாதி) க்ருஷ்ணனுயவதரித்துப் பசு மேய்த்தாய். (நீயன்றேயித்யாதி) கேசிவாயைப்பிளந்து பெரிய

---

அவ:-நீர் சொல்லுகிறவையெல்லாம் நாம் அறிகிறிலோமீ என்ன. பின்னையிவையெல்லாம் செய்தார் ஆர்? என்கிருர்.

உரை:— மஹாபலிபக்கலிலே அர்த்தியாய்ச்சென்று நீரேற்று. ஜகத்தையடையத் திருவடிகளாலே அளந்து கொண்டாய் நீயன்றே? க்ருஷ்ணனுய் வந்து ரக்ஷணத்திலே ஒருப்பட்டுநின்று. கையும் கோலுமாய்க்கொண்டு பசுக்களை வயிறு நிறையும்படி மேய்த்தாய் நீயன்றே? உன்னை விழுங்குவதாகவந்த கேசியினுடைய வாய்வலிகுலையும்படி வயிற்றைக்கிழித்துப் பொகட்டு. பெரிய மருதுகளின் நடுவே.

---

48. அவ:—திருவுலகளந்த செயல் முதலான செயல்களைச் செய்ததாகச் சென்ற பாசுரத்தில் ஆழ்வார் அருளியவுடன், (தூணை ஆட்டி ஆட்டி ஆழப்புதைப்பதாகிற) ஸ்தூணாநிகநநந்யாயத்தாலே, இவருடைய கருத்தை உறுதிப்படுத்துவதற்காக, எம்பெருமான் 'நீர் சொல்லுகிறவையெல்லாம் நாம்அறியோமே!' என்ன, 'பிரானே! அப்படியானல் இவ்ற்றையும் இன்னமும் பல செயல்களையும் செய்தவர் யார்?' என்கிருர் இப்பாசுரத்தில்.

வ்யா:—(நீரேற்று உலகம் அடியளந்தாய் நீயன்றே) மாவலியிடம் யாசகனுகிச்சென்று தான நீரைக் கையில் ஏந்தி, உன் உடைமையான உலகத்தைத் தன்னுடையதாக அபிமானித்த அவனிடமிருந்து தானமாகப்பெற்று, அதைத் திருவடிகளாலே அளந்துகொண்டவன் நீயன்றோ ? (நின்று நிரை மேய்த்தாய் நீயன்றே) கண்ணனுய் அவதரித்துக் கன்றுகளையும் பசுக்களையும் ரக்ஷிப்பதிலே நிலைத்து நின்று, கையும் கோலும் கொண்டு பசுக் கூட்டங்களை வயிறு நிறையும்படி மேய்த்தவன் நீயன்றே. (மாவாய் உரம் பிளந்து) உன்னை விழுங்கி ஆய்ப்பாடியைத் தூளாக்கக் குதிரையுருக்கொண்டு வந்த கேசியின் வாய்வலிமைகுலையும்படி வாயைக்கிழித்துப்போட்டு. (மாமருதின ஊடுபோய்) பொய்ம்மாய அசுரர்களால் ஆவேசிக்கப்பட்ட பெரிய இரட்டை மருதமரங்களின்

மருதினிடையே போய். (தேவாசுரமித்யாதி) ஜ்ஞானஹீநமான அசேதநங்களைப் போக்கினதுவேயோ? சேதநரான விரோதிகளையும் போக்கிற்றில்லையோ? 48.

49. செற்றதுவுஞ் சேரா விரணியனைச் சென்றேற்றுப்
பெற்றதுவும் மாநிலம் பின்னைக்காய்—முற்றல்
முரியேற்றின் முன்னின்று மொய்ம்பொழித்தாய் மூரிச்
சுரியேறு சங்கினாய்! சூழ்ந்து.

பின்னைக்காய்—*நப்பின்னைப் பிராட்டிக்காக*, முற்றல்—*வலிமையையுடையதாய்*. முரி-(*இங்குமங்கும்*) *ஓடும்*. ஏற்றின்-(*ஏழு*) *எருதுகளினுடைய*. முன் நின்று-*எதிரில்* (*அஞ்சாதே*) *நின்று*. சூழ்ந்து—(*அவற்றைக் கொல்லும் வகையை*) *ஆராய்ந்து*, மொய்ம்பு ஒழித்தாய்—(*அவற்றின்*) *பலத்தை ஒழித்தவனே!* மூரி—*பெரிதாயும்*. சுரி ஏறு—(*உள்ளே*) *சுழித்தலையுடைத்தாயுமிருக்கிற*. சங்கினாய்—*சங்கைத் திருக்கையிலேந்தியுள்ளவனே!* சேரா இரணியனை—*உன்னைச் சேர்ந்து வாழமாட்டாத ஹிரண்யாஸுரனை*: செற்றதுவும் (நீயன்றே)-*கைகூசாமல் முடித்துப் போட்டதும் நீயன்றோ*. சென்று—(*மஹாபலிபக்கலில்*) *சென்று*. மா நிலம்—*பெரிய பூமியை*. ஏற்று—*யாசித்து*. பெற்றதுவும் (நீயன்றே)-*பெற்றுக் கொண்டதும் நீயன்றோ*.

---

*அவை வேர் பறிந்து விழும்படி தவழ்ந்துபோய். தேவாஸுர ஸங்க்ராமத்திலே அஸுரவர்க்கத்தை அழியச்செய்து யுத்தம் பண்ணினாய் நீயன்றோ?* 48.

---

இடையே அவை வேரோடு விழும்படி உரலை இழுத்துக்கொண்டு சென்று. இப்படி அறிவற்ற விரோதிகளைப் போக்கின அளவோ? அறிவுள்ள விரோதிகளையும் போக்கினாய் நீயேயன்றோ என்கிறார் மேலே.—(தேவாசுரம் செற்றுப் பொருதாய் நீயன்றே) தேவாசுரச் சண்டையிலே துஷ்டர்களான அசுரர்களை அழித்துச் சண்டை செய்தாய் நீயேயன்றோ? இவற்றையெல்லாம் நீ செய்யாவிடில் யார்தான் செய்தார் என்பதை நீயே அருளிச் செய்யவேணும் என்று கருத்து. 48

வ்யா:— (செற்றதுவுமித்யாதி) ஆஶ்ரிதரோடு சேராத ஹிரண்யனைக் கொன்றது. அவனிழவுக்காகவென்றுமாம். (சென்றித்யாதி) மஹாபலிபக்கலிலே நீரேற்றுப்பெற்றது பூமி. (பின்னைக்காயித்யாதி) நப்பின்னைப் பிராட்டிக்காகத் திண்ணிய

---

அவ:— இன்னமிவ்வளவோ? ஆஶ்ரிதார்த்தமாகப் பண்ணும் வ்யாபாரங்கள் அநேகமன்றோவென்கிறார்.

உரை:— நப்பின்னைப் பிராட்டியைப் பெறுகைக்காக மிடுக்குடைத்தாய்க்கொண்டு ஸஞ்சரியாநின்றுள்ள ருஷபங்களின் முன்னே பயப்படாதே உறைத்துநின்று, கொல்லும் விரகுவிசாரித்து அவற்றின் மிடுக்கைப் போக்கினவனாய். இடமுடைத்தாய், சுரியையுமுடைத்தான ஸ்ரீபாஞ்சஜன்யத்தை திவ்யாயுதமாக உடையனுமானவனே! இப்படியிருக்கிற நீ கைகூசாமல் முடித்துப்பொகட்டதும் உன்னுடன் பொருந்தோமென்று இருக்கும் துஷ்ப்ரக்ருதியான ஹிரண்யனை. மஹாபலிபக்கலிலே சென்று நீரேற்று

---

49. அவ:—இவ்வளவுதானோ நீ செய்தவை? அடியார்க்காக நீ செய்த செயல்கள் பலவன்றோ என்கிறார்.

வ்யா:—(செற்றதுவும் சேரா இரணியனை) அடியானான ப்ரஹ்லாதனோடு பொருந்தாத துஷ்டனான் இரணியனையேயன்றோ கைகூசாமல் அழித்தாய் நீ. தன்னோடு பொருந்தாத அவனுடைய இழவு (துர்தசை) பொறுக்கமாட்டாமல் அவனை அழித்தான் என்றும் கொள்ளலாம். (சென்று ஏற்றுப் பெற்றதுவும் மா நிலம்) மாவலியிடம் சென்று தானநீர் ஏற்று. பெறும்பேறாக நீ பெற்றதும் உன்னுடையதான பெருநிலமன்றோ. முதலாழ்வார்கள் திருவுலகளந்த செயலிலே மண்டியிருப்பார்களாகையாலே தொடர்ந்து மூன்று பாசுரங்களில் இச்செயலை அநுஸந்திக்கிறார். (பின்னைக்காய் முற்றல் முரியேற்றின் முன் நின்று சூழ்ந்து மொய்ம்பழித்தாய்) நப்பின்னைப் பிராட்டியைப் பெறுகைக்காக, பலத்தையுடைய்தாய், இங்குமங்கும் ஓடுவதான ஏழு எருதுகளின் முன்னே பயப்படாமல் உறைப்புடன் நின்று, 'எவ்விடத்தில் நின்று எப்படிப் பாய்ந்தால் இவற்றை அழிக்கலாம்' என்று ஆராய்ந்து, அதன்படி செயல்

தாய். உலாவாநின்ற ஏற்றினுடைய மிடுக்கையழித்தாய். (சூழ்ந்து) இடம்பார்த்துநின்று. (மூரிச்சுரி யித்யாதி) கையிலே ஶ்ரீபாஞ்சஜந்யத்தையுடையவனே! 49.

50. சூழ்ந்த துழாயலங்கல் சோதி மணிமுடிமால்
தாழ்ந்த வருவித் தடைவரைவாய்—ஆழ்ந்த
மணிநீர்ச் சுனைவளர்ந்த மாமுதலை கொன்றான்
அணிநீல வண்ணத் தவன்.

**சூழ்ந்த**-திருமேனியெங்கும் சாத்தப்பெற்றுள்ள. **துழாய் அலங்கல்**—திருத்துழாய் மாலையை உடையவனாய். **சோதி**—ஒளி பெற்ற. **மணி முடி**—ரத்தினமயமான கிரீடத்தை

---

அலப்₁யலாப₄மாகப் பெற்றதுவும் உன்னதான மஹா ப்ருதிவியை. மூரியென்றது ஸஞ்சரிக்கவென்றபடி. 'மூரிச் சுரியேறு சங்கினாய் என்றவிடத்தில் 'மூரி' என்று குனிவாய். அத்தாலே புடைபெருத்து இருக்கையை நினைக்கிறது. மூரி என்று கடலாய், கடலைப் பிறப்பிடமாகவுடைய ஸ்ரீபாஞ்சஜன்யமென்னவுமாம். 49.

---

புரிந்து அவ்வெருதுகளின் பலத்தை அழித்தவன் நீயன்றோ. முற்றல்—திண்மை. மூரி—ஸஞ்சரித்தல். (மூரிச்சுரியேறு சங்கினாய்) தேவாசுரம் செற்றுப் பொருதபோது, இடமுடையதாய், சுரியாகிற சுழித்தலையும் உடையதான சங்கத்தைக் கையில் தரித்தவன் நீயே யன்றோ? சென்ற பாசுரத்திற்கு ஶேஷமாகவேயிருப்பதால் 'நீயன்றே' என்பதை இங்கும் கூட்டிப் பொருள் கொள்ளவேணும். சங்கின் பெரு முழக்கத்தாலேயே அசுரர்களை அரையுயிராக்கினான் என்று கருத்து. 'மூரி' என்றது வளைவாய், அதனாலே பெருமுழக்கத்திற் குறுப்பாக அடிப்பாகம் பெருத்து இடமுடையதாயிருக்கையை நினைக்கிறது. 'மூரி' என்று மூரி நீராகிற கடலைச் சொல்லி, கடலைப் பிறப்பிடமாகவுடைய சங்காகிற ஸ்ரீபாஞ்சஜந்யம் என்றும் பொருள் கொள்ளலாம். இவ்வண்ணமாக, அடியானை ப்ரஹ்லாதனுக்காக இரணியனை அழித்தும், இந்திரனுக்காக பூமியை யாசித்துப்பெற்றும், பின்னைக்காக ஏழு எருதுகளை அழித்தும், தேவர்களுக்காகச் சங்கேந்தியும் நீ செய்த செயல்கள் பலவன்றோ என்று அருளிச் செய்தாராயிற்று. 49.

உடையவனாய், **அணி நீலம் வண்ணத்தவன்**—அழகிய நீல நிறத்தையுடையனாயிருக்கிற. **மால்**—ஸர்வேஶ்வரன். **தாழ்ந்த அருவி தடவரை வாய்**—பூமியளவும் தாழ்ந்து பெருகுகின்ற அருவிகளையுடைய பெரிய மலையின் நடுவிலுள்ள, **ஆழ்ந்த மணி நீர் சுனை**—ஆழமாய் அழகிய நீரையுடைத்தான பொய்கையிலே. **வளர்ந்த**—(பயமற்று) வளர்ந்து கொண்டிருந்த. **மா முதலை**—பெரிய முதலையை. **கொன்றான்**—முடித்தொழித்தான்.

**வ்யா:**— (சூழ்ந்தவித்யாதி) ஆகமுதலியாக விட்ட திருத்துழாய்மாலையையும் ஆதி₄ராஜ்யஸூசகமான மணிமுடியையுமுடையவன். (தாழ்ந்தவித்யாதி) தாழ்ந்த அருவிகளையுடைத்தா

---

**அவ:**— ஆஶ்ரிதரிலே ஒருவனான ஸ்ரீ கஜேந்த்₃ராழ்வான் விரோதி₄யைப் போக்கி அவனைப் பக்ஷபதித்து ரக்ஷித்த படியை அருளிச்செய்கிறார்.

**உரை:**— வளையச்சாத்தின திருத்துழாய் மாலையாலே அலங்க்ருதமாய், மிக்க தேஜஸ்ஸையுடைத்தான ரத்னங்களோடே கூடின திருவபி₄ஷேகத்தையுடைய ஸர்வாதி₄கனாய், கண்டபோதே ஸகலஶ்ரமங்களும் போம்படி அழகிய

---

50. **அவ:**—இப்படி ஆஶ்ரிதரக்ஷணம் ப்ரஸ்துமானவாறே, அடியார்களில் ஒருவனான ஸ்ரீகஜேந்திராழ்வானின விரோதியைப்போக்கி, அவனைப் பக்ஷபாதத்தோடு ரக்ஷித்தபடியை அருளிச்செய்கிறார்.

**வ்யா:**—(சூழ்ந்த துழாயலங்கல் மால்) திருமேனி அலங்காரங்களுக்கெல்லாம் முதல் அலங்காரமாயிருக்கும்படி திருமேனியைச் சூழ்ந்திருக்கும் திருத்துழாய் மாலையை உடைய திருமால். (சோதி மணிமுடிமால்) 'இவனே பரம்பொருள்' என்பதை வெளிப்படுத்தும் மிகுந்த தேஜஸ்ஸையுடைய ரத்னங்களோடுகூடிய கிரீடத்தையுடைய திருமால். மால்—பெரியவன்.

"ஆதி₄ராஜ்யமதி₄கம் பு₄வநாநாம்
ஈஶ தே பிஶுநயந் கில மௌளி:" [வரதராஜஸ்தவம்]

[ஈசனே! உன்கிரீடம் உலகங்களுக்கெல்லாம் சக்ரவர்த்தி நீயே எனக்காட்டித் தருகிறது.] என்று ஆழ்வானும்,

யிருந்துள்ளதடவரையிலே, ஆழ்ந்து, நிர்மலமான நீரை யுடைத்தான சுனையிலே வளர்ந்த பெரியமுதலையை, நீர்ப்புழு வென்று பாராதே சினத்தோடே கொன்றான். (அணி நீல வண்ணத்தவன்) ஆஶ்ரிதவிரோதி₄யான முதலை போயிற் றென்று ஶ்ரமஹரமான வடிவையுடையவன். 50.

---

*நீலநிறத்தையுடையனுமான அந்த ஸர்வேஶ்வரன், பூமி யளவும்வரத் தாழ்ந்த அருவிகளையும், தாழ்வரைகளையு முடைத்தான மலையிடத்து உண்டான, ஆழமாய் அழகிய நீரை உடைத்தான மடுவிலே மநுஷ்யர் முகம் காணாமல் வளர்ந்த பெரிய முதலையை, ஒரு நீர்ப்புழுவென்று பாராதே, ஸ்ரீகஜேந்த்₃ராழ்வான் பக்கல் வாத்ஸல்யத்தாலே, தன் சினம் தீர முடித்துப் போகட்டான். 50.*

---

"கிரீடசூட₃ரத்நராஜி-
ராதி₄ராஜ்யஜல்பிகா" [ஸ்ரீரங்கராஜஸ்தவம்]
[கிரீடத்தில் உள்ள மணிகளின் வரிசை இவனே சக்ரவர்த்தி யெனக்காட்டித்தருகிறது] என்று பட்டரும் அருளிச்செய்தன ரன்றோ. (சூழ்ந்த......மால்) திருத்துழாய் மாலையும், சோதி மணிமுடியும் இவனே அனைவரிலும் பெரியவன் என்று காட்டித் தருகின்றன என்று கருத்து. இது பெரியவாச்சான்பிள்ளை நிர்வாஹம். சூழ்ந்த துழாயலங்கலைச் சோதிமணிமுடிக்கு விஶேஷண மாகக் கொண்டார் அப்பிள்ளை. (சூழ்ந்த துழாயலங்கல் சோதி மணிமுடிமால்) வளையமாகச் சாத்தின திருத்துழாய் மாலையாலே அலங்கரிக்கப் பெற்றதாய், மிக்க தேஜஸ்ஸை உடையதான ரத்தினங்களோடே கூடிய கிரீடத்தை உடைய பெரியவன். (அணி நீல வண்ணத்தவன்) கண்டபோதே எல்லாக் களைப்புகளும் ஆறும் படியான அழகிய நீலநிறத்தை உடையவன். இவ்வடிவழகைக்காண ஆசைப்பட்ட கஜேந்திரனுக்கு முன்தோன்றி, அவனுடைய விரோதி யையும் கொன்றான் என்கிறார் பாசுரத்தின் எஞ்சிய பகுதியாலே.— (தாழ்ந்த அருவித்தடவரை வாய்) பூமியளவும் வரத்தாழ்ந்த அருவி களையும், தாழ்வரைகளையும் உடைய மலைக்கு நடுவே. தடம்— தாழ்வரை; அன்றிக்கே, தடவரை—பெரியமலை என்றும் கொள்ள லாம். (ஆழ்ந்த மணிநீர்ச்சுனை) அத்தகைய மலைக்கு நடுவே, ஆழமுள்ளதாய், மணிபோல் தெளிந்து அழகியதான நீரையுடைய

51. அவனே யருவரையால் ஆநிரைகள் காத்தான்
அவனே யணிமருதம் சாய்த்தான்—அவனே
கலங்காப் பெருநகரம் காட்டுவான் கண்டீர்
இலங்கா புரமெரித்தா னெய்து.

அரு வரையால்—ஒருவரால் அசைக்கவும் முடியாததான கோவர்த்தன மலையினுல். ஆ நிரைகள்—பசுக் கூட்டங்களை. காத்தான்—ரக்ஷித்தருளினவன். அவனே கண்டீர்—அப்பெருமானே கிடீர்!. அணி மருதம்—நெருங்கி நின்றுகொண்டிருந்த இரட்டை மருதமரங்களை. சாய்த்தான்—முறித்துத் தள்ளினவனும். அவனே கண்டீர்—அப்பெருமானே கிடீர்! எய்து—அம்புகளைப் பிரயோகித்து. இலங்காபுரம்—இலங்கைப் பட்டணத்தை. எரித்தான்—எரியவிட்டவனை. அவனே—அப்பெருமானே. கலங்கா பெருநகரம்—ஒருவகைக் கலக்கமுமில்லாத பரமபதத்தை, காட்டுவான் கண்டீர்—காட்டித்தருவான் கிடீர்!

---

அவ:—இப்படி ஸ்ரீகஜேந்த்ராழ்வானுடைய ஆபந்நிவாரணம் பண்ணினவன் கிடீர் நமக்கெல்லாம் உபாயபூதனுவான் என்கிருர்.

---

தடாகத்திலே. (வளர்ந்த மாமுதலை) ஆனையையும் விழுங்கும் பலமுடையதாய் வளர்ந்திருக்கும் பெரிய முதலையை. இப்படி மலைக்கு நடுவிலே ஆழமான சுனையில், மனிதர் முகம்காணுமல் பயமற்று வளர்ந்திருக்கையாலே மிக்க பலத்தையுடையதாயுள்ளது என்று கருத்து. (கொன்ருன்) இது தனக்கு ஒரு நீர்ப்புழுவுக்கு ஸமானம் என்று நினையாமல், அடியானை கஜேந்திரனுக்குச் செய்த அபசாரத்தையே பார்த்துப் பெருஞ்சினத்தோடே கொன்ருன். (அணி நீல வண்ணத்தவன்) அடியானுடைய விரோதி போயிற்றென்று திருமேனி நிறம்பெற்ருன் என்றும் கொள்ளலாம். 50.

51. அவ:— இவ்வண்ணமாக ஸ்ரீகஜேந்திராழ்வானுடைய ஆபத்தைப்போக்கின அவனே அடியார் அனைவர்க்கும் அவ்வப்போது வரும் ஆபத்துக்களைப் போக்கி, மிகச்சிறந்த புருஷார்த்தமான பரமபதத்தை அளிப்பவன் என்கிருர்.

வ்யா:— (அவனேயித்யாதி₃) "வர்ஷத்தாலே நோவுபட்ட பசுக்கள் தம்முடைய ரக்ஷணத்துக்குத் தாம் ப்ரவர்த்தித்த துண்டோ? அவனேயன்றோ? என்று ஸஹகாரி நைரபேக்ஷ்யத்தைச் சொல்லுகிறது. (அவனேயணியித்யாதி₃) நிரபேக்ஷ

---

உரை:— ஒருவரால் சலிப்பிக்க அரிதான கோ₃வர்த்த₄ந பர்வதத்தாலே. வர்ஷத்திலே அகப்பட்டு அழியப்புக்க பசுக்களை ஒரு நோவுவாராமல் குறைவற ரக்ஷித்தருளித் தான் ஸஹாயாந்தர நிரபேக்ஷமாக ரக்ஷிக்கவல்ல ஶக்திமானவன் அவனே கிடீர். தன்னிலே இடைவெளியறச்சேர்ந்து நின்ற யமளார்ஜுனங்களை யஶோதா₃தி₃கள் ஸஹகரியாதிருக்கத் தள்ளிவிழவிட்டான் அவன் தானே கிடீர். பிராட்டியைப் பெறுகைக்காகத் திருச்சரங்களை ப்ரேரித்துவிட்டு, ப்₃ரஹ்மாதி₃களுக்கும் கணிசிக்கவொண்ணாத லங்காபுரத்தை, அவர்கள் ஏகதே₃ஶமும் ஸஹகரியாதிருக்க. த₃க்₃த₄மாக்கி விழவிட்டான் அவன் தானே கிடீர். அப்படியே. ஒருவர்

---

வ்யா:—(அருவரையால்ஆநிரைகள் காத்தான் அவனே கண்டீர்) எவராலும் அசைக்க அரிதான கோ₃வர்த்த₄ந மலையாலே, இந்திரன் பெய்த கல் மழையிலே அகப்பட்டு அழியவிருந்த பசுக்களை நோவு படாதபடி ரக்ஷித்தருளினவன் அவனே கிடீர்! (அவனே) ரக்ஷிக்கும் போது வேறொரு துணையை எதிர்பாராத ஸர்வஶக்தியையுடையவன் என்று ஏகாரம் காட்டுகிறது. (கண்டீர்) நோவுபட்ட பசுக்கள் தம்மைத் தாமே ரக்ஷித்துக்கொண்டிருந்தாலன்றோ உங்களை நீங்கள் ரக்ஷித்துக்கொள்ளலாவது என்று அறிவுடையார்க்கு உணர்த்துகின்றார். (அணிமருதம் சாய்த்தான் அவனே கண்டீர்) ஒன்றுக்கொன்று இடைவெளியில்லாமல் அணித்தாய் நின்ற இரட்டை மருதமரங்களை யசோதை முதலானார் துணையின்றியே தள்ளிவிழவிட்டவன் அவனே கிடீர்! (எய்து இலங்காபுரம் எரித்தான் அவனே) பிராட்டியைப் பெறுகைக்காக வில்லாலே அம்புகளைப் பொழிந்து. பிரமன் முதலான தேவர்களாலும் அசைக்கமுடியாத இலங்கை நகரை, அவர்களுடைய துணை சிறிதுமின்றி எரித்து அழித்தவனன் அவனே. (கலங்காப் பெருநகரம் காட்டுவான் கண்டீர்) இலங்கையிலுள்ள அரக்கர் போலே, ஒருவன் வஸ்திரத்தைப் பிடுங்கி ஏழு பேர் உடுத்துக்

மாக மருதைச் சாய்த்தானுமவனே. (அவனே கலங்கா வித்யாதி₃) பரமபதம் அவனே காட்டக் காணுமத்தனே. ஸ்வயத்நத்தால் காண்பார்க்குக் காணப்போகாது. (கண்டீரித் யாதி₃) லங்கையை அழித்துப் பிராட்டியைப் பெறுகைக்கு யத்நம் பண்ணினானும் தானே. 51.

---

கூறை எழுவர் உடுக்கிற ஸம்ஸாரத்திலுள்ள கலக்கம் ஒன்றுமின்றிக்கேயிருக்கிற பெரிய ராஜத₄ானியான பரம பதத்தை "நீ கண்டுகொள்" என்கிறபடியே அகிஞ்சனரான நமக்குக் காட்டித்தருவானும் நிரபேக்ஷோபாயபூ₄தனான அவனே கிடீர். அறிவில்லாத பசுக்களோடு அறிவில் தலை நின்ற பிராட்டியோடு ஒருவாசியில்லை. அறிவுக்கு ப்ரயோஜநம். "तत्तस्य सदृशं भवेत्" (தத்தஸ்ய ஸத்₃ருஶம் ப₄வேத்) என்றிருக்கை; அறியாமைக்கு ப்ரயோஜநம்—பண்ணுகிற ரக்ஷணத்தை விலக்காமை என்றபடி. 51.

---

கொள்ளுகிற ஆஸுரப்ரக்ருதிகள் நிறைந்த இவ்வுலகிலுள்ள கலக்கங்கள் ஒன்றுமில்லாமலிருக்கும் பெரியநகரமான பரமபதத்தை, "நீ கண்டுகொள்" [திருவாய் 3-9-9] என்கிறபடியே, கைம்முதலற்ற நமக்குக் காட்டித்தருபவனும் துணையை எதிர்பாராத அவனே கிடீர்! அறிவில்லாத பசுக்களோடு அறிவில் தலைசிறந்த பிராட்டியோடு ஒருவாசியில்லை தங்களைத் தாமே ரக்ஷித்துக்கொள்ளமாட்டாமைக்கு. "தத்தஸ்ய ஸத்₃ருஶம் ப₄வேத்" [ரா-ஸு 39-30] [என்னை ரக்ஷிப்பது எம்பெருமானுக்கே உரியது] என்றிருப்பதே பிராட்டி போன்ற அறிவாளிகள் அறிவு படைத்த பயனாகும்; பசுக்களைப் போன்ற அறியாதாருடைய அறியாமைக்குப் பயன் ஸர்வேஶ்வரன் பண்ணுகிற ரக்ஷணத்தை விலக்காதொழிகையே என்று கருத்து. (அவனே காட்டுவான்) அவனே காட்டக்கண்டால் பரமபதத்தைக் காணலாமேயொழிய, தம் முயற்சியாலே எவராலும் காணமுடியாது என்றபடி. அவனே என்று மறுபடியும் மறுபடியும் சொல்லுகையாலே, அநிஷ்டநிவ்ருத்தியோடு இஷ்டப்ராப்தியோடு வாசியில்லாமல், எல்லாம் அவனாலாவதேயொழிய இவனாலாவது ஒன்றுமில்லை என்று உணர்த்தப்படுகிறது. 51.

52. எய்தான் மராமர மேழுமிராமனாய்
எய்தா னம்மான் மறியை ஏந்திழைக்காய்—எய்ததுவும்
தென்னிலங்கைக் கோன்வீழச் சென்று குறளுருவாய்
முன்னிலம் கைக்கொண்டான் முயன்று.

இராமன் ஆய்—ஸ்ரீராமனாகத் திருவவதரித்து. மராமரம் ஏழும் — ஏழு ஆச்சாமரங்களையும். எய்தான் — அம்பு செலுத்தித் துளைத்தான்: ஏந்து இழைக்கு ஆய்--தரிக்கப் பட்ட ஆபரணங்களையுடைய பிராட்டிக்காக. அம் மான் மறியை—அப்படிப்பட்ட (மாரீச மாய) மான் குட்டியைக் குறித்து, எய்தான்—(விளையாட்டாக) அம்பெய்தான்; எய்த துவும்—அம்புகளை (நன்கு) செலுத்தினதும். தென் இலங்கை கோன் வீழ—தென்னிலங்கைக்கு அரசனான இராவணன் முடியும்படியாகவாம்; முன்—முன்பொரு காலத்திலே. குறள் உரு ஆய்—வாமனரூபியாய். சென்று—மாவலியிடத்திற் சென்று. முயன்று—(வடிவழகு காட்டுதல். மழலைச்சொற் களைச் சொல்லுதல், உலகளந்தல் முதலிய) முயற்சிகளைச் செய்து. நிலம் கைக்கொண்டான்-பூமியைக் கைப்பற்றினான்.

வ்யா:— (எய்தானித்யாதி₃) ராமனாய் ஆஸ்ரிதருக்காக மராமரம் ஏழையுமெய்தான். (எய்தான் அம்மானித்யாதி) மான்

---

அவ:— கீழ் ப்ரஸ்துதமான ராமவ்ருத்தாந்தந்தன்னிலே திரியவுமாழங்காற்பட்டு அத்தைப் பேசுகிறார்.

உரை:—சக்ரவர்த்தித் திருமகனாய் வந்து அவதரித்தருளி, மஹாராஜரை விஸ்வஸிப்பிக்கைக்காக மராமரங்கள் ஏழை

---

52. அவ:—சென்ற பாசுரத்தில் ப்ரஸ்தாவிக்கப்பட்ட ம்ருத ஸஞ்ஜீவநமான ராமசேஷ்டிதத்திலே ஈடுபட்டு, மறுபடியும் அதை விரிவாகப்பேசி, அவனுடைய உபாயபூர்வத்தையேவலியுறுத்துகிறார்.

வ்யா:—(இராமனாய் மராமரம் ஏழும் எய்தான்) ஸர்வலோக பிதாவாயிருப்பவன், தன் பிள்ளையொருவனுக்குப்புத்திரனாக ஆசைப் பட்டு, சக்கரவர்த்தித் திருமகனாகப் பிறந்து, நீர்மைக்குணம் வெளிப் படும்படி குரங்குகளோடு கலந்து, சுக்கிரீவனை நம்ப வைப்பதற்

குட்டியென்று பாராதே. பிராட்டி சொன்னுளென்று எய்தான். (எய்ததித்யாதி₂) எய்ததுவும் ராவணனைக் கொல்லுகைக்காக.

யும் பட்டுருவ எய்துவிட்டான். த₄ரிக்கப்பட்ட ஆப₄ரணங்களையுடைய பிராட்டிக்காக. அவ்வாப₄ரணச் சேர்த்தியழகிலே ஆழங்காற்பட்டு மேல்விளைவதறியாமல். அந்த மாயாம்ருக₃ம் புரண்டுவிழும்படியாக எய்து பொகட்டான். அவள் சிறையிருப்பு மாற்றுகைக்காகத் தெற்குத்திக்கிலுண்டான லங்கைக்கு நிர்வாஹகனை ராவணன் குட்டிச்சுவர்போலே உருண்டுவிழும்படியாக எய்ததும். முன்பொரு காலத்திலே ஸ்ரீவாமனனாய்க்கொண்டு மஹாபலிபக்கலிலே

காக, மராமரங்கள் ஏழும் ஓரம்பாலே துளைக்கப்படும்படி எய்து விட்டான். (ஏந்திழைக்காய் அம்மான் மறியை எய்தான்) "நின் அன்பின் வழிநின்று" [பெரியாழ் 3-10-7] என்கிறபடி ஸர்வாப₄ரண பூ₄ஷிதையான சீதாபிராட்டியிடம் அன்பினால் தூண்டப்பட்டு, "ஓர் மான் குட்டியிடம் ராமபா₃ணத்தையா செலுத்துவது" என்று ஆலோசிக்காமல் அம்பெய்தான். மறியை—குட்டியை. இது பெரிய வாச்சான்பிள்ளையின் நிர்வாஹம். 'மறிய' [புரண்டு விழ] என்றும் பாடங்கொண்டு, "பிராட்டியின் ஆபரணச் சேர்த்தியழகிலே ஆழங்காற்பட்டு, மேல் விளைவதறியாத ப்ராக்ருதன செய்வது போலே, அந்த மாயமான் புரண்டுவிழும்படியாக அம்பெய்து விட்டான்" என்று கருத்தருளிச்செய்வர் அப்பிள்ளை. (ஏந்திழைக்காய் எய்ததுவும் தென்னிலங்கைக் கோன்வீழ) அப்பிராட்டியின் சிறையிருப்பைத் தவிர்ப்பதற்காக, தெற்குத்திக்கிலுள்ள (அல்லது அழகிய) இலங்கையின் அரசனை இராவணன் குட்டிச்சுவர்போலே சாய்ந்து விழும்படியாக அம்பெய்தான். 'பிராட்டிக்காக' என்னும் போது, மானகுட்டியோடு, இராவணனோடு வாசிபாராமல் அம்பை எய்வதே! என்று ஈடுபடுகிறார். 'ஏந்திழைக்கா' என்னும் பதம் நடுவிலிருந்துகொண்டு முன்னும் பின்னும் அந்வயிக்கிறது. இப்படி ராமாவதாரத்தில் அந்தரங்கை₃யான பிராட்டிக்குச் செய்த உபகாரம் மாத்திரமோ? அதற்கும் முன் திரிவிக்கிரமாவதாரத்தில் சேதனர் அனைவர்க்குமாகச செய்தவை அளவிடவொண்ணாதவையன்றோ என்கிறார் மேலே,—(முன் குறளுருவாய்ச் சென்று முயன்று நிலம் கைக்கொண்டான்) முன்னொரு காலத்திலே ஸ்ரீ வாமனனாக அவதரித்து மஹாபலியின் யாகபூமிக்குச்சென்று, தன் வடிவழகைக்

(சென்றிதயாதி₃) குறளுருவாய்ச்சென்று மூன்று லோகத்தை அடங்கலும் கைக்கொண்டான். 52.

53. முயன்று தொழுநெஞ்சே மூரிநீர் வேலை
இயன்றமரத் தாலிலையின் மேலால்—பயின்றங்கோர்
மண்ணலங்கொள் வெள்ளத்து மாயக் குழவியாய்
தண்ணலங்கல் மாலையான் தாள்.

மூரி நீர் வேலை—அலையும் நீரையுடைத்தான ஸமுத்ரத்திலே. இயன்ற—பொருந்தியுள்ள. ஆலமரத்து இலையின் மேலால்—ஆலமரத்தின் இலைமீது. பயின்று—நெடுங்காலம் சாய்ந்திருந்து. அங்கு—அங்கே. மண்—பூமியினுடைய. நலம்—நன்மையை. கொள்—அபஹரித்த. வெள்ளத்து—பிரளய வெள்ளத்திலே. ஓர் மாயம் குழவி ஆய்—ஆம்சர்யமான ஒரு குழந்தையாய். தண் அலங்கல் மாலையான்—குளிர்ந்து அசைகின்ற மாலையையுடையவனான எம்பெருமானுடைய. தாள்—திருவடிகளை. நெஞ்சே—நெஞ்சமே! முயன்று தொழு—முயற்சிகொண்டு வணங்கு.

---

சென்று வடிவுறைக் காட்டுவது. முக்₃த₄ஜல்பிதங்களைப் பண்ணுவதாய்க்கொண்டு மிகவும் உத்₃யோகி₃த்து பூ₄மியை வாங்கிக்கொண்டான். இதொரு செயல்களிருக்கும்படியே என்று வித்₃த₄ராய் அநுப₄விக்கிறார். "அம் மான் மறியை" என்று பாடமானபோது. அந்த மான் குட்டியை எய்தான் என்றுகக்கடவது. 52.

---

காட்டுவது, மழலைப் பேச்சுக்களைப் பேசுவது, சிறியவடிவைப் பெரிய வடிவாக்குவது, உலகங்களை அளப்பது முதலான பெரு முயற்சிகளைச் செய்து, தன்னுடையதான பூமியைத் தான் கைப்பற்றிக் கொண்டான். உடையவன் உடைமையை ரக்ஷிப்பதற்காக இவ் வண்ணமாகச்செய்த செயல்களுக்கு ஓரளவுண்டோ என்று ஈடுபட்டு அனுபவிக்கிறார். இப்பாசுரத்தால் இயற்கையான உபாயமான எம்பெருமான் சேதனலாபத்துக்காகச் செய்யும் பெரு முயற்சிகள் பேசப்பட்டன. 52.

அவ:—(முயன்று) துர்க்கடங்களைகடிப்பிக்க வல்லவன்; அவனை ஆஶ்ரயியென்கிருர்.

வ்யா:— (முயன்று தொழு நெஞ்சே) யத்நம் பண்ணி ஆஶ்ரயிக்கப்பார். (ஶ்ரிநீரித்யாதி) உலாவாநின்ற நீரை யுடைத்தான கடலிலே உண்டான மரத்தினுடைய *பல்லவமா

அவ:— ப்ரஸ்துதனுன ஶ்ரீவாமனனேடு போலியான வடதளஶாயியை ஆஶ்ரயி என்று தன் திருவுள்ளத்தைத் தூண்டுகிருர்.

உரை:— ஸஞ்சரியாநின்றுள்ள நீரையுடைத்தான ஸமுத்ரத்திலே பொருந்தியிருக்கிற ஆலமரத்தினுடைய பவனுயிருப்பதோரிலை மேலே சிரகாலம் சாய்ந்தருளி. அங்கே பூமியினுடைய. சேதனர்க்கு போக்யாதிகளாய் விநியோகப்படுகிற ஸாராம்ஶத்தை க்ரஸியாநின்றுள்ள ப்ரள

53. அவ:— ''நம்மைப்பெறுகைக்கு முற்கூறிய பெரு முயற்சிகளோடு நில்லாமல், மற்றும் செயற்கரிய செயல்களையும் அவன் செய்வானுன பின்பு, அவனை ஸ்வயம் ப்ரயோஜனமாக அநுபவிப்பதற்கு உன்னுலான முயற்சிகளையெல்லாம் நீ செய்யவேண்டாவோ'' என்று தன் நெஞ்சுக்கு உபதேசிக்கிருர்.

வ்யா:—(நெஞ்சே முயன்றுதொழு) எனக்கு வசப்பட்ட நெஞ்சே! நமக்காக அநாதி காலமாகப் பற்பல முயற்சிகளையும் செய்துவரும் அவன் திருவடிகளிலே நீயும் உன்னுலான முயற்சிகளைச் செய்து ஆஶ்ரயிக்கப்பார்ப்பாயாக. அவன் செய்த செயற்கரிய முயற்சியொன்றைச் சொல்லுகிருர் மேலே,—(ஶ்ரிநீர்வேலை. இயன்ற மரத். தாலிலையின் மேலால்) அலையெறியும் நீரை உடையதான கடலிலே பொருந்தியிருக்கும் ஆலமரத்தினுடைய அன்றே தளிர்த்த இலையின் மேலே. (பயின்று) நெடுங்காலம் சயனித்திருந்து. (அங்கு)

''பாலன் தனதுருவாய் ஏழுலகுண்டு ஆலிலையின்
மேலன்று நீ வளர்ந்த மெய்யென்பர்—ஆலன்று
வேலை நீர் உள்ளதோ விண்ணதோ மண்ணதோ
சோலை சூழ் குன்றெடுத்தாய் சொல்லு'' [முதல் திருவ-69]

* (பா) பவனுன

யிருப்பதொரு ஆலிலைமேலே பயின்று சேதநர்க்கு போ$_4$கோ$_3$ப கரண போ$_4$க$_3$ஸ்த$_2$ாந போ$_4$க்$_3$யமான பூ$_4$மியையழியாநின்ற வெள்ளத்திலே ஆஶ்சர்யமான பிள்ளையானவன். (தண்ண லங்கலித்யாதி$_3$) ஆலிலையின்மேலே கண்வளர்ந்தருளுகிறபோது பொகட்ட மாலையுந்தானுமாய்க் கிடந்தபடி. அவனுடைய திரு வடிகளை முயன்று தொழு நெஞ்சே. 53.

54. தாளால் சகட முதைத்துப் பகடுந்தி
கீளா மருதிடைபோய்க் கேழலாய்—மீளாது
மண்ணகலம் கீண்டங்கோர் மாதுகந்த மார்வற்கு
பெண்ணகலம் காதல் பெரிது.

---

யத்திலே, அக$_4$டித$_4$டநா ஸாமர்த்$_2$யமாகிற ஆஶ்சர்ய சேஷ்டிதத்தையுடைய முக்$_3$த$_4$ஶ்ஶ்வானவனாய், ஶ்ரம ஹரமாய் அசைந்துவராநின்றுள்ள திருமாலையாலே அலங்க்ருதனானவன் திருவடிகளை. நெஞ்சே! 'வரில் பொகடேன் கெடில் தேடேன்' என்றிருக்கையன்றிக்கே உத்ஸாஹித்துக்கொண்டு ஆஶ்ரயிக்கப்பார். அலங்கல்— அசைவு. 53.

---

என்று அறிவாளிகள் ஆஶ்சர்யப்படும் அவ்விடத்திலே. (மண் நலங்கொள் வெள்ளத்து) ஜீவர்களுக்கு போக்யமாகவும், போக உபகரணமாகவும், போகஸ்தானமாகவும் இருக்கும் சிறப்புகளை உடைய பூமியின் அச்சிறப்புகளையெல்லாம் அழிக்கின்ற ப்ரளய வெள்ளத்திலே. (ஓர் மாயக்குழவியாய்) தன் உடைமையான பூமி, வெள்ளத்தினால் அப்படி அழிக்கப்படாமல், சிறியதான தன் வயிற் றிலே பெரிதான பூமி முழுவதையும் வைத்து ரக்ஷித்த அக$_4$டிதக$_4$டநா ஸாமர்த்$_2$யத்தை உடைய ஆஶ்சர்யமான பச்சைக்குழந்தையாய். (தண்ணலங்கல் மாலையான்) அந்த நிலையிலும் குளிர்ந்து அசையா நிற்கும் மாலையாலே அலங்கரிக்கப்பெற்றவனுடைய. (தாள் முயன்று தொழு நெஞ்சே) நமக்காக இப்படிச் செயற்கரிய முயற்சியைச் செய்தவனுடைய திருவடிகளை, "வந்தால் வரட்டும், போனால் போகட்டும்" என்று அலட்சியமாயிராமல், பெரிய உத்ஸாஹத் துடன் நீ ஆஶ்ரயிக்கவேண்டாவோ நெஞ்சே என்று கீழோடே அந்வயம். அலங்கல் மாலை—அசையும் மாலை.. 53.

**சகடம்** — சகடாஸுரனை. **தாளால்** — திருவடியாலே. **உதைத்து**— உதைத்தொழித்தவனும். **பகடு**— (குவலயா பீடமென்கிற) யானையை. **உந்தி**—உதைத்துத் தள்ளின வனும். **கீளா**—பிளவில்லாத. **மருது இடை போய்**—மருத மரங்களின் நடுவே தவழ்ந்து சென்று. **கேழல் ஆய்** — வராஹரூபியாய்க்கொண்டு. **மீளாது**—தயங்கித் திரும்பாமல் சென்று. **அகலம் மண் கீண்டு**—அகன்ற பூமியை (அண்டச் சுவரில் நின்றும்) ஒட்டுவிடுவித்தெடுத்தவனும். **ஓர் மாது உகந்த மார்வற்கு**—ஒப்பற்ற பெரியபிராட்டியார் விரும்பி யிருக்கின்ற திருமார்பையுடையவனுமுள்ள எம்பெருமா னுக்கு. **பெண் அகலம்**—பூமிப்பிராட்டியினுடைய திருமேனி யிலே. **காதல்**-ஆசையானது. **பெரிது**-கரை புரண்டிருப்பது.

**வ்யா:**—(தாளால் சகடமுதைத்து)திருவடிகளாலே ஶகடா ஸுரநிரஸநம்பண்ணி. (பகடுந்தி) குவலயாபீடத்தைத்தள்ளி.

---

**அவ:**—வடதளஶாயிவ்ருத்தாந்தத்தோடொக்கச்சொல்ல லாமான க்ருஷ்ணவ்ருத்தாந்தத்தை அநுபவிக்கிறார்.

**உரை:**— அஸுராவிஷ்டமாய் மேல்விழுகிற ஶகடத்தை முலைவரவு தாழ்த்துச்சீறி நிமிர்த்த திருவடிகளாலே உதைத்துவிழவிட்டு "புகுவாய் நின்ற போதகம்" என்னும் படி வழியிலே நின்று நலியப்புக்க குவலயாபீடத்தைத் திருக்கையாலே உருண்டுவிழும்படி தள்ளிப்பொகட்டு.

---

**54. அவ:**—வடதளஶாயியான ஆலிலைக்கண்ணனின் அற்புதச் செயலை அநுஸந்தித்தவுடன், அதைப்போலே பல செயல்களைச் செய்த கண்ணனின் அருஞ்செயல்களை அனுபவிக்கிறார்.

**வ்யா:**—(தாளால் சகடமுதைத்து) அஸுராவேஶத்துடன் தன் மேல் விழுகின்ற சகடத்தை (வண்டியை), யசோதையின் முலைப் பால் குடிக்கும் நேரம் கடந்தமையினாலே கோபம்கொண்டு நிமிர்ந்த திருவடிகளாலே உதைத்து அழித்து. (பகடு உந்தி) "புகுவாய் நின்ற போதகம்" [பெரியதிரு6-5-6] என்னும்படி கம்ஸனுடைய வில்விழவுகாணக் கண்ணன் வந்தபோது உட்புகும் வாசலிலே தன்னை அழிக்கவந்த குவலயாபீடமென்னும் யானையைத் தன் திருக்கையாலே உருண்டு விழும்படி தள்ளி. பகடு—யானை

(கீளாமருதிடை போய்) இரண்டாய் அருகே நின்ற மருதூடே போய். (கீளா) பிளவாமருதிடைபோயென்றுமாம். (கேழலா யித்யாதி₃) ஶ்ரீவராஹரூபியாய் மீளாதபடிக்கீடாக பூமியைக்

---

இடைவெளியறப் பொருந்திநின்ற மருதுகளின் நடுவே அவை அடியற்று விழும்படி தவழ்ந்துகொண்டுபோய், ஶ்ரிய:பதியான தன் பெருமை பாராதே வராஹவேஷத்தை யுடையனாய்க்கொண்டு. வடிவை அழியமாறினவளவிலே மீளுகையின்றிக்கே அந்த ப்ரளயத்திலே முழுகி அண்ட பி₄த்தியிலே ஒட்டிக்கிடக்கிற அத்₃விதீயமாய்ப் பரப்பை யுடைத்தான பூமியை இடந்தெடுத்துக் கொண்டேறி * நாரீணாமுத்தமையான பெரியபிராட்டியார் "இறையுமகல கில்லேன்" என்று விரும்பும்படியான திருமார்வையுடைய வனுக்கு ஶ்ரீபூமிப்பிராட்டியுடைய அபரிச்சி₂ன்னபோ₄க்₃ய மான திருமேனியிலே ப்ரேமம் கரைபுரண்டிருந்தது.

---

(கீளாமருதிடை போய்) இடைவெள்ளியில்லாமல் ஒன்றோடொன்று சேர்ந்துநின்ற இரட்டை மருதமரங்களின நடுவே அவை வேரோடு விழும்படி கட்டிய உரலோடு தவழ்ந்துகொண்டுபோய்; கிழித்துக் கொண்டு மருதுகளிடையே போய்—எனறும் பொருள் கொள்ள லாம். (கேழலாய் மீளாது மண்ணகலம் கீண்டு) திருவுக்கும் திரு வாகிய தன்பெருமை பாராமல் மாசுடம்பில் நீர் வாரா மானமிலாப் பன்றியுருக்கொண்டு. அவ்வுருவுக்குத்தக்கசெயலைச் செய்யத் தயங்கி மீளாமல், அந்தப் பிரளய நீரிலே மூழ்கி அண்டச்சுவரிலே ஒட்டிக் கிட்க்கும் ஒப்பற்ற பரப்பையுடைய பூமியை தந்தத்தாலே குத்தி எடுத்துக்கொண்டு மேல் ஏறி. (ஓர் மாது உகந்த மார்வற்கு) 'நாரீணாம் உத்தமா வது₄:" [பெண்களுக்குள் ஒப்பற்றவள்]என்கிற படியே ஒப்பற்ற பெரிய பிராட்டியார் "இறையும் அகலகில்லேன்" [திருவாய் 6-10-10] என்று விரும்பும்படியான திருமார்பையுடைய வனுக்கு. ஒப்பற்ற பூமிப்பிராட்டியை அணைத்துக்கொண்ட திரு மார்பை உடையவனுக்கு என்றுமாம். (பெண்ணகலம் காதல் பெரிது) ஶ்ரீபூமிப்பிராட்டியுடைய அளவற்ற இனிமையுள்ள திருமேனியிலே அன்பு கரை புரண்டிருந்தது. அதனாலேயன்றோ அவளுடைய சரீரமான பூமியைத் தன் பெருமைக்குப் பொருந்தாத வடிவு கொண்டு எடுத்தான் என்கை.

கீண்டு ஶ்ரீபூமிப்பிராட்டியை உகந்த மார்பற்கு. (பெண்ணகலங் காதல் பெரிது) பிராட்டிபக்கலிலே ஸ்நேஹம் பெரிது. 54.

---

பகடு—யானை. கிளாமருதிடைபோய்—கிழித்துக்கொண்டு மருதுகளின் நடுவேபோய் என்னவுமாம். காதல்பெரிது—அவள் பக்கல் ப்ரேமத்தின் கு₄னத்தாலேயிறே அவள் அபி₄மானித்த பூமியை எடுத்ததென்கை. 54.

---

"கிடந்து இருந்து நின்று அளந்து கேழலாய்க்கீழ்ப்புக்கு
இடந்திடும் தன்னுள் கரக்கும் உமிழும்
தடம்பெரும்தோளாரத் தழுவும் பாரென்னும்
மடந்தையை மால் செய்கின்ற மால் ஆர்காண்பாரே"
[திருவாய் 2-8-7]

என்று இவளிடம் பலவாறாக ஈடுபடும்படியான மிகப்பெரிய காதலையுடையவன் என்றுமாம். அகலம்–திருமேனி. பெண்ணகலம்–பெண்ணிடம் என்றும் கொள்ளலாம். இங்கு "கேழலாய் மண்ணகலம் கீண்டு" என்றவிடத்தில் சொல்லப்பட்ட பூமிப் பிராட்டியைக் குறிக்கிறது. அன்றிக்கே "மாது உகந்த" என்று சொல்லப்பட்ட புருஷகாரபூ₄தையான பெரியபிராட்டியாரைக் குறிக்கிறது என்றுமாம். அப்பெரியபிராட்டியார் இவனை உகந்திருப்பது போலே இவனும் அவளிடம் பெருங்காதல் கொண்டிருப்பான் என்றபடி.

"அஸ்யா தே₃வ்யா மநஸ்தஸ்மிந் தஸ்ய சாஸ்யாம் ப்ரதிஷ்டி₂தம்"
[ரா-ஸு 15-52]

[இந்த தேவியின் மனம் அப்பெருமானிடமும், அவனுடைய மனம் இத்தேவியிடமும் நிலைநிற்கின்றது.] முதலான ப்ரமாணங்களை அநுஸந்திப்பது. (மாது உகந்த மார்வற்குப் பெண்ணகலம் காதல் பெரிது) அவளுடையது உகப்பு; இவனுடையது பெருங் காதல் என்றுமாம். "ஊர்த்₄வம் மாஸாந்ந ஜீவேயம்" [ரா-ஸு 38-67] [பெருமானைப் பிரிந்து ஒரு மாதத்திற்கு மேல் உயிர்வாழமாட்டேன்] என்று அவளும்,

"சிரம் ஜீவதி வைதே₃ஹீ யதி₃ மாஸம் த₄ரிஷ்யதி।
ந ஜீவேயம் க்ஷணமபி விநா தாமஸிதேக்ஷணாம் ॥" [ரா-ஸு 66-10

55. பெரிய வரைமார்வில் பேராரம் பூண்டு
கரிய முகிலிடை மின்போல—திரியுங்கால்
பாணொடுங்க வண்டறையும் பங்கயமே மற்றவன்றன்
நீணெடுங்கண் காட்டும் நிறம்.

பெரிய வரை மார்வில்—*பெரிய மலைபோன்ற திரு மார்பிலே,* பேர் ஆரம் பூண்டு—*பெரிய ஹாரத்தை அணிந்து கொண்டு,* திரியுங்கால்—*உலாவினால்,* கரிய முகிலிடை மின் போலே—*கார்மேகத்திலே மின்னல்மின்னினாற் போன்றிருக்கும்;* மற்று—*அன்றியும்;* அவன் தன்—*அப்பெருமானுடைய,* நீள் நெடு கண்—*நீண்ட பரந்த திருக்கண்களினுடைய,* நிறம்—*நிறத்தை,* பாண் ஒடுங்க வண்டு அறையும் பங்கயமே காட்டும்—*பாட்டென்று பேர்பெற்றவையெல்லாம் ஒடுங்கும்படியாக (மிகவினிமையாக) வண்டுகள் இருந்து பாடப்பெற்ற தாமரைப்பூவே காட்டித்தரும்.*

வ்யா:—(பெரியவரைமார்வில்) ஆரத்தால் பரிச்சேதிக்கப் போகாத மார்பில். (பேராரம்பூண்டு) மடித்துப்பூணவேண்டும்

---

அவ:— *இப்படி ஸ்ரீ பூமிப்பிராட்டிபக்கல் பெரும்பிச்சனவனுடைய அழகையநுபவிக்கிறார்.*

உரை:— *ஹாரத்தால் பரிச்சேதிக்கவொண்ணாதபடி பெரிய மலைபோலே பரந்திருக்கிற திருமார்விலே இருமடி*

---

[விதேஹ ராஜகுமாரி ஒரு மாதம் தரித்திருப்பாளாகில் நீண்ட நாள் வாழ்பவளேயாவாள். அவளைப் பிரிந்து யான் ஒரு கணமும் வாழ மாட்டேன்] என்று இவனும் கூறியதிலிருந்து அவளுடையதைக் காட்டிலும் இவனுடைய காதல் பெரிதென விளங்குகிறதல்லவோ. இப்படிச் சொன்ன பெருமாள் மேலும் வாழ்ந்துகொண்டுதானே இருந்தார்; இது சொன்ன வார்த்தைக்குப் பொருந்துமோ? எனில்: அவளைப் பெறுகைக்காக, உயிரிருந்தும் நடைபிணம் போலே வாழ்ந்துகொண்டிருந்தாராகையாலே குறையில்லை. 54.

55. அவ:— இப்படிப் பிராட்டிமாரிடம் பெருங்காதல் கொண்டவனுடைய அழகை அநுபவிக்கிறார்.

வ்யா:— (பெரிய வரை மார்வில்) ஹாரத்தாலே அளவுபடுத்த முடியாதபடி பெரிய மலைபோலே பரந்திருக்கும் திருமார்பிலே.

பெரியஹாரத்தைப்பூண்டு. (கரியமுகிலிடைமின்போல) மார்புக்கும்ஆரத்துக்கும் த்ருஷ்டாந்தம்.மேகத்திலேமின்னிஞற்போலே ஶ்யாமமான திருமார்பிலே ஹாரங்கிடந்தபடி. (தெரியுங்கால்) அநுஸந்திக்கும்போது "திரியுங்கால்" என்று பாடமுமாம். (பாணெடுங்கவித்யாதி) பாண்சாதியாக ஒடுங்கும்படி பாடா

யிட்டுச் சாத்தவேண்டும்படி பெருத்திருக்கிற திருவாரத்தைச் சாத்தி மநோஹரமாம்படி ஸஞ்சரிக்கப்புக்கால் காள்மேகத்திலே மின்கொடி பரந்தாற்போலே அத்யந்தாநுபாவ்யமாய். அதுக்குமேலே அவனுடைய மிக்க அழகையுடைத்தான திருக்கண்களினுடைய நிறத்தைப் பாட்டென்று பேர்பெற்றவையடங்கலும் லஜ்ஜித்து ஒடுங்கும்

(பேராரம் பூண்டு) இரண்டாக மடித்துச் சாத்தவேண்டும்படி நீண்டிருக்கும் ஹாரத்தைச் சாத்திக்கொண்டு. (கரிய முகிலிடை மின் போல) நீருண்ட கார்மேகத்திலே மின்னற்கொடி பரந்து சென்றாற்போலே, கறுத்த திருமேனியிலே வெளுத்த ஹாரம் கிடந்தது என்று கருத்து. (தெரியுங்கால்) இத்தகைய ஆபரண ஶோபையுடைய இவனுடைய அவயவஶோபையை அநுஸந்திக்கப் பார்த்தால்; இவனுடைய கண்ணழகே நம் நெஞ்சைக் கொள்ளை கொள்கின்றது என்கிருர் மேலே. (தெரியுங்கால்) என்பதைப் பாசுரத்தின் முதலிற்கொண்டு, 'இவனுடைய அழகை அநுஸந்திக்கப் பார்த்தால், ஆபரணஶோபையும், அவயவஶோபையும் இவ்வண்ணமிராநின்றன' என்றும் பொருள் கொள்ளலாம். (திரியுங்கால்) என்றும் பாடமுண்டு. பெரிய வரை மார்பில் பேராரம் பூண்டு அடியார் நெஞ்சை இழுப்பதற்காகத் திரிந்தானாகில், கரிய முகிலினிடையே மின்னல் பரந்து செல்வதுபோலே மிகவும் அநுபவிக்கத்தக்கதாயிருக்கும் என்று பொருள். (மற்று) அவனுடைய அவயவ சோபையையும் அநுஸந்திக்கப்புக்கால். (அவன்றன் நீணெடுங்கண் நிறம்) அவனுடைய கரியவாகிப்புடை பரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்ட அப்பெரியவாய கண்களின் நிறமே நம் நெஞ்சைக் கொள்ளை கொள்கின்றதாய், மற்ற அவயவங்களிலே செல்லவிடுகிறதில்லை என்று கருத்து. அந்நிறம் தான் எப்படியிருக்கிறது எனில்; (பாண் ஒடுங்க வண்டு அறையும் பங்கயமே காட்டும்) பாட்டுப்பாடுவதையே தொழிலாகக்கொண்ட பாணர் சாதி முழுவதுமே லஜ்ஜைகொண்டு ஒடுங்கும்படி அத்தனை

நின்ற வண்டையுடைத்தான பங்கயமே. (மற்றவனித்யாதி) அவனுடைய பரிச்சேதிக்கப்போகாத கண்ணினுடைய நிறத்தைக்காட்டா நின்றது. 55.

56. நிறம் வெளிது செய்து பசிது கரிதென்று
இறையுருவம் யாமறியோ மெண்ணில்—நிறைவுடைய
நாமங்கை தானும் நலம்புகழ வல்லளே
பூமங்கை கேள்வன் பொலிவு.

**இறை**—ஸர்வேஶ்வரனுடைய. **உருவம்**—திவ்யமங்கள விக்ரஹமானது. **நிறம்**—நிறத்தால். **வெளிது**—வெளுத்திருக்குமோ. (அல்லது) **செய்து**-சிவந்திருக்குமோ. (அல்லது) **பசிது**—பசுமையாயிருக்குமோ. (அல்லது) **கரிது**—கறுத்திருக்குமோ. **என்று**—எவ்வண்ணமாயிருக்குமென்று. **எண்ணில்**—ஆராயுமிடத்தில். **யாம் அறியோம்**—நாம் அறியமாட்டோம்: (இது நிற்க:). **நிறைவு உடைய**—ஜ்ஞானசக்திகளில் பூர்த்தியை உடையவளான **நாமங்கை தானும்**—ஸரஸ்வதி தேவியும். **பூ மங்கை கேள்வன்**—தாமரைப்

---

படிக்கீடாக வண்டுகளானவை ஸப்திக்கும்படியான நின்றுள்ள தாமரைப்பூவே காட்டாநிற்கும். ''தெரியுங்கால்'' என்று பாடமாகில் 'அவ்வழகை அநுஸந்திக்கும்போது' என்று பொருளாகக் கடவது. 55.

---

இனிமையாக வண்டுகள் ரீங்காரம் செய்யும் தாமரையே அவனுடைய திருக்கண்களின் நிறத்தைக் காட்டும். பாண்—ப்ாணர். அவறிக்கே, பாண் என்று பாட்டாய். பாட்டென்று பேர்பெற்றவையெல்லாம் எதிர்நிற்கமாட்டாமல் ஒடுங்கும்படி வண்டுகள் ரீங்காரம் செய்யும் தாமரை என்றும் பொருள்கொள்ளலாம். ஆக, 'நீலதோயத மத்யஸ்தா வித்யுல்லேகேவ பாஸ்வரா' [தை-நா] [நீலமுண்ட மின்னன்ன மேனிப் பெருமான்] என்றும் ''தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ'' [சாந் 1-7] [அப்பெருமானுக்கு ஸூர்யனால் மலர்ந்த தாமரை போன்ற இருகண்கள் உள] என்றும் வேதங்கள் ஈடுபட்ட பரணபோபையிலும், திருக்கண்ண ழகிலும் இவரும் ஆழங்காற்பட்டு இப்பாசுரம் அருளிச்செய்தாராயிற்று. 55.

பூவில் வாழும் பெரிய பிராட்டிக்குக் கணவனான எம்பெருமானுடைய. பொலிவு—நிறைவை. நலம் புகழ வல்லளே—நன்றாகப் புகழ சக்தியுடையவளோ? (அல்லள்)

அவ: —(நிறம்) என்னுடைய ஸ்வாமியினுடைய ரூபத்தை இன்னபடியிருக்குமென்று சொல்லப்போகாது. ப்ரயோஜகத்தைச் சொல்லுமித்தனை யென்கிறார்.

வ்யா: —(நிறமித்யாதி) இறையினுடைய வடிவானது வெளுப்பு. சிவப்பு. பசுமை. கறுப்பு. என்றெண்ணில் நாமறி

அவ:— இவனுடைய அழகை அநுபவித்துக் குமிழ் நீருண்ணுமித்தனையொழிய நம்மால் அளவிட்டுப் பேசவொண்ணாது கிடீரென்கிறார்.

உரை:— ஸர்வஸ்வாமியான ஸர்வேச்வரனுடைய திவ்யமங்கள விக்ரஹமானது, நிறத்தால் வெளுத்திருக்கும். சிவந்திருக்கும், பச்செசன்றிருக்கும், கறுத்திருக்குமென்று ஆராயுமிடத்தில் ஏகதேசமும் அறியமாட்டுகிறிலோம்.

56. அவ:—இவனுடைய அழகுக்கடலிலே அமிழ்ந்து ஆழ்ந்து போமித்தனையல்லது, நம்மால் அதை அளவிட்டுப் பேசமுடியாது; இதற்குக் காரணம் அவ்வழகு திருவுக்கும் திருவாகிய செல்வனின் அழகாயிருப்பதேயாகும் என்கிறார்.

வ்யா:-(இறை உருவம்) ஸர்வஸ்வாமியான ஸர்வேச்வரனுடைய திவ்யமங்கள விக்ரஹமானது. விக்ரஹமில்லை என்பாருடைய மிடற்றைப் பிடித்தாற்போலே பேசுகிறார். (நிறம் வெளிது செய்து பசிது கரிதென்று எண்ணில் யாமறியோம்) நிறத்தால் வெளுத்திருக்குமோ, சிவந்திருக்குமோ, பசுமையாயிருக்குமோ, கறுத்திருக்குமோ என்று ஆராய்ந்தால், அதில் ஒரு சிறிதும் யாம் அறியவல்லோமாகிறோமல்லோம். "நீலதோயத₃மத்₄யஸ்தா₂ வித்₃யுல்லேகே₂வ பா₄ஸ்வரா" [தை-நா] [நீலமேகமுட்கொண்ட மின்னற்கொடிபோல் பிரகாசிப்பது] "ஆதி₃த்யவர்ணம்" [பு. ஸூ] [சூரியன்போலே ஒளிவிடுவது] "தஸ்ய ஹைதஸ்ய புருஷஸ்ய ரூபம் யதா₂ மாஹாரஜநம் வாஸ:, யதா₂ பாண்ட்₃வாவிகம், யதே₂ந்த்₃ரகோ₃பா, யதா₂க்₃நியர்ச்சிர் யதா₂ புண்ட₃ரீகம் யதா₂ ஸக்ருத்₃வித்₃யுத்தம்" [ப்₃ருஹ 4-3]

யோம். (நிறையித்யாதி) நாமேமாட்டாதோமாகில் மதிப் புடையளான ஸரஸ்வதி அங்குத்தைக்குத் தரமாகப் புகழ

இது கிடக்க; எல்லாருமவனைப் பேசுமிடத்தில் தன்னைப் பற்றவேண்டும்படியுமாய் தான் உள்ளபடி அறிந்து பேசுகைக்கீடான ஜ்ஞாநஶக்த்யாதி₃ பூர்த்தியையுடையளான ஸரஸ்வதியானவளும் புஷ்பநிவாஸிநியான பெரியபிராட்டி

[அப்படிப்பட்ட இந்தப் புருஷனுடைய உருவமானது. பொன்னுடை போலேயும், வெள்ளைக்கம்பளம்போலேயும், இந்திரகோபப் புழு வைப்போலேயும், அக்நியின் ஒளியைப்போலேயும், தாமரையிலை யைப்போலேயும், ஒன்றாக மின்னும் மின்னலைப்போலேயும் நிற முள்ளது.] "வித்₃யுத: புருஷாத்" [தை-நா] [மின்னல்போன்ற உருவையுடைய புருஷனிடமிருந்து] "புருஷம் க்ருஷ்ணபிங்க₃ளம்" [தை-நா] [கறுப்பும் மஞ்சளும் கலந்த உருவமுடைய புருஷனை] "ஹிரண்மய புருஷ:" [சாந்] [பொன்மயமான புருஷன்] என்று வேதங்களும் இவனுடைய உருவத்திற்குப் பல நிறங்களோடு கூடிய பல பொருள்களை உவமையாக இட்டதன் மூலம் இவனுடைய திரு மேனியின் நிறத்தை இன்னபடியென்று அறியமுடியாது என்றன வன்றோ. திருமேனியின் நிறம் கார்மேக வண்ணமேயாயினும், பிராட்டி, பீதாம்பரம், ஶங்க₂சக்ரங்கள், திருவாப₄ரணங்கள் முதலானவற்றின் சேர்த்தியாலே பல நிறங்கொண்டதாய் வர்ணிக்க இயலாத அழகையுடையதாகின்றதன்றோ திருமேனி. "எண்ணில்" என்பதை மேலேயும் அந்வயிக்கலாம். (எண்ணில்) ஆராயப்புகுந் தால் (நிறைவுடைய நாமங்கைதானும் நலம் புகழவல்லளோ) நாம் அறியமாட்டோம் என்பது ஒருபுறமிருக்க. எல்லாரும் அவனைப் புகழ நினைக்கும்போது அதற்குத்தக்க வாக்₃வைப₄வத்தை வேண்டித் தன்னைப்பற்றவேண்டும்படியிருப்பவளாய், தான் அவனை உள்ளபடி அறிந்து பேசவல்ல அறிவு, சக்தி முதலான நிறைவுகளையுடைய வாக்₃ தே₃வியும் அவனுடைய ஸ்வரூபரூபகு₃ணாதி₃களின் பெருமையை அப் பெருமைக்குத்தக்கபடி நன்றாகப் புகழ வல்லவளோ? (நிறைவுடைய) என்றதற்கு 'என்னைக் காட்டிலும் நிறைவுடைய' என்று பொருள் கொண்டால், இவ்விடத்தில் 'நாமங்கை' என்னும் பதம் ஹயக்₃ரீவ பத்நியான வாக்₃தே₃வியைக் குறிக்கக்கடவது. ப்₃ரஹ்ம பத்நியான ஸரஸ்வதியைக் குறிப்பதாகக்கொண்டால், "அவனருளாலே காட் டக்கண்ட நாமே அவனுடைய பெருமையை அறியாதபோது, தன்னுடைய ஜ்ஞாநாதி₃பூர்த்தியைக்கொண்டு அவனை அறியப்

வல்லளோ? (பூமங்கைகேள்வன் பொலிவு) புகழப்போகாமை யென்னென்னில்: ஶ்ரிய:பதியுடைய ஸம்ருத்₃தி₄யைச் சிலவ ரால் பேசப்போமோ? 56.

57. பொலிந்திருண்ட கார்வானில் மின்னேபோல் தோன்றி
மலிந்து திருவிருந்த மார்வன் - பொலிந்த
கருடன் மேலகொண்ட கரியான் கழலே
தெருடன்மேல் கண்டாய் தெளி.

**திரு**—பிராட்டியானவள். **பொலிந்து இருண்ட கார்**—செறிந்து இருளையுடைத்தான கார் காலத்திலுண்டான. **வானில்**—மேகத்தில். **மின்னே போல் தோன்றி**—மின்னல் போல் பிரகாசித்து. **மலிந்து இருந்த மார்வன்**—பெருமையுடன் வாழப்பெற்ற திருமார்பையுடையனாய். **பொலிந்த கருடன் மேல் கொண்ட**—விளங்குகின்ற கருடனை மேலிருந்து கொண்டு நடத்தாநிற்கும். **கரியான்**—கருநிறப் பெருமானுடைய. **கழலே**—திருவடிகளே. **தெருள்தன் மேல்**—ஜ்ஞாநத்திற்கு மேற்பட்டதான பக்திக்கு விஷயமென்று, **தெளி கண்டாய்**—(நெஞ்சே!) தெளிந்திரு.

---

யார்க்கு வல்லப₄னானவனுடைய ஸ்வரூபரூபகு₃ணாதி₃களாலுண்டான ஸம்ருத்₃தி₄யை அங்குத்தைக்குத் தகுதியாம்படி நன்றாகப் புகழவல்லளோ? ஶ்ரிய:பதியினுடைய ஸம்ருத்₃தி₄யைச் சிலராலே சொல்லலாயிருந்ததோவென்றபடி. 56.

---

பார்க்கும் ஸரஸ்வதியானவள் அவனை நன்றாகப் புகழவல்லவளோ?'' என்று கருத்து. இப்படி எவராலும் அளவிடமுடியாமலிருப்பதற்குக் காரணமென்ன? எனில்: (பூமங்கைகேள்வன் பொலிவு) தாமரைப்பூவில் வாழும் பெரியபிராட்டியாருடைய நாத₂னுடைய ஸ்வரூபரூபகு₃ணாதி₃களால் வந்த பெருமையன்றோ அது. ஐஶ்வர்யங்களுக்கெல்லாம் அதி₄தே₃வதையான அவளுக்கும் தலைவனாயிருப்பவனுடைய பெருமையை எவராலும் அளவிட்டுப் பேச முடியாது என்று கருத்து. '' அப்ரமேயம் ஹி தத்தேஜ: யஸ்ய ஸா ஜநகாத்மஜா '' [ரா-ஆ 37-18] [ஜனகராஜன் திருமகளைத் தன்னுடைமையாகக் கொண்டவனின் பொலிவு அளவிடவொண்ணாததன்றோ] என்று மாரீசனும் அறுதியிட்டானன்றோ. 56.

அவ:—(பொலிந்து) கருடவாஹநனுடைய திருவடிகளை ஆஶ்ரயி யென்கிறது.

வ்யா:—(பொலிந்தித்யாதி) ஸம்ருத்₃த₄மாயிருண்ட கார் காலத்திலே மேகத்தின் மின்போலே தோற்றித் தண்ணீர் தண்ணீரென்றுரைசைப்படாநின்ற பெரியபிராட்டியாருகந்த திரு

---

அவ:— ஏவம்வித₄மான வைப₄வத்தையுடையவனை அநுஸந்தி₄க்குமிதுவே நமக்கும் உத்கர்ஷஹேதுவென்கிறார்.

உரை:— செறிந்து இருளையுடைத்தான கார்காலத்தில் மேகத்திலேயுண்டான மின்போலே ப்ரகாசித்துப் பெரிய பிராட்டியாரானவள் ஸ்வரூபரூபகு₃ணவி₄களால் வந்த வைப₄வத்தையுடையளாய்க்கொண்டு எழுந்தருளியிருக்கிற திருமார்வையுடையனாய். அதுக்குமேலே மிக்கவைப₄வத்தை

---

57. அவ:—இப்படிப்பட்ட பெருமையை உடையவனை அநுஸந்தி₄த்து, அவன் திருவடிகளை ஆஶ்ரயிப்பதே நமக்கும் சிறப்பு என்று நெஞ்சை நோக்கி உபதே₃ஶிக்கிறார்.

வ்யா:— (பொலிந்திருண்ட கார் வானில் மின்னே போல் தோன்றி) செறிந்து. இருளையுடைய கார்கால மேகத்தின் நடுவே ஒளிவிடும் மின்னல்போல் தோன்றி; இது 'திரு'வோடு அந்வயிக்கிறது. 'பொலிந்திருண்ட கார்மேகம் திருமார்வுக்கும். அதில் மின்னல் பிராட்டிக்கும் உவமை. இச்சேர்த்தியை "நீலதோயத₃மத்₄யஸ்தா₂ வித்₃யுல்லேகே₂வ ப₄ாஸ்வரா" [தை-நா] "நீலமுண்ட மின்னன்ன மேனிப் பெருமான்" [திருவிருத்தம் 29] என்று மறைகள் முழங்கினவன்றோ. (திரு மலிந்து இருந்த மார்பன்) பெரிய பிராட்டியார் ஸ்வரூபரூபகு₃ண விபூ₄திகளால் மற்றுள்ளாரைக் காட்டிலும் பெருமையுடையளாய் எழுந்தருளியிருந்த திருமார்வையுடையவன். பிராட்டியினுடைய ஸ்வரூபம் ப₄க₃வத்ஸ்வரூப நிரூபகத்வத்தால் உண்டான விபு₄த்வத்தையுடைத்தாயிருக்கையாலே ஜீவஸ்வரூபவிலக்ஷணமாய், இனிமையிலே விஞ்சியிருக்கையாலே பரமாத்ம ஸ்வரூபவிலக்ஷணமாயிருக்கும். அவளுடைய ரூபமும், குணமும் பரமாத்மாவான அவனுடையவற்றைக்காட்டிலுங்கூடப்

மார்பையுடையவன். (பொலிந்தித்யாதி) மஹாமேருவிலே ஒரு அஞ்ஜநகிரியிருந்தாற்போலே ஸ்ம்ருத்₃த₄ன பெரிய திருவடி மேலே இருந்தவனுடைய திருவடிகளிலேயுண்டான.

---

யுடையனைக்கொண்டு மேருவின்மேலே ஓரஞ்ஜனகி₃ரி யிருந்தாற்போலே பொற்கென்றிருக்கிற நிறத்தையுடைத்தாய். பெரியதிருவடியை மேற்கொண்டு நடத்தாநின்றுள்ள கறுத்த நிறத்தையுடைய ஸர்வேஶ்வரனுடைய திருவடிகளே கிடாய் உத்கர்ஷஹேதுவாக அநுஸந்தி₄க்கப்படும் ஸ்வபா₄வமெல்லாவற்றிலும் மேலான உத்கர்ஷம். நெஞ்சே! நீ இத்தை நன்றாக புத்திபண்ணு. ஶேஷபூ₄தனுக்கு ஸ்வரூபாநுகு₃ணமான உத்கர்ஷம் ஶேஷிதிருவடிகளை அறிகையிறே. "பொலிந்த கருடன்" என்று பாட₂மானபோது

---

பெருமையில் விஞ்சியிருக்கும் என்பது ஸர்வஶாஸ்த்ர ப்ரஸித்₃த₄ம். "ஶேஷித்வே பரம: புமாந்" [ஸ்ரீகுண 22] என்று உப₄யவிபூ₄தியையுடைய அவனும் தன்னை இவளுக்கு விபூ₄திபூ₄தனாக அபி₄மானிக்கையாலே இவளுடைய விபூ₄திவைப₄வமும் மற்றுள்ளாருடையதைக் காட்டிலும் விஞ்சியிருக்கும். இவற்றைத் திருவுள்ளம்பற்றி 'மலிந்து இருந்த' [பெருமையுடையவளாய் இருந்த] என்கிறார். (இருந்த மார்பன்) இப்படிப்பட்ட பெருமையையுடைய பெரியபிராட்டியாரும், "அகலகில்லேன் இறையும்" [திருவாய் 6-10-10] என்று அரைக்ஷணம் பிரியவும் மாட்டாதவளாய், பெருந்தாஹமெடுத்தவன் தண்ணீரை ஆசைப்படுவதுபோலே ஆசையுடன் நித்யவாஸம் செய்யும் திரு மார்வையுடையவன். (பொலிந்த கருடன் மேற்கொண்ட கரியான்) வேத₃ஸ்வரூபனாயிருக்கை. "தா₃ஸ: ஸகா₂ வாஹநம் ஆஸநம் த்₄வஜ: யஸ்தே விதாநம் வ்யஜநம்" [ஸ்தோ-ர-41] [அடியானாகவும், நண்பனாகவும், வாஹனமாகவும், ஆஸநமாகவும், கொடியாகவும், மேற்கட்டியாகவும், விசிறியாகவும் அடிமைசெய்யும் கருடன்] என்கிறபடியே பலவிதமாக அடிமை செய்கை முதலான பெருமைகளை உடையவனாய், செம்பொற்குன்றுபோன்ற திருமேனிப்பொலிவையும் உடையவனான கருடனாலே மேற்கொள்ளப்பட்ட கருநிறத்திருமேனியை உடையவன். (பொலிந்து கருடன் மேற்கொண்ட கரியான) மஹாமேருவின்மேலே, மைவரை இருந்தாற்போலே பெரிய திருவடியின் மேலே பெருமைதோற்ற எழுந்தருளியிருக்கும்

(தெருட்னித்யாதி) ஜ்ஞாநவிபாகையான ப₄க்தியை எல்லா வற்றுக்கும் மேலாகக் கொண்டு அநுஸந்தி. ஓலக்கவார்த்தை யென்றிராதேகொள். 57.

---

ஸம்ருத்₃த₄னை திருவடி என்று பொருளாகக்கடவது. (தெருடன்மேல் கண்டாய்) தெருடல்—தெருடப்படுமது. அநுஸந்தி₄க்கப்படுமவற்றில் இதுவே கிடாய் மேலான தென்றபடி. அன்றிக்கே, தெருளென்று—ஜ்ஞானமாய். ஜ்ஞானத்தில் மேலாயிருக்கிற ப₄க்தியைச் சொல்லுகிறதாய். ஜ்ஞானவிபாகரூபையான ப₄க்தியாலே கரியான் கழலைக் கண்டநுபவிக்கப்பெற்றாயே என்றுமாம். "முயன்று தொழு நெஞ்சே! என்கிற பாட்டிற்சொன்ன நெஞ்சே இங்கும் முன்னிலை. 57.

---

கரியவன் என்றும் பொருள்கொள்ளலாம். மேற்கொண்ட—மேல் இருந்த மேற்கொண்டு நடத்துகிற என்றுமாம். (கரியான் கழலே தெருள்தன்மேல் கண்டாய்) கரிய திருமேனிப்பெருமானுடைய திருவடிகளே ஞானத்தின் பக்குவநிலையான பக்திக்கு விஷயமாவது கிடாய்; தெருள்—ஞானம்; அதற்கு மேலிருப்பது அதன் முற்றிய நிலையான பக்தி. கரியான் கழலே பக்தியென்றது பக்திக்கு விஷயமாவது என்றபடி. ஸாமாநாதி₄கரண்யம் விஷயவிஷயி ப₄ாவத்தால் ஏற்படுவது. அன்றிக்கே, கரியான் கழலை பக்தியாலே கண்டு அநுபவிக்கப்பெற்றாய் என்றுமாம். அன்றிக்கே, (கரியான் கழல் தெருளே) கரியானுடைய திருவடிகளிலே உண்டான பக்தியையே; (தன்மேல் கண்டாய்) நம்முடைய செல்வங்களுக்கெல்லாம் மேலான செல்வங்கிடாய் என்றுமாம். இந்த நிர்வாஹத்தில் "ஶேமுஷீ ப₄க்திரூபா" [ஸ்ரீபாஷ்யமங்களம்] என்று எம்பெருமானார் அருளியபடியே ஜ்ஞாநவிஶேஷமான பக்தியையே 'தெருள்' என்னும் பதம் குறிக்கிறது. அன்றிக்கே, கரியானுடைய திருவடிகளையே சிறப்புடன் அநுஸந்திக்கத்தக்கவைகளுள் தலைசிறந்தது என்று அறிவாய் என்றுமாம். தெருடல் — தெருடப்படுமது. அநுஸந்திக்கப்படுவது. (நெஞ்சே! தெளி) நெஞ்சே! இதைப் பெருஞ்சபையில் பலருக்குச் சொல்லப்படும் வார்த்தையென்று நினையாமல், உனக்காகவே சொல்லப்படும் வார்த்தையென்று அறிவாயாக. 'முயன்று தொழு நெஞ்சே!' [53] என்ற பாட்டிலிருந்து 'நெஞ்சே!' என்னும் பதத்தை இங்கும் கூட்டிக்கொள்ளவேண்டும். 57

58. தெளிந்த சிலாதலத்தின் மேலிருந்த மந்தி
அளிந்த கடுவனையே நோக்கி—விளங்கிய
வெண்மதியம் தாவென்னும் வேங்கடமே மேலொருநாள்
மண்மதியில் கொண்டுகந்தான் வாழ்வு.

தெளிந்த—தெளிவுடையதாயிருக்கிற, சிலாதலத்தின் மேல் இருந்த மந்தி—ஸ்படிகப் பாறையின் மீது இருக்கும் பெண் குரங்கானது. அளிந்த கடுவனை நோக்கி—அன்புள்ள ஆண் குரங்கை நோக்கி. விளங்கிய வெண் மதியம் தா என்னும் வேங்கடம்—'பிரகாசிக்கின்ற வெளுத்த சந்திரனை(ப் பிடித்துக்) கொடு' என்று சொல்லும்படியிருக்கிற திரு வேங்கடம். மேல் ஒருநாள்—முன்னொரு காலத்தில். மண்—பூமியை. மதியின்–தனது புத்தி சாதுரியத்தினால். கொண்டு–(மாவலியிடத்தில்) பெற்றுக்கொண்டு. உகந்தான்—திரு வுள்ள முவந்த ஸர்வேஶ்வரன், வாழ்வு—வாழுமிடம்.

அவ:—(தெளிந்த) "अस्मिन् मया सार्धम्" (அஸ்மிந் மயா ஸார்த்₄ம்) என்று பிராட்டி செய்த செயலைத் திருமலையில் திர்யக்குக்களும் அநுவர்த்தியா நின்றதென்கிறார்.

வ்யா:– (தெளிந்தவித்யாதி) ஸ்ப₂டிகப்பாறையிலேயிருந்த பெண்குரங்கு. (அளிந்தவித்யாதி) தன்பக்கலிலே ஸ்நேஹித்த

---

அவ:— இப்படிப்பட்ட ஐஶ்வர்யத்தையுடையவன் கண்ணாலே காணலாம்படி திருமலையிலேவந்து நின்றானென்கிறார்.

உரை:— ஸ்ப₂டிகமான ஶிலாதலத்திலே தன் வேண்டப் பாடு தோற்றவிருந்த பெண் குரங்கானது. நம்மை ஏவிக்

---

58. அவ:—இப்படிப்பட்ட செல்வத்தை உடையவன். கண்ணாலே காணலாம்படி திருமலையிலே வந்து நின்றான் என்கிறார்.

வ்யா:—(தெளிந்த சிலாதலத்தின் மேலிருந்த மந்தி) தெளிவை யுடையதான ஸ்படிகக்கற்பாறையின் மேலிருந்த பெண்குரங்கு., (இருந்த) கடுவனையும் நியமிக்கவல்ல பெருமைதோற்ற வீற்றிருந்த.

ஆண்குரங்கை நோக்கி. (விளங்கியவித்யாதி) ஊடினால் ஒருக$_4$டகர் பொருந்தவிடவேண்டாதே தானே சந்த்ரனுடைய மேற்புறமாகையாலே களங்கமற்று உஜ்ஜ்வலமாயிருந்துள்ள சந்த்ரமண்டலத்தைத் தாவென்னாநின்றது. இழிந்துவாங்க வேண்டுங்காணும் திருமலையினுடைய உயர்த்தி. (மேலித்யாதி)

---

கார்யம் கொள்வது எப்போதோவென்று அவஸரப்ரதீக்ஷமாய், ஸ்நேஹமே ஒருவடிவு கொண்டாற்போலேயிருக்கிற ஆண்குரங்கை. ப்ரணய ரோஷம்மாறி ஸாத$_3$ரமாகக் குளிரப் பார்த்து, பார்க்கைக்குக் கண்ணாடி கொண்டுவந்து தாவென்பாரைப்போலே மேற்புறமாகையாலே களங்கமற்று ஒளிவிடுகிற பூர்ணசந்த்$_3$ரமண்டலத்தைத்தாவென்று சொல்லும்படி இருக்கிற திருவேங்கடமே பண்டொரு

---

(சிலாதலத்தின்...மந்தி) "அஸ்மிந் மயா ஸார்த்த$_4$ம் உத$_3$ாரசீலா, சிலாதலே பூர்வமுபோபவிஷ்டா" [ரா-ஸூ63-12] [உத$_3$ார சீலையான ஸீதை இந்தக்கற்பாறையிலே என்னோடுகூட வீற்றிருந்தாள்] என்று கோதாவரீதீரத்தில் பெருமாளும் பிராட்டியுமிருந்தாற்போலே திருமலையில் திர்யக்குகளான இவையிருக்கிறபடி. (அளிந்த கடுவனையே நோக்கி) 'நம்மை இவள் ஏவிக்கார்யம் கொள்வது எப்போதோ?' என்று ஸமயத்தை நோக்கி நிற்பதாய், அன்பே ஒரு வடிவுகொண்டாற்போலிருக்கும் ஆண்குரங்கை, நிலாவொளியாலேஊடல் தீர்ந்து அன்புடன் குளிரப்பார்த்து. (விளங்கிய வெண்மதியம் தா என்னும் வேங்கடமே) முகம் பார்ப்பதற்குக் காதலனைக் கண்ணாடி கேட்கும் காதலியைப்போலே, சந்திரனின் களங்கமற்ற மேற்புறமாகையாலே வெளுத்து விளங்காநிற்கும் சந்திரனை 'எடுத்துத் தா' என்று கேளாநிற்கும் வேங்கடமே, திருமலையின் உயர்த்தியை நோக்கும்போது சந்திரனும் கீழேயிருப்பதாய், களங்கமுள்ள சந்திரனின் கீழ்ப்பகுதி கண்ணுக்கு இலக்காகாமல், களங்கமற்ற மேற்பகுதியே குரங்கின் கண்ணுக்கு இலக்காகிறது என்று 'விளங்கிய வெண்' என்னும் விசேஷணங்களாலே உணர்த்துகிறார். மேலிருந்த மந்தி கீழேயிருக்கும் சந்திரனாகிற கண்ணாடியை எடுத்துத் தா என்கிறது. இது பரமபதத்திலிருக்கும் புருஷகாரபூ$_4$தையான பிராட்டி. த$_4$வளஸ்வரூபமான சந்திரன்போலே சுத்தமான ப$_3$த்$_3$த$_4$ ஜீவாத்மாவைக் கைதூக்கிவிடும்படி எம்பெருமானைக் கேட்பதுபோலே இராநின்றது என்று கருத்து. (வேங்கடமே) மந்தியோடுகூடிய கடுவன்

பண்டொருநாள் பூமியை மதியாலேகொண்டு அலப்₄யலாப₄ம் பெற்றுனாய் உகந்தவனுடைய ஐஶ்வர்யம். 58.

59 வாழும் வகையறிந்தேன் மைபோல் நெடுவரைவாய்
தாழு மருவிபோல் தார்கிடப்ப—சூழும்
திருமா மணிவண்ணன் செங்கண்மால் எங்கள்
பெருமா னடிசேரப் பெற்று.

**மை போல் நெடு வரை வாய்**—*மைபோன்று இருண்டு பெரிதான மலையிடத்திலே.* **தாழும்**—*இருபக்கமும் தாழப் பாய்கின்ற.* **அருவி போல்**—*அருவிபோலே.* **தார் கிடப்ப**—*மாலை சாத்தப்பட்டிருக்க (அதிலே ஈடுபட்டு).* **சூழும்**—*ஒருகணமும் விட்டுப்பிரியாமல் வளைத்துக் கொண்டிருக்கிற.* **திரு**—*பிராட்டியையுடையவனும்.* **மா மணி வண்ணன்**—*நீலமணிபோன்ற நிறத்தையுடையவனும்.* **செம் கண் மால்**—

---

*காலத்திலே பூமியைத் தன் பு₃த்₃தி₄யோக₃த்தாலே மஹாபலியிருப்புக்குப் பொருந்தும்படி அர்த்தித்து வாங்கிக் கொண்டு அலப்₄யலாப₄ம் பெற்றாற்போலே உகந்த ஸர்வேஶ்வரன் தனக்கு ஸர்வஸம்பத்துமாக நினைத்திருக்கும் தேஶம்.* 58.

---

சிலாதலத்திலிருப்பதுபோலே அலர்மேல் மங்கையுறைமார்பன் திருமலையிலே இருக்கிறபடி. (மேல் ஒருநாள் மதியில் மண் கொண்டுகந்தான் வாழ்வு) முன் ஒரு காலத்தில், "மதியினால் குறள்மாணாய் உலகிரந்த கள்வற்கு" [திருவாய்1-4-3] என்கிறபடியே தன் புத்தி சாதுர்யத்தினாலே யாசகனாகி, தேவேந்திரனுக்காக இந்த பூமியை மாவலியிடம் மூவடி மண் வேண்டிப்பெற்றுப் பெறாப் பேறு பெற்றாற்போலே உகந்த ஸர்வேஶ்வரன் தனக்கு எல்லாச் செல்வமுமாக நினைத்திருக்கும் இடம். தேவேந்திரனுக்காக இப்பாடுபட்டவன் திருமலையில் மந்திக்குச் சந்திரனைத்தரும் கடுவனைப்போலே புருஷகாரபூதையான பிராட்டிக்காக ஜீவர்களை அவசியம் கைதூக்கி விடுவான் என்று கருத்து. ஆக, திருமலையில் ஒரு இயற்கைக் காட்சியை வருணிப்பதுபோல் காணும் இப்பாட்டு, திருமலையப்பனின் ப்ரேமபாரதந்த்ரியத்தையும், பிராட்டியின் புருஷகாரக்ருத்யம் என்றும் பழுதுபடாது என்பதையும் காட்டித்தருகிறது. 58.

சிவந்த திருக்கண்களையுடைய பெரியோனுமான. எங்கள் பெருமான்—எம்பெருமானுடைய. அடி—திருவடிகளை. சேர பெற்று—அணுகப்பெற்றதனால். வாழும் வகை அறிந்தேன்—உய்யும்வழி தெரிந்தவனானேன்.

வ்யா:—(வாழும் வகையறிந்தேன்) ஸர்வேஶ்வரனைப்பற்றி ஆத்மாவுக்கு வகுத்த ஸம்பத்தென்று வ்யுத்பத்திபண்ணினேன். (மைபோலித்யாதி) அஞ்ஜநகிரியிலே பாயாநின்ற அருவிபோல்

அவ:—"கரியான் கழலே தெருடன் மேற்கண்டாய்" என்று திருவுள்ளத்தைக்குறித்து அநுபவிக்கச்சொல்லி, திருவடிகளைத்தாம் கிட்டி அநுபவித்தபடியை அருளிச் செய்கிறார்.

உரை:—அஞ்ஜனம்போலே இருண்ட நிறத்தையுடைத்தான பெரியமலையிடத்திலே இரண்டருகும் தாழ விழுந்து பாயாநின்ற அருவிபோலே திருத்தோள்களில் சாத்தின

59. அவ:—இத்தகைய புருஷகாரபூதையோடு கூடிய உபாயபூதனை எம்பெருமானுடைய திருவடிகளை அடைகையாகிய வாழும் வகையை அறிந்தேன் என்கிறார்.

வ்யா:—(எங்கள் பெருமான் அடிசேரப்பெற்று வாழும் வகையறிந்தேன்) எங்களுடைய ஸ்வாமியின் திருவடிகளைப்பற்றி, அதுவே வாழும் வகை என அறிந்தேனானேன். இப்படி உபாயமாகில் ஆரோக்யோபாயமான கஷாயங்களைப்போலே கசப்பாயிருக்குமோ? எனில், பாலே மருந்தானாற்போலே மிக இனியதாயிருக்கும் என்கிறார் மேலே.—(மைபோல் நெடுவரைவாய் தாழும் அருவிபோல் தார் கிடப்ப) அஞ்ஜனம் (மை) போலே இருண்ட நிறத்தை உடைய பெரியமலையின் சிகரத்தில் நின்றும், இருபுறமும் தாழ்ந்து விழுந்து பாயாநிற்கும் அருவிபோலே திருத்தோளில் சாத்தின திருமாலை மிக அழகுடன் ஒளிவிடாநிற்க.

"உபெளயதிவ்யோம்நி ப்ருதூக் பதேதாம்
ஆகாஶகங்காப்பயஸ: ப்ரவாஹௌ ।
தேநோபமீயேத தமாலநீலம்
ஆமுக்தமுக்தாலதம் அஸ்ய வக்ஷ:॥" [சிசுபாலவதம்-]

திருமார்பிலே சாத்தின தோள்மாலை கிடப்ப. (சூழுந்திருமா மணிவண்ணன்) அதிலே ஆசைப்பட்டாநின்ற பெரியபிராட்டி யாரையுடையனாய். ஶ்ரமஹரமான வடிவையுடையவன். (செங்கண்மால்) ஈஶ்வரத்வத்தை ஸூசிப்பியாநின்ற கண் களை உடையவன். (எங்களித்யாதி) போ₄க்₃யபூ₄தனாய் என்னை யுடையவனாய்வகுத்தவனுடைய திருவடிகளைக் கிட்டப்பெற்று. "बुद्धिनाशात् प्रणश्यति" (பு₃த்₃தி₄நாஶாத் ப்ரணஶ்யதி) என்று ஶப்₃ த₃ாதி₃களைப்பற்றாதே வாழும் ப்ரகாரமறிந்தேன். 59.

---

திருமாலையானது அநுப₄ாவ்யமாய்க்கிடந்து ப்ரகாஶிக்க. இவ்வொப்பனையழகைக்கண்டு "இறையுமகலகில்லேன்" என்று சூழ்ந்துபோந்து அங்கே நித்யவாஸம்பண்ணுகிற பெரியபிராட்டியாரையுடையனாய். பெருவிலையனான. நீல ரத்னம்போலே ஶ்ரமஹரமான திருமேனியையுடையனுமாய், இவ்வைஶ்வர்ய ஸூசகமான சிவந்த திருக்கண்களையுடைய ஸர்வாதி₄கனாய் ஆஶ்ரிதரான எங்களுக்கு வகுத்த ஶேஷியு மான ஸர்வேஶ்வரனுடைய திருவடிகளைக் கிட்டப்பெற்று ஸ்வரூபாநுரூபமாக வாழும் ப்ரகாரத்தைஅறிந்தேன். 59.

---

[நீலவானில் இரண்டு ஆகாஶகங்கைகள் பெருக்கெடுத்ததுபோலே யிராநின்றது முத்துமாலையோடுகூடிய நீலவண்ணக்கண்ணனின் மார்பு] என்று மாக₄கவி பாடியதும் இங்கு குறிக்கொள்ளத்தக்கது. (சூழும் திருமாமணிவண்ணன்) தோளும், தோள்மாலையுமான இவ் வழகிலே ஆழங்காற்பட்டு. "அகலகில்லேன் இறையும்" [திருவாய் 6-10-10] என்று வளைத்துக்கொண்டு, அத்திருமார்பிலேயே நித்ய வாஸம் செய்யும் பிராட்டியை உடையவனாய், விலைமதிப்பற்ற நீலரத்னம் போன்று கண்டார் களைப்பை ஆற்றும் நிறமுடைய திருமேனியை உடையவன். (செங்கண்மால்) இச்செல்வத்தையெல் லாம் காட்டித்தரும் திருக்கண்களையுடைய ஸர்வேஶ்வரன். இப்படிப் பெரியவனாகில் அணுகத்தகாதவனாகவும் கிட்ட அரியவனாயுமிருப் பானோ? எனில்: (எங்கள் பெருமான்) அடியாரான எங்களுக்கு அடை யத்தக்க தலைவனாய், திருமலையிலே எளியனாய் நிற்கும் ஸ்வாமியி னுடைய. (அடிசேரப் பெற்று வாழும் வகையறிந்தேன்) என்று அந்வயம். "த்₄யாயதோ விஷயாந் பும்ஸ:...பு₃த்₃தி₄நாஶாத் ப்ரண ஶ்யதி" [கீதை2-63] என்று கீதையில் சொன்னபடியே ஶப்₃த₃ாதி₃ விஷயங்களைப்பற்றித் தாழ்ச்சியடையாமல், இவ்விஷயத்தைப்பற்றி வாழும் வகையறிந்தேன். 60

60. பெற்றம பிணைமருதம் பேய்முலை மாச்சகடம்
முற்றக்காத தூடும்பா யுண்டுதைத்து—கற்றுக்
குணிலை விளங்கனிக்குக் கொண்டெறிந்தான் வெற்றிப்
பணிலம் வாய் வைத்துகந்தான் பண்டு.

பெற்றம்—*பசுக்களை*, முற்ற காத்து—*ஒன்று தப்பாமல் ரக்ஷித்தவனையும்*. பிணை மருதம் ஊடு போய்—*பிணைந்திருந்த (இரட்டை) மருத மரங்களினிடையே சென்றவனையும்*. பேய் முலை உண்டு—*பூதனையின் முலையை உண்டவனையும்*. மா சகடம் உதைத்து—*பெரிய சகடத்தை உதைத்தொழித்தவனையும்*, கற்று குணிலை கொண்டு—*கன்றாகிய எறிதடியைக்கொண்டு*. விளங்கனிக்கு எறிந்தான்—*விளாம் பழத்தின்மீது எறிந்தவனையுமுள்ள எம்பெருமான்*. பண்டு—*முன் ஒரு காலத்தில்*. வெற்றி பணிலம்—*ஜயத்தை இயல்வாயுடைய சங்கை*. வாய் வைத்து—*வாயிலே வைத்து ஊதி*. உகந்தான்—*மகிழ்ந்தான்*.

அவ:—(பெற்றம்) ப்ரதிப₃ந்த₄கங்கள் போனாலன்றோ வாழும்படியாவதென்னில்; அவன் தானே ப்ரதிப₃ந்த₄கங்களைப் போக்குமென்கிறது.

---

அவ:—*உமக்கு வாழ்விலே அந்வயமாகில், அதுக்கு ப்ரதிப₃ந்த₄கமானவை செய்தது என்? என்ன*. அதுபோக்குகை அவனுக்கு ப₄ரமாய் விட்டது என்கிறார்.

---

60. அவ:—*நீர் வாழும் வகை அறிந்தீராகில், அவ்வாழ்வுக்குத் தடையானவை என்னாயிற்று? எனில்: தடைகளைப் போக்குவதையே இயல்வாகவுடைய அவனுக்கே அது பொறுப்பாயிற்று என்கிறார்*.

வ்யா:—(பெற்றம்...உதைத்து) "அரவமடல் வேழம்" [முதல் திருவ54] என்ற பாசுரம்போலே இவ்விரண்டடிகளும் நிரனிறையணி (யதா₂ஸங்க்₂யாலங்காரம்) ஆகையாலே, "பெற்றம் முற்றக் காத்து, பிணைமருதம் ஊடுபோய், பேய்முலை உண்டு, மாச்சகடம் உதைத்து" என்று கூட்டிப் பொருள்கொள்ளவேண்டும். (பெற்றம்

(பெற்றமித்யாதி₃) இது நிரல்நிறை. கன்ருகிய எறிகருவி யைக்கொண்டு விளங்கனிக்குக் கொண்டெறிந்தவன். வெற் றியை விளைப்பதான ஸ்ரீபாஞ்சஜந்யத்தை வாயிலே வைத்து உகந்தவன். பண்டுண்டான ப்ரதிப₃ந்த₄ங்களேயெல்லாம் போக்கும். 60.

---

**உரை:**—பசுக்களை ஒன்ருெழியாமல் ரக்ஷித்து, ஒன்ருே டொன்று பிணைந்து நிர்விவரமாய் நின்ற மருதுகளை ஊடறுத்துக்கொண்டுபோய் விழவிட்டு. பூதனையுடைய முலையை அவள் பிணமாய் விழும்படி உண்டு. ப₄யாவஹ மான பெரிய சகடத்தை முறிந்து விழும்படி உதைத்துப் பொகட்டு கன்ருகிய எறிகருவியைக்கொண்டு விளாவி னுடைய பழத்துக்கு எறிந்து இரண்டையும் முடித்துப் பொகட்டவன்—முன்பொரு நாளிலே. விஜயத்தை உண் டாக்குமதான ஸ்ரீபாஞ்சஜன்யத்தை ப்ரதிபக்ஷம் நஶிக்கும் படி திருப்பவளத்திலே மடுத்தூதி, விரோதி₄போகப் பெற்ருேமென்று உகந்தருளினவன் கிடீர். 60.

---

(முற்றக்காத்து) பசுக்களை ஒன்ருெழியாமல் ரக்ஷித்து. இந்திர னுடைய சிலாவர்ஷம் முதலான பற்பல பேராபத்துக்களில் ஒன்றுக்கு ஒரு சிறிதும் நோவுவாராதபடி பசுக்களைப் பரிபூர்ண மாக ரக்ஷித்து. (பிணைமருதம் ஊடு போய்) ஒன்ருேடொன்று பிணைந்து இடைவெளியற்றிருந்த இரட்டை மருதமரங்களை ஊடறுத்துக்கொண்டுபோய் விழவிட்டுப் பொய்ம்மாய மருதான அசுரரை அழித்து. (பேய்முலை உண்டு) தன்னை அழிக்க விஷந் தடவிய முலையோடு வந்த பூதனையின் முலையை அவள் பிணமாய் விழும்படி அவளுடைய உயிரோடு உண்டு (மாச்சகடம் உதைத்து) பயங்கரமான பெரிய சகடத்தைத் தாயே பிள்ளைக்கு ரக்ஷகமாய் வைத்துப்போன த₃ஶையில், அஸுராவேஶம்கொண்ட அதுவே அவனை நலியவர, முலை வரவு தாழ்த்துச் சீறி உதைத்த உதை யிலே அச்சகடாஸுரன் கட்டுக்குலைந்து விழும்படி உதைத்து. (கற்றுக்குணிலை விளங்கனிக்குக் கொண்டெறிந்தான்) இரு அஸு ரர்கள் தன்னை நலிவதற்காக ஒருவன் கன்ருகவும் மற்ருெருவன் விளாம்பழமாகவும் இருந்துகொண்டு தீங்கிழைக்கத் தருணம் பார்த்திருக்க, கன்றை எறிதடியாகக்கொண்டு விளாம்பழத்தின்மேல்

61. பண்டெல்லாம் வேங்கடம் பாற்கடல் வைகுந்தம்
கொண்டங் குறைவாற்குக் கோயில்போல்—வண்டு
வளங்கிளரும் நீள்சோலை வண்பூங் கடிகை
இளங்குமரன்றன் விண்ணகர்.

வைகுந்தம்–பரமபதத்தை. கொணடு—இருப்பிடமாகக் கொண்டு. அங்கு—அவ்விடத்திலே. உறைவாற்கு—நித்ய வாஸம்பண்ணும் எம்பெருமானுக்கு. பால் கடல்—திருப் பாற்கடலும். வேங்கடம்—திருமலையும். வண்டு வளம் கிளரும் நீள் சோலை—வண்டுகளின் கூட்டம் மிக்கிருக்கிற பரந்த சோலைகளையுடைத்தாய். வண்—அழகியதாய். பூ— இனியதான. கடிகை—திருக்கடிகைக் குன்றும். இள குமரன் தன் விண்ணகர்—இளமையோடு கூடிய யௌவநமுடைய அவன் தன்னதென்று அபிமானிக்கும் திருவிண்ணகரும். (ஆகிய இத்திருப்பதிகளெல்லாம்) பண்டு எல்லாம்—என்னை விஷயீகரிப்பதற்கு முன்பெல்லாம். கோயில் போல்—கோயில் களாக இருந்தன போலும். [இப்போதோவென்னில். என்னெஞ்ச மொன்றே அவனுக்குக் கோயிலாயிருக்கிறது என்று கருத்து.]

---

அடித்து இரண்டையும் அழியச்செய்தவன். (பண்டு) அஸுர ராக்ஷஸர்களோடு போர்புரியும்போது என்னவுமாம். பாரத யுத்த காலத்தில் என்னவுமாம்.(வெற்றிப்பணிலம் வாய்வைத்து உகந்தான்) எதிரிகளை ஜயிப்பதையே இயல்வாகக்கொண்ட படைபோர்புக்கு முழங்கும் அப்பாஞ்சசன்னியத்தை, எதிரிகள் அழியும்படி வாயிலே வைத்து ஊதி, 'எதிரிகள் அழியப்பெற்றோம்' என்று உகந்தருளின வனன்றோ. இவ்வண்ணமாக, விரோதி நிரஸனத்தையே இயல் வாகக்கொண்டவனுகையாலே, என்னுடைய தடைகளை நீக்குவது அவனுக்கே பொறுப்பு என்று கருத்து. 60.

61. அவ:—என் தடைகளைப் போக்குவதோடல்லாமல், என் நெஞ்சிலே புகுவதற்காகப் பரமபதத்திலிருந்துதிருப்பாற்கடலுக்கும், திருமலை முதலான திருப்பதிகளுக்கும் எழுந்தருளி நெடுங்காலமாக நித்யவாஸம் செய்கின்றான் என்கிறார்.

அவ:--(பண்டெல்லாமித்யாதி₃)ப்ரதிபூ₃ந்த₄கங்களைப்போக்கு மனவேயோ? பரமபதத்தைக்கலவிருக்கையாக உடையவன் ஸம்ஸாரததிலே உகந்தருளின திருப்பதிகளைத் தனக்கிருப்பிட மாகக் கொள்ளுகிறது ஆஶ்ரிதார்த்த₂மாகவன்றோ வென்கிறார்.

வ்யா:—(வேங்கடம் பாற்கடல் வைகுந்தம் கொண்டங் குறைவார்க்கு) "திருமால் வைகுந்தமே தண்திருவேங்கடமே" என்று பரமபதத்தோபாதியாகத் திருமலையைச் சொல்லுகிறது. வைகுந்தங்கோயிலாகக்கொண்டு அங்குறைவார்க்கு வேங்கடம். பாற்கடல். வண்டுவளங்கிளரும் நீள்சோலை வண்பூங்

அவ:—ப்ரதிப₃ந்த₄கங்களைப் போக்குகிறவளவன்றிக்கே, பரமபதத்தைக் கலவிருக்கையாக உடையவன் இங்கே ஆஶ்ரிதார்த்த₂மாக வந்து திருப்பதிகளிலே ஸந்நிஹித ருளுன் என்கிறார்.

உரை:—ஸ்ரீவைகுண்ட₂த்தைத் தனக்கு அபி₄மதவாஸ ஸ்த₂ானமாகக்கொண்டு. அங்கே ஆதரித்து நித்யவாஸம் பண்ணுகிற வைப₄வத்தையுடையவர்க்கு. திருப்பாற்கடலும் திருமலையும். வண்டுகளினுடைய திரள் மிக்கு வாராநின் றுள்ள பரப்பையுடைய சோலையையுடைத்தாய் அழகிய தாய். போ₄க்₃யமான திருக்கடிகையும். நித்யயௌவன ஸ்வ பா₄வனுவனல் தன்னது என்று ஆதரித்து வர்த்திக்கிற

வ்யா:—(வைகுந்தம் கொண்டு அங்கு உறைவார்க்கு) ஸ்ரீ வைகுண்டத்தைத் தனக்கு இனிய வாஸஸ்த₂ானமாகக்கொண்டு அங்கே உகப்புடன் நித்யவாஸம் பண்ணுகிற பெருமையை உடைய வனுக்கு. (பாற்கடல் வேங்கடம்) வ்யூஹஸ்த₂ானமான திருப்பாற் கடலும், அங்கிருந்து வந்து நின்ற திருமலையும். (வைகுந்தம் பாற் கடல் வேங்கடம்) "திருப்பாற்கடலே என்தலையே திருமால் வைகுந்தமே தண் திருவேங்கடமே" [திருவாய்10-7-8] என்று ஆழ்வாரைப்போலே பர வ்யூஹங்களோடு திருமலையைச் சேர்த்துச் சொல்லுகிறார். (வண்டு வளங்கிளரும் நீள்சோலை வண் பூங்கடிகை) வண்டுகளுடைய கூட்டம் மிகுந்துள்ள பரந்த சோலைகளை உடைய தாய், அழகியதாய், இனியதான திருக்கடிகையும். (இளங்குமரன் றன்

கடிகை. விண்ணகரான இவை இளங்குமரனை தனக்கு இப்போது கோயில்போல். 61.

62. விண்ணகரம் வெஃகா விரிதிரைநீர் வேங்கடம்
மண்ணகம் மாமாட வேளுக்கை - மண்ணகத்த
தென்குடந்தை தேனார் திருவரங்கம் தென்கோட்டி
தன் குடங்கை நீரேற்றான் தாழ்வு.

---

இவ்விவை திவ்யதேசங்கள் என்னை விஷயீகரிப்பதற்கு முன்னெல்லாம் உகப்புடனே எழுந்தருளியிருக்கிற கோயில்கள்போலே இருந்தன; என்னை அங்கீகரித்தபின்பு அவ்வவ தேசங்களைக் காட்டிலும் என்னுடைய ஹ்ருதயமே அவனுக்கு வாஸஸ்தானமாய்விட்டது என்று கருத்து. 61.

---

விண்ணகர்) "யுவாகுமார:" [ரிக்வேதம் ] என்கிறபடியே என்றும் இளகிப் பதித்த யௌவனத்தை இயல்வாக உடையவனுடைய திருவிண்ணகரும். 'விண்ணகர்' என்று திருவிண்ணகராகிய திவ்யதேசத்தைக் குறிப்பதாகப் பெரியவாச்சான்பிள்ளையின் நிர்வாஹம். 'தன் விண்ணகர்' என்று எம்பெருமான் தன்னுடையதாக ஆதரிக்கும் முற்கூறிய திவ்யதேசங்களைச் சொல்லுவதாக அப்பிள்ளை நிர்வாஹம். (பண்டெல்லாம் கோயில் போல்) என நெஞ்சை அடைவதற்கு முன்னெல்லாம் முற்கூறிய திவ்யதேசங்கள் உகப்புடன் எழுந்தருளியிருக்கும் கோயில்களாயிருந்தன. என் நெஞ்சை அடைந்தபின்பு அந்த திவ்யதேசங்களைக் காட்டிலும் என் நெஞ்சமே அவனுக்கு உகந்து வாழும் இடமாய்விட்டது என்று கருத்து.

'நிற்பதும் ஓர் வெற்பகத்(து) இருப்பும் விண் கிடப்பதும்
நற்பெருந் திரைக்கடலுள் நானிலாத முன்னெலாம
அற்புதன் அனந்தசயனன் ஆதிபூதன் மாதவன்
நிற்பதும் இருப்பதும் கிடப்பதும் என்னெஞ்சுளே. [65]

எனனும் திருச்சந்தவிருத்தப் பாசுரம் இங்கு அனுஸந்திக்கத் தக்கது. 61.

**விண்ணகரம்**—திருவிண்ணகரம். **வெஃகா**—திரு வெஃகா. **விரி திரை நீர் வேங்கடம்**—விரிந்து அலையெறிகிற நீர்வளம் பொருந்திய திருமலை. **மண் நகரம்**—பூமியில் இதுவே நகரம் எனத்தக்க. **மா மாடம் வேளுக்கை**—பெரிய மாடங்களையுடைத்தான திருவேளுக்கை. **மண் அகத்த தென் குடந்தை**—பூமிக்கு நடுநாயகமான அழகிய திருக்குடந்தை. **தேன் ஆர் திரு அரங்கம்**—தேன் வெள்ள மிடுகிற (சோலைகள் சூழ்ந்த) திருவரங்கமாநகர். **தென் கோட்டி**—தென திருக்கோட்டியூர். (ஆகிய இத்திருப்பதிகள்) **தன் குடங்கை**—தனது உள்ளங்கையாலே. **நீர் ஏற்றான்**—(மாவலிபக்கல்) தானநீர் பெற்ற பெருமான். **தாழ்வு**—நீர்மையுடன் தங்குமிடங்களாம்.

அவ:—(விண்ணகரம்) கேவலம் ஸம்ஸாரத்திலே நின்ற மாத்ரமோ? பரமபதத்திலிருப்பு மனிச்சுக்காய். தாழ்ச்சியோடே கூட இருப்பது உகந்தருளின தேசத்திலேயன்றோ என்கிறார்.

வ்யா:—(விண்ணகரமித்யாதி) விண்ணகரம். வெஃகா. விரிதிரைநீர் வேங்கடம். திருமலையென்றால ஒரு விசேஷண

---

அவ:—ஆஶ்ரித ரக்ஷணத்துக்கு ஏகாந்தஸ்தலங்களென்று உகந்தருளின நிலங்களைச் சால விரும்பியிருக்கும் என்கிறார்.

உரை:—திருவிண்ணகரமும். திருவெஃகாவும். விஸ்தீர்ணமாய் அலையெறிகிற ஜலஸம்ருத்தியையுடைத்தான

---

62. அவ:—தம் நெஞ்சை அடைந்தபின்பும், மற்றும் பல அடியார்களை ரக்ஷிப்பதற்கு உறுப்பாக, திவ்யதேசங்களை மிகவும் விரும்பியிருக்கிறான் என்கிறார்.

வ்யா:—(விண்ணகரம்) ஒப்பிலியப்பன் ஸன்னிதி என்று வழங்கப்படும் திருவிண்ணகர். (வெஃகா) யதோக்தகாரி ஸன்னிதி என்று வழங்கப்படும் காஞ்சியிலுள்ள திருவெஃகா. (விரிதிரை நீர் வேங்கடம்) விரிந்து அலையெறிகிற நீர் வளம் பொருந்திய திருமலை.

ஏஹிதமாகச் சொல்லமாட்டார். (மண்ணகரமித்யாதி$_3$) போ$_4$க்$_3$யதை குறைவற்ற கோயில். (தன் குடங்கையித்யாதி$_3$) மஹா பலிபக்கலிலே தன்னுடைமை பெறுகைக்கு அர்த்தி$_2$த்வம் தோற்றும்படி அர்த்தி$_2$யாய் நின்றாற்போலே. உகந்தருளின தே$_3$ஶங்களிலே தாழ்வு தோற்றும்படி நின்றான். 62.

---

*திருமலையும். பூ$_4$மியிலேயுண்டாய். வைகுந்தமாநகர்போலே அவனுக்கு போ$_4$க$_3$ஸ்த$_2$ானமான தி$_3$வ்யநக$_3$ரமாய். பெரிய மாடங்களை யுடைத்தான திருவேளுக்கையும். பூ$_4$மியிலே உண்டான அழகிய திருக்குடந்தையும், தேன்வெள்ளமிடுகிற திருச்சோலையையுடைத்தான திருவரங்கப் பெருநகரும். தெற்குத்திக்கிலே உண்டான திருக்கோட்டியூருமாகிற இவ்விவ திருப்பதிகள் தன்னுடைய சிறுங்கித்த திருக் கையிலே நீரேற்றுத் தன் உடைமை பெறுகைக்கு அர்த்தி$_2$ யானவன். இந்த ஆத்மாக்களைப் பெறுகைக்கு அர்த்தி$_2$யாய்க் கொண்டு அவதாரங்கள்போலே தீர்க்$_4$கம் ப்ரஸாதியாதே எப்போதும் உதவும்படி கால்தாழ்ந்து வர்த்திக்கிற தே$_3$ஶங்களாயிருக்கும். 62.*

---

திருமலையில் ஈடுபாட்டாலே 'விரிதிரை நீர்' என்று விசேஷணமிடுகிறார். பின்னுள்ள திருப்பதிகளுக்கும் இது பொருந்தும. (மண்ணகரம் மா மாட வேளுக்கை) 'மண்ணில் இதுபோல நகர் இல்லை' இம மண்ணிலே வைகுந்தமாநகர்போல் அவனுக்கு இனிய நகர்' என அனைவரும் கொண்டாடும்படியாய். பெரிய மாடங்களை உடையதாய். ஆளரி (நரசிங்கன்) எழுந்தருளியிருக்கும் கச்சித் திருவேளுக்கை. (மண்ணகத்த தென் குடந்தை) பூமிக்கு நடுநாயகமாயுள்ள அழகிய திருக்குடந்தை. (தேனார் இருவரங்கம) தேன் வெள்ளமிடுகிற சோலைகளை உடைய திருவரங்கப்பெருநகரம். (தென் கோட்டி) தெற்கு திக்கிலே உள்ள அல்லது அழகிய திருக்கோட்டியூர். இத்திருப்பதிகளுக்கு உள்ள ஏற்றத்தைக் கடைசி அடியிலே அருளுகிறார்.— (தன குடங்கை நீரேற்றான் தாழ்வு) தன்னுடைய குவிக்கப்பட்ட திருக்கையிலே மாவலியிடம் நீரேற்று, தன் உடைமையைப் பெறுகைக்குத்தான யாசகனானவன். இந்த ஆத்மாக்களைப் பெறுகைக்கு யாசகனாய்க்கொண்டு, விப$_4$வாவதாரங்கள்போலே

63. தாழ்சடையும் நீண்முடியு மொண்மழுவும் சக்கரமும்
சூழரவும் பொன்னாணும் தோன்றுமால்—சூழும்
திரண்டருவி பாயும திருமலைமே லெந்தைக்கு
இரண்டுருவு மொன்றா யிசைந்து.

**தாழ் சடையும்**—*தாழக் கட்டின ஜடையும்.* **நீள் முடியும்**—*நீண்ட திருமுடியும்.* **ஒண் மழுவும்**—*அழகிய மழுவென்னும் ஆயுதமும்.* **சக்கரமும்**—*திருவாழிப்படையும்.* **சூழ் அரவும்**—*சுற்றிலும் அணிந்துள்ள நாகாபரணமும்.* **பொன் நாணும்**—*பொன்னரைநாணுமாய்க்கொண்டு.* **இரண்டு உருவும்**—*ஒன்றுக்கொன்று சேராச் சேர்த்தியாயிருக்கிற (சங்கரநாராயணர்களின்) இரண்டு வடிவும்.* **சூழும் திரண்டு அருவி பாயும் திருமலைமேல் எந்தைக்கு**—*நாற்புறமும் திரள் திரளாக அருவிகள் பெருகப்பெற்ற திருமலைமேலுள்ள அப்பனுக்கு.* **ஒன்று ஆய் இசைந்து தோன்றும்**—*ஒரு வடிவமாய்ப் பொருந்தி விளங்காநின்றது;* **ஆல்**—*ஆச்சரியம்!.*

---

ஒரு காலத்தில் முடிவடையாமல், எப்போதும் உதவும்படி ஸௌலப்யம் ஸௌசீல்யம் முதலான நீர்மைக்குணங்களை வெளிப்படுத்திக்கொண்டு வாழ்கிற திவ்யதேசங்களாயிருக்கும். "தன் குடங்கை நீரேற்றான் தாழ்வு" என்றது, மாவலியிடம் யாசகனாகப்போகும் போது காட்டிய ஸௌலப்யம், ஸௌசீல்யம் முதலான நீர்மைக் குணங்களெல்லாம் இத்திருப்பதிகளிலும் தோற்றும் என்கைக்காக. இக்கருத்தினாலேயே விபவாவதாரங்களை ஒருகாலத்திலே பெருக்கெடுத்து ஓடும் காட்டாறுகளாகவும், அர்ச்சாவதாரங்களை அவற்றிலே தேங்கின மடுக்களாகவும் சொல்லுவது. ஆக, இவ்விரண்டு பாட்டுக்களாலும் பரத்வமே பிரகாசிக்கும் பரமபதத்திற் காட்டிலும், சேதனரை உய்விக்கைக்காகத் தாழ்ச்சியோடேகூட எழுந்தருளியிருக்கும் திருப்பதிகளே மிகவும் உத்தேஶ்யம் என்றாராயிற்று. 62.

63. அவ:—திரிவிக்ரமாவதாரத்திலுள்ள நீர்மைக்குணங்கள் திருப்பதிகளிலே தோற்றும் என்றார் சென்ற பாசுரத்தில். சங்கரநாராயணாவதாரம் என்னும் விபவாவதாரத்திலே காட்டிய ஸௌசீல்யத்தைத் திருமலையில் வெளிப்படுத்திக்கொண்டிருக்கிறான் என்கிறார் இப்பாசுரத்தில்.

அவ:— ( தாழ்சடையும் ) ஸித்₃த₄மான வேஷத்தையும் ஸாத₄கமான வேஷத்தையும் ஒக்க தரிப்பதே! இதொரு ஶீலவத்தையே! என்கிறார்.

---

அவ:— இத்தேசங்களிலே வந்து ஸந்நிஹிதனானவன் ஶீலாதிக₄னாயிருக்குமவன்கிடீர்! என்கிறார்.

---

வ்யா:— "ப₃ஹுதா₄ விஜாயதே" [பு. ஸூ] "ப₃ஹூநி மே வ்யதீதாநி ஜந்மாநி" [கீதை] என்கிறபடியே எம்பெருமான் எடுத்த பலவகைப் பிறப்புக்களில், நரங்கலந்த சிங்கம்போலே அரன் கலந்த அரியுருவாய்த் தோன்றிய சங்கர நாராயணாவதாரம் என்ப தொன்றும் சாஸ்திரங்களில் பேசப்படுகிறது. அரனுடைய உருவ மும் தன் உருவமேயென்றும், ஆயினும் அது அப்ரதா₄நமா யிருப்பது என்றும் காட்டுவதற்காக ப்ரதா₄நமான வலப்புறம் முழுவதும் ஸர்வேஶ்வரனை அரியின் லக்ஷணங்களோடும், அப்ரதா₄நமான இடப்புறம் முழுவதும் அவனைக்குறித்துத் தவம் புரியும் அரனுக்குரிய லக்ஷணங்களோடும் ஆவிர்ப்ப₄வித்த அவ தாரமே சங்கரநாராயணாவதாரம் என்பதாகும். இப்படி ஸித்₃த₄ ரூபத்தையும், ஸாத₄கரூபத்தையும் ஒருருவில் காட்டியதுபோலே, "மந்தி பாய் வடவேங்கடமாமலை வானவர்கள் சந்திசெய்ய நின்றான்" [அமல னாதி 3] என்றாப்போலே, வானரங்களுக்கும் வானவர்களுக்கும் ஒக்க முகங்கொடுக்கும் நீர்மையைக் காட்டிக்கொண்டு திருமலையில் எழுந் தருளியிருக்கிறான் என்கிறார் இப்பாசுரத்தில். இப்பாசுரத்தைக் கண்டு, திருவேங்கடமுடையானுக்கு சங்கரநாராயணரூபம் உண்டோ எனச் சிலர் ஐயமுறுவர். திருவேங்கடமுடையானின் திருமேனியில் நீண்முடியும், சக்கரமும், பொன்னாணும் உள்ளனவே யொழிய, தாழ்சடையும், ஒண்மழுவும், சூழரவும் இல்லை. சென்ற பாசுரத்தில் பல திவ்யதேசங்களை எடுத்து, இவையெல்லாம் தண் குடங்கை நீரேற்றவனை திரிவிக்கிரமன் தாழநிற்குமிடங்கள் என்று கூறியதால் அந்த திவ்யதேசங்களில் பகவான் திரிவிக்கிரம ரூபியாயிருக்கிறான் என்று ஏற்படாது; திரிவிக்கிரமாவதாரத்திற் காட்டிய நீர்மைக்குணத்தை அத்திவ்யதேசங்கள் அனைத்திலும் காட்டிக்கொண்டிருக்கிறான் என்றே ஏற்படும். அதுபோலவே "திருமலைமேல் எந்தைக்கு சங்கரநாராயணரூபம் பொருந்தியிருக் கிறது" என்றதனால், சங்கரநாராயணாவதாரத்தில் காட்டிய

வ்யா:— (தாழ்சடையித்யாதி) சூழத்திரண்டருவி பாயா நின்ற திருமலைமேலே நிற்கிற என்னுடைய ஸ்வாமிக்கு.

உரை:— ஸாத₄கத்வஸூசகமாம்படி தாழக்கட்டின ஜடையும், ஆதி₄ராஜ்யஸூசகமான ஓக்கத்தையுடைத்தான திருவபி₄ஷேகமும், கொலைக்குப் பரிகரமான அழகிய மழுவும், ரக்ஷணத்துக்குப் பரிகரமான * அருளார் திருச்சக்கரமும், ப₄யாவஹமாம்படி இடையிலே சூழப்பட்ட

ஸௌசீல்யம் திருவேங்கடமுடையானுக்கும் உள்ளது என்றே பொருள்படும். ஆகையால், இப்பாசுரத்தைக்கொண்டு சிவவிஷ்ணு ஸாம்யவாதம் செய்யவும் சிறிதும் இடமில்லை. "மாமலரான் வார்சடையான் என்று இவர்கட்கு எண்ணத்தான் ஆமோ இமை" [97] என்ற பாசுரத்தில் பிரமன் உருத்திரன் முதலானோர்க்குத் திருமாலைச் சற்றேனும் நெஞ்சால் நினைக்கவும் இயலாது என்று முழங்கியிருக்கும இவ்வாழ்வார் 'அரியும் அரனும் ஒன்று' எனனும் அப₃த்₃த₄க்கொள்கையை ஆதரிக்கச் சிறிதும் இடமில்லை என்பதை நடுநிலையாளர்கள் குறிக்கொள்வார்களாக. இனி, பாசுரப்பொருளைக் காண்போம். (தாழ்சடையும் நீண்முடியும்) 'இவன் மற்றொருவனைக் குறித்துத் தவம் புரிபவன்' என்று காட்டித்தரும் சிவனுடைய தாழக்கட்டின ஜடையை இடப்புறத்திலும், 'ஆதி₄ராஜ்யமதி₄கம் பு₄வநாநாம் ஈஶ தே பிஶுநயந் கில மௌளி:" [வரதராஜஸ்தவம் 25] [எல்லாவுலகிற்கும் சக்கரவர்த்தி நீயே என்பதை உன் கிரீடம் கோட்சொல்லாநிற்கிறது] என்கிறபடியே ஸர்வலோக ஏகசக்ராதி₄பதி இவனே எனக்காட்டித்தரும் ஹரியின் உயர்ந்த கிரீடத்தை வலப்புறத்திலும் உடையவனாயிருக்கிறான் சங்கரநாராயணமூர்த்தி. (ஒண்மழுவும் சக்கரமும்) தன் பிள்ளையென்றும், ஸஹோத₃ரனை மஹர்ஷியென்றும் பாராதே பிள்ளையாரைக் கழுத்தை வெட்டவும், பிருகுமஹர்ஷியின் கழுத்தைக் குறித்து ஓங்கவும் உபயோகிக்கப்பட்ட காணக்கண்கூசும், சிவனுடைய மழுவாயுதத்தை இடப்புறத்திலும், ஆஸுரஸ்வபா₄வர்களையே தலையறுப்பதாய், நல்லோர்களை ரக்ஷிப்பதையே இயல்பாக உடையதான அரியினுடைய * அருளார் திருச்சக்கரத்தை வலப்புறத்திலும் உடையவனாயிருக்கிறான் சங்கரநாராயணமூர்த்தி.

* திருவிருத்தம் 33.

( இரண்டுருவும் ஒன்றாயிசைந்து ) ஒன்று ஸாத₄கமாய்.

ஸர்ப்பமும் ஸ்வர்ணமேகலாப்படி திருவரையிலே சாத்தின பொன்னரை நாணுமாய்க்கொண்டு ஒன்றுக் கொன்று சேராச்சேர்த்தியாயிருக்கிற இரண்டுவடிவும்— நாலுபாடும் சூழ்ந்துகொண்டு இரண்டு அருவிகள்வந்து

'ஒண்மழுவும் சக்கரமும்' என்று ஹரிசின்னத்தை உடைய பாதியில் சக்கரமிருப்பதாகக் கூறுகையாலே சங்கரநாராயணமூர்த்தியின் ப்ரத₄ாநபா₄கமான வலதுபா₄கமும் சக்கரமேந்திய ஹரியின் வலது பாகமே என விளங்குகிறது. இது பாகம் ஹரியின் பாகமா யிருந்ததாகில் சங்கத்தையன்றோ கூறியிருக்கவேண்டும். சிவனடியார் களிற்சேர்ந்த காரைக்காலம்மையும், "ஒருபால் உலகளந்த மாயவ னும் மற்றை ஒருபால் உமையவளாம்" என்னும் பாடலில், அர்த்த₄ நாரீஸ்வரனின் இடப்பாகத்தை உமையினுடையதாகவும், மற்றைப் பக்கமான வலப்பாகத்தை உலகளந்த மாயவனுடையதாகவும் கூறியிருப்பது குறிக்கொள்ளத்தக்கது. "அர்த்த₄ம் த₃ாநவவைரிணா கி₃ரிஜயாப்யர்த்த₄ம் ஹரஸ்யாஹ்ருதம்" [அரனுடைய உடலில் பாதி அஸுரரைவென்றவானவிஷ்ணுவாலும், மற்றைப்பாதி பர்வதராஜ குமாரியாலும் எடுத்துக்கொள்ளப்பட்டுவிட்டது.] என்று சிவபக்த வடமொழிக் கவியும் இப்படியே சொன்னான். "வலத்தனன் திரிபுரம் எரித்தவன்" [திருவாய் 1 3 9] முதலானவிடங்களில் ஆழ்வார்கள் எம்பெருமான் ஒரு காலத்தில் சிவனுக்குத் தன் திருமேனியின் வலப்புறத்தில் ஒரு மூலையில் இடங்கொடுத்த நீர்மையைப் பேசுகை யால் விரோத₄மில்லை. (சூழும் பொன்னும்) காண்பவர் பயப்படும்படி பாம்பை உடலெங்கும் சுற்றிக்கொண்டிருக்கும் பாம்பாட்டியைப்போலே, அரனின் இடையிலே சூழ்ந்துகொண்டி ருக்கும் பாம்பை இடப்புறத்திலும், 'ஸர்வேஸ்வரன் இவனே' என்று காட்டுவதாய், ஹரியின் திருவரையில் சாத்தப்பெற்றிருக்கும் பொன்னரைநாணை வலப்புறத்திலும் உடையவனாயிருக்கிறான் சங்கரநாராயணமூர்த்தி. (தோன்றுமால்) இப்படி ஸாத₄கமாகவும், ஸித்₃த₄மாகவும் ஒன்றுக்கொன்று சேராச்சேர்த்தியாயிருக்கும் இவ் விரண்டுருவங்களும் சங்கரநாராயணனுக்கு ஓருருவிலேயே தோன் றும்; இது ஆச்சரியமன்றோ! இனி, இவ்வடிவம் சைவர்கள் கூறுவதுபோல் சிவனுடையதன்று, ப்ரத₄ாநபா₄க₃த்தில் காணப் படும் திருமாலுடையதே என்கிறார் அடுத்தபடியாக,—'(சூழும்

ஒன்று ஸித்₃த₄மானால் சேராச்சேர்த்தியாயிருக்குமோவென்னில்; இரண்டுருவுமிசைந்து ஒன்றாயிருக்கும்–பொருந்தியிருக்கும்.63.

64. இசைந்த வரவமும் வெற்புங் கடலும்
பசைந்தங் கமுது படுப்ப—அசைந்து
கடைந்த வருத்தமோ கச்சி வெஃகாவில்
கிடந்திருந்து நின்றதுவு மங்கு.

---

குதியாநிற்கிற திருமலைமேலே நித்யவாஸம் பண்ணுநின்றுள்ள என் ஸ்வாமியானவனுக்குத் தன் திருமேனிக்கும் இதுக்கும் ஒரு வாசி தோற்றாதபடி பொருந்தி ஒரு கோவையாய்க்கொண்டு தோற்றாநின்றது. கெட்டேன்! இதொரு ஶீலாதிஶயமிருக்கும்படியே! என்று ஆஶ்சர்யப்படுகிறார். 63.

---

திரண்டருவி பாயும் திருமலைமேல் எந்தைக்கு) நாற்புறமும் சூழ்ந்துகொண்டு திரண்டு அருவிகள்வந்து கீழே குதியாநிற்கும் திருமலைமேலே நித்யவாஸம் செய்யும் திருமாலான திருவேங்கடவனே இப்படி ஒருகாலத்தில் சங்கரநாராயணமூர்த்தியாக அவதரித்தான்: இப்போதும் அந்நீர்மை தோற்ற வானரங்களுக்கும். வானவர்களுக்கும் ஒக்கமுகங்கொடுத்து நிற்கிறான் என்று கருத்து. சிவன் அவதாரங்கள் எடுப்பதில்லையென்பதையும், திருமாலே பலபடியான அவதாரங்களை எடுப்பவன் என்பதையும், சங்கரநாராயணமூர்த்தியின் வலப்புறம் சக்கரம் தாங்கிய திருமாலுடையதாயிருப்பதையும் காண்போர்க்கு இவ்வவதாரம் திருமாலுடையதேயொழிய சிவனுடையதல்ல என விளங்கும். இனி, நரங்கலந்த சிங்கம்போலே இப்படி ஒன்றுக்கொன்று சேராச்சேர்த்தியான சங்கரநாராயணரூபங்கள் இம்மூர்த்திக்கு மிகவும் பொருந்தியிருக்கும்படியைக்கண்டு ஆச்சர்யப்படுகிறார் பாசுரத்தின் கடைசி அடியாலே,— (இரண்டுருவும் ஒன்றாய் இசைந்து) ஸர்வேஶ்வர சிந்ஹமுடைய வலப்புறத்துக்கும், பி₄க்ஷு₂சிந்ஹமுடைய இடப்புறத்துக்கும் ஒரு வேறுபாடு தோற்றாதபடி, இரண்டு உருவும் ஒரு கோவையாகப் பொருந்தித் தோற்றாநின்றது. ஐயோ! இப்படியும் ஒரு நீர்மையிருப்பதே! என்று ஆஶ்சர்யப்படுகிறார். 'தோன்றுமால்' என்ற பதத்தில் 'ஆல்' என்பது ஆச்சரியத்தைக் காட்டுவது. ஆக, சங்கரநாராயணாவதாரத்தின் ஸௌஶீல்யம். திருமலையெம்பெருமானிடம் விளங்கா நிற்கிறது என்றாராயிற்று. 63.

இசைந்த—கடைகயிறாகக் கொள்வதற்குத் தகுதியுடைய. அரவமும்—வாஸுகிநாகமும். (இசைந்த)—மத்தாக நாட்டுவதற்குத் தகுதியுடைய. வெற்பும்—மந்தரபர்வதமும். (இசைந்த)—தாழியாக்குவதற்குத் தகுதியுடைய. கடலும்—கடலும் ( ஆகிய இம்மூன்றையும் ). பசைந்து—ஒன்றோடொன்று ஸம்பந்தப்படுத்தி. அங்கு — அந்தக் கடலிலே. அமுது—அம்ருதமானது. படுப்ப—உண்டாம்படி. அசைந்து—அலைச்சல்பட்டு. கடைந்த வருத்தமோ—கடைந்ததனாலுண்டான ஆயாஸத்தினாலோ, கச்சி—காஞ்சீபுரத்திலுள்ள. வெஃகாவில்—திருவெஃகாவில், கிடந்து—சயனித்துக் கொண்டும். அங்கு— அக்காஞ்சீபுரத்தில் (திருப்பாடகத்தில்). இருந்து—வீற்றிருந்தும் ( திருவூரகத்தில் ). நின்றதுவும்—நின்று கொண்டும் இருப்பது?

வ்யா:— ( இசைந்தவித்யாதி ) கடலிலே ஒருமலையை நட்டு. ஒருபாம்பைச்சுற்றிக் கடையாநின்றால் சேராச்சேர்த்தியாயிருக்குமோவென்றால்.— ( இசைந்த ) தன்னில் பொருந்தி

அவ:— ப்ரயோஜநாந்தரபரர்க்கும் உடம்புநோவக் கடல்கடைந்து அபேக்ஷித ஸம்விதாநம் பண்ணுமவன் ஸ்வபாவத்தை அநுஸந்தித்து அவனுக்குப் பரிகிறார்.

உரை:—கடைகயிறாகக் கொள்ளுகைக்குத் தகுதியான வாஸுகியும். மத்தாக நாட்டுகைக்குத் தகுதியான மந்தர

64. அவ:— சங்கரநாராயணரூபத்தின் நீர்மையை அநுபவித்தார் கீழ்ப்பாசுரத்தில்; க்ஷுத்ரபலனை விரும்பிய தேவர்களுக்கும் உடம்புநோவக் கடல்கடைந்து, அவர்கள் விரும்பியது கொடுத்தவனின் நீர்மையை அநுஸந்தித்து அவனுக்குப் பரிகிறார்.

வ்யா:— கடலிலே ஒரு மலையை மத்தாக நாட்டி, ஒரு பாம்பைக் கடைகயிறாகச் சுற்றிக் கடைவதெனில் சேராச்சேர்த்தியாயிருக்குமோ? எனில்: இல்லையில்லை; ஒவ்வொன்றும் மிகப் பொருந்தியிருந்தது என்கிறார் முதலடியிலே; 'இசைந்த' என்ற பதம் முதலடியில் மேலுள்ள மூன்று பதங்களோடும் அந்வயிக்கிறது; (இசைந்த அரவமும்) கடைகயிறாகக் கொள்வதற்குத் தகுதியுடைய வாஸுகி எனும் பாம்பும். ( இசைந்த ...ற்பும் ) மத்தாக நாட்டு

யிருந்தபடி. (பசைந்தங்கமுது படுப்ப) அதிலே அம்ருதம் படும் படிக்கு ஈடாகப் பசைகொடுத்து. (அசைந்தித்யாதி) உலாவிக் கடைந்த வருத்தமோ? (கச்சியித்யாதி) திருக்கச்சியிலும். திரு வெஃகாவிலும் கிடப்பது இருப்பது நிற்பதாகிறது தனியே கடலைக் கடைந்தத்தாலே திருமேனியிலே பிறந்த ஆயாஸமோ? 64.

---

பர்வதமும், தாழியாக்குகைக்குத் தகுதியான கடலுமான இம்மூன்றையுங்கொண்டு. நீர் கோதாம்படி கலக்கி. அந்தக் கடலிலே அம்ருதத்தை உண்டாக்குகைக்காக அலைச்சற் பட்டுக் கடைந்த ஆயாஸமோ.— திருக்கச்சியிலே வெஃகா விலே கண்வளர்ந்து. அந்தத் திருக்கச்சி தன்னிலே திருப் பாடகத்திலே எழுந்தருளியிருந்து. திருவூரகத்திலே எழுந் தருளிநின்றதுவும்? கடல் கடைந்த இளைப்பாலே நிற்பது இருப்பது கிடப்பதாய்க்கொண்டு இங்ஙனே நோவு படுகிருனுகாதே! என்று வயிறெரிகிருர். 64.

---

வதற்குத் தகுதியுடைய மந்தரமென்னும் மலையும். (இசைந்த கடலும்) தாழியாக்குவதற்குத் தகுதியுடைய கடலுமாகிற இம்மூன்றினை யும் கொண்டு. (அமுது படுப்பப் பசைந்து) இப்படிக் கடைவ தாலே அமுதம் உண்டாம்படி பக்குவம் செய்து. நீர் கோதாம்படி யும், அதிலிருந்து ஸாரமான அமுதம் வெளிப்படும்படியும் கலக்கி என்றுமாம. (அசைந்து கடைந்த வருத்தமோ) "ஆயிரம் தோளால் அலைகடல் கடைந்தான்" [பெரிய திருமொழி 5-7-4] என்கிறபடியே ஆயிரங்கைகளாலே முன்னும் பின்னுமாக அசைந்து கடல்கடைந்த ஆயாஸத்தினலோ கச்சிவெஃகாவில் கிடப்பதும், இருப்பதும், நிற்பதுமாகிற செயல்களைச் செய்கிறது? என்று மேலோடு அநு வயிக்கிறது. (கச்சி வெஃகாவில்) திருக்கச்சியிலும், திருவெஃகா விலும். (வெஃகாவில் கிடந்து) கச்சித்திருவெஃகாவில் சயனித் திருப்பதையும், (கச்சி அங்கு இருந்து) அத்திருக்கச்சியின் திருப் பாடகத்திலே வீற்றிருப்பதையும், (கச்சி அங்கு நின்றதுவும்) அத்திருக்கச்சியில் திருவூரகத்திலே நிற்பதையும் செய்தது அலைச் சல்பட்டுக் கடல்கடைந்த ஆயாஸம் தீருவதற்காகவோ? மிகுந்த அலைச்சல்பட்டவர்கள் அவ்வலைச்சல்தீரச் சிறிதுநேரம் படுப்பதும், சிறிதுநேரம் இருப்பதும், சிறிதுநேரம் நிற்பதும் செய்வதுபோலே

65 அங்கற் கிடரின்றி யந்திப் பொழுதத்து
மங்க விரணியன தாகத்தை—பொங்கி
அரியுருவமாய்ப் பிளந்த வம்மா னவனே
கரியுருவம் கொம்பொசித்தான் காய்ந்து.

அங்கற்கு-பிள்ளையான ப்ரஹ்லாதனுக்கு. இடர் இன்றி-ஒரு துன்பமும் வராதபடி. அந்தி பொழுதத்து—மாலை நேரத்தில். இரணியனது—ஹிரண்யனுடைய. ஆகத்தை—மார்பை. மங்க—அழிந்துபோம்படியாக. அரி உருவம் ஆய் பொங்கி—நரஸிம்ஹரூபியாய்க் கிளர்ந்து. பிளந்த—கிழித்தொழித்த. அம்மான் அவனே—அப்பெருமானே; காய்ந்து—சீறி. கரி உருவம்—கருத்த உருவத்தையுடைத்தாயிருந்த ஆனையான குவலயாபீடத்தினுடைய. கொம்பு—தந்தத்தை. ஒசித்தான்—ஒடித்துப்போட்டான்.

---

எம்பெருமானும் கடல்கடைந்த அலைச்சல்தீரத் திருக்கச்சியிலே கிடந்திருந்து நிற்கிறான்போலும் என்று தம்முடைய பரிவாலே வயிறு பிடிக்கிறார்.

"தாளால் உலகமளந்த அசைவேகொல்
வாளா கிடந்தருளும் வாய்திறவான்—நீளோதம்
வந்தலைக்கும் மாமயிலை மாவல்லிக்கேணியான்
ஐந்தலைவாய் நாகத்தணை" [நான்-திருவ 35]

"நடந்தகால்கள் நொந்தவோ நடுங்க ஞாலம் ஏனமாய்
இடந்தமெய் குலுங்கவோ விலங்குமால்வரைச்சுரம்
கடந்த கால் பரந்த காவிரிக்கரைக் குடந்தையுள்
கிடந்தவாறு?" [திருச்சந்த-61]

"கொடியார் மாடக் கோளூரகத்தும் புளிங்குடியும்
மடியாதின்னே நீ துயில்மேவி மகிழ்ந்ததுதான்
அடியார் அல்லல் தவிர்த்த அசைவோ அன்றேல் இப்
படிதான் நீண்டு தாவிய அசைவோ பணியாயே"
[திருவாய் 8-3-5]

என்று எம்பெருமானுக்குப் பரிந்து வயிறுபிடிப்பது ஆழ்வார்கள் அனைவர்க்கும் இயல்வன்றோ.

வ்யா:-(அங்கற்கிடரின்றியித்யாதி)பிள்ளையுடையவிடாய்தீர. ''அங்கக்கிடரின்றி''என்று பாடமாகில், அவ்விடத்தில் விடாய்தீர.

---

அவ:— அம்ருதமத$_2$நம் பண்ணின ஆயாஸமாத்ரமன்றிக்கே. அல்லாத அவதாரங்களிலும் அலசுதலுக்கு அடியான அவன் செயல்களை அநுஸந்திக்கிறார்.

உரை:— சிறுபிள்ளையான ஸ்ரீ ப்ரஹ்லாதாழ்வானுக்கு ஒரு து$_3$:க்க$_2$ம் வாராதபடி. அஸுரர்க்கு

---

65. அவ:— அமுதங்கடைந்த அலைச்சல் மூன்றேயோ? அடியார்க்காக மற்றும் பல அவதாரங்களிலும் அவன்பட்ட ஆயாஸங்கள் பலவன்றோ என்கிறார் இப்பாசுரத்தில்.

வ்யா:— ( அங்கற்கிடரின்றி ) '' அங்கா$_3$த$_3$ங்கா$_3$த் ஸம்ப$_4$வஸி— ஆத்மா வை புத்ரநாமாஸி '' [ஒவ்வோரங்கத்திலிருந்தும் உண்டாகிறாய்; புத்திரன் என்னும் பெயருடைய நானேயாகிறாய்.] என்ற ஸ்ருதியின்படியே அங்கத்திலிருந்துண்டானவனாகையாலே அங்க$_3$ஜனான பிள்ளையை அங்கன் என்கிறது; கடைக்குறை. இரணியனுடைய பிள்ளைக்கு இடரின்றி என்றபடி. இரணியனுக்கு அங்க$_3$ஜனாயிருந்தும், அவ்விரணியன் இப்பிரஹ்லாதனுக்கு இடரிழைத்தான். அப்போது அவ்விடரைத் தவிர்த்தவன் நிருபாதி$_4$க பிதாவான இவனேயென்கை. அன்றிக்கே, அங்கன் என்றது நரசிங்கனின் பிள்ளை என்றுமாம். பிரஹ்லாத$_3$ன் மஹாஜ்ஞானியாகையாலே தன்னை நாராயணனுக்கே புத்ரனாக அநுஸந்தித்திருப்பானாகையாலே அங்கற்கிடரின்றி இரணியனது ஆகத்தைப் பிளந்தான்,' என்கிறார்: தன் பிள்ளைக்கு இடர்வாராதபடி இரணியனுடலைக் கிழித்தான் நரசிங்கன் என்றபடி. அன்றிக்கே, திருநாமஞ் சொன்னதுவே காரணமாக வயிற்றிற்பிறந்தவனை இரணியன் கைவிடுகையாலே, திருநாமஞ்சொன்ன அவனைத்தன் பிள்ளையாக எண்ணி, ஆழ்வார் 'அங்கன்' என்கிறாராகவுமாம். '' பிள்ளையைச் சீறி '' [பெரியதிருமொழி 2-3-8] என்றாரன்றோ திருமங்கையாழ்வாரும். அன்றிக்கே, 'அங்கு மகற்கு' என்றது குறைந்து அங்கற்கு என்று கிடக்கிறதாகவுமாம். 'அங்கர்க்கு' என்று பாடமானாலும், 'அங்கற்கு' என்றே கொள்ளவேணும். '' ஸர்வக$_3$த்வாத$_3$நந்தஸ்ய ஸ ஏவாஹமவஸ்தி$_2$த: '' [வி-பு 1-19-85] [அநந்தன் ஸர்வவ்யாபியாயிருப்பதாலே, நான் அவனாகவேயிருக்கிறேன்] என்று தன்னை அனந்தனுக்கு அங்கமாக ப்ரஹ்லாதன் அநுஸந்திக்கையாலே, அவனை 'அங்கன்' என்பதாகவும் கொள்ளலாம். 'அங்கக்கிடர்' என்று பாடமானபோது 'அங்கக்கு—அவ்விடத்தில், இடர்—துன்பம்' என்று பிரித்துப் பொருள்கொள்வது.

(அந்திப்பொழுதத்து) அஸுரர்க்கு ப₃லம் வர்த்தி₄க்கும் காலத்திலே. (மங்கவிரணியனதாகத்தை) ஹிரண்யனுடைய ஹ்ருத₃யமானது மங்கிப்போம்படிக்கீடாக.(பொங்கியித்யாதி₃) "பிறையெயிற்றன்றடலரியாய்ப் பெருகினனே" என்னும்படி. (அவனேயித்யாதி₃) அவனே குவலயாபீட₃த்தினுடைய கொம்பை ஒசித்தான். (காய்ந்து) சீற்றமில்லாதவன் சீறி. 65.

---

ப₃லம் வர்த்தி₄க்கும்படியான ஸந்த்₄யாகாலத்திலே ஆஸுர ப்ரக்ருதியான ஹிரண்யனுடைய வரப₃லாதி₃களாலே பூண் கட்டின மார்வை உருத்தெரியாதபடி அழிந்துபோம்படியாகப் பெரியகிளர்த்தியை உடையனாய்க்கொண்டு நரஸிம்ஹ ரூபியாய் இடந்து பொகட்ட ஸர்வேஸ்வரனை அவனே, சீறிக்கொண்டு குவலயாபீட₃த்தினுடைய கொம்பை அநாயாஸேந முறித்துப் பொகட்டவன். அங்கரென்றது அங்கனென்றபடியாய் பிள்ளையென்றபடி. அன்றிக்கே,

---

(அந்திப்பொழுதத்து) அஸுரருக்கு ப₃லம் வளரக்கூடிய மாலை வேளையிலே அஸுரப்பையலோடு போரிடுவதே! என்று வயிறு பிடிக்கிறார். (இரணியனது ஆகத்தை) அஸுரப்பையலான இரணியனுடைய வரப₃லம் முதலானவற்றாலே பூண்கட்டின மார்பை. ஆகம்—மார்பு; ஹ்ருத₃யம் என்றுமாம். சிந்தையினால் இகழ்ந்தவனுகையாலே நெஞ்சிருக்கும் ஹ்ருத₃யத்தையும் பிளந்தான்.(மங்க) நரசிங்கத்தைக் கண்ட காட்சியிலே உருத்தெரியாமல் அழிந்துபோம்படி. (அரியுருவாய்ப்பொங்கிப் பிளந்த) நரசிங்கரூபியாகிப் பெருகிப் பிளந்த. "பிறையெயிற்று அன்று அடலரியாய்ப் பெருகினனே"; [பெரிய திரு2-5-8] என்கிறபடியே பாகவதாபசாரம் பொறாத சீற்றத்தாலே, விரல் நுனியாலே கிழித்தெரியவேண்டிய அவனைக்கொல்லப் பெருகுவெடுத்தான். "ஈஸ்வரன் அவதரித்துப்பண்ணின ஆனைத்தொழில்கள் எல்லாம் பாகவதாபசாரம் பொறாமை என்று ஜீயர் அருளிச்செய்வர்" என்ற ஸ்ரீவசநபூ₄ஷண ஸ்ரீஸூக்தி இங்கு அநுஸந்தி₄க்கத்தக்கது.(அம்மான் அவனே) இவ்வருஞ்செயலைச் செய்ததன் மூலம் ஸர்வஸ்வாமி தானே என்பது தோற்ற நின்ற அவனே. (அம்மான்) ப்ரஹ்லாதனுக்குச் செய்த உதவியைத் தமக்குச் செய்ததாக நினைத்து 'ஸ்வாமி' என்கிறாராகவுமாம். (காய்ந்து). சீற்ற

66 காய்ந்திருளை மாற்றிக் கதிரிலகு மாமணிகள்
ஏய்ந்த பணக்கதிர்மேல் வெவ்வுயிர்ப்ப—வாய்ந்த
மதுகைடபரும் வயிறுருகிமாண்டார்
அதுகேடவர்க் கிறுதி யாங்கு.

காய்ந்து—*சீறி*. இருளை மாற்றி—*இருளைப் போக்கி*. கதிர் இலகு—*ஒளிவிடாநின்றுள்ள*, மா மணிகள்—*சிறந்த ரத்னங்கள்*. ஏய்ந்த—*பொருந்தியிருக்கிற*, பணம்—*(திருவனந்தாழ்வானின்) படங்களினுடைய*. கதிர் மேல்—*ஒளிக்கு மேலே (எம்பெருமான்)*. வெவ்வுயிர்ப்ப—*பெருமூச்சுவிட*. வாய்ந்த—*கிட்டின*, மதுகைடபரும்—*மதுகைடபர்கள்*. வயிறு உருகி மாண்டார்-*குடலழுகி முடிந்து போனார்கள்*; அவர்க்கு-*அந்த மதுகைடபர்களுக்கு*. ஆங்கு—*அவ்விடத்தில்*, அது கேடு இறுதி—*அப்படிக் கிட்டியதே தாழ்வுக்கும் அழிவுக்கும் காரணமாயிற்று*.

"सर्वगत्वादनन्तस्य स एवाहमवस्थितः" (*ஸர்வக₃த்வாத₃நந்தஸ்ய ஸ ஏவாஹமவஸ்த்தி₂த:*) *என்கிறபடியே எம்பெருமானுக்குத் தன்னை அங்க₃மாக அநுஸந்தி₄த்திருக்குமவன் என்னவுமாம். அங்ஙனுமன்றிக்கே*, அங்கு—*அவ்விடத்து*, *என்று பிரித்து*, *மகற்கென்கிறத்தைத் தலைக்குறைத்தலாய்க் கிடக்கிறதென்னவுமாம். ஹிரண்யனுடைய மகனுக்கு இடரில்லாதபடி என்று பொருளாகக் கடவது. "அங்கக்கிடர்" என்று பாடமானபோது அவ்விடத்து இடரில்லாதபடி என்று பொருளாகக்கடவது*. 65.

மில்லாதவன், கம்ஸன் செய்த பாகவதாபசாரத்தாலே சீறி, அவன் மேலுள்ள சீற்றத்தை அவனுடைய பரிகரமான ஆனையின் மீதும் காட்டினான். (கரியுருவம் கொம்பு ஒசித்தான்) காருருவமுடைய குவலயாபீட₃ம் என்னும் ஆனையின் கொம்பை ஒடித்தான். அன்றிக்கே, கரி என்னும் வடசொல் துதிக்கையையுடைய யானையைக் குறிப்பதாய், அவ்வுருவத்தை ஏறிட்டுக்கொண்டு பொருத அஸுரனின் த₃ந்தத்தை முறித்துப்போட்டு. அவனை அழித்தான என்றும் கொள்ளலாம். ஆக, அடியார்களுக்காக அவன் செய்த ஆனைத்தொழில்கள் சிலவற்றை அருளிச்செய்தாராயிற்று. 65

அவ:— (காய்ந்து) உணர்த்தி உண்டானபோது விரோதி₄ நிரஸநம்பண்ணிது ஓ ரே ற் ற மே ா அவத₄ாநமின்றிக்கே யிருக்கச்செய்தே விரோதிகளை முடிக்கவல்லவனுக்கு?என்கிறார்.

வ்யா:— (காய்ந்திருளைமாற்றி) சீறி இருளைப்போக்கி. (கதிரிலகித்யாதி₃) ஒளிவிடாநின்றுள்ள மணிகள் சேர்ந்த ப₂ணத்திலுண்டான தேஜஸ்ஸின்மேலே நெடுமூச்சு விட. (வாய்ந்தவித்யாதி₃) கிட்டின மது₄கைடப₄ர்கள் வயிறுருகி

---

அவ:—தானொரு வடிவுகொண்டு வந்து விரோதி₄யைப் போக்கினானென்கிற இது ஓர் ஏற்றமோ, கண்வளர்ந் தருளுகிறவிடத்தே வந்து கிட்டின விரோதிகளை முடிக்க வல்லவனுக்கு? என்கிறார்.

உரை— ஸஹாவஸ்த₂ாநமில்லாதமாத்ரமன்றிக்கே சீறிக் கொண்டு இருளைப் போக்கிக் கிரணங்கள் ஒளிவிடாநின் றுள்ள பெருவிலையான ரத்னங்கள் சேர்ந்திருக்கிற தன் னுடைய ப₂ணங்களின் ஒளிக்குமேலே, திருவனந்தாழ்வான் அநுப₄வஜநிதஹர்ஷப்ரகர்ஷத்துக்குப்போக்குவிட்டு வெவ்வி தாக உச்ச்₂வாஸநிஶ்வாஸங்களைப்பண்ண. இவ்வளவிலே

---

66. அவ:—தான் ஓர் வடிவு கொண்டுவந்து விழித்திருக்கும் போது விரோதிகளை அழித்தான் என்கிற இது ஓர் சிறப்போ—கவன மில்லாமல் கண்வளர்ந்தருளுமிடத்திற்கு வந்த பகைவரை மூச்சாலே முடிக்கவல்லவனுக்கு? என்கிறார்.

வ்யா:—(காய்ந்து இருளை மாற்றி) சிறிய ஒளியாயிருந்தால், இருளோடு சேர்ந்துமிருக்கும்; பேரொளியாகையாலே இருளோடு சேர்ந்திருக்கமாட்டாமையேயன்றிக்கே, இருளைச் சீறிக்கொண்டு அழிக்கும் கிரணங்கள் என்றபடி. (கதிர் இலகு மாமணிகள் ஏய்ந்த பணக் கதிர்மேல்) அத்தகைய கிரணங்கள் ஒளிவிடாநிற்கும் பெருமதிப்புள்ள ரத்தினங்கள் பொருந்தியிருக்கிற திருவனந்தாழ் வானின் படத்தின் ஒளிக்கற்றைக்குமேலே. (வெவ்வுயிர்ப்ப) எம் பெருமான் பெருமூச்சுவிட (வாய்ந்த மதுகைடபரும் வயிறுருகி மாண்டார்) இந்த சமயத்தில் எதிரிகளாகக்கிட்டிய மதுவும் கைட

முடிந்தார்கள். (அதுகேடித்யாதி₃) "என்றுமென் பிள்ளைக்குத் தீமைகள் செய்வார்கள் அங்ஙனமாவர்களே". 66.

---

*விரோதி₄த்து வந்து கிட்டின மது₄கைடப₄ர்களும் குடலமுகி முடிந்து விட்டார்கள். அநுகூலர்க்கு வாழவும் ஜீவிக்கவுமான அந்தக் கண்வளர்ந்தருளுகிற ஸ்த₂லத்திலே ப்ரதிகூலித்து வந்து கிட்டினவர்களுக்கு அந்தக்கிட்டினவதுவே வாழ்வுக்கு ப்ரதிகோடியான கேடும். ஸத்தையோடே ஜீவிக்கைக்கு ப்ரதிகோடியான விநாஶமுமாய் விட்டது. 66.*

---

ப₄னும் குடலமுகி இறந்துவிட்டார்கள். "பிஷ்டதுஷ்ட மது₄கைடப₄ கௌ" என்று கூரத்தாழ்வான் ஸுந்த₃ரபா₃ஹுஸ்தவத்திலும், "மத₃மிவ மது₄கைடப₄ஸ்ய...கிமுபமிமீமஹி ரங்க₃குஞ்ஜரோர்வோ:" என்று பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்திலும் மது₄கைடப₄ர்கள் எம்பெருமானுடைய தொடையிலே இறுக்கிக் கொல்லப்பட்டதாகவன்றோ கூறியிருக்கிறார்கள்? எனில்: பெருமூச்சாலேயே குடலமுகிவிட்டவர்களைத் தொடையால் இறுக்கிக்கொன்றான் என்று கொண்டால் விரோதமில்லை. இப்படி எம்பெருமானுடைய பெருமூச்சாலேயே இவர்கள் மாண்டார்கள் என்று கொண்டால்தான் மது₄ஸூத₃நன், கைடப₄ாரி என்னும் திருநாமங்களுக்கு மிகப்பொருந்தியிருக்கும். அப்படியன்றிக்கே, சக்கரத்தால் தலைகொண்டாலும் இவனே தலையறுத்ததாகச் சொல்லுவதுபோலே, திருவனந்தாழ்வானுடைய விஷப்பெருமூச்சாலே அவர்களை அழித்தான் என்றும் கூறுவர். தன் பணங்களின் ஒளிக்குமேலே, திருவனந்தாழ்வான் எம்பெருமானை அனுபவித்ததனால் உண்டான ஆனந்தத்துக்குப் போக்குவீடாகப் பெருமூச்சுவிட, அப்போது ப்ரதிகூலராக வந்தடைந்த மது₄கைடப₄ர் குடலமுகி மாண்டார்கள் என்றபடி. திருமெய்யத்தில்' இதைக் காணலாம். (அது ஆங்கு அவர்க்குக் கேடு இறுதி) அநுகூலர் ஸத்தை பெறவும் வாழவுமிடமான அந்த ஸ்த₂லத்திலே, ப்ரதிகூலித்து வந்த அவர்களுக்கு அப்படிக்கிட்டின அதுவே வாழ்வுக்கு எதிர்த்தட்டான கேடும், ஸத்தை பெறுகைக்கு எதிர்த்தட்டான அழிவுமாகிவிட்டது. ஆக, ஒளியிருக்குமிடத்தில் இருளழிவதுபோலே, இவனிருக்குமிடத்தை அணுகினாலே எதிரிகள் அழிந்துபடுபவர் என்றதாயிற்று. "என்றும் என் பிள்ளைக்குத் தீமைகள் செய்வார்கள் அங்ஙனம் ஆவர்களே" [பெரியாழ்திரு 3-3-7] என்ற பெரியாழ்வாரைப்போலே நிர்ப்ப₄ரராகிறார். 66.

67. ஆங்குமலரும் குவியுமாலுந்திவாய்
ஓங்கு கமலத்திெனொண்போது—ஆங்கைத்
திகிரிசுடரென்றும் வெண்சங்கம் வானில்
பகருமதி யென்றும் பார்த்து.

மால்—ஸர்வேஶ்வரனுடைய. உந்தி வாய்—திருநாபியிலே. ஓங்கு—உயரவளர்ந்த. ஒண் கமலத்தின் போது—அழகிய தாமரைப் பூவானது. கை—அவனுடைய வலத் திருக்கையில். ஆம்—உள்ள. திகிரி—திருவாழியை. சுடர் என்றும்—ஸூர்யனென்றும், (கை ஆம்)—இடத்திருக்கையிலுள்ள. வெண் சங்கம்—வெளுத்த சங்கை. வானில் பகரும் மதி என்றும்—ஆகாசத்தில் ஒளிவிடுகிற சந்திரனென்றும், பார்த்து—நினைத்துக்கொண்டு. ஆங்கு—ஒரே காலத்திலே. மலரும் குவியும்—மலர்வதும் மூடிக்கொள்வதுமாயிராநின்றது.

அவ:— (ஆங்கு) ஹிரண்யனும் மது₄கைட₄பர்களும் முடிந்தபின்பு கண்வளரும்போதை அழகை அநுபவிக்கிறார்.

வ்யா:—(உந்திவாயித்யாதி₂) திருநாபிகமலத்திலே ஓங்கியிருந்துள்ள அழகியதான தாமரைப்பூ. (ஆங்கையித்யாதி₂)

---

அவ:— அங்குக் கண்வளர்ந்தருளுகிறவனுடைய திருநாபீ₄கமலமானது கையுமாழ்வார்களுமான சேர்த்தியைக் கண்டுஅலருவது மொட்டிப்பதாகிறபடியை அநுப₄விக்கிறார்.

உரை:— திருநாபீ₄கமலத்திலே உண்டாய், உயர வளர்ந்த தாமரையினுடைய செவ்விகுன்றாத அழகிய

---

67. அவ:— ஹிரண்யனும், மது₄கைடப₄ர்களும் அழிந்த பின்பு திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளும்போதுள்ள அழகை அநுப₄விக்கிறார்.

வ்யா:— (உந்தி வாய் ஓங்கு கமலத்தின் ஒண்போது) ''அஜஸ்ய நாபௌ₄ அத்₄யேகமர்ப்பிதம்'' [பிறப்பற்றவனின் திருநாபியில் ஓர் கமலம் உள்ளது] '' ஸ ப்ரஜாபதிரேக: புஷ்கரபர்ணே ஸமப₄வத் ''

கையில் திருவாழியை ஆதித்யனென்றும். (வெண்சங்க மித்யாதி₃) ஸ்ரீபாஞ்சஜந்யத்தை ஆகாஶத்திலே விளங்கா நின்றுள்ள சந்த்₃ரனென்றும்பார்த்து—அநுஸந்தி₄த்து. (ஆங்கு மலருங்குவியுமால்) இரண்டு காலத்திலே பிறக்கக்கடவ அவ்விரண்டவஸ்தை₂யானது யுக₃பத் உண்டாகாநின்றது. 67.

---

பூவானது. அவனுடைய வலத்திருக்கையில் உண்டான திருவாழியை ஆதித்யனென்றும். மற்றைத் திருக்கையில் ஏந்தின வெளுத்த நிறத்தையுடைத்தான ஸ்ரீபாஞ்சஜன்யத்தை ஆகாஶத்திலே வர்த்திக்கிற ஒளியையுடைய சந்த்₃ர

---

[அப்பிரமன் ஒருவனே தாமரையிதழில் பிறந்தான்] என்று வேதம் ஓதியபடியே பிரமனையும் தாங்கும் பெருமையை உடையதாய் ஓங்கும் ஸர்வேஶ்வரனுடைய திருநாபியில் உள்ள தாமரையின் ஒளி மிகுந்த புஷ்பம். (ஆங்கு மலரும் குவியுமால்) ஒரே காலத்தில் மலர்வதையும், குவிவதையும் செய்யாநிற்கிறது. (ஆல்) உலகில் மற்ற தாமரைகள் ஒரு காலத்தில் குவியும்; மற்ருெரு காலத்தில் மலரும்; இதுவோ ஒரே காலத்தில் குவிவதையும், மலர்வதையும், மாறிமாறிச் செய்கிறதே! இதென்ன ஆச்சர்யம் என்கிருர். அன்றிக்கே, "மால் உந்திவாய்...போது ஆங்கு மலரும் குவியும்" என்று அந்வயித்தும் பொருள் கொள்ளலாம். "ஸர்வேஶ்வரனுடைய உந்தியிலுள்ள தாமரை ஒரே காலத்தில் மலர்வதையும் குவிவதையும் செய்கிறது" என்று பொருள். இப்படிப் பொருள் கொள்ளும்போது ஆஶ்சர்யம் ஸம்₃த₃ஸித்₃த₄மல்லாமல் அர்த்த₂ஸித்₃த₄மாகிறது. இவ்வாஶ்சர்யத்திற்குக் காரணத்தை விளக்குகிருர் பின்னடிகளாலே—(ஆங்கைத்திகிரி சுடர் என்றும்) கை ஆம் திகிரி சுடர் என்று பார்த்து மலரும் என்று அந்வயிக்கவேணும்; உலகில் தாமரை ஸூர்யனைக் கண்டதும் மலரும்; இத்தாமரையோ வெனில் எம்பெருமானுடைய வலத்திருக்கையில் உள்ள கோடி ஸூர்ய ப்ரகாஶமான ஸுத₃ர்ஶநத்தை ஸூர்யனென நினைத்து மலரும். (வெண் சங்கம் வானில் பகரும் மதி என்றும் பார்த்து) உலகில் தாமரை சந்திரனைக் கண்டதும் குவியும்; இத்தாமரையோ வெனில் "சந்திரமண்டலம் போல் தாமோதரன் கையில்" [நாச்-திரு 1 [illegible]] கிறபடியே, எம்பெருமானுடைய இடத்திருக்கையில் உள்ள வானில் விளங்கும் சந்திரனைப்போன்ற வெண் சங்கத்தைச் சந்திரன் என நினைத்துக் குவியும்; இப்படி ஒரே காலத்தில்

68. பார்த்த கடுவன் சுனைநீர் நிழற்கண்டு
பேர்த்தோர் கடுவனெனப் பேர்ந்து—கார்த்த
களங்கனிக்குக் கைநீட்டும் வேங்கடமே மேனாள்
விளங்கனிக்குக் கன்றெறிந்தான் வெற்பு.

**சுனை நீர்**—திருமலைச் சுனையின் நீரிலே. **பார்த்த**—கவிந்து பார்த்த. **கடுவன்**—ஆண் குரங்கானது. **நிழல் கண்டு**—நீரினுள்ளே ப்ரதிபலிக்கிற தன் நிழலைக்கண்டு. **பேர்த்து ஓர் கடுவன் என**—(தனக்கு எதிரியான) வேறொரு குரங்கு இருப்பதாக மயங்கி **பேர்ந்து**—பயத்தாலே அவ்விடம் விட்டு அடியிடத் தொடங்கி (மறுபடியும் சாபல்யத்தாலே). **கார்த்த களங்கனிக்கு கை நீட்டும்**—கரிய களாப்பழத்தைப் பறித்துத்தா வென்று கை நீட்டப்பெற்ற. **வேங்கடமே**—திருவேங்கடந்தான். **மேல் நாள்**—முன்பொரு காலத்தில், **விள கனிக்கு**—(அஸுராவேஶங்கொண்ட) விளாம்பழங்கள் உதிர்வதற்காக. **கன்று எறிந்தான்**—வத்ஸாஸுரனை (எறிதடியாகக் கொண்டு) வீசியெறிந்த பெருமானுடைய. **வெற்பு**—திருமலை.

---

னென்றும் உத்ப்ரேக்ஷித்துக்கொண்டு அக்காலத்திலே அலர்வது மொட்டிப்பதாகாநிற்கும்; இதோர் ஆஶ்சர்யமிருக்கும்படியே! என்று அநுபவிக்கிறார். "மாலுந்தி வாய்" என்றபோது ஸர்வேஶ்வரனுடைய திருநாபியில் என்றாகக் கடவது. ஆங்கு—அந்தப்பொழுதில். ஏககாலத்திலென்றபடி. வானிலே வர்த்திக்கிற ப்ரஸித்தனான சந்த்ரனென்னவுமாம். 67.

---

எம்பெருமானுடைய இருதிருக்கைகளிலும் ஶங்கசக்ரங்கள் சந்திர ஸூர்யர்களைப்போலே விளங்குகையால், உந்தித்தாமரையும் ஒரே காலத்தில் குவிவதையும் மலர்வதையும் செய்யும் ஆஶ்சர்யம் காணப்படுகிறது என்று கருத்து. வானில் பகரும்—வானில் ஒளிவிடும் என்கை; அன்றிக்கே, பகரும் என்றது பகரப்படும் (சொல்லப்படும்) என்றதாய் 'பிரஸித்திபெற்ற' என்றும் பொருள் கொள்ளலாம். ஆக, எம்பெருமான் கண்வளரும்போதுள்ள அழகை அநுபவித்தாராயிற்று. 67.

வ்யா:— (பார்த்தவித்யாதி$_3$) சுனைநீரிலே கடுவனானது தன்னுடைய நிழலைக்கண்டு. (பேர்த்தோரித்யாதி$_3$) வேறே தனக்கெதிரியான கடுவனென்று பெயர்ந்து. (கார்த்தவித்யாதி$_3$) பின்னையும் தன்னுடைய சாபலத்தாலே அருகில் களாப்பழத்தை அறுத்துத்தாவென்று கைநீட்டாநிற்கும்

அவ:— இப்படிப்பட்டவனுடைய அழகை அநுப$_4$விக்கைக்குத் திருப்பாற்கடலேறப் போகவேண்டா, திருமலையிலே அநுப$_4$விக்கலாங்கிடீர்—என்கிறார்.

உரை:— கரையில் களாவிலேநின்று சுனையின் நீரைப் பார்த்த கடுவனானது. நீருக்குள்ளே தன் நிழலைக்கண்டு. இது நம்முடைய நிழலென்று பு$_3$த்$_3$தி$_4$பண்ணமாட்டாதே. தனக்கு எதிரியான வேறேயொரு கடுவனென்று ப்ரதிபத்தி பண்ணி. தன் கையின் சிவப்புக்குப் பகைத்தொடையான கறுத்தநிறத்தையுடைத்தான களாவின் பழத்துக்கு—தான் நிற்கிற களாவின் நிழலென்று அறியாதே. வேறொன்றாகக் கருதி அதின் பழமும் பெறவேணுமென்னும் சாபலத்தாலே, அத்தை அறுத்துத்தா என்று கைநீட்டாநிற்கும்

68. அவ:— இப்படிப்பட்டவனுடைய அழகை அநுப$_4$விக்கத் திருப்பாற்கடலுக்குச் செல்லவேண்டா; திருமலையிலேயே அநுப$_4$விக்கலாமே என்று பல பாசுரங்களில், திருமலையின் அழகையும், திருமலையப்பனின் அழகையும் அநுபவிக்கத் தொடங்குகிறார்.

வ்யா:— (பார்த்த கடுவன்) கரையில் களாமரத்தின் மேலே நின்று கீழேயுள்ள சுனையின் நீரைப்பார்த்த ஆண்குரங்கானது. "கார்த்த களங்கனிக்கு" என்று மேலே வருகையாலே களாமரத்தின் மேலே நின்று பார்த்தது எனக்கொள்வது. (சுனை நீர் நிழற்கண்டு) அச்சுனையின நீரிலே தன் நிழலையே கண்டு. (பேர்த்து ஓர் கடுவன் என) 'இது தன் நிழலே' என்று அறியாமல், 'தனக்கு எதிரியான வேறொரு ஆண்குரங்கு' என்று நினைத்து. (பேர்ந்து) அதனிடம் பயந்து ஓடத்தொடங்கி. (கார்த்த களங்கனிக்குக் கைநீட்டும்) சஞ்சலபுத்தியையும் சாபல்யத்தையும் உடையதாகையாலே, மறுபடியும் நின்று, தன் கையின் சிவப்புக்கு மாறுபட்ட கறுத்த நிறமுடைய களங்கனியின் நிழலை நீரிலே கண்டு, அது தான் நிற்கிற களாவின் பழத்தின் நிழலே என்றறியாமல் மற்றொரு மரத்தின் பழம் என்றெண்ணி அதையும் அக்குரங்கினிடமிருந்து பெற வேணும் என்று, 'அதனை அறுத்துத்தா' என்னும் கருத்து தோன்ற அக்களங்கனிக்கு அக்குரங்கினிடம் கைநீட்டுகிற.

திருமலை; (மேனுளித்யாதி) பண்டு கன்றைக்கொண்டு விளங்கனிக்கெறிந்தவனுடைய மலை. 68.

69. வெற்பென்று வேங்கடம் பாடும் வியன்துழாய்க்
கற்பென்று சூடும் கருங்குழல்மேல்—மற்பொன்ற
நீண்டதோள் மால்கிடந்த நீள்கடல் நீராடுவான்
பூண்டநா ளெல்லாம் புகும்.

---

*வேங்கடமே. பண்டொருநாளிலே விளாவின் பழத்துக்குக் கன்று எறிந்தவன் வர்த்திக்கிற திருமலை. இதினுடைய மௌக்₃த்₄யம்போலேயாய்த்து அவனுடைய மௌக்₃த்₄யமிருக்கும்படி. 68.*

---

சாபலத்தையும், மௌக்₃த்₄யத்தையும் (அறிவின்மையையும்) காட்டும் இக்குரங்கின் செயல் நடந்தது எங்கேயெனில், அது போன்ற செயலைச் செய்தவன் வாழும் திருமலையிலே என்கிறார் பாசுரத்தின் எஞ்சிய பகுதியாலே,— (வேங்கடமே மேல் நாள் விளங்கனிக்குக் கன்றெறிந்தான் வெற்பு) திருவேங்கடமே முன்னொரு நாள் விளாவின் பழத்தைப் பெறுவதற்காகக் கன்றை எறிந்தவன் வாழும் திருமலை. விளாம்பழங்களைப் பெறவேண்டும் என்னும் சாபலத்தாலே கன்றை எறிதடியாக எறிந்த அவனுடைய மௌக்₃த்₄யச் செயல்போலேயிரா நின்றது விளங்கனிக்குக் கைநீட்டும் இக்குரங்கின் செயல் என்று கருத்து. க்ருஷ்ணாவதாரத்தில் சிறுபிள்ளைத்தனமாக இவன் செய்யும் செயல்களெல்லாம் அஸுர நிரஸனத்திலே முடிந்தன என்பது இதிஹாஸபுராண ப்ரஸித்₃த₄ம்; விளங்கனியைப் பெறவிரும்பிக் கன்றை எறிந்ததால் கன்றாய் வந்த வத்ஸாஸுரனும், விளவாய்நின்ற கபித்தா₂ஸுர்னும் ஒரு சேர முடிந்துபோயினரன்றோ. கைக்குழந்தையாய்த் தொட்டிலில் கிடக்கும்போது, தாய்முலை வரவு தாழ்த்துச் சீறி உதைத்த சிறு குழந்தைத்தனத்தால், இவனை முடிப்பதற்கு அருகில் வண்டியிலே ஆவேஶித்து நின்ற ஶகடாஸுரன் முடிந்ததும் இங்கு அநுஸந்திக்கத்தக்கது. இவ்வண்ணமாகத் திருமலையிலேயுள்ள திர்யக்கு (விலங்கு)களின் செயல்கள்கூட அவனுடைய அழகிய சேஷ்டிதங்களுக்கு ஸ்மாரகமாய்நின்று நம்மை ஆழங்காற்படுத்துகின்றன என்று கருத்து. 68.

வெற்பு என்று—( என் மகளானவள் ) ஏதேனும் ஒரு மலையைப்பற்றிப் பேச்சு வந்தாலும். வேங்கடம்—திருமலையைப் பற்றி. பாடும்—பாடுகின்றாள்; கற்பு என்று—பாதிவ்ரத்யத்துக்குத் தகுந்திருப்பதென்று. வியன் துழாய்—வியக்கத்தக்க திருத்துழாயை. கரு குழல் மேல்—(தனது) கரிய கூந்தலில். சூடும்—அணிந்து கொள்ளுகிறாள்; மல்—மல்லர்கள். பொன்ற—அழியும்படியாக. நீண்ட தோள்—நீண்ட திருத்தோள்களையுடைய. மால்—ஸர்வேஶ்வரன். கிடந்த—பள்ளிகொண்டிருக்கப்பெற்ற. நீள் கடல்—பரந்த திருப்பாற்கடலிலே. நீராடுவான்—தீர்த்தமாடுவதற்காக. பூண்ட நாள் எல்லாம்—விடிந்த விடிவுகள் தோறும். புகும்—புறப்படுகின்றாள்.

அவ:—(வெற்பென்று) ஆழ்வாரான அவஸ்தை போய் ஒரு பிராட்டி அவஸ்தையை பஜித்து அவளுடைய தஶையைத் தாயார் சொல்லுகிறாள்.

---

அவ:—இப்படிப்பட்ட திருவேங்கடமுடையானுடைய மௌக்த்யத்தை அநுபவித்துத்தாமான தன்மையழிந்து, ஒரு பிராட்டி தஶையை ப்ராப்தராய், அவளுடைய உக்தி வ்ருத்திகளைத் திருத்தாயாராக அநுவதித்துக்கொண்டு பேசுகிறார்.

---

69. அவ:— இப்படிப்பட்ட திருவேங்கடமுடையானுடைய அளவில் பிள்ளைமைச் செயல்களை அநுபவித்துத் தாமான தன்மை அழிந்து ஒரு நாயகியின் நிலையை அடைந்தவராய், அவளுடைய பேச்சையும் செயல்களையும் அவள் திருத்தாயார் பாசுரத்தாலே பேசுகிறார். முதலாழ்வார்கள் பாசுரங்களிலே இதுவொன்றே தாமான தன்மை அழிந்து பேசும் பேச்சு "கங்குலும் பகலும்" [திருவாய் 7-2] "திவளும் வெண்மதிபோல்" [பெரியதிரு 2-7] முதலான பிற்பட்ட ஆழ்வார்களின் திருத்தாயார் பாசுரங்களுக்கெல்லாம் வழிகாட்டியாயிருப்பது இப்பாசுரம்.

வ்யா:— ( வெற்பென்று வேங்கடம் பாடும் ) எனது பெண் பிள்ளை ஏதேனும் ஒருமலையைப்பற்றி ப்ரஸக்தாநுப்ரஸக்தமாகப்

வ்யா:—(வெற்பித்யாதி) லோகயாத்ரையும் இவளுக்கு ப₄க₃வத்₃விஷயத்திலே; திருமலையொழிய வேறொரு மலையுமறியாள். (கருங்குழல்மேல் வியன்துழாய் கற்பென்று சூடும்) காட்டுப்பூச்சூடாள். "தொடுத்த துழாய்மலர் சூடிக்களைந்தன சூடுமித்தொண்டர்களோம்" என்கிறபடியே. விஸ்மயமான திருத்துழாயல்லது குழலில் வையாள். "கற்பு" என்று பாதி

---

உரை—ஏதேனுமொரு மலையைச் சொல்லப்புக்காளாகில், திருமலையை ப்ரீதிப்ரேரிதையாய்ப் பேசாநிற்கும்; ஏதேனுமொரு பூவைச் சூட நினைத்தாளாகில், விஸ்மயமான திருத்துழாய் குலமரியாதைக்குச் சேருவதொன்று என்று, "தொடுத்த துழாய் மலர் சூடிக் களைந்தன சூடுமித்தொண்டர்களோம்" என்கிறபடியே இருண்ட குழலின் மேலே ஸாத₃ரமாகச் சூடாநிற்கும்.

---

பேச்சு ஏற்பட்டாலும், அன்பினால் தூண்டப்பட்டுத் திருமலையையே பாடாநின்றாள். வேறு மலையை அறியாதவளாயிருந்தாள். "பெருமான் மலையோ திருவேங்கடம்" [திருவிருத்தம் 60] என்ற பராங்குசநாயகியைப்போலே. (கருங்குழல்மேல், கற்பென்று வியன் துழாய் சூடும்) ஏதேனும் ஒரு பூவைச் சூடநினைத்தாளாகிலும், "தொடுத்த துழாய்மலர்சூடிக் களைந்தன சூடுமித்தொண்டர்களோம்" [திருப்பல்லாண்டு 9] என்கிறபடியே நம் தொண்டக் குலவரம்புக்கும், நம் பாதிவ்ரத்யத்திற்கும் பொருந்துவது வியக்கத்தக்க இத்திருத்துழாயே என்று, அதையே தன் கறுத்த திருக் குழலின்மேலே ஆர்வத்துடன் சூட்டிக்கொள்ளுகிறாள். "தெய்வத் தண்ணந்துழாய்த் தாராயினும், தழையாயினும், தண்கொம்பதாயினும், கீழ் வேராயினும், நின்ற மண்ணாயினும் கொண்டு வீசுமினே" [திருவிருத்தம் 53] என்று பேசப்பட்ட பராங்குசநாயகியைப் போலே, திருத்துழாயையொழிய வேறொரு மணமிகு பூவைச் சூடமாட்டாளிவள். கற்பு—குலவரம்பு. இதைவிட, 'கண்டார் இகழ்வனவே காதலன்தான் செய்திடினும், கொண்டானையல்லால் அறியாக்குலமகளின் பதிவிரதைத்தன்மையே கற்பு எனப்படுவதாகக் கொள்வது சுவைமிக்கது. இனி, விடியற்காலையில் நீராட நினைக்கும்போதெல்லாம், அவன் கிடந்த திருப்பாற்கடலிலேயே நீராட நினைக்கிறாள் என்கிறார் எஞ்சிய பகுதியாலே,— (மற்பொன்ற

வ்ரத்யம். (மற்பொன்றவித்யாதி) விரோதி₄நிரஸநத்துக்காக வளர்ந்த தோளையுடையனுய். வ்யாமுக்₃த₄னவன் கிடந்த நீள்கடலிலே விடிந்த நாளெல்லாம் புகாநின்ருள். திருப்பாற் கடலொழிய வேறென்றில் குளித்தால் விடாய் கெடாதென்றிரா நின்ருள். இப்ரகரணத்தில் கீழும் மேலும் அந்யாபதே₃ஶ

---

மல்லவர்க்கும் பொடிபடும்படி வளர்ந்த திருத்தோள்களை யுடைய ஸர்வேஶ்வரன் கண்வளர்ந்தருளின பரந்த திருப் பாற்கடலிலே நீராடுகைக்காக விடிந்த விடிவுகள்தோறும் புகாநிற்கும். வேறொரு மலையின் பேர் சொல்லுதல், நாறு பூச்சூடுதல், வெறொரு நீர்நிலைகளில் குளித்தல் செய்யாள். பாடுகை—சூடுகை முதலான லோகயாத்ரை யடங்கலும் இவளுக்கு ப₄க₃வத்₃ விஷயத்திலேயாயிருக்கிறபடி. மால் கிடந்த—வ்யாமுக்₃த₄னவன் பள்ளிகொண்டருளின என் னவுமாம். இங்ஙனன்றிக்கே, கீழும் மேலும் அந்யாபதே₃ஶ

---

நீண்டதோள் மால் கிடந்த நீள் கடல் நீராடுவான்—பூண்டநாள் எல்லாம் புகும்) "மல்லாண்ட திண்டோள்" [திருப்பல்லாண்டு 1] என்கிறபடியே மல்லர்திரள் அழியும்படியாக நீண்ட திருத்தோள் களையுடைய திருமால் பள்ளிகொண்டருளிய பரந்த திருப்பாற் கடலிலே நீராடுகைக்காக, விடிந்த விடிவுகள்தோறும் புறப்படா நிற்கிருள். திருப்பாற்கடலொழிய வேறென்றில் நீராடினுல் தாபம் ஆறுதென்றிருக்கிருள். பாடுகை, சூடுகை, நீராடுகை முதலான லோகயாத்திரை முழுவதும் இவளுக்கு ப₄க₃வத்₃ விஷய்த்திலே யாயிருக்கிறபடி. (பூண்ட நாள் எல்லாம் புகும்) "கு₄ஷ்யதே யஸ்ய நக₃ரே ரங்க₃யாத்ரா தி₃நே தி₃நே" [எவருடைய நகரத்தில் தினந்தோறும் ரங்கயாத்ராகே₄ாஷம் முழங்குகிறதோ] - என்று குலசேகரர் தினந்தோறும் திருவரங்கம் செல்லப் பாரிக்குமா போலே, இவள் விடிவுதோறும் திருப்பாற்கடல் செல்லப் பாரிக் கிருள் போலும்! மால்—ஸர்வேஸ்வரன் என்றும், அடியாரிடம் மயங்கி நிற்பவன் என்றும் இருவகையாகப் பொருள்கொள்ளலாம். "பூண்டநாளெல்லாம்—ஸூர்யனுடைய தேரிலே குதிரை பூட்டின நாளெல்லாம் என்றபடியாய், 'விடிந்த விடிவுகள்தோறும் என்று பொருள்பட்டது" என்பது தீபிகையுரை. இத்திருவந்தாதியில் வேறெங்கும் தாமான தன்மையொழிந்து பேசும் பாசுரமில்லாமலிருக்க,

மின்றிக்கேயிருக்க. இப்பாட்டொன்றும் இப்படி கொள்ளுகிற தென்னென்று நிர்வஹிப்பர்கள்:— 'அம்மலை இம்மலை என்று ஒன்றைச் சொல்லக்கடவிகோளிறே; ஆனபின்பு, திருமலையைப்பாடுங்கோள். (வியன் துழாயித்யாதி) ஒரு பூவைச் சூடக் கடவிகோளிறே; ஆனபின்பு, வகுத்தவன் உகக்கும் திருத்துழாயைச் சூடுங்கோள். (மற்பொன்றவித்யாதி) ப்ராதஸ்ஸ்நாநம் பண்ணக்கடவிகோளிறே; ஆனபின்பு. விரோதி,

மற்றிருக்க 'இதொன்றும் இப்படி கொள்கிறதென்னென்று ப்ரோபதேசமாக நிர்வஹிப்பர்கள்; அப்போது, அம்மலை இம்மலை என்று ஏதேனுமொரு மலையைச் சொல்லப் பார்த்திர்களாகில். திருமலையைப் பாடுங்கோள்; ஏதேனுமொரு பூச்சூட நினைத்திர்களாகில், திருத்துழாயைச் சூடுங்கோள். ஏதேனுமொரு நீர்நிலைகளிலே புக்கு ப்ராத:ஸ்நாநம்

இப்பாசுரம் ஒன்று மாத்திரம் இப்படியிருப்பது விரூபமாயிருக்கிறதென்று கருதி, நம் பூர்வாசார்யர்களிலும் சிலர் இதைப் பரோபதேசபரமாக நிர்வஹிப்பர்களாம். அப்பொருளை இனி விவரிப்போம்.

அவ:— இப்படி பகவத்விஷயத்தைத் தாமனுபவித்தவர், இன்கனி தனியருந்தலாகாதென்னும் நியாயத்தாலே, உலகத்தாரையும் அதை அநுபவிக்கக் கூப்பிடுகிறார்.

வ்யா:— (வெற்பென்று வேங்கடம் பாடும்) உலகத்தீரே! 'கொச்சிமலை, குடகுமலை, கொல்லிமலை' என்றாற்போலே ஏதேனும் ஒரு மலையைப் பாடுவீர்களன்றோ! அப்படிப் பயனில்லாமல் ஒரு மலையைப் பாடாமல், பெரும்பயன் பெறலாம்படி திருமலையைப் பாடுங்கள்; (வியன் துழாய் கற்பென்று சூடும் கருங்குழல்மேல்) ஏதேனும் ஒரு பூவைச்சூட நினைப்பீர்களன்றோ; அப்போது 'இதுவே நம் ஸ்வரூபத்துக்குத்தக்கது' என்று வகுத்த ஸ்வாமியான அவன் உகக்கும் திருத்துழாயைக் கருங்குழலிலே சூடுங்கள். கண்ட பூவைச் சூடினால் ஒரு பயனுமில்லை; இதைச் சூடினால் ஸ்வரூபம் நிறம்பெறும். (மற்பொன்ற...புகும்) ஏதேனும் ஒரு நீர்நிலையிலே புகுந்து ப்ராத:ஸ்நானம் பண்ணவேண்டும் என்றிருந்தீர்களாகில், விரோதி நிரஸநத்தை இயல்வாகக் கொண்ட

நிரஸநமீலனானவன் கிடந்த திருப்பாற்கடலிலே முழுகுங்கோள். 69.

70. புகுமதத்தால் வாய்பூசிக் கீழ்தாழ்ந்து அருவி
உகுமதத்தால் கால்கழுவிக் கையால்—மிகுமதத்தேன்
விண்டமலர் கொண்டு விறல் வேங்கடவனையே
கண்டு வணங்கும் களிறு.

களிறு—(திருமலையிலுள்ள) யானையானது. புகு மதத்தால் வாய் பூசி—மத்தகத்தில்நின்றும், கன்னங்களில்நின்றும் வாயிலே புகுகின்ற மதஜலத்தாலே வாய்கொப்பளித்து, ஆசமனம் பண்ணி. கீழ் தாழ்ந்து அருவி உகுமதத்தால்—மேலிருந்து கீழ்வரையில் அருவிபோலே வந்து பெருகுகிற மத₃ஜலத்தாலே, கால் கழுவி—கால்களை சுத்தி செய்து கொண்டு. கையால்—துதிக்கையாலே, மிகு மதம் தேன்—மிகுந்த மதத்தை விளைக்கக்கூடிய தேனையுடையதும், விண்ட — மலர்ந்ததுமான. மலர்கொண்டு — புஷ்பத்தைக் கொண்டு. விறல் வேங்கடவனையே-பெரு மிடுக்கனை திருமலையப்பனையே கண்டு வணங்கும்-ஸேவித்து வணங்குகின்றது.

---

பண்ணப்பார்த்தீர்களாகில், அவன் சாய்ந்தருளின கடலிலே நாடோறும் அவகா₃ஹிக்கப்பாருங்கோளென்று பொருளாகக் கடவது. கற்பென்று பாதிவ்ரத்யதா₄ர்மமென்றுமாம். 69.

---

வன் பள்ளிகொண்ட திருப்பாற்கடலிலே நீராடப்பாருங்கள். கிட்டவொண்ணாத திருப்பாற்கடலிலே நீராடச்சொல்லி ஆழ்வார் உபதேஶிப்பரோ? எனில், 'திருப்பாற்கடல்' என்றது ப₄க₃வத்ஸம்ப₃ந்த₄முள்ள நீர்நிலைகளுக்கு உபலக்ஷணமாய், பகவத்ஸம்பந்தமுள்ள நீர்நிலைகளிலே நீராடுங்கள் என்று கொள்வது. இவ்வருமையையும், 'பாடும்' 'சூடும்' 'புகும்' என்னும் வினைமுற்றுக்களை முன்னிலையாகக் கொள்ளவேண்டிய அருமையையும் நோக்கும்போது, தாய்ப் பாசுரமாகக்கொள்ளும் நிர்வாஹமே சிறந்ததென விளங்கும். 69.

அவ:—(புகுமதத்தால்) அநுகூலருடைய தே₃ஹயாத்ரை யெல்லாம் தன் ஸமாஶ்ரயணத்துக்கு உடலாகக் கொள்ளு மவனுடைய திருமலை என்கிறது.

வ்யா:—(புகுமதத்தாலித்யாதி) வாயிலே புகுகிற மத₃ ஜலத்தாலே வாய்கழுவி. (கீழித்யாதி) கீழே தாழ்ந்த அருவி போல உகாநின்ற மத₃ஜலத்தாலே கால்கழுவி. (கையித்

---

அவ— ஆகில், அவனை ஆஶ்ரயிக்கும்போது சிறிது யோக்₃யதை ஸம்பாதி₃க்க வேண்டாவோ? என்ன, 'அது வேண்டா, திர்யக்குக்களும் ஆஶ்ரயிக்கலாம்படி யிருப்பா னொருவன் என்கிறார்.

உரை—மஸ்தகஸ்த₂லம், க₃ண்ட₃ஸ்த₂லம் இவற்றினின் றும் பாய்ந்து வாயிலே புகுகிற மத₃ஜலத்தாலே வாய் கொப்பளித்து ஆசமனம்பண்ணி கீழே தாழ்ந்து அருவிகள் போலே வந்து விழுகிற மத ஜலத்தாலே காலைக்கழுவி,

---

70. அவ:— முன் பாசுரத்திற் சொன்னபடி அவனை ஆஶ்ர யிப்பதாகில், அதற்குச் சில தகுதிகள் வேண்டாவோ? என்ன, " விலங்குகளும் தன்னை ஆஶ்ரயிக்கலாம்படியிருப்பவனாய், அவற்றி னுடைய தே₃ஹயாத்ரையெல்லாம் தன் ஸமாஶ்ரயணத்துக்கு உறுப் பாகக் கொள்ளுமவனாகையாலே தகுதி வேண்டா" என்கிறார்.

வ்யா:— (களிறு) திருமலையில் உள்ளதொரு விலங்கான யானையானது. (புகுமதத்தால் வாய்பூசி) மத்தகம், கன்னம் இவற்றினின்றும் பாய்ந்து, வாயிலே புகுகிற மத₃ஜலத்தாலே வாய் கொப்பளித்து, ஆசமனம்பண்ணி. இதன் வாயில் தன்னடையே புகுந்து புறப்படுகிற மதநீரை, கொப்பளிக்கும் நீராகவும், ஆசம நீயமாகவும் கொள்கிறான் அவன் என்று கருத்து. (கீழ் தாழ்ந்து அருவி உகு மதத்தால் கால்கழுவி) தலையிலிருந்து கீழே இறங்கி, அருவிகள் போலே காலில் வந்து விழுகிற மதநீராலே கால்கழுவி. தன்னடையே காலில் விழுவதைப் பாத்₃யமாக அவன் கொள்கிறான் என்று கருத்து. ஆக, பரமபுருஷனை ஸேவிக்குமுன் கால்கழுவி, வாய்கொப்பளித்து, ஆசமனம் செய்துவரவேணடும் என்னும் நியமம் இவ்விலங்கிற்குக் கோல்விழு[illegible]டாலே ஸித்₃தி₄த்து

யாதி) கையாலே மிக்க மதுவையுடைத்தாய், அலராநின்ற பூவைக்கொண்டு களிறானது விறல்வேங்கடவனையே கண்டு வணங்கும். விறல்வேங்கடவனென்று—திருமலையில் திர்யக்குக்களும் தன்னை வணங்கும்படி ஜ்ஞானத்தைக்கொடுக்கவல்ல ஶக்தியையுடையவனென்கிறது. ஜ்ஞாநகார்யமான ஸமாஶ்ரயணத்தை தேஶவாஸத்தாலே பண்ணிவைக்கும். 70.

71. களிறு முகில்குத்தக் கையெடுத் தோடி
ஒளிறு மறுப்பொசிகை யாளி—பிளிறி
விழக் கொன்று நின்றதிரும் வேங்கடமே மேலுள்
குழக்கன்று கொண்டெறிந்தான் குன்று.

---

துதிக்கையாலே மிக்க மதத்தைப் பண்ணக்கடவ தேனை யுடைத்தாய் அப்போதலர்ந்த செவ்விப்பூக்களைப் பொய்கைகளிலே புக்குப் பறித்துக்கொண்டு ஶாஸ்த்ரவஶ்யமல்லாத திர்யக்குக்களுக்கும் ஸ்வவிஷயத்தில் ஜ்ஞாநப்ரேமங்களை விளைக்கவல்ல பெருமிடுக்கனை திருவேங்கடமேயவெந்தையைக் கண்டு தலையார வணங்கி ஆஶ்ரயியாநிற்கும் அங்குண்டான ஆனையானது. மதமென்று கந்தமாய், மிக்க கந்தத்தையும் தேனையுமுடைய செவ்விப்பூக்களைக் கொண்டென்னவுமாம். 70.

---

விடுகிறது என்றபடி. (கையால் மிகுமதத்தேன் விண்ட மலர் கொண்டு) துதிக்கையாலே, மிக்க மதத்தை விளைக்கும் தேனை உடையதாய், அப்போதலர்ந்ததான செவ்விமலர்களைப் பொய்கைகளிலே புகுந்து பறித்துக்கொண்டு; அன்றிக்கே, மதம் என்றது மணமாய், மிக்க மணத்தையும், தேனையுமுடைய செவ்விப்பூக்களைக் கொண்டு என்றும் பொருள் கொள்ளலாம். (விறல் வேங்கடவனையே) ஶாஸ்த்ர விதிநிஷேதங்களுக்கு வசப்படாத அறிவற்ற விலங்குகளுக்கும் தன் விஷயத்தில் அறிவையும் அன்பையும் விளைக்கவல்ல மஹாபலத்தையுடைய திருவேங்கடத்தானையே. (கண்டு வணங்கும்) கண்டு, தலையார வணங்கி ஆஶ்ரயிக்கின்றது. ஆக, ஜ்ஞானத்தினால் உண்டாகக் கூடிய ஆஶ்ரயணத்தை தேஶவாஸத்தைக் கொண்டே எம்பெருமான் விலங்குகட்கும் விளைக்கிறானையாலே, இவனை ஆஶ்ரயிப்பதற்குத் தகுதிவேண்டுமோ என்று அஞ்சவேண்டா என்றாராயிற்று. 70.

களிறு—யானையானது. கை எடுத்து ஓடி—தனது துதிக் கையை எடுத்துக்கொண்டு வேகமாயோடி. முகில்—(மத யானைபோலெழுந்த) மேகங்களை. குத்த— (எதிரி யானை யென்று நினைத்துக்) குத்த. யாளி— இதைக்கண்ட யாளி யானது. ஒளிறு மருப்பு— அந்த யானையினுடைய ஒளி வீசும் கொம்பை. ஒசி—முறிக்கிற. ஃகை—துதிக்கையை உடைத்தாய்க்கொண்டு. பிளிறி விழ கொன்று— அந்த யானை) வாய்விட்டலறிக்கொண்டு விழும்படி (அதனைக்) கொன்று. நின்று அதிரும்—அங்கேயே நின்றுகொண்டு பெருமுழக்கம் செய்யப்பெற்ற. வேங்கடமே-திருவேங்கடமே. மேல் நாள்—முன்பொருகாலத்தில். குழ கன்று கொண்டு— இளங்கன்றை (எறிதடியாகக்) கொண்டு. எறிந்தான்— (விளங்கனிமீது) எறிந்த பிரானுடைய குன்று-திருமலையாம்.

வ்யா:—(களிறித்யாதி) கையையெடுத்துக்கொண்டோடிக் களிறானது முகிலைக்குத்த. (ஒளிறித்யாதி) ஆனையினுடைய

---

அவ:—வ்ரோதி₄ நிரஸநஸ்வப₄ாவனானவன் நின்றருளின திருமலை வ்ருத்தாந்தத்தை அனுப₄வித்து இனியராகிறார்.

உரை:— ஆனையானது தன் துதிக்கையை எடுத்துக் கொண்டு பெரிய வேக₃த்தோடே சென்று * மதயானை போலெழுந்த மாமுகிலை ப்ரதிக₃ஜமென்று பு₃த்₃தி₄பண்ணிக்

---

71. அவ:—விரோதி₄ நிரஸனத்தையே இயல்வாகக் கொண்ட வன் வாழும் திருமலையில் விலங்குகளும் அவ்வியல்வையே கொண்டி ருக்கின்றன என்று அநுப₄விக்கிறார்.

வ்யா:—(களிறு கையெடுத்து ஓடி முகில் குத்த) யானையானது. "மத யானை போல் எழுந்த மாமுகில்காள்" [நாச்-திரு8-9] என்றும். " கரியமாமுகிற் படலங்கள் கிடந்தவை முழங்கிடக் களிறென்று" [பெரிய திருமொழி1-2-10] என்றும் கூறுகிறபடியே மங்குல் தோய் சென்னி வடவேங்கடமலையிலே முழங்கிவரும் கரிய மேகத்தைத் தனக்கு எதிரியான மற்றொரு யானை என நினைத்து, தனது துதிக்கையைத் தூக்கிக்கொண்டு ஓடிச்சென்று குத்த. "கையெடுத்

வெண்மருப்பை முறியாநின்ற யாளி. கையெடுத்தோடியென்று யாளிக்காகச் சொல்லவுமாம். (பிளிறியித்யாதி) ஆனையானது பிளிறிக்கொண்டு விழும்படிக்கீடாகக் கொன்று சினத்தாலே நின்றதிராநின்ற திருமலை. (மேனுளித்யாதி) ஸஹஜஶத்ருக்களை முடித்து விரோதி₄ போகப்பெற்றதென்று உகந்து நிற்குமவனுடைய திருமலையிறே. 'திருமலையில் பின்னை ஒன்றுக்கொன்று ப₃ாத₄கமாகுமோ?'என்னில். அக்₃நீஷோமீய ஹிம்ஸையோபாதியிறே அவற்றுக்கும். 71.

---

குத்த. இத்தைக் கண்ட யாளியானது—அந்த யானையினுடைய. வெளுத்த நிறத்தையுடைத்தான கொம்பை அநாயாஸேந முறியாநின்ற கையையுடைத்தாய்க்கொண்டு. அது—வாய்விட்டு அலறிக்கொண்டு முறிந்துவிழும்படி கொன்றுபோகட்டு, பின்னையும் சீற்றம் மாறாதபடியாலே இவ்விடந்தன்னிலே நின்று க்ஷுத்₃ரம்ருக₃ங்கள் மண்ணுண்ணும்படி க₃ர்ஜியாநிற்கும் வேங்கடமே முன்பொரு நாளிலே குழக்கன்றைக்கொண்டு விளங்கனி எறிந்தவனுடைய திருமலை. 71.

---

தோடி'' என்பதை மேலேயும் கூட்டிப் பொருள்கொள்ளலாம். (கையெடுத்து ஓடி ஒளிறு மருப்பு ஓசி கை யாளி) 'இந்த யானைக்கு இத்தனை மதமா' என்று சீறி, தன் துதிக்கையைத் தூக்கிக்கொண்டு ஓடி, அந்த யானையின் ஒளிவீசும் வெளுத்த தந்தத்தை வாழைத் தண்டை ஒடிப்பதுபோலே எளிதில் ஒடித்த துதிக்கையை உடைய யாளியானது. (பிளிறி விழக் கொன்று) கொம்பை ஒடித்ததுடன் நில்லாமல், அந்த யானை வாய்விட்டு அலறிக்கொண்டு சறிந்து விழும்படி அதைக்கொன்று. (நின்று அதிரும் வேங்கடமே) இதன் பின்னும் சீற்றம் தணியாமையாலே, அவ்விடத்திலேயே நின்று. மற்ற காட்டு மிருகங்களெல்லாம் இவ்வொலியைக் கேட்டு மயங்கி மண்ணில் விழும்படியாகப் பெருமுழக்கம் செய்யப்பெற்ற திருமலையே. (மேல் நாள் குழக்கன்று கொண்டெறிந்தான் குன்று) முன்பொருநாள் இளங்கன்றை எறிதடியாகக் கொண்டு விளங்கனிமீது எறிந்து கன்றாகவும், விளவாகவும் வந்த அசுரர் இருவரையும் அழித்தவன் வாழும் மலையாகும். தனக்கு இயல்வான எதிரிகளை

பெரிய வ்யா:-(ஒருருவனல்லே) ''नित्यो नित्यानां'' (நித்யோ நித்யாநாம்) என்கிறபடியே ஸர்வவிஸஜாதீயம் என்கிறதன்று உனக்கு வடிவு. (ஒளிஉருவம் நின்னுருவம்) ''भक्तानां त्वं प्रकाशसे''

உரை:— உன் படி பார்த்தால், என்றும் ஒருபடிப்பட ஸ்வதந்த்ரமாயிருப்பதொரு ஸ்வரூபத்தை உடையையல்லே. ''भक्तानां त्वं प्रकाशसे'' (ப₄க்தாநாம் த்வம் ப்ரகாஶஸே) என்கிறபடியே உன்னை ஆஶ்ரிதரிட்ட வழக்காக்கி, அத்தாலே புகர்

வ்யா:— (ஓர் உருவனல்லே) உன் தன்மையைப் பார்த்தால், என்றும் ஒன்றுபோலேயிருக்கும் ஸ்வாதந்த்ரியமாகிற ஸ்வரூப நிரூபகத₄ர்மத்தை உடையவனல்லே. (ஓர் உருவன் அல்லே) ஒரு படிப்பட்டிருக்கும் ஸ்வரூபத்தை—ஸ்வரூபநிரூபகத₄ர்மத்தை-உடையவன் அல்லே. இங்கு ப்ரகரணானுகுணமாக ஸ்வாதந்த்ரியமே அந்த ஸ்வரூபமாகிறது. அன்றிக்கே, (ஓர் உருவன்) ''நித்யோ நித்யாநாம் சேதநஶ்சேதநாநாம் ஏகோ ப₃ஹூநாம் யோ வித₃த₄ாதி காமாந்'' [கட 2-5-13] [நித்யரான பல சேதநர்களுக்கிடையே நித்யனான எந்த ஒரு சேதனன் இஷ்டங்களை அளித்துக் கொண்டிருக்கிறானோ] என்கிறபடியே, மற்ற எல்லாச் சேதனர்களைக் காட்டிலும் மேற்பட்டிருக்கும் ஒப்பற்ற ஒரே சேதனன் என்னும் பெருமை உன்னுடைய ஸ்வரூபநிரூபகத₄ர்மமன்று என்கிறதாகவுமாம். 'அப்படியாகில் என்னுடைய ஸ்வரூப நிரூபகத₄ர்மம் எது?' என்று எம்பெருமான் திருவுள்ளமாக, ஆஶ்ரிதபாரதந்த்ரியமே அது என்கிறார்.—(ஒளியுருவம் நின்னுருவம்) ''ந தே ரூபம் ந சாகாரோ நாயுத₄ாநி ந சாஸ்பத₃ம்| தத₂ாபி புருஷாகாரோ ப₄க்தாநாம் த்வம் ப்ரகாஶஸே||'' [ஜிதந்தே] [உன்னுடைய ஸ்வரூபம், திருமேனி, ஆயுத₄ங்கள், இருப்பிடம் ஆகியவை உனக்காக ஏற்பட்டவையல்ல. அப்படியிருந்தபோதிலும் பெருமையுடையவனாகவும் இருக்கிறாய்; பக்தர்களுக்குப் பரதந்த்ரனாயிருந்துகொண்டே நீ பிரகாஶிக்கிறாய்] என்கிறபடியே உன்னை நீயே உன் ஸங்கல்பத்தாலே அடியாரிட்ட வழக்காக்கி, அதனாலே புகர்பெற்றுப் பிரகாஶிப்பவனாயிருக்கையே உனக்கு நிலையாயிருக்கும் ஸ்வரூபநிரூபகத₄ர்மம். ஸ்வாதந்த்ரியம், ஆஶ்ரிதபாரதந்த்ரியம் என்னும் இரண்டுமே அவனுக்கு ஸ்வரூப நிரூபகத₄ர்மமாயிருந்தபோதிலும், கிருபை தலையெடுக்கும்போது ஸ்வாதந்த்ரியம் தலைசாயுமாகையாலும், ஆஶ்ரிதபாரதந்த்ரியம்

வ்யா:— (குன்றித்யாதி) திருமலைக்குக் கீழிழியில் குடிப் பழியாம் குறவருடைய பெண்கள். (கோல்வளைக் கையித்யாதி) குறவருடைய பெண்கள்கோல்வளையையுடைத்தான கையாலே சென்று விளையாடுகிற கழலானது போய். உஜ்ஜ்வலமான

உரை:— திருப்பதியினின்று இழிகை குடிப்பழி என்று நினைத்துத் திருமலையொன்றையுமே உடையராய்க்கொண்டு வேங்கடத்தைப் பதியாக வாழக்கடவராய். ஸ்வேச்சை யிலே சென்று விளையாடும் குறப்பெண்களுடைய தர்சநீய மான வளையை உடைத்தான கையானது, பசுமையாலும் சுற்றுடைமையாலும் ஒழுகுநீட்சியாலும் அழகிய மூங்கில் களைவென்று. அதுக்குமேலே உஜ்ஜ்வலனான சந்த்ரனை

வ்யா:—(குன்று ஒன்றினைய குறமகளிர்) திருமலையினின்று கீழே இறங்குவதைத் தம் குடிக்குப் பழியாகக்கொண்டு திருமலையொன் றையுமே உடையவர்களாய், * வேங்கடத்தைப் பதியாக வாழக் கடவர்களான குறத்திகள். (சென்று விளையாடும் குறமகளிர்) மலையின் சிகரங்களிலேஇஷ்டப்படி சென்று விளையாடும் குறத்திகள். இவர்கள் சென்று விளையாடும் மலைச்சிகரங்களின் உயரத்தின் மிகுதி யைக் காட்டுகிறார் மேலே,—(கோல்வளைக்கைத் தீங்கழை) அழகிய வளைகளை அணிந்த கைகளாலே ஊஞ்சலாடுகைக்காக வளைக்கப்பட்ட அழகிய மூங்கில்கள். கோல்—கோலம்; அழகு. (போய்) வளைவு நீங்கியபின் சந்திரமண்டலத்தளவும் சென்று. (வென்று) கிரஹண காலத்தில் சந்திரனைப் பிடிக்கவந்த ராஹுவைக் குத்தி வெற்றி கொண்டு. (விளங்கு மதிகோள் விடுக்கும் வேங்கடமே) பிரகாசியா நிற்கும் பூர்ண சந்திரனை கிரஹணத்தினின்று விடுவிக்கப்பெற்ற திருமலையே. இவ்வுயர்வுநவிற்சி(அதிசயோக்தி)யாலே திருமலைச் சிகரங்களின் ஓக்கமும், அதில் வளர்ந்திருக்கும் மூங்கில்களின் உயர்த்தியும் உணர்த்தப்பட்டன. இது பெரியவாச்சான் பிள்ளையும் அப்பிள்ளையும் கடைசியாக உணர்த்திய பொருள். அப்பிள்ளை வேறு பலபடியாகக் கொண்ட பொருள்கள். இனி விவரிக்கப் படுகின்றன: (குன்றொன்றினைய சென்று விளையாடும் குறமகளிர்) பொருள் முன்போலவே. இனி, அவர்களுடைய வளைக்கையின் சிறப்பு பேசப்படுகிறது. (கோல் வளைக்கை) அழகிய வளையணிந்த கைகள். (தீங்கழை வென்று) பசுமையாலும், கணுக்களிலாறியே

சந்த்₃ரனே ராஹுவானது க்₃ரஹிக்கவொண்ணுதென்று வென்று சந்த்₃ரனுக்கு அந்த வ்யஸநத்தைப்போக்கும் திருமலே பாமபத₃த்தில் தன்னேடொக்க (த்₃வி?)த்₃வாத₃ஶவார்ஷிக

*க்₃ரஸிக்க ஒருப்படுகிற ராஹுவால் வந்த அவன் வ்யஸநத்தைப் போக்கும் திருமலேயே—ஸர்வோத்தமராய், நிரந்தராநுப₄வத்தாலே நித்யயௌவந ஸ்வப₄ாவரான நித்யஸூரிகளுக்கு ஸ்வாமியானவன் விரும்பி வர்த்திக்கும் ஸ்த₂ாநம். விளையாடும் குறமகளிர் கோல்வளைக்கையானது சென்று நல்ல மூங்கிற்செறிவைநீக்கிக் கிரணங்களை உடைய சந்த்₃ரன் இங்குப் புகுரப்பெறுமையாலுண்டான இடரை நீக்கும்—என்றுமாம். அன்றிக்கே, அவர்கள் வளையின் ஒளி சந்த்₃ரனெளி புகுரப்பெறுத மூங்கிலிருளை அறுத்து வெளி*

உருண்டு நீண்டிருப்பதாலும் அழகிய மூங்கில்களை வென்று. (போய்) அதற்கும் மேலே சென்று. (விளங்கு மதி கோள் விடுக்கும் வேங்கடமே) விளங்காநிற்கும் பூர்ண சந்திரனைப் பிடிக்க வந்த ராஹுவைத் தம் ஒளியாலும், வளையொலியாலும் விரட்டி, சந்திரனைகிரஹணத்தினின்று விடுவிக்கப்பெற்றதிருமலேயே. இவ்வுயர்வு நவிற்சியால் குறமகளிருடைய வளைக்கையின் சிறப்பு பேசப்பட்டது. இனி, உயர்வு நவிற்சியல்லாததொரு பொருள்: (குன்றுென்றிய விளையாடும் குறமகளிர் கோல்வளைக்கை) பொருள் முன்போல். (சென்று) மூங்கிற் புதரிருக்குமிடம் சென்று. (தீங்கழை போய் வென்று) சந்திரகிரணம் உட்புகமுடியாதபடி மூடிக் கொண்டிருக்கும் நல்ல மூங்கிலின் செறிவைநீக்கி. (விளங்கு மதி கோள் விடுக்கும் வேங்கடமே) கிரணங்களால் பிரகாசிக்கும் சந்திரன அக்கிரணங்களால் திருமலேயில் புகப்பெறுமையால் உண்டான துன்பத்தை நீக்கும். இத்தால் திருமலேயில் வளரும் மூங்கிற் புதர்களின் செறிவைக் கூறுவதன்மூலம் திருமலேயின நில வளம் உணர்த்தப்பட்டது மற்றுமொரு உயர்வு நவிற்சிப்பொருள்: (குன்றுென்றிய—விளையாடும்—குறமகளிர் கோல் வளைக்கை) பொருள் முன்போல். (தீங்கழை போய் வென்று) சந்திரனுடைய கிரணமும் நுழையப் பெறுத அழகிய மூங்கிற் புதரையும் தம் வளையின் ஒளியாலே இருளறுத்து வெட்ட வெளிச்சமாக்கி வெற்றி கொண்டு. (சென்று) அப்புதரை ஊடறுத்துக்கொண்டு சந்திர

ரான நித்யஸூரிகளுக்கு ஶேஷியானவனிடம். "தீங்கழை" என்று இவர்கள் ஊஞ்சலாடுகைக்குப் பிடித்து விளையாடும் மூங்கிலாகவுமாம். 72.

---

யாக்கிச் சந்த்ரன். மறுவையும் போக்கும்—என்றுமாம். அங்ஙனுமன்றிக்கே. குறமகளிர் கோல்வளைக்கையாலே ஊஞ்சலாடுகைக்காக வளைத்துவிட்ட மூங்கிலானது போய் விளங்குமதி கோள்விடுக்கும்—என்றுமாம். 72.

---

மண்டலத்தளவும் சென்று. (விளங்கு மதி கோள் விடுக்கும் வேங்கடமே) நன்கு புலப்படும்—சந்திரனின் மறுவாகிற களங்கத்தையும் தம் ஒளியாலே போக்கப்பெற்ற திருமலையே. இவ்வுயர்வு நவிற்சியால் குறமகளிருடைய கைவளையொளிச் சிறப்பு பேசப்பட்டது. இவ்வளவும், அப்பிள்ளை விவரித்த பொருள்கள். இனி, பெரியவாச்சான்பிள்ளை "தீங்கழை" என்று...மூங்கிலாகவுமாம்—என்று இரண்டாம் பொருளில் "தீங்கழை" என்பதைப் பாடபேதமாகக் காட்டுகையாலே, முதற்பொருளில் அவர்க்குத் தீங்கழை என்று பாடமன்று; "தீங்கழல்" என்பதே அவர் கொண்ட முதல் பாடமாகக் கடவது. தீங்கழலுக்கு 'விளையாடும்' என்று விஶேஷணமிட்டிருப்பதும் இப்பொருளிலேயே பொருந்தும். [இதை அறியாமல் "தீங்களை" என்று இரண்டாம் பாடங்கொண்டு, தீங்கழை மூங்கில் என்னுதல் பிழை" என்றெழுதினர் அரும்பதவுரைகாரர்] இனி, பெரியவாச்சான்பிள்ளை திருவுள்ளம்பற்றிய இம் முதற்பொருளின்படி பொருளை விவரிப்போம். (குற மகளிர் கோல்வளைக்கை சென்று விளையாடும் தீங்கழல்) குறவருடைய பெண்கள் கோல்வளையையுடைய தம் கைகளாலே சென்று விளையாடுகிற அழகிய கழற்கொடியானது; கழல்–கழற்கொடி. பெண்கள் கழல்களை உயரவெறிந்து விளையாடுவது வழக்கமன்றோ; அது சந்திரமண்டலத்தளவும் சென்றது என்கிருர் மேலே.—(போய்) சந்திரமண்டலத்தளவும் சென்று. (வென்று) ராஹுவின்மீது அடித்து அவனை வென்று. (விளங்கு மதி கோள் விடுக்கும் வேங்கடமே) பூர்ணசந்திரனின் கிரஹணத்துன்பத்தைப் போக்கப்பெற்ற திருமலையே. உயர்வு நவிற்சியான இப்பொருளிலும் திருமலையின் உயர்த்தியும், அங்குள்ள குறப்பெண்களின் வலிமையும் உணர்த்தப்படுகிறது. 'இவ்வளவு உயரமான இடத்தில் எழுந்தருளியிருப்பவன்தான் யார்' எனில்: (மேலை இளங்குமரர் கோமானிடம்) எல்லாவுலகிற்கும் மேலான

73. இடம்வலமேழ் பூண்ட இரவித் தேரோட்டி
வடமுக வேங்கடத்து மன்னும்—குடநயந்த
கூத்தனாய் நின்றான் குரைகழலே கூறுவதே
நாத்தனா லுள்ள நலம்.

**இடம் வலம்**–இடப்புறமும், வலப்புறமும். **ஏழ் பூண்ட**–ஏழு குதிரைகளைப் பூண்ட. **இரவி தேர்**—ஸூர்யனுடைய தேரை. **ஓட்டி**—(அந்தர்யாமியாயிருந்துகொண்டு) நடத்துகிறவனும். **வட முகம் வேங்கடத்து மன்னும்**—வடதிசையில் உள்ள வேங்கடத்தில் நித்யவாஸம் பண்ணுமவனும். **குடம் நயத்த கூத்தன் ஆய் நின்றான்**—ஆசையோடு குடக்கூத்தாடின கண்ணபிரானாய் அவதரித்தவனுமான பெருமானுடைய, **குரை கழல் கூறுவதே**—ஆபரண ஒலி பொருந்திய திருவடிகளைத் துதிப்பதே. **நா தன்னால் உள்ள நலம்**—நாவினால் கொள்ளக்கூடிய பயன்.

---

**அவ:**— திருமலையிலே நின்றருளின மனோஹாரி சேஷ்டிதங்களையுடையனானவன் திருவடிகளை ஏத்துகையே நாவால் கொள்ளும் ப்ரயோஜநம் என்கிறார்.

---

பரமபதத்தில் எப்போதும் எம்பெருமானை அனுபவிப்பதால் அவனைப்போலே இருபத்துநான்கு வயஸ்ஸு நிறைந்தவர்களாகவேயிருக்கும் நித்யஸூரிகளுக்கு ஸ்வாமியானவன் வாழும் இடமன்றோ இது; இது இத்தனை உயரமாயிருப்பதில் வியப்பில்லை என்று கருத்து. மேலே—எல்லாவுலகிற்கும் மேலான பரமபதத்திலே என்றபடி; அன்றிக்கே, ஜீவர்கள் அனைவரிலும் மேம்பட்ட இளங்குமரர் என்று நித்யஸூரிகளுக்கு விசேஷணமாகவுமாம். ஆக, அயர்வறும் அமரர்களதிபதியைத் திருமலையிலே கண்டு களிக்கலாம் என்றாராயிற்று. 72.

73. அவ:—திருமலையிலே நின்றருளியவனாய், நெஞ்சையீர்க்கும் செயல்களையுடையவனான பெருமானுடைய திருவடிகளைத் துதிக்கையே நாப்படைத்த பயனாகும் என்கிறார்.

வ்யா:— (இடம் வலம் ஏழ் பூண்ட இரவித்தேர் ஓட்டி) இடப்புறத்திலும், வலப்புறத்திலுமாக ஏழு குதிரைகள் பூட்டப்பெற்ற

வ்யா:— ( இடமித்யாதி ) இடத்திலும் வலத்திலுமாக ஏழு குதிரை பூண்ட ஆதித்யனுடைய தேரை ஓட்டி; ஏழ் பூண்ட ஆதித்ய ரதத்தை மஹா மேருவுக்கு வலமே இடமாக-மார்க்கமாக ஒட்டி என்றுமாம். இரவியினுடைய தேரை பாரத ஸமரத்திலே நடத்தி என்றுமாம்.

---

உரை:-மேருவுக்கு இடமாயும் வலமாயும் ஸஞ்சரிக்கக்கடவதாய், ஏழு நாமத்தை உடைத்தாயிருப்பதாய் ஏழுகுதிரை பூண்ட ஆதித்யர்தத்தை தகுந்தர்யாமியாய்க்கொண்டுஓட்டி,

---

ஸூர்ய ரதத்தை (ஸூர்யனுக்கு அந்தர்யாமியாயிருந்து கொண்டு) ஓட்டி. ( இடம் வலம் ஏழ் ) மேருவுக்கு இடப்புறத்திலும் வலப்புறத்திலும் ஸஞ்சரிக்கும் ஏழு நாமத்தையுடைய ஏழு குதிரைகள் என்றுமாம். (ஏழ் பூண்ட இரவித்தேர் இடம் வலம் ஓட்டி) என்று அந்வயிக்கவுமாம. '' ஸப்த யுஞ்ஜந்தி ரதமேகசக்ரம் '' [ஒரு சக்கரத்தையுடைய தேரை ஏழு குதிரைகள் இழுக்கின்றன] என்று வேதத்திலும்.

''ஹயாஸ்ச ஸப்த சந்தாம்ஸி
தேஷாம் நாமானி மே ஸ்ருணு।
காயத்ரீ ச ப்ருஹத்யுஷ்ணிக்
ஜகதீ த்ரிஷ்டுபேவ ச ||
அநுஷ்டுப் பங்க்திரித்யுக்தா:
சந்தாம்ஸி ஹரயோ ரவே: ||''

[ஸூர்ய ரதத்தின் ஏழு குதிரைகள் ஏழு சந்தஸ்ஸுக்களேயாகும்; அவற்றின் பெயர்களைக் கூறுகிறேன் கேளாய்:— (1) காயத்ரீ, (2)ப்ருஹதீ. (3)உஷ்ணிக், (4)ஜகதீ, (5)த்ரிஷ்டுப், (6)அநுஷ்டுப், (7) பங்க்தி என்று கூறப்படும் ஏழு சந்தஸ்ஸுகளே ஸூர்யனின் ஏழு குதிரைகளாகும்.] என்று உபப்ருஹ்மணங்களிலும், ''காரார் புரவி ஏழ் பூண்ட தனியாழித் தேரார் நிறைக்திரோன்'' என்று சிறிய திருமடலிலும் கூறப்பட்டது இங்கு அநுஸந்திக்கத்தக்கது. அர்ஜுனனிடமிருந்த இரவித்தேரை மஹாபாரத யுத்தத்திலே கண்ணனுயிருந்து நடத்தியதைக் கூறுவதாகவும் கொள்ளலாம். ( ஓட்டி ) நடத்தி; வினையெச்சம்; தேரோட்டி என்று தேரை ஓட்டியவன் என்று பெயர்ச் சொல்லாகவுமாம்.

(வடமுகவித்யாதி) வடக்கில் திக்கிலே உண்டான திருமலையிலே நித்யவாஸம் பண்ணுகிற. (குடாநயந்தவித்யாதி) குடமாடி நின்றவனுடைய ஆபரணவொலியையுடைத்தான திருவடிகளைக் கூறுகை நாவால் படைக்கும் ஸம்பத்து. குடக்கூத்தாடின இளைப்புகளத் திருமலையிலே வந்து நின்றான் போலே. 73.

74. நலமே வலிதுகொல் நஞ்சூட்டு வன்பேய்
நிலமே புரண்டுபோய் வீழ—சலமேதான்
வெங்கொங்கை யுண்டானை மீட்டாய்ச்சி யூட்டுவான்
தன்கொங்கை வாய்வைத்தாள் சார்ந்து.

---

வடக்கு திக்கில் ப்ரதாநமாயிருந்துள்ள திருமலையிலே நித்ய வாஸம் பண்ணாநின்றானுமாய் அத்யபிநிவிஷ்டனாய்க் கொண்டு குடமெடுத்தாடுகிற மநோஹாரிசேஷ்டிதத்தை உடையனாய் நின்றவனுடைய ஆபரணத்வனியை உடைத்தான திருவடிகளை ஏத்துகையே நாவால் கொள்ளும் ப்ரயோஜநம். 73.

---

ஒழ்பூண்ட இரவித்தேரை மஹாமேருவுக்கு வலமே இடமாக—வழியாக ஓட்டி என்றும் பொருள் கொள்ளலாம். இடம்—வழி. (வடமுகவேங்கடத்து மன்னும்) வடக்கு திக்கிற்கு முக்யஸ்தாநமாயிருக்கும் திருவேங்கடமலையிலே நித்யவாஸம் செய்கின்ற. முக முப்தம் முக்யம்' என்னும் பொருளை உடையது (குடம் நயந்த கூத்தனாய் நின்றான்) மிக விருப்பத்துடன் குடத்தைத் தலையில் எடுத்தேற்விட்டுக்கொண்டு கூத்தாடுகின்ற நெஞ்சைக் கவரும் செயலை உடையவனாய் நின்றவனுடைய. (நின்றான்) கண்ணனாயிருந்து குடக்கூத்தாடிய களைப்புத்தீர திருமலையிலே வந்து நின்றான் போலும்! (குரைகழலே கூறுவதே நாத்தன்னால் உள்ள நலம்) ஆபரணவொலியையுடைய திருவடிகளைத் துதிப்பதே நாப்படைத்த நற்பயனாகும். 73.

சலமே—வஞ்சனையாகவே, நஞ்சு—விஷத்தை. ஊட்டு—உண்பிக்க வந்த. வன்பேய்—கொடிய பூதனையானவள். நிலமே—பூமியிலே. புரண்டு போய் வீழ—(பிணமாய்) போய் சரிந்து விழும்படியாக. தான் சலமே—தானும் வஞ்சனையாகவே. வெம் கொங்கை—(அவளது) வெம்மைமிக்க முலையை. உண்டானை—அமுது செய்த கண்ணபிரானை. ஆய்ச்சி—யசோதையானவள். மீட்டு—(அப் பூதனையிடத்தில் நின்றும்) மீட்டு. ஊட்டுவான்—(தன்து முலைப்பாலை) உண்பிப்பதற்காக. சார்ந்து—அணுகிச் சென்று. தன் கொங்கை—தனது முலையை. வாய் வைத்தாள்—அவனது வாயிலே உண்ணக் கொடுத்தாள்; நலமே வலிதுகொல்—இந்தப் பரிவு மிகவும் வலிது போலும்!

வ்யா:—(நலமே வலிது கொல்) ஸ்த்ரீத்வப்ரயுக்தமான அச்சத்திற்காட்டில் ஸ்நேஹமே வலிதாகாதே! (சலமே தான் நஞ்சூட்டு வன்பேய்) தாய்வேஷத்தைக்கொண்டு நஞ்சூட்டுவதாக வந்த வலிய பேயானது. (நிலமே புரண்டு போய் வீழ)

---

அவ:— அவன் பக்கல் ஸ்நேஹமுடையாரில் யசோதைப் பிராட்டிதனை பரிவரில்லை கிடீர்! என்கிறார்.

உரை:— பேய்வடிவை மறைத்துத் தாய்வடிவுகொண்டு வருகையாகிற க்ருத்ரிமத்தாலே விஷத்தை புஜிப்பிப்பதாக ஒருப்பட்ட கடினசித்தையான பூதனையானவள் பூமியிலே பிணமாய் மறிந்துபோய் விழும்படியாக் வெவ்விய

---

74 அவ:— அவனிடம் அன்புடையவர்களில் யசோதைப் பிராட்டியைப்போலே பரிவுடையாரில்லை என்கிறார்.

வ்யா:— (சலமேதான் நஞ்சூட்டு வன்பேய்) பேய்வடிவை மறைத்துத் தாய்வடிவுகொண்டு வருகையாகிற வஞ்சனையாலே விஷத்தை முலைப்பாலில் கலந்து கண்ணனுக்கு ஊட்டுவதற்கு முயன்ற வலிய நெஞ்சத்தை உடைய பூதனையானவள். (நிலமே புரண்டுபோய் வீழ) கண்ணனை நிலத்தில் வீழ்த்த வேண்டுமென

நிலத்திலே புரண்டு விழும்படிக்கீடாக. (வெங்கொங்கை யித்யாதி) விஷமுலேயுண்டதுக்குப் பரிஹாரமாக அம்ருதத்தை யுடைத்தான தன் கொங்கையைக்கால்நடை தந்து சென்று

---

*முலையை அமுதுசெய்தவனை அவள் பக்கலினின்றும் மீட்டு. யசோதைப் பிராட்டியானவள் விஷத்துக்கு ப்ரத்யௌஷதமான அம்ருதத்தை பூஜிப்பிப்பதாக—கேட்ட இடத்திலே மோஹித்து விழாதே அவ்வளவும் கால்நடைதந்து சென்று கிட்டித் தன்னுடைய முலையை அவன் திருப்பவளத்திலே*

---

வந்தவள், பிணமாக அந்த நிலத்திலேயே தான் புரண்டுவிழும் படியாக. (வெங்கொங்கை உண்டானை) விஷங்கலந்ததாகையாலே வெம்மைமிக்க முலையை உண்டவனை. (சலமே தான் உண்டானை) என்றும் கூட்டிப்பொருள் கொள்ளலாம்; அவள் பேயாயிருந்தும் தாய்வடிவுகொண்டு வந்தாற்போலே, இவனும் வேற்றுமுலையென வெறுக்காதவனாய், தாய்முலைபோலே பாவித்துப் பரமபோக்யமாக "விடப்பால் அமுதா அமுது செய்திட்ட மாயன்" [திருவாய் 1-5-9] "பெற்றதாய்போல் வந்த பேய்ச்சி பெருமுலையூடு உயிரை வற்ற வாங்கி உண்டவாயான்" [பெரியதிரு 1-3-1] என்கிறபடியே முலைப்பாலோடு அவளுடைய உயிரையும் வஞ்சித்து உண்டான் என்றபடி. "பொய்யர்க்கே பொய்யனாகும் புட்கொடியுடைய கோமான்" [திருமாலை 15] என்றாரன்றோ தொண்டரடிப் பொடிகள். (மீட்டு) அவளுடைய பிடியிலிருந்து மீட்டு. மிகவும் பயந்த இடைச்சியான யசோதை பயங்கரவுருவை யுடைய பூதனையின் உடம்பில் அவளுடைய பிடியில் சிக்கி யிருந்த கண்ணனை விடுவிக்கவல்ல வலிமையுடையவளாவதே! என்று ஆச்சர்யப்படுகிறார். (ஊட்டுவான் தன் கொங்கை வாய் வைத்தாள்) விஷமுலை உண்டதுக்குப் பரிஹாரமாக மருந்தும் அமுதமுமான தன் முலைப்பாலை ஊட்டுவதற்காகக் கண்ணனுடைய விஷப்பாலுண்ட வாயிலே தன் முலையை வைத்தாள். இப்பிள்ளையால் முலையுண்ணப்பட்ட பேய் பிணமாகப் புரண்டு விழுந்திருப்பதைப் பார்த்தபின்னும் அஞ்சாதே தாய் முலைகொடுப்பதே! என்று ஆச்சர்யப்படுகிறார். (சார்ந்து) கேட்ட இடத்திலே மயங்கி விழவேண்டியிருக்க அப்பேய்ப் பிணமிருக்குமிடம் வரையில் நடந்து செல்லவல்லவளாவதே! அதுக்குமேல் அப்பேயைக் கண்ட பின்பும், அவள் பிணமாய்க் கிடப்பதைப் பார்த்த பின்பும் அவள்

அவன் வாயிலே வைத்தாள். (நலமே வலிதுகொல்) அச்சமும் ஸ்நேஹமுங்கூடினால் ஸ்நேஹமே வலிதாகாதே! 74.

75. சார்ந்தகடு தேய்ப்பத் தடாவியகோட் டுச்சிவாய்
ஊர்ந்தியங்கும் வெண்மதியி னொண்முயலை—சேர்ந்து
சினவேங்கை பார்க்கும் திருமலையே ஆயன்
புனவேங்கை நாறும் பொருப்பு.

---

கொடுத்தாள். ஆனபின்பு 'நம்மையிழக்கவிரில் செய்வதென்' என்று பயப்பட்டு மீளுகைக்கு உடலான அறிவிற் காட்டிலும் தன்னைப்பேணாதே அவனைப் பேணுகைக்கு உறுப்பான ப்ரேமமே வலிதாகாதே! ஒருத்தியுடைய ஸ்நேஹமிருக்கும்படியே! என்று வித்தகராகிறார். 74.

---

பிடிப்பிலிருந்து இவனை விடுவித்துத் தான் முலைகொடுக்கவும் வல்லவளாவதே! என்று ஆஸ்சர்யப்படுகிறார்.

"என்னொருவர் மெய்யென்பர்? ஏழுலகுண்டு ஆலிலையில்
முன் ஒருவனாய முகில்வண்ணா!—நின்னுருகிப்
பேய்த்தாய் முலைதந்தாள் பேர்ந்திலளால்! பேரமர்க்கண்
ஆய்த்தாய் முலைதந்தவாறு!"

என்று பொய்கையாழ்வாரும் இப்பரிவிலே ஆச்சரியப்பட்டாரன்றோ: இப்படி பயப்படாதே பரிவு காட்டியவள்தான் யாரென்னில்: (ஆய்ச்சி) இடைக்குலத்திலே பெண்ணாய்ப் பிறந்து பயத்தையே இயல்வாகக்கொண்ட ஒருத்தியன்றோ இச்செயலைச் செய்தாள்! என்கிறார். (நலமே வலிதுகொல்) பெண்மைக்குரிய பயத்தைக்காட்டிலும், தாய்க்குரிய பரிவே வன்மை மிக்கதுபோலும்! 'நம் உயிர் போய்விட்டால் என் செய்வது' என்று பயப்பட்டு மீளச் செய்யும் அறிவைக்காட்டிலும், தன்னை நோக்காமல் குழந்தையையே நோக்கச் செய்யும் அன்பே வலிதுபோலும்! என்று ஆஸ்சர்யப்படுகிறார். 'என்னொருவர் மெய்யென்பர்?' என்று பொய்கையாழ்வார் அருளியபடியே யசோதைக்கே உரியதான நம்பமுடியாததான ஆஸ்சர்யமன்றோ அவளுக்குக் கண்ணனிடமுள்ள இப்பரிவு. 74.

தையாலே மெள்ள ஸஞ்சரியாநின்ற ஶிகரத்திலே தேய்கை யாலே ஒளியையுடைத்தான சந்த்ரன்பக்கல் முயலை (சேர்ந்தித்யாதி) கிட்டிச் சினத்தாலே புலி படப்பார்க்கும் திருமலை. (ஆயனித்யாதி) இடையர்க்குக்காட்டில் மரங்களுடைய நாற்றம் சால ப்ரியமிறே. 75.

---

இட்டாற்போலே ஒளியையுடையனுயிருக்கிற சந்த்ரன் பக்கலுண்டான அழகிய முயலை. கோபத்தையுடைத்தான வேங்கைப் புலியானது கிட்டித் தனக்கு ஆமிஷமான முயலாகக் கருதி, பிடித்துக்கொள்ளுதல் விட்டுப் போதல் செய்யமாட்டாமல் எப்போதும் பார்த்தபடியே நிற்கும் திருமலையே—க்ருஷ்ணன் என்னதென்று அபிமானித்த ஸ்தலமாய். ஜாத்யுசிதமான தன்னிலத்தில் வேங்கைகள் நிரந்தரமாகப் பரிமளிக்கும் பர்வதம். 75.

---

னிடம் உள்ள. இத்தால் திருமலைச்சிகரத்தின் உயர்த்தியும், இனிமையும் உணர்த்தப்பட்டதாயிற்று. அதிஶயோக்தி (உயர்வு நவிற்சி) என்னும் அலங்காரம். (வெண்மதியின் ஒண் முயலைச் சேர்ந்து) முற்கூறிய சந்திரனிலிருக்கும் ஒளிபொருந்திய முயலை அணுகி; முயல் வடிவிலிருக்கும் களங்கத்தை நெருங்கி, அதை முயலென்றே மயங்கி என்றபடி. (சின வேங்கை பார்க்கும் திருமலையே) கோபத்தை உடைய வேங்கைப் புலி தனக்கு முயல் மாம்ஸம் கிடைத்தது என்று நாக்கில் ஜலம் சொட்டப் பார்க்கும். (பார்க்கும்) உண்மை முயலல்லாமையாலும், எட்டமுடியாமையாலும் பிடித்துப்போக முடியாது. மாம்ஸத்திலுள்ள ஆசையினலே விட்டுப்போகவும் இயலாது; ஆகையாலே அந்த முயலைப் பார்த்தபடியே நிற்கிறது. (சின வேங்கை பார்க்கும்) பார்த்த பாவையிலேயே அம்முயல் பட்டுப்போகும்படியாகப் பார்க்கும் என்றும் கொள்ளலாம். (திருமலையே ஆயன் புனவேங்கை நாறும் பொருப்பு) இத்தகைய செயல் நிகழும் திருமலையே—முற்கூறிய பூதநாஸம்ஹாரகனை கிருஷ்ணனலே தன்னுடையது என்று அபிமானிக்கப் பெற்றதாய், தன் நிலத்தில் வேங்கை மரங்கள் எப்போதும் மணம் வீசும் மலையாகும். காடுவாழ்சாதியான இடையர்க்குக்காட்டில் மரங்களுடைய மணம் மிகவும் இனிதாயிருக்குமாகையாலே, கண்ணன் இவ்விடத்திலே திருமலையப்பனுக நித்யவாஸம் செய்கிறுன் என்று கருத்து. 75.

76. பொருப்பிடையே நின்றும் புனல்குளித்தும் ஐந்து
நெருப்பிடையே நிற்கவும் நீர்வேண்டா—விருப்புடைய
வெஃகாவே சேர்ந்தானை மெய்ம்மலர்தூய்க் கை
அஃகாவே தீவினைக ளாய்ந்து. [தொழுதால்

நீர்—(ஓ உலகத்தவர்களே!) *நீங்கள்*, பொருப்பு இடையே—*மலைகளின் நடுவே*. நின்றும்—*நின்று கொண்டும்*, புனல்—*நீர்நிலைகளிலே*, குளித்தும்—*முழுகிக்கொண்டும்*, ஐந்து நெருப்பு இடையே—*பஞ்சாக்₃நி நடுவிலே*, நிற்கவும்—*நின்றுகொண்டும் தவஞ்செய்ய*. வேண்டா—*வேண்டியதில்லை*; விருப்பு உடைய—*(எல்லாராலும்) விரும்பத்தக்கதாயிருக்கின்ற*. வெஃகா—*திருவெஃகாவில்*, சேர்ந்தானை—*வந்து கண் வளர்ந்தருளும் பெருமானை*. மெய்—*ஒரு பயன் கருதாமல்*. மலர் தூய் கை தொழுதால்—*புஷ்பங்களைப் பணிமாறி வணங்கப் பெற்றால்*. தீ வினைகள்—*பாவங்களெல்லாம்*, ஆய்ந்து—*(நமக்கு இங்கு இடமில்லை என்று) ஆராய்ந்து, அறிந்து*. அஃகாவே—*சுருங்கிப்போகமாட்டாவோ? (அகன்றோடிப் போய்விடுமென்கை)*

அவ:—(பொருப்பிடை) ஸர்வேச்வரன் ஸம்ஸாரத்திலே புகுந்து தன்னுடம்பைப் பேணாதே நம்கார்யம் செய்யாநின்றான். நீங்கள் உடம்பை ஒறுக்கவேண்டா—என்கிறார்.

---

அவ:—*உடம்பை ஒறுத்து து₃ஷ்கரமான ஸாத₄னங்களை அனுஷ்டி₂த்து து₃:க்க₂ப்படவேண்டா; *வெஃகாவில் துயிலமர்ந்த வேந்தை ஆஶ்ரயிக்க ஸகல து₃:க்க₂ங்களும் தன்னடையே விட்டுப்போம் என்கிறார்.*

---

76. அவ:—ஸர்வேஶ்வரன் தன் உடம்பைப் பேணாமல் நம் கார்யம் செய்வதற்காக ஸம்ஸாரத்திலே புகுந்து கண்ணனாக அவதரித்ததோடு திருப்தியடையாமல் பல பல இடங்களில் அர்ச்சாவதாரமாகக் கோயில்கொண்டு எழுந்தருளியிருக்கிறான். அப்படியிருக்கும்போது அவனை உபாயமாகப்பற்றி ஸுக₂மாக வாழாமல் நீங்கள் உடலை வாட்டிக் கடுந்தவம் புரியவேண்டா என்கிறார்.

வ்யா:— (பொருப்பித்யாதி) பனிநாள் மலைகளில். பொய்கைகளிலே புக்குக் குளித்து. (ஐந்தித்யாதி) கோடை நாள் பஞ்சாக்நி மத்யஸ்தராய் நிற்கவும் வேண்டா.

---

உரை:— பனிகாலத்தில் மலைகளின் நடுவே நின்றும், குளிர்காலத்தில் பொய்கைகளிலே புக்கு நீரிலே முழுகிக் கிடந்தும், உஷ்ணகாலத்தில் பஞ்சாக்நி நடுவே நின்று வெந்து விழுந்தும் இப்படி க்ரூரமான ஸாதனங்களை அநுஷ்டித்து நீங்கள் து:க்கப்பட வேண்டா;

---

வ்யா:— (பொருப்பிடையே நின்றும்) பனிகாலத்தில் மலைகளின் நடுவே நின்றும: மலைச் சிகரங்களெல்லாம் பனிமூடியிருக்கும் பனிகாலத்தில் அவற்றினிடையே நின்று தவம் செய்வது மிகவும் கடினமன்றோ. (புனல் குளித்தும்) குளிர்காலத்தில் குளங்களின் உட்புகுந்து நீரிலே முழுகிக் கிடந்தும்; குளிர்மிக்க மழைகாலத்திலே குளிர்ந்த நீரினில் நின்று தவம்செய்வது மிகவும் கடினமன்றோ. (ஐந்து நெருப்பிடையே நிற்கவும்), கோடை காலத்தில் தன்னைச்சுற்றி நாற்புறமும் நாலு தீயை மூட்டிக்கொண்டு, மேலே ஸூர்யனாகிற பெருநெருப்பு காயும்போது தவம் செய்வதாகிற பஞ்சாக்னி மத்தியில் நிற்கவும். ஐந்து நெருப்புகளிடையே வெந்து விழும் இது மிகவும் கடினம் என்பது சொல்லாமலே விளங்கும். இப்படி மூன்று காலங்களில் மூவகைத்தவம் என்று அப்பிள்ளை நிர்வாஹம். பொருப்பிடையே நிற்பதும், புனல் குளிப்பதும் பனிகாலத்தில் என்பது பெரியவாச்சான்பிள்ளை நிர்வாஹம். ஆசார்யஹ்ருதய (சூ. 99) வியாக்கியானத்தில், உஷ்ண காலங்களில் பர்வதாக்ரத்திலும், பஞ்சாக்நிமத்யத்திலும் நின்றும், சீதகாலங்களில் அருக்கயமான தடாகத்திலே மூழ்கிக்கிடந்தும்" என்று மாமுனிகள் பொருப்பிடையே நிற்பதும், ஐந்து நெருப்பிடையே நிற்பதும் உஷ்ணகாலத்தில் எனக்கொண்டு நிர்வஹித்தார். (நீர் வேண்டா) நீங்கள் இப்படி 'ஊன் வாட வாட உயிர்காவலிட்டு உடலிற்பிரியாப் புலன் ஐந்தும் நொந்து தாம் வாட வாடத் தவம் செய்யவேண்டா' என்கிறார். நீங்கள் விரும்பும் பலனை எளிதில்பெற வழி இருக்கும்போது இப்படி எதற்காகக் கஷ்டப்பட வேண்டும்? என்று கருத்து.

(விருப்பித்யாதி) விரும்பப்படுவதான திருவெஃகாவிலே சேர்ந்தவனை. (மெய்ம்மலரித்யாதி) அநந்யப்ரயோஜநனாய் புஷ்பாத்₃யுபகரணங்களைக்கொண்டு ஆய்ந்து-அநுஸந்தித்துக்

---

அவனோடு அல்லாதாரோடு வாசியற ஸர்வரும் ஒருமிடறாய் விரும்பும்படியான திருவெஃகாவிலே—தன்னைப்பேணாதே நம்மை ரக்ஷிக்கைக்காக வந்து கண்வளர்ந்தருளினவனை ப்ரயோஜநாந்தரபரதையாகிற பொய் கலசாதே, அநந்ய ப்ரயோஜனராய்க்கொண்டு பூக்களை அக்ரமமாகப் பணிமாறி கையாலே அஞ்ஜலிப₃ந்த₄த்தைப்பண்ணி ஆஶ்ரயித்தால். து₃ஷ்

---

அவ்வழிதான் யாது என்ன. அருளிச்செய்கிறார் மேலே,—(விருப்புடைய வெஃகாவே சேர்ந்தானை) 'தன்னைக் கொள்வாருமுண்டோ?' என்று எதிர்பார்த்துப் பெருவிருப்பத்தைச் செய்து, திருவெஃகாவிலே தன்னைப் பேணாமல் நம்மை ரக்ஷிக்கத் தானே வந்து சேர்ந்திருப்பவனை. உம்மையும் அவனையும் சேரவைக்கும் புருஷகாரபூ₄தரான அடியார்களால் பெருவிருப்பத்தைச் செய்யப்படும் திருவெஃகா என்று புருஷகாரஸத்₃பா₄வத்தை அநுஸந்திக்கிறாராகவுமாம். ரஸிகர்களென்று பேர் பெற்றவர்கள் அனைவராலும் விரும்பப்படும் வெஃகா என்று தி₃வ்யதே₃ஶத்தின் இனிமையை அநுஸந்திக்கிறாராகவுமாம். ஆக, நீங்கள் அநுஷ்டிக்கும் ஸாத₄நாந்தரங்களைப்போலே கடி₂னமாகவும், விரஸமாகவுமிராமல், இது எளியதாகவும் ஸரஸமாகவுமிருக்கும் என்று கருத்து. இவன் விஷயத்திலும் ஏதாவது மெய்வருத்திக் கைசெய்யவேண்டாவோ? எனில்: ப்ராப்தஶேஷியான இவன் விஷயத்தில் ஸ்வரூபப்ராப்தமாய், மிகவினிதாய், மிக எளிதாயிருக்கும் புஷ்பாஞ்ஜலி ஸமர்ப்பிக்கை போதும் என்கிறார்.—(மெய்ம்மலர் தூய்கை தொழுதால்), மற்ற பலன்களில் பற்றுவைக்கையாகிற பொய் கலவாது, அவனையே பரமப்ராப்யமாகக் கொள்ளுகையாகிற மெய்ம்மையோடே கைக்குக் கிடைத்த மலர்களை முறைகெடப் பணிமாறி ஓர் அஞ்ஜலி செய்தால், (மெய்) உங்களைப்போலே ஶரீரஶ்ரமப்பட வேண்டா: பா₄வஶுத்₃தி₄யிருந்தால் போதும். மென்மலர் என்று பாட₂மானால் பறிக்க மிக எளிது என்று காட்டுகிறது. (மலர்) "பத்ரம் புஷ்பம்" "புரிவதுவும் புகை பூவே" [திருவாய் 1-6-1] என்கிறபடியே கைக்கெட்டினதொரு மலர் போதும். (தூய்) சடங்குமுறை யெதுவும்

கைதொழுதால். அசேதநமான கொடிய பாபங்கள்தான் தன்னையாஶ்ரயிக்க நிற்கவற்றோ? தீவினைகள் தானே ஆராய்ந்து நமக்கு நிலமன்றென்று போகாவோவென்றுமாம். "வ்ருஷ்டி-ப்ரதீக்ஷாஶ்ஶாலய:" (வ்ருஷ்டிப்ரதீக்ஷாஶ்ஶாலய:) என்னும் ந்யாயத்தாலே "சும்மெனாதே கைவிட்டோடித் தூறுகள்பாய்ந்தனவே" என்கிறபடியே. 76.

---

கர்மங்களடங்கலும் நமக்கு இவ்விடம் ஆஶ்ரயமன்று என்று அநுஸந்தி₄த்துத் தானே விட்டுப் போகாவோ? "சும்மெனாதே கைவிட்டோடி" என்னுமாபோலே சேதநஸமாதி₄யாலே சொல்லுகிறது. அன்றியே, மெய்ம்மலர் தூவி, ஆய்ந்து அவன் குணங்களை அநுஸந்தித்துக் கைதொழுதால் தீவினைகள் அஃகாவே என்னவுமாம். "மென்மலர்" என்று பாடமாகில் ம்ருது₃வான மலரை என்றுகிறது. 76.

---

வேண்டா, முறைகெட இடலாம். (கைதொழுதால்) 'எங்கள் கையில் ஒன்றுமில்லை' என்று காட்டும் அஞ்ஜலியைப் பண்ணினால் போதும். (ஆய்ந்து கைதொழுதால்) அவன் குணங்களை ஆராய்ந்து அஞ்ஜலியைச் செய்தால்: அவனுடைய ஸௌலப்₄ய ஸௌஶீல்ய வாத்ஸல்ய ஸ்வாமித்வங்களை ஆராய்ந்தால் 'இதுவும் மிகை' எனத்தோற்றும் அஞ்ஜலியைச் செய்தால். இவ்வெளிய செயலைச் செய்வதன் மூலம் பெறும் பலன் மிகப்பெரிது என்கிறார் மேலே.—(அஃகாவே தீவினைகள் ஆய்ந்து) நாம் அநாதி₃காலமாகச் செய்து வந்த பாபங்கள் அனைத்தும், 'இனி மடியொடுக்கி நிற்பதிலும் அடியெடுப்பதே அழகு' என்று ஆராய்ந்து. "நம்மன்போலே வீழ்த்தமுக்கும் நாட்டிலுள்ள பாவமெல்லாம் சும்மெனாதே கைவிட்டோடித் தூறுகள் பாய்ந்தனவே" [பெரியாழ்திரு 5-4-3] என்கிறபடியே தாமே விட்டுப் போகாவோ? 'ஆய்ந்து' என்பதை கீழும் மேலும் அந்வயிக்கலாம். (ஆய்ந்து அஃகாவே) ஆராய்ந்து பார்ப்பதற்குப் பாபங்களுக்கு அறிவுண்டோ? எனில்: "வ்ருஷ்டிப்ரதீக்ஷா: ஶாலய:" [பயிர்நெல் மழையை எதிர்பார்த்து நிற்கிறது] என்னுமாபோலே, சேதநஸமாதி₄யாலே—(பாபங்களைச் சேதனராகக் கற்பித்துச்)—சொல்லுகிறது. பு₄க₃வந்நிக்₃ரஹரூபமான பாபங்கள் 'அவன் பொறுத்தேன்' என்னத் தீரும் என்று கருத்து. ஆக, ப்ராப்தஶேஷி விஷயத்தில் ஸ்வரூப ப்ராப்தமான எளிய செயலைச் செய்து அரிய பலனைப்

77. ஆய்ந்த வருமறையோன் நான்முகத்தோன் நன்குறங்கில்
வாய்ந்த குழவியாய் வாளரக்கன்—ஏய்ந்த
முடிப்போது மூன்றேழென் றெண்ணினான் ஆர்ந்த
அடிப்போது நங்கட் கரண்.

ஆய்ந்த—ஆராய்ந்து கற்கப்பட்ட. அருமறையோன்—அருமையான வேதங்களையுடையவனான. நான்முகத்தோன்—சதுர்முக₂ ப்₃ரஹ்மாவினுடைய. நன் குறங்கில்—அழகிய மடியிலே. வாய்ந்த—நேர்பட்ட. குழவி ஆய்—இளங் குழந்தையாயிருந்துகொண்டு. வாள் அரக்கன்—ஆயுத₄முடைய இராவணனுடைய, ஏய்ந்த—(அறுப்புண்ணத்) தகுதிபெற்ற. போது முடி—மாலைகட்டிய தலைகளை. மூன்று ஏழ் என்று எண்ணினான்—மூன்றும் ஏழும் பத்து என்று (தனது திருவடியாலே) எண்ணிக் காட்டினவனுடைய. அடி போது — திருவடித்தாமரைகள், நங்கட்கு — நமக்கு. ஆர்ந்த அரண்—குறையற்ற உபாயம்.

அவ:— (ஆய்ந்தவருமறையோன்) கீழ் ஸர்வேஶ்வரனை ஆஶ்ரயிக்கவே உங்கள் பாபங்களெல்லாம் போமென்றது.

---

அவ:— பேரளவுடையரான ப்₄ரஹ்மாதி₃களும் விளைவதறியாமல் தங்களுக்கு ஆபத்தை விளைத்துக்கொள்ளத்

---

பெறலாயிருக்க, செயற்கரிய காரியங்களைச் செய்யவேண்டா என்றாராயிற்று. 76

77. அவ:—ஸர்வேஶ்வரனை ஆஶ்ரயிக்கவே, அவனுடைய நிக்₃ரஹரூபமான பாபமெல்லாம் தன்னடையே விட்டுப்போம் என்றார் சென்ற பாசுரத்தில். இப்பாசுரத்தில்— அதி₄கமான ஜ்ஞாநஶக்திகளையுடைய பிரமன் முதலானோரும் மேல் விளைவதறியாமல் தங்களுக்குத் தாங்களே ஆபத்தை விளைத்துக்கொள்ளத் தொடங்கினால், தான் முன்னின்று அவ்வாபத்தைப் போக்கி அவர்களையும் ரக்ஷிக்கவல்ல ஸர்வேஶ்வரனே நமக்குத் தஞ்சமாவான் என்கிறார். இப்பாட்டில் அநுஸந்திக்கப்படும் இதிஹாஸம் ''ஆமேயமரார்க்கறிய'' [முதல்-திருவ 45] ''கொண்டு குடங்கால்மேல்''

இதில் அளவுடையரான ப்₃ரஹ்மாதி₃களுக்கு வழிகேடாகப் புக்கால் பரிஹரிப்பான் அவன் என்கிறது.

வ்யா:— ( ஆய்ந்தவித்யாதி ) ஸர்வேஸ்வரனாலே ஓது விக்கப்பட்டு வேத₃ார்த்த₂நிருபணம் பண்ணவல்ல ப்₃ரஹ்மாவி னுடைய குறங்கிலே. ஸ்வாப₄ாவிகமான ஶேஷித்வமில்லாமை

---

தேடினால். ஏற்கவே அவ்வாபத்தைப் போக்கி அவர்களை ரக்ஷிக்கக்கடவ ஸர்வேஸ்வரன் திருவடிகளே நமக்கு ரக்ஷகம்—என்கிறார்.

உரை— அர்த்த₂ஸஹிதமாக ஆராய்ந்து அதி₄கரிக்கப் பட்ட பெறுதற்கரிய வேத₃த்தைத் தனக்கு நிரூபகமாக வுடையனான சதுர்முக₂னுடைய அழகிய மடியிலே நேர்.

---

[நான்-திருவ44] என்னும் பாசுரங்களிலும் அநுஸந்திக்கப்பட்டது. முன்பு இராவணன் தன் பத்து தலைகளையும் மறைத்துக்கொண்டு நான்முகனிடம் சென்று வரம் வேண்டிக்கொள்ளும் காலத்தில் எம்பெருமான் ஒரு சிறு குழந்தை வடிவாகி அவன் மடியிலே கிடந்து, 'இவன பத்துத் தலைகளையுடைய ராக்ஷஸன், ஏமாந்து போய் இவனுக்குக் கண்டகண்ட வரங்களைக்கொடுத்துவிட வேண்டா' என்று உணர்த்துவதற்காக ராவணனுடைய பத்து தலைகளையும் தன் திருவடியாலே எண்ணிக்காட்டினான் என்பது இப்பாசுரங்களில் தெரிவிக்கப்படும் வரலாருகும்.

வ்யா:— ( ஆய்ந்த அருமறையோன் ) "யோ ப்₃ரஹ்மாணம் வித₃த₄ாதி பூர்வம் யோ வை வேத₃ாம்ஶ்ச ப்ரஹிணோதி 'தஸ்மை" [ஶ்வே 6-18] [எவனொருவன் பிரமனை முன் படைத்து அவனுக்கு வேதங்களை உபதே₃ஶிக்கிறானோ] என்கிறபடியே நேரே ஸர்வேஶ்வரனிடமிருந்தே வேதம் ஓதுவிக்கப்பெற்று, அதன் பொருளையும் உணரவல்லவனாய். (நான்முகத்தோன்) அந்த நாலு வேதங்களையும் ஒரே காலத்தில் உச்சரிக்கலாம்படி நாலு முகங் களையும் உடையவனான பிரமனுடைய. இவ்விரண்டு பெயர்களாலும், இவன் பரம்பொருளிடமிருந்து உபதே₃ஶம் பெற்று ஶரீராதீ₄ன மான தொழில்களை உடைய ஒரு ஜீவனே என உணர்த்தப்படு கிறது. (நன குறங்கில்) ஸர்வேஸ்வரன் வந்து குழந்தையாய்க் கிடக்கையாலே அழகுபெற்ற மடியில். 'குறங்கு என்பது துடைக்குட்

யாலே புதுக்கும்பிடைக் கண்டு இறுமாந்து தங்கள் அநர்த்த$_{2}$ம் அறியாதே ராவணனுக்குத் தேடிற்றெல்லாம் கொடுக்கப்புக. இவனாலே நோவுபட்டாலும் நம்முடைய பாடேயிறே இவர்கள் 'வந்து விழுவது' என்று பார்த்து. (வாய்ந்த குழவியாய்) அழகிய பிள்ளையாய். (வாளரக்கன்) ஸாயுத$_{4}$னான ராக்ஷஸனுடைய. (ஏய்ந்தவித்யாதி) ராக்ஷஸனுடைய தலைகளை மௌக்$_{3}$த்$_{4}$யத்

---

பட்ட முக்$_{2}$த$_{4}$ஶிரா வாய்க்கொண்டு. ஸாயுத$_{4}$னான ராவணனுடைய அறுப்புண்கைக்குத் தகுதியான மாலைகட்டின

---

பேராயினும், இங்கு லக்ஷணையாலே மடியைக் குறிக்கும். (வாய்ந்த குழவியாய்) தானே வந்து ஆவிர்ப$_{4}$வித்த சிறு குழந்தையாய். பிரமனாலே ஸ்ருஷ்டிக்கப்படாமல், அவனுடைய அநர்த்த$_{2}$த்தைப் போக்கத்தானே வந்து தோன்றிய குழந்தை இது என்று கருத்து. அழகு வாய்ந்த குழந்தையாய் என்றும் பொருள் கொள்ளலாம். அப்படி என்ன அநர்த்த$_{2}$ம் அவனுக்கு வந்தது எனில்: வஞ்சகனான ராவணன் இப்பிரமனிடம் வரம் பெறுவதற்காகத் தான் பத்துத் தலை ராக்ஷஸன் என்பதை மறைத்துக்கொண்டு இப்பிரமனை வணங்கி நின்றான்; இப்பிரமனும் இயல்வாகவே வைலக்ஷண்யமில்லாதவனாகையாலே, புதுப்பணக்காரனை வந்தடைந்த செல்வம் போலே தன்னை வந்தடைந்த இப்புதுக்கும்பீட்டைக் கண்டு க$_{3}$ர்வங்கொண்டு, இவ்வரங்களைக் கொடுத்தால் நமக்கு வரப்போகிற அநர்த்த$_{2}$ங்கள் என்னவென்று ஆராயாமல், ராவணன் கேட்ட வரங்களையெல்லாம் கொடுக்கத் தொடங்கினவளவிலே, 'ஐயோ! இப்பிரமன் என்ன காரியம் செய்கின்றான். தன் கையாலேயே தன் கண்ணைக் குத்திக்கொள்வது போன்ற காரியமன்றோ இது, இப்படி வரத்தைக் கொடுத்துவிட்டுப் பின்னால் துன்புற நேரும் போது, அதைப் போக்கிக்கொள்ள நம் காலில்தானே விழப் போகிறான்; இப்போதே இவனை எச்சரிக்கை செய்வோம்' என்னும் திருவுள்ளத்துடன் ஒரு அழகிய குழந்தையாய் ஆவிர்ப$_{4}$வித்தான் என்று கண்டுகொள்வது. இப்படித்தோன்றி அவன் செய்த காரியம் யாது? எனில்: (வாளரக்கன் ஏய்ந்த முடிப்போது மூன்றேழென்று எண்ணினான்) சங்கரன் கொடுத்த வாளையுடைய ராக்ஷஸனான இவனுடைய தலைகள் பத்து என்று திருவடியாலே எண்ணிக்காட்டினான். "பூமேய மாதவத்தோன் தாள்பணிந்த வாளரக்கன் நீண்முடியைப் பாதம் அத்தால் எண்ணினான்" [முதல்

**தாலே மூன்றேழென்றெண்ணினவனுடைய அபேக்ஷிதத்தைச செய்யவற்றாய் போ₄க்₃யமான திருவடிகள் நமக்கு ரக்ஷை. 77.**

---

தலைகளைத் தன் மௌக்₃த்₄யம் தோற்ற மூன்றுமேழுமென்று அறுப்புண்கைக்கு யோக்₃யமென்னுமிடம் தோற்றத் திருவடிகளாலே எண்ணிக்காட்டி ப்₃ரஹ்மாவை ரக்ஷித்தவனுடைய போ₄க்₃யதையால் பரிபூர்ணமான திருவடிகளாகிற செவ்விப்பூக்கள், அகிஞ்சனராய் அநந்யப்ரயோஜனரான நமக்கு ரக்ஷை. 77.

---

திருவ45] என்றும், "கொண்டு குடங்கால்மேல் வைத்த குழவியாய், தண்ட வரக்கன் தலை தாளால் பண்டெண்ணிப்போம் குமரன்" என்றும் மற்றையாழ்வார்கள் அருளிச்செய்கையாலும். இவரும் மேலே 'எண்ணினான் அடிப்போது' என்கையாலும் திருவடிகளாலே எண்ணிக்காட்டினான் என்று இங்கும் பொருள்கொள்ளவேணும். (வாளரக்கன்) 'இவன் சங்கரன் கொடுத்த வாளை உடையவனாயிருக்கிறான் பார்!' என்று அதையும் சுட்டிக்காட்டினான்போலும்! (ஏய்ந்த முடிப்போது) அலங்க்ருத்ய ஶிரஶ்சே₂த₃ந்யாயத்தாலே அறுப்புண்கைக்குத் தகுதியாக மாலை கட்டி அலங்கரிக்கப்பெற்ற தலை. ஏய்ந்த— தகுதியான, முடிப்போது— போதுமுடி— மாலைகட்டின தலை. (ஆடு முதலானவற்றைத் தலையறுப்பதற்குமுன் அவற்றுக்கு மாலைபோட்டு அதன்பின் அவற்றைத் தலையறுப்பது அலங்க்ருத்ய ஶிரஶ்சே₂த₃மாகும்) (மூன்றேழென்றெண்ணினான்) இவன் தன் மற்ற தலைகளை மறைத்துவந்தானாயினும், 'மூன்றும் ஏழும் பத்து' என்று பள்ளிப்பாடம் படிக்கும் பிள்ளையைப்போலே 'இதோ பார் இவனுடைய பத்து தலைகளையும்' என்று எண்ணிக்காட்டிப் பிரமனை எச்சரிக்கை செய்தான். (ஆர்ந்த அடிப்போது நங்கட்கு அரண்) இப்படிச் செய்தவனுடைய நிறைவுடைய திருவடித்தாமரை நமக்குத் தஞ்சமாகும். ஆர்ந்த—பிரமனை எச்சரிக்கை செய்து, மனிதர்கள் தவிர்ந்த மற்றவர்களால் சாவில்லை என்று அவன் கேட்ட வரத்தை இசையச் செய்து, மனிதனாகத்தான் அவதரித்து இவனை அழிக்க இடம் பெற்று இவ்வண்ணமாக எண்ணினதை முடிக்கவல்ல நிறைவைச் சொல்லுகிறது. அடிப்போது—போது என்று புஷ்பமாக உருவகப்படுத்துவதன்மூலம் திருவடியின் இனிமையைக் காட்டுகிறது. 'ஆர்ந்த அடிப்போது' என்று இனிமையின் நிறைவைக் காட்டுவதாகப் பொருள்கொண்டார் அப்பிள்ளை. ஆக, அதி₄க

78. அரணும் நமக்கென்று மாழி வலவன்
முரனுள் வலம்சுழிந்த மொய்ம்பன்—சரணுமேல்
ஏதுகதி யேதுநிலை யேதுபிறப் பென்னுதே
ஓதுகதி மாயனையே யோர்த்து.

ஆழி — திருவாழியாழ்வானை. வலவன் — வலத்திருக் கையிலுடையவனும். முரன்—முராஸுரனுடைய நாள்— ஆயுளாலுண்டான. வலம்—வலிமையையும். சுழிந்த— போக்கின. மொய்ம்பன்—மிடுக்கையுடையவனுமான பெருமான். சரண் ஆம் ஏல்—ரக்ஷகனாக அமையும் பக்ஷத்தில், கதி ஏது நிலை ஏது பிறப்பு ஏது என்னுதே—(நம்முடைய) ஞானமென்ன!; ஒழுக்கமென்ன!, ஜன்மமென்ன! என்று (இவற்றின் தாழ்வுகளைப் பார்த்து) இகழாமல். நமக்கு என்றும் அரண் ஆம்—நமக்கு எல்லாக் காலத்திலும் ரக்ஷகனாகவேயிருப்பன்; மாயனையே—(ஓ நெஞ்சமே!) ஆஶ்சரியமான குணசேஷ்டிதங்களையுடையவனான அப்பெருமானையே, கதி—உபாயமாக. ஓர்த்து—உறுதிபூண்டு ஓது—அவன் திருநாமங்களை ஓதுவாயாக.

அவ:— (அரணும்) அவன் ஸர்வரக்ஷகனாகிலும் நம்முடைய ஜ்ஞாநவ்ருத்த ஜந்மங்களினுடைய கொற்றைபார்க்க வேண்டாவோவென்ன ; வேண்டாவென்கிறது.

---

அவ:— அவன் நமக்கு ஶரணமிடத்தில் நம்முடைய வித்யாவ்ருத்தங்களின் பொல்லாங்கைப்பார்த்து உபேக்ஷியாதே ரக்ஷகனும். ஆனபின்பு அவனுடைய திருநாமங்களைச் சொல் என்கிறுர்.

---

மான ஜ்ஞாநஶக்திகளையுடைய ப்ரஹ்மாதிகளையும் ரக்ஷிப்பவனே நமக்குத் தஞ்சம் என்றுராயிற்று. 77.

78. அவ:—அவன் நமக்கு உபாயமாம்போது நம்முடைய பிறவி ஒழுக்கம், அறிவு ஆகியவற்றின் தாழ்வைப் பார்த்து இகழாமல் நம்மை ரக்ஷிக்கிறுன். அப்படிப்பட்ட அவனுடைய திருநாமங்களைச் சொல்லு—என்று தம் நெஞ்சுக்கு உபதேஶிக்கிறுர்.

வ்யா:— (அரணுமித்யாதி) ஸர்வஶக்தி நமக்கு ரக்ஷையாம். வலவருகே திருவாழிபிடிக்குமவன் போலேகாணும் ரக்ஷகனுவான். தன்னைப் புரஸ்கரித்திறே "மாஶுச:" (மாஶுச:) என்றது. இவனுடைய அஹம்பு₃த்₃தி₄ ஶோக நிமித்தம்; அவனுடைய அஹம்பு₃த்₃தி₄ ஶோக நிவர்த்தகம். (முரானுள்வலஞ் சுழிந்த மொய்ம்பன்) விரோதி₄யைப்போக்கி ரக்ஷிக்க வல்லனென்னுமிடத்தை உபபாதி₃க்கிறது. முரனுடைய ஆயுஸ்ஸாகிற மிடுக்கை முடிக்கவல்ல மிடுக்கன்.

உரை— ரக்ஷணபரிகரமான திருவாழியை வலவருகே யுடையனுய், முராஸுரனுடைய ஆயுஸ்ஸால் வந்த ப₃லத்தைப் போக்கின மிடுக்கையுடையனுனவன் ரக்ஷகனுமிடத்தில்

வ்யா:—(அரணும் நமக்கு என்றும் ஆழி வலவன்) வலக்கையிலே ஆஶ்ரிதரக்ஷணத்திற்குறுப்பான திருவாழியைப் பிடிக்கவல்ல ஸர்வஶக்தியே நமக்கு என்றும் ரக்ஷகனுவான். சரமஶ்லோகத்திலே "அஹம்" என்று வலக்கையாழி இடக்கைச் சங்குமுடைய தன்னைச் சுட்டிக்காட்டியன்றோ 'மா ஶுச:' [நீ (உன் பாபங்களை நினைத்து) வருந்தாதே] என்றுன்: அதுபோலே இவரும் 'ஆழிவலவன்' என்று அவனைச் சுட்டிக்காட்டி அவன் நமக்கு ரக்ஷை என்கிறுர். இச்சேதனன் 'அஹம்' என்று அஹங்கரிப்பது ஸம்ஸார ஶோகங்களுக்கெல்லாம் காரணமாகிறது. அப்பரமன் 'அஹம்' என்று தன ஸர்வஜ்ஞத்வ ஸர்வஶக்தித்வங்களைக் காட்டுவது இவனுடைய ஸம்ஸார ஶோகங்களையெல்லாம் போக்கடிக்கிறது. ஆழிவலவன்' என்று திருவாழியை தரிக்கவல்லவன் என்கையாலே, இவனுடைய ஸர்வஶக்தித்வம் காட்டப்படுகிறது. விரோதி₄களாலுண்டாகும் தடையை என் செய்வது என்னில், அவை முரனுடைய ஆயுள் பட்டது படும் என்கிறுர்.—(முரன் நான் வலம் சுழிந்த மொய்ம்பன்) நரகாஸுரனுடைய மந்திரியான முரனுடைய ஆயுள் மிகுதியால் உண்டான ப₃லத்தைப் போக்கின ப₃லத்தையுடையவன்.(நாள்வலம்) என்றதற்கு'மிகுந்த ஆயுஸ்ஸால் உண்டான ப₃லம்'என்றும் 'மிகுந்த ஆயுஸ்ஸாகிற ப₃லம்' என்றும் இருவகையாகப் பொருள் கூறலாம். (சரணுமேல்) அவன் ஸர்வப்ரகாரரக்ஷகனுக நினைத்தாளுகில். 'ஏல்' என்பது அருமையைக் காட்டுகிறது. இப்படி அவன் ஸர்வப்ரகார ரக்ஷகனுகத் தன்னை ஆக்குவது ஸ்வப்ரவ்ருத்திலேஶமும் அற்றவர்களாய், அவன் கைபார்த்திருக்கும் சில அதி₄காரிகளுக்கே என்று கருத்து.

(சரணமேலித்யாதி) அவன் ரக்ஷகனுமிடத்தில்—ஜ்ஞாநமேது. வ்ருத்தமேது. ஜந்மமேது என்றாராயாதே. ஆழிவலவனரணும்—ஆஶ்ரயணீயனும் "समोऽहं सर्वभूतेषु न मे द्वेष्योऽस्ति न प्रियः" (ஸமோஹம் ஸர்வபூ₄தேஷு ந மே த்₃வேஷ்யோஸ்தி ந

---

ஏது ஜ்ஞானம், ஏது வ்ருத்தி, ஏது ஜன்மமென்று வித்₃யாவ்ருத்தஜன்மங்களினுடைய நிகர்ஷம் பார்த்து உபேக்ஷியாதே — ஆபந்நராய் ரக்ஷாபேக்ஷையுடையரான நமக்கு ஸர்வகாலத்திலும் ரக்ஷகனும். ஆனபின்பு நம்முடைய குற்றத்தைப் பார்த்துப் பிற்காலியாதே, ஶரண்யத்வைகாந்தமான ஆஶ்சர்யகு₃ணசேஷ்டிதங்களை உடையனவனையே உபாயமாக அத்₄யவஸித்து, அவன் திருநாமங்களை இடைவிடாமல் நெஞ்சே! சொல்லு; "நேர்படு

---

இனி, அவன் ஸர்வப்ரகார ரக்ஷகனைத் திருவுள்ளம்பற்றி விட்டானாகில், அவனுடைய க்ருபை கரைகட்டாக் காவேரிபோல் பெருகுவதை அருளிச்செய்கிறார்.— (ஏது கதி ஏது நிலை ஏது பிறப்பு என்னாதே அரணும்) தான் ரக்ஷிக்கப்புக்கவர்களுடைய ஞானம் எத்தகையது, ஒழுக்கம் எத்தகையது, பிறவி எத்தகையது என்றெல்லாம் ஆராயாமல், அவர்களுடைய ஜந்மவ்ருத்தஜ்ஞானங்கள் எத்தனை தாழ்ந்தவையாயினும் அவர்களை ரக்ஷித்தருள்வான். (நமக்கு அரணும்) ஸம்ஸாரமாகிய ஆபத்திலே சிக்கிக்கொண்டு, நம்மை ரக்ஷிப்பார் ஆர் என்று தேடும் நமக்கு ரக்ஷகனும். கர்மஜ்ஞாநபக்திகள்போன்ற வேறு தகுதி நம்மிடம் இருக்கவேண்டியதில்லை என்று கருத்து. (என்றும் அரணும்) அப்படி ரக்ஷிக்கும்போது ஸர்வகாலத்திலும் ரக்ஷகனும். இப்படி இத்தலையிலே ஏதுமின்றிக்கேயிருக்க, அவன் ரக்ஷகனுமோ? என்னில்: "ஸமோஹம் ஸர்வபூ₄தேஷு ந மே த்₃வேஷ்யோஸ்தி ந ப்ரிய:" [கீதை 9-29] [எல்லா ஜீவராசிகட்கும் (என்னை ஆஶ்ரயிக்கும் விஷயத்தில்) நான் ஸமானமானவனே; (ஜந்மவ்ருத்த ஜ்ஞானங்களின் தாழ்வைப்பார்த்து) என்னால் வெறுக்கத்தக்கவன் எவனுமில்லை; (அவற்றின் உயர்வைப் பார்த்து) எனக்கு இனியவனும் எவனுமில்லை.] "யேऽபி ஸ்யு: பாபயோநய:" [பாபயோனியிற் பிறந்தவர்களும் (முக்தியடைகின்றனர்)]

ப்ரிய: ) "येऽपि स्युः पापयोनयः" (யேऽபி ஸ்யு: பாபயோநய: ) "எத்தனை நலந்தானிலாத சண்டாளச சண்டாளர்களாகிலும்" (ஓதுகதி மாயனையேயோர்த்து) ஶரண்யனும் ஆஶ்சர்யபூ₄தனான வனை அநுஸந்தி₄த்து அவன் திருநாமங்களைச் சொல்லு. 78.

---

வான் தான் முயலும் நெஞ்சு" என்று மேலே சொல்லுகிற நெஞ்சே இங்கும் முன்னிலைக்கு விஷயம். அன்றிக்கே. "நிலைவரம்பில பல பிறப்பாய்" என்கிறபடியே. மூரன் நாள் வலஞ்சுழிந்த மொய்ம்பன் ஶரணமிடத்தில். தனக்கென்ன ஒரு நியதியின்றிக்கே ஆஶ்ரிதரக்ஷணத்துக்கு உறுப்பான ஏதேனுமொரு ஜன்மவித்₃யாவ்ருத்தங்களைத் தானுடையனாய்க் கொண்டு நமக்கு என்றும் அரணும் என்றுமாம். "ஓதுகதி மாதவனையோர்த்து" என்று பாட₂மாகில். 'ஶ்ரிய:பதியையே உபாயமாக பு₃த்₃தி₄பண்ணி அவன் திருநாமங்களை ஏத்து' என்று பொருளாகக்கடவது. 78.

---

"குலந்தாங்கு சாதிகள் நாலிலும் கீழிழிந்து எத்தனை
நலந்தானிலாத சண்டாளச சண்டாளர்களாகிலும்
வலந்தாங்கு சக்கரத்தண்ணல் மணிவண்ணற்காளென்(று)
கலந்தார் அடியார்தம் அடியார் எந்தம் அடிகளே" [உள்
[திருவாய் 3-7-9]

முதலான ப்ரமாணங்களிலே ஜந்மவ்ருத்தஜ்ஞானங்களால் தாழ்ந்தவர்களும் தலைசிறந்த பலனைப் பெறுகின்றனர் என்று முழங்கப்படுகின்றதன்றோ. (சரணமேல் ஏதுகதி ஏதுநிலை ஏதுபிறப்பு என்னாதே அரணும்) என்றதற்கு அப்பிள்ளை மற்றொரு வகையாகவும் பொருள்கொண்டார். அதாவது:— "பிதா புத்ரேண பித்ருமாந் யோநியோநௌ" [ஸர்வலோக பிதாவானவன் தன் பிள்ளைகளில் ஒருவனைப் பிதாவாகக்கொண்டு பிறக்கிறான்] "எங்ஙின்ற யோனியுமாய்ப் பிறந்தாய்" [திருவிருத்தம் 1] "நிலைவரம்பில பல பிறப்பாய் ஒளிவரும்" [திருவாய் 1-3-2] என்கிறபடியே ஆழிவலவனாய், முராரியானவன், ரக்ஷகனும்போது. தன் பெருமை பாராமல், ஆஶ்ரித ரக்ஷணத்துக்குப்பாங்கான ஏதேனும் ஒரு ஜந்மவித்₃யாவ்ருத்தங்களைத் தான் உடையவனாய்க்கொண்டு நமக்கு ரக்ஷகனுவான் என்கை. இனி, நாம் செய்யவேண்டியதென்ன? எனில்: (மாயனையே கதி ஓர்த்து ஓது) நம் தாழ்வைப்

79. ஓர்த்த மனத்தரா யைந்தடக்கி யாராய்ந்து
போர்த்தால் பிறப்பேழும் போர்க்கலாம்—கார்த்த
விரையார் நறுந்துழாய் வீங்கோத மேனி
நிரையார மார்வனையே நின்று.

கார்த்த—பசுமையான நிறமுள்ளதாய். விரை ஆர்—பரிமளம் நிரம்பியதான. நறு துழாய்—செவ்வித் திருத் துழாய் மாலையையுடையவனும். வீங்கு ஓதம் மேனி—தேங்கிய கடல்போன்ற திருமேனியையுடையவனும். நிரை ஆரம் மார்வனையே—ஒழுங்கான ஹாரங்களணிந்த திரு மார்பையுடையவனுமான பெருமானையே. நின்று—நிலைத்து நின்று. ஓர்த்த மனத்தார் ஆய்—அநுஸந்திக்கின்ற மன முடையவராய். ஐந்து அடக்கி—பஞ்சேந்திரியங்களையும் வென்று. ஆராய்ந்து—ஸம்ஸாரத்தின் தாழ்வை ஆராய்ந்து. போர்த்தால்—அதில் நின்றும் நெஞ்சைத் திருப்பிக்கொண்டால், பிறப்பு ஏழும்—ஒன்றின்பின் ஒன்றாக வரக்கூடிய ஜன்ம பரம்பரைகளை. போர்க்கலாம்—போக்கிவிடலாம்.

---

பார்த்துத் தயங்காமல், ரக்ஷகத்வத்துக்கு உறுப்பான ஆச்சர்ய மான குணங்களையும் செயல்களையும் உடைய ஸர்வேஸ்வரனையே உபாயமாக உறுதிபூண்டு, காலக்ஷேபத்துக்கு உறுப்பாக அவன் திருநாமங்களைச் சொல்லு. எண்பதாவது பாசுரத்தில் "நேர்படு வான் தான் முயலும் நெஞ்சு" என்று சொல்லப்பட்ட நெஞ்சைக் குறித்தே உபதேசிக்கிறார் என்று கொள்ளவேண்டும். "ஓது கதி மாதவனை ஓர்த்து" என்று பாடம் கொண்டால், "ஸ்ரீய:பதி யையே உபாயமாக உறுதிபூண்டு அவன் திருநாமங்களைச் சொல்லு" என்று பொருள்படுகிறது. புருஷகார ஸம்பந்தத்தை அநுஸந்தித்து ஆறியிருக்கச் சொல்லுகிறார். ஆக, தாயும் தந்தையுமாயிருந்து நம்மை ரக்ஷிக்கிறவர்களிருக்கும்போது நம் தாழ்வை நினைத்துக் கலங்காமல் அவர்களை ரக்ஷகராக உறுதிபூண்டு ஆறியிருக்கையே நாம் செய்யவேண்டியது என்றாயிற்று. 78.

79. அவ:— அநாதிகாலமாக நாம் மலைமலையாகப் பாபங் களைப் பண்ணியிருக்கும்போது, அவற்றைப்போக்க அநந்தகாலம் வேண்டாவோ? எனில், ஶுபாஶ்ரயமான திருமேனியோடுகூடிய அவனை அநுஸந்தித்து ஶப்தாதி விஷயங்களில் பற்றின்மை

அவ:— (ஓர்த்த மனத்தராய்) அநாதி₃காலம்பண்ணின பாபத்தைப்போக்கும்போது அநந்த காலம் வேண்டாவோ? என்னில்; அவனையநுஸந்தித்து ஶப்₃தா₃தி₃களிலே அநாத₃ரம் பிறக்கச் சடக்கெனப் போக்கலாமென்கிறது.

வ்யா:—(கார்த்தவித்யாதி) அழகிய திருத்துழாய் மாலையை உடையவனுமாய், தேங்கின கடல்போலேயிருக்கும் திரு

அவ:—அனாதி₃காலம் பண்ணின பாபத்தைப்போக்கும் போது அனந்தகாலம் வேண்டாவோ? என்னில்: அவனை அநுஸந்தி₄த்து ஶப்₃த₃ரூ₃பா₃தி₃ விஷயங்களில் அனாத₃ரம் பிறக்கவே சடக்கெனப்போக்கலாமென்கிறார்.

உரை:— பசுத்த நிறத்தையுடைத்தாய். பரிமள ப்ரசுர மான செவ்வித்திருத்துழாயாலே அலங்க்ருதனாய். தேங்கின

உண்டானால் பாபங்கள் உடனே பறந்தோடிப்போம், பாபமூலமான பிறப்புகள் நீங்கும் என்கிறார்.

வ்யா:— பாலே மருந்தாமாபோலே, நம்முடைய பாபங்களாகிய பெரிய வியாதி நீங்குவதற்கு மருந்தாய்,அமுதமாயிருக்கும் திருமேனி யின் அழகிருக்கும்படியைப் பின்னடிகளாலே காட்டி, முன்னடி களாலே அதிலே நெஞ்சைச் செலுத்தினால் எல்லாம் தன்னடையே ஸித்₃தி₄க்கும் என்கிறார். (கார்த்தமேனி) காணக் கண் கூசும் எரி மேனியாயிராமல், கண்டார் கண் குளிரும் பசுத்த நிறத்தையுடைய திருமேனி. இதனால் கண்ணை இதர விஷயங்களில் நின்றும் மீட்க வல்லது என்று உணர்த்தப்படுகிறது. (கார்த்த துழாய்)என்று கூட்டி, பசுமையான திருத்துழாய் என்றும் பொருள் கொள்ளலாம். (விரை யார் நறும் துழாய் மேனி) "ஸர்வக₃ந்த₄:" என்று தானே ஸர்வ க₃ந்த₄ங்களும் நிறைந்திருப்பதாய், அதற்கு மேலே நறுமணம் மிக்க துழாய்மாலையாலே அலங்கரிக்கப்பெற்ற திருமேனி, இதனால் மூக்கை இதர விஷயங்களில் நின்றும் மீட்கவல்லது என்று உணர்த்தப்படுகிறது. 'விரை' என்றும், 'நறும்' என்றும் இரண்டும் மணத்தைக் குறிக்கும் பத₃ங்களாகையால் ஒன்று மேனிக்கும், ஒன்று துழாய்க்கும் விசேஷணமாகக் கொள்ளப்பட்டது. அன்றிக்கே, 'நறும் துழாய்' என்றது துழாயின் செவ்வியைக் காட்டுவதாகவும், 'விரையார்' என்று அதன் மணத்தைக் காட்டுவ தாகவும் கொள்ளலாம். (வீங்கோத மேனி) அலை ஓய்ந்து நித்திரை

**மேனியை உடையவனுமாய், ஶப்₃த₃ாதி₃களை நாக்குவளைக்க லாம்படி ஆப₄ரணவழகையுடையவனை. (நின்று ஓர்த்த**

கடல்போலே இருண்டு குளிர்ந்த வடிவழகையுடையனுய். ஒழுங்குபட்டிருக்கிற திருவாரத்தாலே அலங்க்ருதமான திரு மார்வையுடையவனையே ஒருபடிப்படநின்று. நிரந்தரமாக

புரிகையாலே தேங்கியிருக்கும் கடல்போன்று இருண்டு குளிர்ந்த திருமேனி. வீங்கல்—நித்திரை புரிதல். இவனும் யோகநித்திரை செய்கின்றுனன்றே. அன்றிக்கே, வீங்குதல் பொங்குதலாய், பொங்கும் கடல்போன்ற திருமேனி என்றுமாம். சந்திரனைக்கண்டால் பொங்கி ஆரவாரம் செய்யும் கடல்போலே, இவனும் அடியாரைக்கண்டால் பொங்கியெழுந்து, "மூரிநிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டு" "ஸ்வரேணுவாச ப₄க₃வாந் பரிபூ₄தார்ணவத்₄வநி:" [ரகு₄வம்ஸம் 10-35] [கடலின் ஒலியை வெல்லும் முழக்கத்தையுடைய ப₄க₃வான் (பெரிய) ஸ்வரத்துடன் பேசினுன்] என்கிறபடியே முழங்குகின்றவனன்றே. 'கார்த்தமேனி' என்னும்போது கறுப்பு நிறத்தை மாத்திரம் உணர்த்திற்று. இங்கு ரஸமயமான கடலை உபமானமாகச் சொல்லுகையாலே, ஸர்வரஸமாயிருக்கையையும், குளிர்ந்திருக்கையையும், முழங்குதலையும் காட்டுகிறது. ஆகையால் புநருக்தியில்லை. இதனுல், ரஸநேந்த்₃ரியமான நாக்கையும், ஸ்பர்ஶேந்த்₃ரியமான த்வக்கையும், செவிப்புலனையும் இதர விஷயங்களினின்றும் மீட்கவல்லது என்று காட்டுகிறது. இனி, ஶப்₃த₃ாதி₃களினின்றும் இந்திரியங்களை மீட்கத் திருமேனிதான் வேண்டுமோ? அதில் உள்ள ஓர் திருவாப₄ரணம் போதாதோ என்கிறது.—(நிரை ஆர மார்வனையே) ஒழுங்குபட்டிருக்கும் ஆரமணிந்த திருமார்பை உடையவனையே; ஒழுங்குபட்டிருக்கும் ஆரம் ஒன்றே, ஒழுங்கற்ற ஶப்₃த₃ாதி₃ விஷயங்களை நாக்கு வளைத்து (பரிஹஸித்து) இந்திரியங்களை அவற்றினின்றும் மீட்கவல்லது என்று கருத்து. ஆக, இவ்வளவால் தி₃வ்யமங்க₃ளவிக்₃ரஹம் தியானிக்க எளிதான ஶுபா₄ஶ்ரயமாகவும், மிகவினிதாகவுமிருக்கையாலே—நெஞ்சையும், மற்ற இந்திரியங்களையும் ஶப்₃த₃ாதி₃களினின்றும் ஈர்க்கவல்ல உபாயமாயிருப்பது என்று காட்டப்பட்டது; இனி, (நின்று ஓர்த்த மனத்தராய்) என்று தொடங்கி, இந்தத் திருமேனியில் நெஞ்சைச் செலுத்துவதால் விளையும் பயனைப் பேசுகிறது; (நின்று ஓர்த்த மனத்தராய்) இப்படி நமது இந்திரியங்களுக்கெல்லாம் பரிபூர்ணமாக

மனத்தராயித்யாதி) நின்று அநுஸந்தி₄த்த மநஸ்ஸை யுடையராய், இந்த்₃ரியங்களை விஷயங்களில் போகாதபடி அடக்கி, அவை பொல்லாதென்று ஆராய்ந்து. ஸம்ஸாரத்தைப் போக்கப்புக்கால் போக்கலாம். ஏழ்பிறப்பென்றது உபலக்ஷணம்; ஜந்மமடங்கப் போக்கலாமென்றபடி. 79.

அநுஸந்தி₄க்கிற மனஸ்ஸையுடையராய். ஶ்ரோத்ராதி₃க ளான ஐந்து இந்த்₃ரியங்களையும் விஷயங்களில் போகாதபடி நியமித்து. ஸம்ஸார தோ₃ஷத்தை அநுஸந்தி₄த்து. அதில் நின்றும் ஹ்ருத₃யத்தை மீளவிட்டால்—ஒன்றின் பின் ஒன்றாக வரக்கடவ ஜன்மபரம்பரைகளை அநாயாஸேந போக்கலாம். அவனுடைய ஸ்வாபா₄விகமான வடிவழகை யும் ஒப்பனையழகையும் அநுஸந்தி₄த்தால் ஶப்₃த₃ாதி₃ விஷ யங்களை நாக்கு வளைத்து உபேக்ஷிக்கலாமென்று கருத்து. 79.

இரையிடவல்ல திருமேனியையும், துழாய் மாலையையும், திருவாப₄ ரணங்களையும் உடையவனையே சலியாமல் நின்று இடைவிடாமல் அநுஸந்தி₄க்கிற மனத்தையுடையராய். பால் குடிக்கக் கால்பிடிக்க வேணுமோ? தேனிருக்க, வேப்பெண்ணெயின் அருகில் செல்வார் உண்டோ? ப₄க₃வத்₃விஷயத்தில் நெஞ்சைச் செலுத்தியபின் அதில் நின்றும் மீளவும், ஶப்₃த₃ாதி₃களில் மறுபடியும் கண்வைக்கவும் இயலுமோ? என்று கருத்து. (ஐந்தடக்கி) பஞ்சேந்திரியங்களையும் அடக்கி, இப்படித் தலைவனுன நெஞ்சு ஶுபா₄ஶ்ரயமான திருமேனி யிலே ஈடுபட்ட பின்பு, அதற்கு வேலைக்காரர்களான மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐந்து இந்திரியங்களையும் ஶப்₃த₃ாதிவிஷ யங்களில் செல்லாமல் மீட்பது மிக எளிது என்று கருத்து. இப்படி மீட்டாலும், அநாதி₃காலமாக அவற்றில் ஈடுபடுத்தி வந்த ருசி வாஸநைகளைப் போக்க—அவற்றின் தாழ்வையும், ஸம்ஸாரத்தின் தாழ்வையும் இடைவிடாமல் அநுஸந்தி₄க்கவேணும் என்கிறது,— (ஆராய்ந்து) ஶப்₃த₃ாதி₃ விஷயங்களின் தாழ்வையும், அவற்றில் பற்றறுந்தாலும் அறுக்கவொண்ணாத புத்ரமித்ரகளத்ராதி₃மயமான ஸம்ஸாரத்தின் தாழ்வையும் இடைவிடாமல் அநுஸந்தி₄த்து. (போக்கலாம்) இப்படி அநுஸந்தி₄த்தால், நெஞ்சம் எளிதில் ஶப்₃ த₃ாதி₃விஷயங்களிலும் ஸம்ஸாரத்திலும் ருசிவாஸனைகளும் அற்றுப் போக்கலாம் என்று கருத்து. (போக்கலாம் பிறப்பேழும் போக்க

80. நின்றெதிராய நிரைமணித்தேர் வாணன் தோள்
ஒன்றிய வீரைஞ்ஞூ றுடன துணிய—வென்றிலங்கும்
ஆர்படுவான் நேமி யரவணையான் சேவடிக்கே
நேர்படுவான் தான்முயலும் நெஞ்சு.

நின்று—(கூசாமல்) எதிரே வந்து நின்று. எதிர் ஆய—எதிரியாய்ப் போர்செய்ய வந்தவனும். நிரை மணி தேர்—ஒழுங்காக அழுத்தின மணிகளையுடைய தேரின்மேல் ஏறி வந்தவனுமான. வாணன் ஒன்றிய ஈர் ஐஞ்ஞூறு தோள்—பா$_3$ணாஸுரனுடைய அடியொன்றாய் வளர்ந்த ஆயிரந்தோள்களும். உடன்—ஒரே காலத்தில். துணிய—அறுப்புண்டு விழும்படியாகக் காரியஞ்செய்து. வென்று—வெற்றி பெற்று. இலங்கும்—(அதனால்) ஒளிவீசுகின்ற. ஆர்படு—கூர்மையையுடைய. வான்—வலிய. நேமி—திருவாழியாழ்வானையுடையவனாய். அரவு அணையான்—ஶேஷஶாயியான எம்பெருமானுடைய. சே அடிக்கே—சிவந்த திருவடிகளிலே. நேர்படுவான்—கிட்டுவதற்காக. நெஞ்சு—(எனது) நெஞ்சு, தான்—தானே. முயலும்—உத்ஸாஹப்படுகின்றது.

---

லாம்) இப்படி இந்திரியங்களோடுகூடிய நெஞ்சை ஸவாஸநமாக ஶப்$_3$தா$_3$தி$_3$ விஷயங்களினின்றும் பேர்த்தால், ஜந்மகாரணமான பாபங்கள் நீங்கிவிடுமாகையாலே, விரகர் நெடுஞ்சுவர் தள்ளுமா போலே, பல்பிறப்புகளையும் சடக்கெனப் பேர்த்துவிடலாம். (பிறப்பு ஏழும்) என்று உபலக்ஷணமாய், "புநரபி ஜநநம் புநரபி மரணம் புநரபி ஜநநீஜட$_2$ரே ஶயநம்" [(மரணத்திற்குப்பின்) மறுபடியும் பிறப்பு; மறுபடியும் இறப்பு; மறுபடியும் ஓர் தாயின் கருக்குழியில் கிடப்பது] என்கிறபடியே ஒன்றன்பின் ஒன்றாக ஓயாமல் வரும் பல பிறப்புகளையும் காட்டுகிறது. 'பேர்க்கலாம்' என்றது விரைவிலும், எளிதிலும் நீக்கிவிடலாம் என்பதைக் காட்டுகிறது.

ஆக, இப்பாசுரத்தால்—அநாதி$_3$காலமாகச் சேர்த்த பாபங்களைப் போக்க அநந்தகாலம் முயலவேண்டாவோ? என்று கலங்க வேண்டா; திருமேனியை அண்டைகொண்ட ப$_3$லத்தாலே இந்திரியங்களை அடக்கி, விஷயங்களில் ருசிவாஸனைகளற்று, பாபங்கள் நீங்கப்பெறுகையாலே பாபப$_2$லமான பல்பிறப்புக்களையும் போக்கி விடலாம்—என்று சொல்லிற்றாயிற்று.

அவ:—(நின்றெதிராய) நம்மால் இந்த்ரியஜயம்பண்ணி அவனை அநுஸந்தித்து ஸம்ஸாரஸம்பந்தம் அறுக்கப்போகாது: அவன் ப்ரதிபந்தகத்தைப்போக்க அவனை அநுஸந்திக்க ஆசைப்படாநின்றது நெஞ்சென்கிறார்.

வ்யா:— (நின்றெதிராயவித்யாதி) தாமஸதேவதையை ஆஶ்ரயிக்கையாலே ஸர்வேஶ்வரனென்றறியாதே எதிரிட்டு,

---

அவ:— ப்ரதிகூலநிரஸந ஸ்வபாவனானவனைப் பெற வேணுமென்று தமக்கு முன்னே தம் திருவுள்ளம் அவ் விஷயத்திலே ப்ரவணமானபடியை அருளிச்செய்கிறார்.

உரை— ருத்ரனை அண்டை கொண்ட பலத்தாலே ஸர்வேஶ்வரனென்று அறியாதே கூசாமல் முன்னே வந்து நின்று எதிராய் நின்றவனாய், ஒழுங்குபட அழுத்தின மணிக ளோடே கூடின தேரிலே ஏறிவந்த பாணாஸுரனுடைய அடியொன்றாய்ப்பணைத்திருந்துள்ள ஆயிரம் தோளும் ஏகோத்யோகேந அறுப்புண்டு விழும்படியாக ஜயித்து,

---

80. அவ:— 'இப்படி இந்திரியங்களை அடக்கி, ஸம்ஸாரத்தின் தாழ்வை அநுஸந்தித்து ஶப்தாதிகளில் ருசிவாஸனையையும் அறுத்து ஸம்ஸாரஸம்பந்தத்தை நீர் அறுத்துக் கொண்டீரோ?' என்ன, 'நான் இதற்காக எம்முயற்சியையும் மேற்கொள்ளவில்லை; என் பாபங்களை அவன் போக்க விரோதிநிரஸநத்தையே இயல் வாகக் கொண்ட அவனைப் பெறவேணுமென்று எனக்கு முன்ன தாக என் நெஞ்சு தானே அவனிடத்தில் ஈடுபடுகிறது' என்கிறார்.

வ்யா:— (நின்று எதிராய) தமோகுணம் மிகுந்த உருத்திரனை ஆஶ்ரயிக்கையாலே, 'கண்ணன் ஸர்வேஶ்வரன்' என்று அறியாமல், அச்சிவனை அண்டைகொண்ட பலத்தாலே கூசாமல் முன்னே வந்து நின்று எதிரிட்டவனாய். (நிரை மணித்தேர் வாணன்) ஒழுங்காகப் பதித்த ரத்தினங்களோடு கூடிய தேரிலேறி வந்த பாணாஸுரன். அண்டைகொண்ட பலத்தோடு, ஐஶ்வர்யபலத்தையும் உடைய ஆஸுரப்ரக்ருதியாகையாலே தக்க தண்டனையை அளித்தான் என்கிறார் மேலே.— (ஒன்றிய ஈரைஞ்ஞூறு தோள் உடன் துணிய) அடிமரம் ஒன்றாய், அதிலிருந்து பல கிளைகள் வளர்வதுபோலே, ஒவ்வொரு தோளிலிருந்தும் பணைத்த ஐந்நூறும் ஐந்நூறுமான ஆயிரம் கைகளும் ஒரே சக்ரப் பிரயோகத்தில் ஒரேயடியாக மலைக்கொடுமுடிகள்போலே வெட்டுண்ணும்படியாக.

**தேரையுடையனை பாணனுடைய தோளோடே தோளொன்றிய அல்லாத ஆயிரந்தோளும் துணியும்படிக் கீடாக வென்று. ஒளியையும் கூர்மையையுமுடைய திருவாழியையுடைய**

---

அத்தாலே ஒளிவிடாநிற்பதாய், கூர்மையை உடைத்தாய், அதிப்ரபலமான திருவாழியையுடையனை அனந்தஸாயியுடைய சிவந்த திருவடிகளிலே நெஞ்சானது எனக்கு முன்னே கிட்டுவதாகத் தானே உத்ஸாஹியாநின்றது.

---

'தோள் ஒன்றிய' என்றுமாம்; தோளிலே ஒன்றிய என்றபடி. 'ஈரைஞ்ஞூறு' என்று ஒவ்வொரு தோளிலிருந்தும் வளர்ந்துள்ள ஐந்நூறும் ஐந்நூறுமான கைகளைச் சொல்லுகிறது. இது அப்பிள்ளை நிர்வாஹம்; அன்றிக்கே, ஒன்றிய' என்றது 'தோளோடு தோள் ஒன்றிய' என்று பொருள்படுவதாகக்கொண்டு, அத்தகைய ஆயிரம் தோள்களில் இருக்கவேண்டிய இரண்டு தோள்களை மாத்திரம் விட்டுவிட்டு. கர்வஹேதுவான மற்ற தோள்களை ஒரே ப்ரயோகத்தில் துணித்தான் என்றும் கொள்ளலாம். இது பெரியவாச்சான்பிள்ளை நிர்வாஹம். திருப்பல்லாண்டில், "மாயப் பொருபடைவாணனை ஆயிரம் தோளும் பொழி குருதி பாயச் சுழற்றிய" [திருப்பல் 7] என்றவிடத்து வியாக்கியானத்தில், "வாணனுடைய தலையை அருதொழிந்தது குற்றம் போராமையன்று; உஷை பித்ருஹீநை ஆகாமைக்காகவும், 'தேவதாந்தர பஜநம் பண்ணுவார்க்குப் பலம் இது' என்னுமிடத்துக்கு மச்சமாகவும் (அடையாளமாகவும்). அதாவது,— 'பரிவின்றி வாணனைக் காத்தும்' [திருவாய் 3-10-4] என்று ப்ரதிஜ்ஞை பண்ணி, யுத்தத்திலே இவனைக் காட்டிக்கொடுத்து, ஸபரிகரனாய்க்கொண்டு முதுகுகாட்டிப்போனான் ரக்ஷகன். ரக்ஷ்யன் தோள் துணியுண்டான்; 'உன்னை ரக்ஷிக்கப்புக்கு நான் பட்டதோ' என்றும், 'உன்னை ஆஸ்ரயித்து நான் பட்டதோ' என்றும் இருவரும் கூடக் கட்டிக்கொண்டு கதறுகையிறே பலமாய்விட்டது என்று பெரியவாச்சான்பிள்ளை அருளியது இங்கும் அநுஸந்திக்கத்தக்கது. (வென்று இலங்கும் நேமி) இத்தகைய வெற்றியாலே ஒளிவிடாநிற்கும் திருவாழியாழ்வான். "பாழியந்தோளுடைப் பற்பநாபன் கையில் ஆழிபோல் மின்னி" [திருப்பாவை 4] என்கிறபடியே எம்பெருமானுடைய வெற்றிகண்டு ஒளிவிடுவதன்றே திருச்சக்கரம்.

அநந்தசாயியுடைய திருவடிகளிலே அணைய நெஞ்சானது தானே ப்ரவர்த்தியாநின்றது. 80.

81. நெஞ்சால் நினைப்பரியனேலும் நிலைப்பெற்றென்
நெஞ்சமே பேசாய் நினைக்குங்கால்—நெஞ்சத்துப்
பேராதுநிற்கும் பெருமானை யென்கொலோ
ஓராது நிற்ப துணர்வு.

என் நெஞ்சமே—எனக்கு வசப்பட்ட மனமே. நெஞ்சால் நினைப்பு அரியன் ஏலும்—(எம்பெருமான்) நெஞ்சால் நினைக்கமுடியாத பெருமை வாய்ந்தவனேயாயினும் (அவனுடைய பெருமையை நினையாமல் எளிமையையே நினைத்து), நிலைப்பெற்று—காலூன்றி நின்று. பேசாய்—அவனைப்பேசப் பார்; நினைக்குங்கால்—நாம் ஒருமுறை நினைத்தாலும்,

---

ஆர்படுகை—கூர்மையையுடைத்தாகை. அரங்களையுடைத்தாகை என்றுமாம். வான்—வலி. 80.

---

(ஆர்படு நேமி) இப்படி அஸுரனின் ஆயிரம் தோளையும் ஒரேபடியாகத் துணிக்கவல்ல கூர்மையை உடைய திருச்சக்கரம். ஆர்படுகை—கூர்மையை உடையதாகை. அன்றிக்கே, அரங்களையுடைய திருவாழி என்றும் கொள்ளலாம். (வான் நேமி) மிகப்பெரிய சக்கரம். வலிமிக்க சக்கரம் என்றுமாம். இத்தால் தன் பேரனை அநிருத்தனுக்காக, அவனுடைய அபேக்ஷையில்லாமல் அவன் விரோதியான வாணனை வலியழித்ததுபோலே, என் விரோதிகளையும் என் அபேக்ஷையில்லாமலே தானே அழித்தான் என்றதாயிற்று. இப்படி விரோதி போனபின்பு அநுபவிக்கும் வடிவழகைச் சொல்லுகிறது.— (அரவணையான்) ஆதிசேஷசயனத்தில் 'கிடந்ததோர் கிடக்கை' [திருமாலை 23] என்று அடியார் ஈடுபடும்படி பள்ளிகொண்டிருப்பவன். (சேவடிக்கே நேர்படுவான் நெஞ்சு தான் முயலும்) அவனுடைய சிவந்த திருவடிகளையே அணைந்து கைங்கர்யம் செய்ய என் நெஞ்சு தானே முயலாநின்றது. என் முயற்சியை எதிர்பாராமல் என் விரோதிகளைப்போக்கி, என் நெஞ்சை எனக்கு முற்பட்டுத் தன்னிடம் ஈடுபடும்படியாக எம்பெருமான் செய்தான் என்று கருத்து. 80.

நெஞ்சத்து—நெஞ்சு தன்னிலே. பேராது நிற்கும்—விட்டு நீங்காமல் நிலைத்து நிற்கின்ற. பெருமானை—எம்பெருமானை. உணர்வு—நமது நெஞ்சானது. ஓராது நிற்பது என்கொலோ—நினையாமல் வாளாவிருப்பது ஏனோ?

அவ:—(நெஞ்சால்) கீழ் ஸம்ஸாரிகளுக்கு இல்லாதது தமக்குண்டானவாறே நெஞ்சு பகவத்விஷயத்திலே மண்டிற்றென்று கொண்டாடினார். விஷயத்தைப் பார்த்தவாறே அடியிட்டிலராயிருந்தாரென்கிறது.

---

அவ:— ஸம்ஸாரிகள் நெஞ்சுபோலே அந்யபரமாயிருக்கையன்றிக்கே என் நெஞ்சு பகவத்ப்ரவணமாய்த்து என்று கொண்டாடினவர் விஷய வைலக்ஷண்யத்தைப் பார்த்தவாறே இவ்விஷயத்திலே நெஞ்சு முதலடியிட்டதில்லை என்று தோற்றி, அவன் துர்ஜ்ஞேயனாகிலும் அவனை அநுஸந்தி என்று திருவுள்ளத்தைக் குறித்து அருளிச்செய்து அவனை இம்மனஸ்ஸு அநுஸந்தியாமைக்கு ஹேது ஏதோவென்று ஸ்வகதமாக அருளிச்செய்கிறார்.

---

81. அவ:— 'ஸம்ஸாரிகளுடைய நெஞ்சுபோலே ஶப்தாதி விஷயங்களிலேயே மண்டியிராமல், என் நெஞ்சு எம்பெருமானிடம் தானே ஈடுபடாநின்றது', என்று சென்ற பாசுரத்தில் நெஞ்சைக் கொண்டாடினார். அடுத்த கணத்திலே பகவத் விஷயத்தின் பெருமையை அநுஸந்தித்தவுடன், 'இவ்விஷயத்திலே நெஞ்சு இப்போதுதானே அக்ஷராப்யாஸம் செய்யத்தொடங்கியிருக்கிறது'' என்று தோற்றி, 'அவன் இப்படி அறப்பெரியனாகையாலே அறிய அரியவனாயினும், பின் வாங்காமல் நீ அவனையே அநுஸந்திக்கவேணும்' என்று முற்பகுதியில் தம் திருவுள்ளத்துக்கு உபதேஶித்து, பிற்பகுதியிலே, 'அவனை இந்நெஞ்சு அநுஸந்திக்காமல் பின்வாங்குவது ஏனோ?' என்று தமக்குத் தாமே கேட்டுக்கொள்ளுகிறார் இப்பாசுரத்தில்.

வ்யா:— (நெஞ்சாலித்யாதி) நெஞ்சமே! உன்னால் நினைக்கப் போகாதாகிலும். (நிலைப்பெற்றென்னெஞ்சமே பேசாய்) ஐஶ்வர்யங்கண்டு பிற்காலியாதே அநுபவியாய். (நினைக்குங்காலித்யாதி) ஒருகால் நினைக்கில், நாக்குண்டா

---

உரை— பரிச்சி₂ன்ன வஸ்துக்₃ராஹகமான மனஸ்ஸால் பரிச்சே₂தி₃த்து நினைக்கவொண்ணாத பெருமையையுடையனா யிருந்தானேயாகிலும் அவன் பெருமையை நினைத்துப் பிற்காலியாதே ஆஶ்ரிதஸுலப₄னென்று அநுஸந்தி₄த்து காலூன்றி த₄ரித்துநின்று எனக்கு ப₄வ்யமான நெஞ்சே! அவனைப் பேசப்பாராய். இப்படிச் சொன்னவிடத்திலும் திருவுள்ளம் மெத்தென்று இருந்தவாறே தனக்குப் பாங்கான ஸமயத்திலே இவன் ஒருகால் நினைத்துக் கைவாங்கி

---

வ்யா:— (நெஞ்சால் நினைப்பரியனேலும்) அளவுபட்ட பொருள்களையே அறியும் நெஞ்சாகிற உன்னால் அளவுபடுத்தி அறியவொண்ணாத பெருமையை உடையவனானாலும். (நிலைப் பெற்று என் நெஞ்சமே பேசாய்) எனக்கு வசப்பட்டிருக்கும் நெஞ்சே! அவனுடைய பெருமையை நினைத்துப் பின்வாங்காமல், 'அடியார்க்கு எளியவன்' என அறிந்து, பரத்வவெள்ளத்தால் ஒதுக்கப்படாமல் காலூன்றி தரித்துநின்று, அவனைப் பேச முயல்வாய்! இப்படி ஆழ்வார் உபதே₃ஶித்த பின்பும், 'இதற்கு நாக்கு உண்டா, அல்லது இருந்தும் நா எழவில்லையோ?' என்று ஸந்தே₃ஹிக்கும்படி நெஞ்சு ப₄க₃வத்விஷயத்தைப் பேசாமலே மெத்தென்றிருக்க, 'இது ஏன் இப்படியிருக்கிறது?' என்று தமக்குத் தாமே கேட்டுக்கொள்கிறார் பாசுரத்தின் எஞ்சிய பகுதியாலே— (நினைக்குங்கால் நெஞ்சத்துப் பேராது நிற்கும் பெருமானை) "ஸ்தி₂தே மநஸி ஸுஸ்வஸ்தே₂ ஶரீரே ஸதி யோ நர: தா₄துஸாம்யே ஸ்தி₂தே ஸ்மர்த்தா" [வராஹசரமம்] [மனம் நிலை நிற்கையில், சரீரம் நோயற்று ஸுகமாயிருக்கையில், வாதம், பித்தம், ஶ்லேஷ்மம் என்னும் மூன்று, தா₄துக்களும் ஸமமாயிருக்கையில், எந்த மனிதன என்னை நினைக்கிறானோ] என்கிற படியே தனக்கு ஸௌகர்யமாயிருக்கும் ஏதோவொரு ஸமயத்தில் இவன் ஒருமுறை ஸர்வேஶ்வரனை ரக்ஷகனாக நினைத்துப் பின் மறந்தாலும், நினைத்த அக்கணத்திலேயே அவன் நெஞ்சிலே

நாவெழாவென்ற நெஞ்சுவிட்டுப் போகவறியாத ஸர்வேஶ்வரனை. "கண்ணுள்ளே நிற்குங்காதன்மையால் தொழில்" என்கிறபடியே. (என்கொலோவித்யாதி) அவனை நினையாதே மணலை முக்கப்பார்க்கிறதோ? அவனை நினையாதே தானுண்டாம்படி எங்ஙனே? "ஒண்டாமரையாள் கேள்வனொருவனையே நோக்குமுணர்வு" 81.

---

*னல் பின்னை எப்போதும் நெஞ்சம்விட்டுப் போக மாட்டாமே நித்யவாஸம்பண்ணும் ஸர்வேஶ்வரனை அறிவுக்கு வாய்த்தலையான மனஸ்ஸானது அநுஸந்தியாதே இருக்கிறது என்னோ? வேறே சில து₃ராராத்₄ய தே₃வதைகளைப் பற்றவிருக்கிறதோ? ஶப்₃தா₃தி₃ விஷயங்களைப் பற்ற இருக்கிறதோ? இம்மனஸ்ஸு எத்தை நினைத்து அவனை நினையாதிருக்கிறது? என்று ஸ்வக₃தமாக அநுஸந்தித்தாராய்த்து. 81.*

---

குடியேறி, அதற்குப்பின் இவன் தன்னை நினைத்த போதோடு நினையாதபோதோடு வாசியற எப்போதும், 'இந்த நெஞ்சுக்கு நாக்குதான் உண்டா, இருந்தும் நா எழவில்லையோ' என்று ஐயுறும்படி தன்னைப் பேசாமலிருக்கும் இவ்ன் நெஞ்சைவிட்டுப் போகமாட்டாமல் நித்யவாஸம் செய்யும் ஸர்வேஶ்வரனை, "கண்ணுள்ளே நிற்கும் காதன்மையால் தொழில், எண்ணிலும் வரும் என்னினி வேண்டுவம்?" [திருவாய் 1-10-2] என்கிறபடியே ஒரு கால் தொழுதாலும், எண்ணினாலும் எளியனாயிருக்கிறானன்றோ எம்பெருமான். (என்கொலோ ஓராது நிற்பது உணர்வு) "ஒண்தாமரையாள் கேள்வன் ஒருவனையே நோக்கும் உணர்வு" [முதல்திருவ 67] என்கிறபடியே அவனை அறிவதற்கென்றே ஏற்பட்டதாய், அவனை அறியாவிடில் ஸத்தைபெறாத (உளதாக மாட்டாத) அறிவு புறப்படும் இடமான இந்நெஞ்சம், இவனை நினையாமலிருப்பது ஏனோ? கண்ணெதிரே பாயும் அமுத வெள்ளத்தைப் பருகாதே இரும்பைக் காய்ச்சிக் குடிக்கநினைக்கிறதோ? ஆராவமுதாய், எளியனான அவனை விட்டு, சுவையற்றவராய், ஆராத₄னைக்கரியரான வேறு தே₃வதைகளைப் பற்றலாமென்றிருக்கிறதோ? ஆற்றுநீர் பாய்ந்துவருப்போது, கண்டத்தை அடைக்கும் மணலை விழுங்க நினைக்கிறதோ? பருகு

82. உணரி லுணர்வரிய னுள்ளம் புகுந்து
புணரிலும் காண்பரிய னுண்மை—இணரணையக்
கொங்கணைந்து வண்டறையும் தண்டுழாய்க் கோமானை
எங்கணைந்து காண்டு மினி.

உணரில்—(அப்பெருமானை நாமாக) அறியப்பார்த்தாலும். உணர்வு அரியன்—(அவன்) அறியவொண்ணாதவன்; (அவன் தானே). உள்ளம் புகுந்து புணரிலும்—நெஞ்சிலே வந்து புகுந்து அணைந்தாலும். உண்மை காண்பு அரியன்—உள்ளபடி அறியக் கூடாதவன்; இனி—இப்படியான பின்பு, இணர் அணைய—பூங்கொத்துகள் தாழும்படியாக. கொங்கு—தேனிலே. வண்டு—வண்டுகள். அணைந்து—வந்துகிட்டி (மதுவைப்பருகி). அறையும்—ரீங்காரம் செய்யப்பெற்ற. தண்—குளிர்ந்த. துழாய்—திருத்துழாய் மாலையை அணிந்துள்ளவனை. கோமானை—அந்த ஸர்வேஶ்வரனை. இனி—இந்நிலையில். எங்கு—எவ்விடத்தில். அணைந்து—கிட்டி. காண்டும்—காணக்கடவோம்?

---

அவ:— இம்மனஸ்ஸை இன்னதாகிறதென்? ஒருவர்க்கும் ஒருவகையும் அறியவொண்ணாதபடி இருப்பானாய், நிரதிஶயபோ₄க்₃யனுமாயிருந்தபின்பு, இனியவனை நாம் கிட்டிக் கொண்டோமாய்த் தலைக்கட்ட விரகுண்டோ? என்கிறார்.

---

நீர் போலேயிருக்கும் அவனைவிட்டு, ஶப்₃த₃ாதி₃ விஷயங்களை அநுப₄விக்க நினைக்கிறதோ? இம்மனம் நாம் உபதே₃ஶித்த பின்பும் எதை நினைத்து அவனை நினையாமலிருக்கிறது? என்று தம் ஆற்றாமையாலே நெஞ்சை அதிஶங்கைபண்ணித் தமக்குத் தாமே கேட்டுக்கொள்கிறார். ஆக, இப்பாசுரத்தால், நெஞ்சால் அளவிட்டறியமாட்டாத அவன் பெருமை சொல்லிற்றாயிற்று. 81.

82. அவ:— இம்மனத்தை வெறுத்துப் பயனென்ன? எவராலும் எவ்வகையிலும் அளவிட்டு அறியமுடியாதபடியிருப்பவனாய், கைவிடமுடியாதபடி ஒப்பற்ற இனிமையை உடையவனாயிருக்கும் அவனை நாம் அணுகி அநுப₄வித்து முடிப்பதற்கு வழியுண்டோ? என்கிறார்.

**வ்யா:—** (உணரிலுணர்வரியன்) தன்னாலுமறியப் போகாது; இவனாலுமறியப்போகாது. "தனக்கும் தன் தன்மை அறிவரியானை" ஸ்வயத்நத்தால் காணபார்க்குக் காணப் போகாது. (உள்ளமித்யாதி) தானே வந்து ஹ்ருத₃யத்திலே புணர்ந்தானேயாகிலும் அவனுடைய உண்மை அறியப்

---

**உரை:—** ஆரேனுமொருத்தர்க்கும் ஸ்வயத்னத்தாலே அறியப்பார்க்குமளவில் அறிவரியனாயிருப்பானொருவன். இவ் வருமை தீர அவன் தானே ஹ்ருத₃யத்திலே வந்து புகுந்து கலந்தானாகிலும் இவ்வளவென்று பரிச்சே₂தித்துக் காண கைக்கரியனாயிருப்பானொருவன். இது பரமார்த்த₂ம். இப்

---

வ்யா:— (உணரில் உணர்வரியன்) எவரேனும் இவனைத் தம் முயற்சியாலே அறியப்பார்த்தார்களாகில், அறிய அரியவனாயிருப்பான். நம்மைப்போன்ற அல்பஜ்ஞர்களுக்கு மாத்திரமல்ல; பேரளவுடைய ஸநகாதி₃களுக்கும், ப்₃ரஹ்மருத்₃ராதி₃களுக்கும் அறிய அரியவனாயிருப்பன். "ஸோ அங்க₃ வேத₃ யதி₃வா ந வேத₃" [அவன் தானே தன் பெருமையை அறிவானோ மாட்டானோ] "தனக்கும் தன் தன்மை அறிவரியானை" [திருவாய் 8-4-6] "தாம் தம் பெருமை அறியார்" [பெரியதிரு 5-2-1] என்கிறபடியே நித்யஸர்வஜ்ஞனான அவனாலேயே அவன் பெருமையை அளவிட்டறியமுடியாது. ஸ்வயத்நத்தால் அவனை அறியமுடியாதாகிலும், அவன் தானே தன்னைக் காட்டக்கண்ட உம்மைப் போன்றவர்கள் அறியத்தட்டென்ன? என்ன, அப்போதும் அளவிட்டறியமுடியாது என்கிறார்,— (உள்ளம் புகுந்து புணரிலும் உண்மை காண்பரியன்) நம் முயற்சியால் அறியமுடியாத அருமை தீர இவன்தானே நம்முடைய உள்ளத்தில் புகுந்து நம்மோடு புரையறக்கலந்தானாகிலும், இவனுடைய தன்மைகளில் ஒரொன்றையும் இவ்வளவென்று அளவிட்டுக் காண அரியவனாயிருப்பவன். 'எத்திறம்' என்று மயங்கிவிழுமித்தனை. 'உண்மை' என்று மேன்மை, நீர்மை முதலான ஒவ்வொரு தன்மையைக் காட்டுகிறது. 'உண்மை காண்பரியன்' என்றதற்கு உள்ளபடி காணமுடியாதவன் என்றும் கொள்ளலாம். அன்றிக்கே, (உள்ளம் புகுந்து புணரிலும் காண்பரியன்) என்று இவனுடைய (ஸ்வரூபஸ்வப₄ாவங்களின்) அளவிட்டறியமுடியாமையைக்காட்டி, (உண்மை) இவ்வர்த்த₂ம் ஸத்யமானது என்கிறாராகவுமாம். இப்படிக் காண

போகாது. (இணைரணையவித்யாதி) காணவரியனென்று கைவாங்கப்போகாதென்கிறது. பூங்கொத்துக்கள் தாழும் படிக்கீடாக மதுவைப் பாநம் பண்ணின வண்டுகள் ஸப்$_3$தி$_3$யாநின்ற திருத்துழாய் மாலையையுடைய ஸர்வேஶ்வரனை எங்கே கிட்டிக் காண்போமினி? 82.

---

படியானபின்பு. பூங்கொத்துக்கள் தாழும்படிக்கீடாக தேனிலே வண்டுகள் வந்து கிட்டி அத்தைக்கழுத்தே கட்டளையாகப் பருகிச் செருக்கி அதுக்குப் போக்குவிட்டு ஸப்$_3$தி$_3$யாநின்றுள்ள குளிர்ந்த திருத்துழாயையுடைய ஸர்வேஶ்வரனை எங்கே கிட்டிக் காணக்கடவோம்? 'காண்பரியன் உண்மை' என்றானபோது ஒருவர்க்கும் இவ்வளவென்று அளவிட்டுக் காணவரிதான வைலக்ஷண்யத்தையுடையவனென்று பொருளாகக் கடவது. இணர்—பூங்கொத்து. 82.

---

வொண்ணாதவனாகில் அவனைக் கைவிட்டு விடலாமே? என்ன, அவன் இனிமையைப் பார்த்தால் கைவிடமுடியுமோ? என்கிறார்,— (இணர் அணையக் கொங்கு அணைந்து வண்டு அறையும் தண் துழாய்க் கோமானை) பூங்கொத்துக்கள் தாழும்படியாக, தேனிலே வண்டுகள் மொய்த்து, தேனைக் கழுத்தளவும் பருகிச் செருக்கடைந்து. அச்செருக்குக்குப் போக்குவீடாக ரீங்காரம் செய்யும் குளிர்ந்த திருத்துழாயை மாலையாக உடைய ஸர்வேஶ்வரனை. இத்தகைய திருத்துழாயை தரித்திருப்பதே இவன் ஸர்வேஶ்வரன் என்று காட்டித்தருகிறது என்று கருத்து. தண்துழாயை இன்னவிடத்தில் தரித்திருப்பவன் என்று குறிப்பிட்டுக் கூறுமையாலே, '' தோளிணைமேலும் நன் மார்பின்மேலும், சுடர்முடிமேலும் தாளிணை மேலும் புனைந்த தண்ணந்துழாயுடையம்மான் '' [திருவாய் 1-9-7] என்று இதையே பாத$_3$ாதி$_3$கேஶாந்தமாக தரிப்பவன் என்று தோற்றுகிறது. (இனி எங்கணைந்து காண்டும்) இப்படி அறிவரிய பிரானாய், கைவிடவொண்ணாத இனிமையையுடையவனாக அவனிருக்கும்போது, அவனை எந்தக் காலத்தில், எந்த தேசத்தில் அணுகிக் கண்டுமுடிக்கக்கடவோம்? அநந்த காலத்திலும், நேரே ஸாக்ஷாத்கரிக்கும் பரமபதத்திலும் அவனை அளவிட்டு அறியமுடியாது என்று கருத்து. 82.

83. இனியவன் மாய னெனவுரைப்ப ரேலும்
இனியவன் காண்பரியனேலும்—இனியவன்
கள்ளத்தால் மண்கொண்டு,விண்கடந்த பைங்கழலான்
உள்ளத்தி னுள்ளே யுளன்.

இனி—இப்போது, அவன்—அந்த ஸர்வேஶ்வரன், மாயன்—அறிவரிய ஆஶ்சர்யபூ,தன்', என—என்று, உரைப்பர் ஏலும்—சொல்லுவார்களேயாகிலும், இனி—இப்போது, அவன்—அப்பெருமான், காண்பு அரியன் ஏலும்—கண்டு அநுப,விக்க இயலாதவனேயாகிலும், கள்ளத்தால்-வஞ்சனையால், (மாவலி பக்கலிலே சென்று) மண் கொண்டு—பூ,மி தா₃னம் வாங்கி, விண் கடந்த பை கழலான் அவன்—ஆகாசம் முதலிய மேலுலகங்களையும் ஆக்ரமித்துக்கொண்ட பரந்த திருவடிகளையுடையனான அப்பெருமான், இனி—இப்போது, உள்ளத்தின் உள்ளே உளன்—எனது ஹ்ருத₃யத்தினுள்ளே (வேறிடமறியாமே) நிலைத்து நிற்கிறான். (இந்தப் பெரும்பேறே போதும் என்கை.

வ்யா:— (இனியவனித்யாதி,) வர்த்தமான த₃ஶையில் ப்ரக்ருதியிலே (ஸம்)ப,ந்தி,த்து "मम माया दुरत्यया" (மம

அவ:— இப்படி இவன் ஒருவராலும் காணவும் நினைக்கவுமொண்ணாதானொருவனாகிலும், அவன், இருந்தபடியிருக்க; இப்போது முந்துற முன்னம் என் ஹ்ருத₃யத்திலே புகுந்து ஸன்னிதி₄பண்ணாநின்றானென்கிறார்.

உரை:— ப₄க₃வத்ஸௌலப்₄யத்தின் ஏற்றமறியாத வாய்கரையரானவர்கள் இப்போது அந்த ஸர்வேஶ்வரன்

83. அவ:— இப்படி இவன் எவராலும் காணவும், நினைக்கவும் முடியாதானொருவனாகிலும், அவன் அப்படியே இருக்கட்டும். இப்போது முதன்முதலில் என் ஹ்ருத₃யத்திலே புகுந்து வாழ்கிறான்; இது எனக்குப்போதும் என்கிறார்.

வ்யா:— (இனி அவன் மாயன் என உரைப்பரேலும்) பரம புருஷனுடைய மேன்மையையே பார்ப்பவர்களாய், அவன் நீர்மை

மாயா து₃ரதயயா ) என்னுமபடி காணவரியனானாலும்; (இனி

ஒருவராலுமறியவரிய ஆஶ்சர்யபூ₄தன் என்று சொல்லுவார்களேயாகிலும். இப்போது அவன் ஒருவராலும் கண்டு அநுப₄விக்கைக்கு அரியனாயிருந்தானேயாகிலும். ஈஶ்வரனென்று தெரியாதபடி க்ருத்ரிமத்தாலே மஹாப₃லி பக்கலிலே பூ₄மியை நீரேற்று வாங்குவாரைப்போலே அபஹரித்துக்கொண்டு ஆகாஶாதி₃களான லோகங்களை அநாயாஸேந அளந்துகொண்ட பரந்த திருவடிகளையுடையனான அவன்— இப்போது பட்டதுபட, என் ஹ்ருத₃யத்தினுள்ளே ஸ்த₂லாந்தரமறியாதபடி ஸந்நிஹிதனாயிராநின்றான்.' இவ்வம்ஶத்தை ஒருவரால் இல்லைசெய்யவொண்ணாதிறே என்கை. 'இனி' என்று—இப்போது என்றபடி. அன்றிக்கே. 'இனியவன்' என்று ஒரு சொல்லாய், அநுஸந்தி₄ப்பார்க்கு நிரதிஶயபோ₄க்₃யனாயிருக்குமவன் என்று மூன்று இடத்துக்கும் பொருளாகவுமாம். 'மாயன்' என்றது. "मम माया दुरत्यया" (மம மாயா து₃ரத்யயா) என்கிறபடியே தன்

யில் ஆழங்காற்படாமல் மேன்மைக் கரையிலேயே நிற்கும் வாசாலகர்களான சிலர், இப்போது அந்த ஸர்வேஶ்வரன் ஒருவராலும் அறியவொண்ணாத ஆஶ்சர்யபூ₄தன் என்று சொல்லுவர்களாகிலும். மாயன் — ஆஶ்சர்யமாயிருப்பவன். மாயாஶப்₃த₃ம் ஆஶ்சர்யத்தைக் குறிக்கும். அன்றிக்கே, "மாயாம் து ப்ரக்ருதிம் வித்₃யாத் மாயிநம் து மஹேஶ்வரம்" [ஶ்வே] [மாயை எனப்படுவது ப்ரக்ருதி; அம்மாயையை உடையவன் ஸர்வேஶ்வரன்.] "மம மாயா து₃ரத்யயா" [கீ₃தை 7-14] [என்னுடையதான இந்த ப்ரக்ருதி எவராலும் கடக்கவொண்ணாதது] என்கிறபடியே மாயாஶப்₃த₃ம் ஆஶ்சர்யமான ப்ரக்ருதியையும், 'மாயன்' என்னும் ஶப்₃த₃ம் அதை உடையவனையும் குறிக்குமாகையால், முதல் இரண்டு அடிகளுக்கு "அந்த ஸர்வேஶ்வரன் தன்னுடையதான ப்ரக்ருதியாலே இவர்களை அநாதி₃காலமாகக் கட்டி வைத்திருக்கும் மாயன் என்று ஞானிகள் கூறுவர்; ஆகையாலே இவர்களுக்குக் காணமுடியாதவனாயிருப்பவன்" என்றும் பொருள் கொள்ளலாம். 'இனி அவன்' என்று பத₃ம் பிரித்து இப்போது அந்த ஸர்வேஶ்வரன்' என்று பொருள்கொள்ளாமல், இனியவன்'

யித்யாதி₃) நெஞ்சுக்கினியனுமாய்த் தன்னுடைமையை மஹா ப₃லிபக்கலிலே வஞ்சித்தானாய்க் கொண்டு அளந்தவன் ஹ்ருத₃யத்திலே நின்று மறக்கவொட்டான். 83.

---

னுடையதான ப்ரக்ருதியாலே ப₃ந்தி₄த்து இவர்களுக்குக் காண அரியனாயிருக்குமவன் என்றுமாம். 'பைங்கழலான்' என்று அழகிய திருவடிகளையுடையன் என்றுமாம். 83.

---

என்று ஒரே சொல்லாகக்கொண்டு, "காண இனியவனாயினும் அறியவொண்ணாதவன், அல்லது நம்மை மாயையில் கட்டிவைத் திருப்பவன் என்று கூறுவரேனும்" என்றும் பொருள் கொள்ள லாம். (இனி அவன் காண்பரியனேனும்) அவர்கள் அப்படிக் கூறுவதுபோலே, உண்மையிலேயே அவன் இப்போது காண அரியவனாயிருந்தானேயாகிலும். அன்றிக்கே, இனியவனாயிருந்தும் காண அரியவனாகவே இருந்தானாகிலும், (இனியவன்) எனக்கு ஒப்பற்ற இனிமையை உடையவனாகவேயிருக்கிறான்; காண்பரியன் ஆக இல்லை என்று கருத்து. "கடியன் கொடியன் நெடியமால் உலகங்கொண்ட அடியன் அறிவருமேனி மாயத்தனாகிலும் கொடிய என் நெஞ்சம் அவனென்றே கிடக்கும் எல்லே" [திருவாய் 5-3-5] என்ற நம்மாழ்வாரைப்போலே அருளிச்செய்கிறார். அன்றிக்கே, இங்கும் 'இனி, அவன்' என்று பிரித்துப் பொருள்கொள்ளலாம். 'இனி' என்பதைக் கடைசி அடியிலே சேர்க்கவேணும். (கள்ளத் தால் மண்கொண்டு விண்கடந்த பைங்கழலான் அவன்) ஈஸ்வரன் என்று விளங்காதபடி வஞ்சனையாலே, மாவலியிடம் சிறிய உருவை எடுத்துச்சென்று மூவடி மண்கேட்டு, அவ்வளவு பூ₄மியை நீரேற்று வாங்குவதாகப் பெயர்பண்ணி, பெரிய வடி வெடுத்து மண்ணும் விண்ணுமான உலகனைத்தையும் அப ஹரித்துக்கொண்ட பரந்த திருவடிகளை உடையவனை - அவன். 'விண்' என்றது எல்லா உலகங்கட்கும் உபலக்ஷணம். பைங்கழலான்—பரந்த திருவடிகளை உடையவன்; அழகிய திரு வடிகளை உடையவன் என்றுமாம். இச்செயலையே அவன் மாயன் (அறிவரியவன்) என்று கூறுகிறவர்களும் தங்களுடைய வார்த் தைக்கு ப்ரமாணமாக எடுக்கின்றனர். இப்படி வஞ்சித்து மாவலி யிடம் மண்கொண்டதுபோலே, அநாதி₃காலமாக 'ஒட்டேன்' என்றிருந்த இவரையும் வஞ்சித்து நெஞ்சைக்கொண்ட இச் செயலிலேயே இவரும் ஈடுபட்டு இவனை 'இனியவன்' என்கிறார்.

**84. உளனாய நான்மறையின் உட்பொருளை உள்ளத்**
**துளனாகத் தேர்ந்துணர்வரேலும்—உளனாய**
**வண்டாமரை நெடுங்கண் மாயவனை யாவரே**
**கண்டா ருகப்பர் கவி.**

நால் மறையின்—நான்கு வேத₃ங்களினுடைய. உள் பொருள்—உள்ளுறையும் பொருளாக. உளனாயவனை—இருக்கின்ற எம்பெருமானை. உள்ளத்து உளன் ஆக—நெஞ்சிலே பொருந்தியிருப்பவனாக. தேர்ந்து—அறிந்து. உணர்வர் ஏலும்—(சில ஞானிகள்) அறிய ஆசைப்பட்டனரென்றாலும். வண் தாமரை—அழகிய தாமரைப்பூப்போன்ற. நெடு கண்—நீண்ட திருக்கண்களையுடைய. மாயவன்—ஆஶ்சர்யபூ₄தனாகை. உளனாயவனை—இருக்கின்ற அப்பெருமானை. கண்டார் யாவரே—முடியக் காணப்பெற்றார் யாவர்? (ஒருவருமில்லை;) கவி உகப்பர்—தோத்திரக் கவிகளை உகந்து வாயால் சொல்லிக்கொண்டு நிறம்பெறுவர்களத்தனை.

---

அவ:— வேதைத₃கஸமதி₄க₃ம்யனானவனை ஒருவரால் காணமுடியாது. கண்டாராகச் சொல்லுகிறவர்களும் கவிகளைக் கொண்டாடினரித்தனையல்லது ஒருவரும் கண்டாரில்லை என்கிறார்.

---

(இனி உள்ளத்தினுள்ளே உளன்) உலகளப்பது முதலான பல பாடுகளைப்பட்டு என் நெஞ்சத்தை ஈடுபடுத்தி, இப்போது வேறொன்றையும் அறியாமல், என் உள்ளத்தினுள்ளே நிலையாய் எழுந்தருளியிருக்கிறான். பிடித்துத் தள்ளினாலும் போகமாட்டான் போலிருக்கிறது என்கிறார். (உளன்) இங்கே எழுந்தருளிய பின்பே ஸத்தை பெற்றிருக்கிறான். இனி, இவனுடைய இந் நீர்மையை அறியாத எவர் எது சொன்னால் எனக்கென்ன? எனக்கு இப்பெரும்பேறே போதுமானது என்று கருத்து. 83.

84. அவ:— உமது உள்ளத்தினுள்ளே அவன் வந்துசேர்ந்த பின்பாவது, நீர் அவனை முடியக் கண்டீரோ? என்ன, அநந்தமான வேத₃ம் ஒன்றாலேயே அறியத்தக்க பெருமையை உடையவனான அவனை எவராலும் முடியக் காணமுடியாது; கண்டதாகச்

வ்யா:— (உளனித்யாதி₃) நிர்தோ₃ஷ ப்ரமாணஸித்₃த₄னுகையாலே தானுளனாய். வேத₃த்தாலே ப்ரதிபாதி₃க்கப்பட்டவனே. (உள்ளத்தித்யாதி₃) கர்மயோக₃த்தாலே ஜ்ஞாநயோக₃ம் கைவந்து. ஜ்ஞாநயோக₃த்தாலே காண ஆசைப்

உரை:— ருக₃ாதி₃பே₄த₃த்தாலே நாலு வகைப்பட்ட வேத₃த்தில் பூர்வபா₄க₃ஸித்₃த₄மான கர்மாதி₃கள்போலன்றிக்கே, உபநிஷத்₃பா₄க₃ஸித்₃த₄மான ரஹஸ்யார்த்த₂பூ₄தனாய்க் கொண்டு உளனாயிருக்கிறவனே, கர்மயோக₃ ஸித்₃த₄மான

சொல்லுகிற என்னைப் போன்றவர்களும், ஒருபடி கண்டு கவி பாடினார்களித்தனையேயொழிய அவனை எவரும் பூர்ணமாகக் கண்டாரில்லை என்கிறார்.

வ்யா:— (நான்மறையின் உட்பொருள் உளனாயவனே) ருக், யஜுஸ், ஸாமம், அத₂ர்வணம் என்னும் நாலு வகைப்பட்ட வேத₃த்தின் பூர்வபா₄க₃த்தோடு, உத்தரபா₄க₃மான உபநிஷத்தோடு வாசியற வேத₃ம் அனைத்துக்கும் உட்பொருளாய் விளங்கி, இப்படி குற்றமற்ற ப்ரமாணத்தால் ஸித்₃தி₄க்கையால் தான் உளனாயிருப்பவனே. உத்தரபா₄க₃ம் நேரே அவன் ஸ்வரூப ரூப கு₃ணவிபூ₄திகளைச் சொல்லும்; பூர்வபா₄க₃ம் அவனுடைய ஶரீரபூ₄தர்களான அக்₃நி, இந்த்₃ரன் முதலான தே₃வர்களைச் சொல்லி, அவர்களுக்கு அந்தர்யாமியான அவனை ஆராதி₄க்கும் கர்மங்களைச் சொல்லும். ஆக, இருபா₄க₃ங்களுக்கும் உட்பொருளாயிருப்பவன் அவனேயன்றோ. இதனாலன்றோ "வேதை₃ஶ்ச ஸர்வைரஹமேவ வேத்₃ய:" [கீ₃தை 15-15] [எல்லா வேத₃ங்களாலும் நானே அறியத்தக்கவன்] என்று அவனே உத்₃கோ₄ஷித்தான். பூர்வபா₄க₃த்தில் கர்மாதி₃களும், உத்தரபா₄க₃த்தில் உபாஸநாதி₃களும் வெளிப்பொருளாய் விளங்குகின்றன, அவற்றுக்கு விஷயமாயிருப்பவன் இவனேயாகையால் இவனே நான்மறையின் உட்பொருளாய் விளங்குபவன் என்று கருத்து. இது பெரியவாச்சான்பிள்ளை நிர்வாஹம். அன்றிக்கே, பூர்வபா₄க₃ஸித்₃த₄மான கர்மாதி₃கள் வெளிப்பொருள். உபநிஷத் பா₄க₃ஸித்₃த₄னான இவன் உட்பொருள் என்றும் சொல்லலாம். இது அப்பிள்ளை நிர்வாஹம். (உள்ளத்து உளனைத் தேர்ந்து உணர்வரேலும்) (கர்மயோக₃த்தாலே ஜ்ஞாநயோக₃ம் கைவநது, அந்த ஜ்ஞாநயோக₃த்தாலே)

பட்டாரேயாகிலும். (உளனுயவித்யாதி,) "यथा कप्यासं पुण्डरीकमेवमक्षिणी" (யதூா கப்யாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ) என்று ஶ்ருதி ப்ரஸித்₃த₄மான கண்ணழகையுடைய ஸர்வேஶ்வரனை ஆர்காணவல்லார்? (உகப்பர்கவி) பின்னைக் காணும்படி எங்ஙனேயென்னில். அவனுடைய ஸ்தோத்ரத்தை உகக்குமத்தனை. 84.

ஜ்ஞானயோக₃த்தாலே யதூாவாக ஆராய்ந்து, ஹ்ருத₃யத்திலே ஸந்நிஹிதனைப் பரிச்சே₂தி₃த்து அறிந்தார்களேயாகிலும். "यथा कप्यासं पुण्डरीकमेवमक्षिणी" (யதூா கப்யாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ) என்கிறபடியே அழகிய தாமரைப்பூப் போலே நீண்ட திருக்கண்களையுடைய ஆஶ்சர்யபூ₄தனைக் கொண்டு உளனானவனை யார்தான் கண்டு அநுப₄விக்கப் பெற்றார்? கண்டாராகச் சொல்லுகிறவர்களும், இவ்விஷயத்திலே கிஞ்சித்கரித்தோமாக வேணுமென்னும் ஆசையாலே கவியை உகந்தார்களித்தனையல்லது உள்ளபடி காணப்பெற்றார்களோ? என்று கருத்து. 84.

தம் நெஞ்சத்திலே உள்ளவனாக அறிந்து, அவனை அளந்து காண ஆசைப்பட்டார்களாகிலும், உணர்வர் — அறிய ஆசைப்படுவர். இது பெரியவாச்சான்பிள்ளை நிர்வாஹம். அப்பிள்ளை நிர்வாஹம் இங்கும் வேறுபடுகிறது. தேர்ந்து — கர்மயோக₃த்தினால் ஏற்படும் ஜ்ஞாநயோக₃த்தால் உள்ளபடி ஆராய்ந்து, உள்ளத்துளனாக உணர்வரேலும்—ஹ்ருத₃யத்திலே கிட்டியிருப்பவனாக அளவிட்டு அறிந்தார்களேயாகிலும்—என்றபடி. (வண் தாமரை நெடுங்கண் மாயவன் உளனுயவனை யாவரே கண்டார்) "யதூா கப்யாஸம் புண்டரீகம் ஏவம் அக்ஷிணீ" [சாந் 1-6-7] [அவனுக்கு ஸூர்யனால் மலர்ந்த தாமரைபோன்ற இருகண்கள் உள.] என்று வேத₃த்தில் ஓதியபடியே அழகிய தாமரைப்பூப்போலே நீண்ட திருக்கண்களை உடைய ஆஶ்சர்யபூ₄தனாய் எழுந்தருளியிருப்பவனை யார்தான் முடியக் கண்டார்? அவனிடமுள்ள எண்ணிறந்த ஆஶ்சர்யங்கள் அனைத்தையும் அறிவது ஒருபுறமிருக்கட்டும். அவன் கண்ணழகு ஒன்றையாவது அளவிட்டு அறியமுடியுமோ? என்று கருத்து. 'கண்டேன்' என்று சிலர் கூறுகின்றார்களே? எனில்; (உகப்பர் கவி) அவனுடைய பெருமை

85. கவியினார் கைபுனைந்து கண்ணார் கழல்போய்
செவியினார் கேள்வியராய்ச் சேர்ந்தார்—புவியினார்
போற்றியுரைக்கப் பொலியுமே பின்னைக்காய்
ஏற்றுயிரை யட்டா னெழில்.

கவியினார் — தோத்திரக் கவிகளைப் பாடுமவராய்க் கொண்டு. கை புனைந்து—அஞ்ஜலிபண்ணி. கண் — தமது கண்கள். ஆர் கழல் போய்—(அவனது) நிறைவுடைய திருவடிகளிலே சென்று சேரப்பெற்று. செவியின் ஆர் கேள்வியர் ஆய்—காதுநிறைந்த கேள்வியறிவையுடையராய்க்கொண்டு. சேர்ந்தார்—வந்து பணிந்தவர்களான. புவியினார்—பூமியிலுள்ளாரெல்லாரும். போற்றி உரைக்க—(ஒன்றுகூடிப்) புகழ்ந்து பாடினாலும். பின்னைக்காய் ஏறு உயிரை அட்டான் எழில் பொலியுமே—நப்பின்னைப் பிராட்டிக்காக எருதுகளினுயிரை மாய்த்த பெருமானுடைய அழகு சிறப்புறச் சொல்லப்பட்டதாகுமோ? (ஆகாது.)

அவ:— (கவியினார்) ஒருத்தராலறியப்போகாதாகில், "வாழ்த்துவார் பலராக" என்னும்படியே பூமியிலுள்ளா

---

அவ:— நால்வரிருவரால் அறியப்போகாதென்கிறவளவன்றிக்கே, பூமியிலுள்ளாரடங்கலும் பெருந்திரளாகக் கூட்டித் தந்தாமுடைய ஸர்வகரணங்களையுங்கொண்டு

---

யில் பலகோடியில் ஒரு பகுதியை ஒருபடியாகக்கண்டு, தம் ஸ்வரூபம் நிறம்பெற இவ்விஷயத்தில் வாசிக கைங்கர்யம் செய்தோமாகவேணும் என்று பாரித்து, 'கண்டேன்' என்று கவி பாடினார்களேயொழிய அவனுடைய ஸ்வரூபரூபகுணவிபூதிகளில் எதையும் முடியக்கண்டார் எவருமில்லை என்று கருத்து. 'உட்பொருளை' 'மாயவனை' என்றவிடங்களில் உள்ள இரண்டாம் வேற்றுமையுருபுகள் 'உளரய' என்னும் பதங்களோடு சேர்த்துப் பொருள் கொள்ளப்பட்டன. 84.

85. அவ:— சிலரால் அவனை அறியமுடியாதானாலும், "வாழ்த்துவார் பலராக" [திருவாய் 3-1-7] என்கிறபடியே லீலாவிபூதியி

ரெல்லாரும் கூடினாலும் அறியவும் ஏத்தவும் போமோ? என்னில். ஒண்ணாதென்கிறது.

---

ஸ்தோத்ரம் பண்ணப்புக்காலும் அவர்களுக்கும் எட்ட வொண்ணாதபடி அவ்வருகுபட்டன்றோ அவ்விஷயமிருப்பது என்கிறார்.

---

லுள்ளவர்கள் அனைவரும் ஒரே கூட்டமாகக் கூடித் தத்தமது ஸர்வேந்திரியங்களையும் ஒருமுனைப்படுத்தித் துதித்தால் இவனை முடியத் துதித்து விடலாமோ? எனில்: அப்படித் துதித்தாலும் அளவுகாண முடியாதபடியன்றோ அவ்விஷயத்தின் பெருமையிருப்பது என்கிறார்.

யானுமேத்தி ஏழுலகும் முற்றும் ஏத்திப் பின்னையும்
தானும் ஏத்திலும் தன்னை ஏத்த ஏத்த எங்கெய்தும்''
[திருவாய் 4-3-10]

என்ற நம்மாழ்வாருடைய பாவம் இப்பாசுரத்தில் ஓடுகிறது. இப்பூமியிலுள்ளார் பெரும்பாலும் கவிபாடத் தெரியாதவர்களாகவும், பகவானுடைய தாஸ்யரஸம் அறியாதவர்களாகவும், அவன் திருமேனியை ஸேவிக்காதவர்களாகவும், கேள்விஞானமற்றவர்களாகவுமே இருக்கின்றனர். அத்தகையவர்கள் கவிபாட வல்லவர்களாகவும், தாஸ்யரஸம் அறிந்தவர்களாகவும், அவன் திருமேனியில் ஈடுபடுபவர்களாகவும், கேள்விஞானம் உடையவர்களாகவுமாகி, அனைவரும் ஒன்று சேர்ந்து துதித்தாலும் அவன் பெருமையில் ஏகதேசத்தை அளவுகாண முடியாது என்கிறார்.

சதுர்முகாயுர் யதி கோடிவக்த்ரோ
பவேந்நர: க்வாபி விசுத்தசேதா:।
ஸ தே குணாநாமயுதைகதேசம்
வதேந்ந வா தேவவர ப்ரஸீத ॥
[வராஹபுராணம் 73-94]

[பல ப்ரஹ்மாக்களின் ஆயுளை உடையவனாய், கோடிக்கணக்கான முகங்களை உடையவனாய், மிகவும் சுத்தமான மனத்தையுடையவனான ஒரு மனிதன் இருப்பானேயாகில், அவன் உன்னுடைய குணங்களில் பதினாயிரத்தில் ஒரு பங்கைச் சொல்லுவானோ மாட்டானோ அறியோம். தேவர்களில் சிறந்தவனே! அருள் புரியவேண்டும்.] என்று வராஹபுராணத்திலும் இதே ரீதியில் பேசப்பட்டதன்றோ.

வ்யா:— (கவியினர்கைபுனைந்து) ஸ்தோத்ரத்தாலே அபிமாநசூந்யராய்த் தொழுது. (கண்ணார்கழல்போய்) கண விலக்ஷணமான திருவடிகளை அடைந்து. (செவியினரித்யாதி) செவிநிறைந்த கேள்விகையயுடையராய்ச் சேர்ந்தாரான பூமியி

உரை:— நப்பின்னைப் பிராட்டிக்குப் பரதந்த்ரனாய்க் கொண்டு தத்ஸம்ஸ்லேஷ ப்ரதிபந்தகமான ரிஷபங்க ளுடைய ப்ராணன்களை முடித்துப் போகட்டவனுடைய மணக்கோலமும், ஏறுதழுவின ஒருசெயலும், வாயாலே சொன்ன கவியோடே கூடிக்கொண்டு, கையாலே அஞ்ஜலி யைப் பண்ணி, கண்களானவை அழகு நிறைந்திருந்துள்ள திருவடிகளிலே சென்று கிட்டி, செவியில் நிறையும்படி யான அவன் கல்யாண குணங்களில் கேள்வியை உடைய

வ்யா:— (கவியினர்) "கழிய மிக நல்ல வான்கவி" [திருவாய் 3-9-3] என்று சொல்லப்பட்ட மிகமிகச் சிறந்த கவிதைகளை வாயாலே சொல்லிக்கொண்டிருப்பவர்கள். இத்தகைய சிறப்பு தேவதாகடாக்ஷம்பெற்ற சிலர்க்கே அமையும். இப்படிப்பட்டவர் கள் பலர் கூடித் துதித்தாலும் அளவிடமுடியாது என்று பன் மைக்குக் கருத்து. வாசிகமான அடிமை செய்பவர்களிலும் பலர்க் குக் காயிகமான அடிமை செய்வதில் ருசி இராது; அப்படியில் லாமல், காயிகமான அடிமையும் புரிகிறார்கள் என்கிறது மேலே — (கை தொழுது) தங்கள் அபிமானம் ஒழிந்தமை தோற்றக் கையாலே அஞ்ஜலியைப் பண்ணி; இது காயிகமான எல்லா அடிமைகளையும் காட்டுகிறது. அபிமானம் ஒழியப்பெற்றவர்கள் பாடும் கவிதையே சிறப்புறுமாகையாலே, அபிமானம் ஒழிந்து அடிமை செய்பவர்கள் எனக் குறிக்கிறார். அடிமை செய்வதோடு மாத்திரமல்லாமல், வடிவழகில் ஈடுபாடும் இருந்தால்தான் கவிதை சிறப்புறும்; அதுவும் உண்டு என்கிறது மேலே.—(கண்ணார் கழல் போய்) கண்களானவை அழகு நிறைந்த திருவடிகளைச் சென்று அடைந்து. வடிவழகில் ஈடுபாடு இருந்தாலும், கேள்வி ஞானம் இல்லாவிடில் கவிதை சிறப்புறாது; அதுவும் நிறைய உண்டு என்கிறார் மேலே,— (செவியினர் கேள்வியராய்) செவியில் நிறைந்து நிற்கும் அவனுடைய குணசேஷ்டிதங்கள் பற்றிய கேள்வி ஞானத்தையும் உடையவராய். இப்படிச் சிறப்புற்றவர்கள்

லுள்ளாரெல்லாம். (போற்றியுரைக்கப் பொலியுமே) எல்லாருங்கூடப்போற்றியுரையாநின்றால். அங்குத்தைக்கு ஏதேனும் அதிஶயத்தைப்பண்ணப்போமோ? (பின்னைக்காயிதயரதி) நப்பின்னைப் பிராட்டி கலவிக்கு ப்ரதிப$_3$ந்த$_4$கமான வ்ருஷப$_4$ங்களை அடர்த்த ஒரு செயலையும் வடிவழகையும் முடியச் சொல்லப்போமோ? 85.

---

*ராய்க்கொண்டு கிட்டினரான பூ$_4$மியிலுள்ளாரெல்லாம் மங்க$_3$ளவாசகமான ஶப்$_3$த$_3$ங்களைக்கொண்டு ஸ்தோத்ரம் பண்ணி அவர்கள் புகழப் புகழ மேன்மேலென ஸம்ருத்$_4$மாயித்தனை போக்கிச் சிறிது வரையிட்டுக் காட்டுமோ? இவர்கள் சொன்னார்களென்று அங்குத்தைக்கு முன்பில்லாததொரு நன்மையுண்டாமோ? என்றுமாம். 85.*

---

ஓரே விஷயத்தில் கவிபாடச் சேருவது கடி$_2$னம்; அதுவும் நேர்ந்தமையைக் காட்டுகிறார் மேலே,— (சேர்ந்தார்) இவர்கள் அனைவரும் ப$_4$க$_3$வத்$_3$ விஷயத்தைக் கவிபாடவென்றே கூடியிருக்கிறார்கள். ஓர் ஊரில் உள்ள கவிஞர்களோ, ஒரு நாட்டில் உள்ளவர்களோ இப்படிச் சேருவதே மிக அரிது; அம்மட்டுமல்லாமல் பூ$_4$மியிலுள்ளார் அனைவருமே இப்படிச் சேர்ந்திருக்கிறார்கள் என்கிறார் மேலே,— (புவியினார்) பூ$_4$மியிலுள்ள எல்லாக் கவிஞர்களும். பூ$_4$மியிலுள்ள எல்லாச் சேதனர்களும் இத்தகைய பெருமைபெற்று ப$_4$க$_3$வத் விஷயத்தைத் துதிக்கவென்றே கூடினாலும் என்றும் பொருள் கொள்ளலாம். (போற்றி உரைக்க) இப்படி அனைவரும்கூடி ஸ்வாநுப$_4$வத்தோடு நின்றுவிடாமல், மங்க$_3$ள வாசகமான ஶப்$_3$த$_3$ங்களைக்கொண்டு துதித்துப் புகழப்புகழ, இப்படிச் சேராததெல்லாம் சேர்ந்து எல்லாரும் காலமுள்ளதனையும் புகழ்ந்தாலும். (பொலியுமே) இவ்வளவு சிறப்புற்ற இத்தனை பேர்கள் புகழ்ந்தார்கள் என்னும் காரணத்தால், அவ்விஷயத்துக்கு முன்பு இல்லாததொரு சிறப்பைத் கூறியதாக ஆகுமோ? ஆகாது; உள்ள சிறப்பில் பல கோடியில் ஒரு கூற்றைக் கூறியதாகவும் ஆகாது என்று கருத்து; 'பொலியுமே' என்றது எதிர்மறை ஏகாரம். அன்றிக்கே, தேற்றத்தைச் சொல்லும் ஏகாரமாகக் கொண்டு. இத்தனை சிறப்புற்ற இத்தனைபேர் கூடிப்புகழ்ந்தாலும் அவ்விஷயத்தின் சிறப்பு மேன்மேலே பெருகுமேயொழியச் சிறிதும்

86. எழில்கொண்ட மின்னுக் கொடியெடுத்து வேகத்
தொழில்கொண்டு தான்முழங்கித் தோன்றும்—எழில்
நீர்மேக மன்ன நெடுமால் நிறம்போல [கொண்ட
கார்வானம் காட்டும் கலந்து.

எழில் கொண்ட மின் கொடி எடுத்து—அழகிய மின்னலைக் கொடியாக ஏந்தி, வேகம் தொழில் கொண்டு—வேகமாகத் திரிதலாகிற வியாபாரத்தை உடையதாய், முழங்கி தோன்றும்—கர்ஜித்துக்கொண்டு காட்சிதரும், கார் வானம்—கார்காலத்து ஆகாசமானது, எழில் கொண்ட—அழகை யுடைய, நீர்மேகம் அன்ன—காளமேகம் போன்ற, நெடுமால் நிறம் போல கலந்து காட்டும்—எம்பெருமானுடைய திருநிறத்தைப் பொருந்தக் காட்டும்.

அவ:— (எழில்) ஸ்வரூபரூபங்கள் பரிச்சே₂தி₃க்கப்போகாது; உபமாநத்திலே சிறிதுசொல்லலாமித்தனையென்கிறது.

---

அவ— அவனுடைய அழகை ஒருவராலும் அளவிட்டுக் காணவொண்ணுதாகிலும் அத்தைவிட்டு ஆறியிருக்க மாட்டாதே, கண்டு அநுப₄விக்கவேணுமென்று ஆசைப்

---

அளவிட்டுக் காட்டியதாக ஆகாது என்பதாகவும் கொள்ளலாம். ப₄க₃வத்₃விஷயத்தின் ஸ்வரூபரூபகு₃ணவிபூ₄தி சேஷ்டிதங்கள் அனைத்தையும் இப்படி அளவிடமுடியாவிடிலும், அவற்றில் ஏக தே₃ஶத்தையாவது அளவிடமுடியுமோ? எனில், அதுவும் இயலாது என்கிறார் கடைசியில்,— (பின்னைக்காய் ஏற்றுயிரை அட்டான் எழில்) நப்பின்னைப் பிராட்டியின் கடைக்கண்ணோக்குக்கு வசப்பட்டவனாய், அவளை அணைப்பதற்குத் தடையாயிருந்த ஏழு எருதுகளின் பிராணன்களையும் ஒன்றாக முடித்தவனுடைய அவ்வொரு செயலையும், அவனும் அவளுமாகக்கூடி நின்ற அம் மணக்கோலம் ஒன்றையும் அளவிட்டு அறியவோ சொல்லவோ முடியாது—என்று கருத்து. 85.

86. அவ:— ஸ்வரூபரூபகு₃ணவிபூ₄தி சேஷ்டிதங்களில் ஏக தே₃ஶத்தையும் அளவிட முடியாதாயினும், அவற்றைவிட்டு ஆறியிருக்கமாட்டாமல், கண்டு அநுப₄விக்கவேணும் என்று ஆசைப்

வ்யா:— (எழிலித்யாதி) எழிலையுடைத்தான மின்னைக் கொடியாக எடுத்து. (வேகத்தொழிலித்யாதி) வேகத்தை

படுமவர்களுக்கு மேகங்கள்தானே அவன் வடிவைக் காட்டுமென்கிறார்.

உரை:— அழகையுடைத்தாய்க்கொண்டு. மின்னை த்வஜமாக தரித்து. வேகமாகிற வ்யாபாரத்தை உடைத்தாய்க் கொண்டு. தான் மிகவும் கோஷித்துக்கொண்டு தோற்று

படுமவர்களுக்கு, அவன் வடிவழகுக்கு ஒரு புடை உபமானமான மேகங்கள் அவன் வடிவழகைக் காட்டும் என்கிறார். "நீலதோயத மத்யஸ்தா வித்யுல்லேகேவ பாஸ்வரா" [நாராயணஸூக்தம்] [நீலமேகம் உட்கொண்ட மின்னற்கொடிபோல் ஒளிவீசுவது (எம்பெருமானின் திருமேனி)] என்று வேதபுருஷனும், "நீலமுண்ட மின்னன்ன மேனிப் பெருமான்" [திருவிருத்தம் 29] என்று. வேதம் தமிழ்செய்த மாறனும் எம்பெருமானுடைய திருமேனிக்கு மின்னலுடன் கூடிய மேகத்தையே உபமானமாகக் காட்டினரன்றே.

வ்யா:— (எழில் கொண்ட மின்னுக் கொடியெடுத்து) எழில் அனைத்தையும் தன்னுட்கொண்ட மின்னற்கொடியைத் தன்னுள் தரித்து. "வித்யுல்லேகா" என்ற உபநிஷத்ப்ரயோகம் 'மின்னுக்கொடி' என்று தமிழ்ப்படுத்தப்பட்டுள்ளது. அன்றிக்கே, எழில்கொண்ட மின்னை கொடியாக (த்வஜமாக) தரித்து என்றும் பொருள் கொள்ளலாம். மேகமாகிற தேருக்கு மின்னல் த்வஜமாகிறது என்று கருத்து. 'எழில் கொண்ட' என்றது மேலே கார்வானத்துக்கு விசேஷணமாகவுமாம். 'எழில் கொண்டு' என்றும் பாடமுள்ளதாக அப்பிள்ளை காட்டினார். அப்போது, 'எழில் கொண்டு தோன்றும் கார்வானம்' என்று அந்வயித்துக் கொள்ளவேணும். இப்படியே, 'மின்னுக் கொடியெடுத்து' 'வேகத் தொழில்கொண்டு' 'தான் முழங்கி' என்னும் ஒவ்வொரு தொடரையும். 'தோன்றும் கார்வானம்' என்னும் பதங்களோடு கூட்டிப் பொருள்கொள்ளவேணும். (வேகத் தொழில்கொண்டு) "உலகளிப்பான் மாகங்கள் எல்லாம் திரிந்து" [திருவிருத்தம் 32] என்கிறபடியே, உலகங்களை உய்விப்பதற்காக மிகவிரைவாகத் திரிகையாகிற தொழிலை உடையதாய்க்கொண்டு. அதிவேகமாக மழை பொழிகையாகிற தொழிலைக்கொண்டு என்றும் பொருள்

யுடைத்தான தொழிலேக்கொண்டு தானே முழங்கித் தோன்ரு நின்ற கார்வானம். (எழிலித்யாதி) ஆகூளமாக நீரைப் பாநம் பண்ணின காளமேக₄ம்போலே இருந்துள்ள ஸர்வேஶ

கிற கார்காலத்தில் மேக₄மானது—கண்மாறவைக்க வொண்ணுத அழகையுடைத்தாய் கழுத்தே கட்டளேயாக நீரைப்பருகின காளமேக₄ம்போலேயிருந்துள்ள ஸர்வேஶ்வரனுடைய நிறம்போலே சேர்ந்து ப்ரகாசியாநிற்கும். "எழில்கொண்ட மின்னுக்கொடியெடுத்து" என்று பாட₂

கொள்ளலாம். (தான் முழங்கித் தோன்றும்) தானே கோ₄ஷித்துக் கொண்டு தோன்றுகிற. (கார்வானம்) மழைக்காலத்து மேக₄மானது. 'வானம்' என்னும் ஆகாஶத்தைக் குறிக்கும் சொல் இடவாகுபெயராய், அவ்வாகாஶத்திலுள்ள மேகத்தைக் குறிக்கிறது. (எழில் கொண்ட—நீர்மேகம் அன்ன—நெடுமால்) (எழில்கொண்ட நெடுமால்) வைத்த கண்ணை வாங்கமுடியாத வடிவழகை உடைய நெடுமால். எழில் கொண்ட நெடுமாலுக்கு எழில் கொண்ட கார் வானத்தையே ஒப்புச்சொல்லமுடியும் என்று கருத்து. இப்படி எழில் ஒன்றில் மாத்திரமல்லாமல், முன் மேகத்திற்குச் சொன்ன எல்லாப் பெருமைகளையும் உடைய நெடுமாலுக்கு அம்மேகத்தையே ஒப்பாகச் சொல்லமுடியும் என்கிருர்.—(நீர்மேகம் அன்ன நெடுமால்) "ஆழியுட்புக்கு முகந்து கொடு" [திருப்பாவை 4] என்கிறபடியே கடல்நீரைக் கழுத்துவரையில் (அதாவது பரிபூர்ணமாக) பருகியிருக்கும் காளமேக₄ம்போலே உள்ள நெடுமால். கார்வானம் கறுத்திருப்பதுபோலே, இவனும் கருநிறமுடையவனுயிருக்கிருன்; அதில் மின்னற்கொடியிருப்பதுபோலே, இவனிடத்திலும் மின்னற்கொடிபோன்ற பெரியபிராட்டியாரும். 'ஆழிபோல் மின்னி' [திருப்பாவை 4] எனப்படும் ஸுத₃ர்ஶநாழ்வானும், மின்னல்போல் ஒளிவீசும் பல பல ஆயுத₄ங்களும், ஆப₄ரணங்களும் உள்ளன. அது உலகை உய்விப்பதற்காக வேகத்தொழில் கொண்டு எங்கும் ஸஞ்சரிப்பதுபோலே, இவனும் கஜேந்திராழ்வானைப் போன்ற அடியார்களைக் காக்க அதிவேக₃மாக உலகெங்கும் திரிந்து கொண்டிருப்பான். அது உலகம் வாழ அதிவேக₃மாக மழை பொழிவதுபோலே இவனும், "சார்ங்கமுதைத்த சரமழைபோல் வாழ உலகினில் பெய்திடாய்" [திருப்பாவை 4] என்னலாம்படி உலகம் வாழத் தீயவர்கள்மேல் சரமழையையும், நல்லோர்

வரனுடைய நிறம்போலே. (காரித்யாதி) கார்காலத்திலே மேக₄மானது கலந்து காட்டும். 86.

87. கலந்து மணியிமைக்கும் கண்ணா நின்மேனி
மலர்ந்து மரதகமே காட்டும்—நலந்திகழும்
கொந்தின்வாய் வண்டறையும் தண்டுழாய்க் கோமானை
அந்திவான் காட்டு மது.

**கண்ணா**—கண்ணபிரானே! **மணி கலந்து**-ஸ்ரீகௌஸ்துப₄ மணியோடுகூடி. **இமைக்கும்**—விளங்காநின்ற **நின்மேனி**—உன் திருமேனியை. **மரதகம்**—மரதகரத்னமானது. **மலர்ந்து**—ஒளிப்பரப்பையுடைத்தாய்க்கொண்டு. **காட்டும்**—காட்டுகின்றது. **நலம் திகழும்**—அழகாக விளங்குகின்ற. **கொந்தின் வாய்**—கொத்துக்களிலே. **வண்டு அறையும்**—

---

மானபோது, அழகையுடைத்தாயிருக்கிற கார்வானமென்று மேகத்துக்கு விஶேஷணமாகக் கடவது. 83.

---

கள்மேல் கருணை மழையையும் பொழிந்துகொண்டிருப்பான். அது தான் வருவதற்கு அறிகுறியாக இடிமுழக்கத்தோடு தோன்று வது போலே, இவனும், 'வலம் புரிபோல் நின்றதிர்ந்து' [திருப் பாவை 4] என்னலாம்படி அடியார்கள் தான் வருவதை அறிய லாம்படி பாஞ்சசன்னியத்தை முழங்கிக்கொண்டு தோன்றுவான். அது கைம்மாறு கருதாது வரையாது பொழியும் நீர்மேகமாயிருப் பதுபோலே, இவனும் நிர்ஹேதுகமாக உயிர்களாகிற பயிர் களுக்குத் தன் கருணை நீரை தே₃வத₃ாநவ வஸிஷ்ட₂சண்ட₃ாளாதி₃ விப₄ாக₃மறப் பொழிவான். இத்தனை வகைகளாலே நீர்மேகம் இவனுக்கு முற்றுவமையாயிருக்கையாலே 'நீர்மேகமன்ன நெடு மால்' என்கிறார். (நெடுமால் நிறம்போலக் கார்வானம் கலந்து காட்டும்) அந்த ஸர்வேஶ்வரனுடைய நிறத்தைப்போல, முதல் இரண்டு அடிகளிற் கூறப்பட்ட பெருமைகளை உடைய கார்வானம் பொருத்தமாக ப்ரகாஶியாநிற்கும். ஆகையால், சென்ற பாசுரத் தில் கூறியபடி அவனுடைய அழகை எவராலும் அளவிட்டுக் காணவொண்ணாதாகிலும், அதைக் காணமல் த₄ரிக்கமாட்டாத நம்மைப் போன்றவர்களுக்கு மேக₄ங்கள் அவன் வடிவழகைக் காட்டும் என்றாராயிற்று. 86.

வண்டுகள் ரீங்காரம் செய்யப்பெற்ற. **தண் துழாய்**—திருத் துழாய் மாலையணிந்த. **கோமானை**—ஸர்வேஶ்வரனாகிய உன் திருமேனியை. **அந்தி வான் அது காட்டும்**—மாலைநேரத்து ஆகாயமானது காட்டுகின்றது.

**அவ:—(கலந்து) பின்னையும் உபமாநத்திலே பாரிக்கிறார்.**

**வ்யா:— (கலர் த்யாதி) ஶ்ரீகௌஸ்துபத்தோடே கலந்து ப்ரகாஶியா நின்ற உன்னுடைய திருமேனியை— ப்ரகாஶியா நின்ற ஶ்ரமஹரமான மரதகமே காட்டாநின்றது.**

---

அவ:— அவனுடைய ஸ்வதஸ்ஸித்தமான அழகைப் பின்னையும் உபமானத்திலே பாரிக்கிறார்.

உரை— ஆஶ்ரிதஸுலபனானவனே! ஸ்ரீ கௌஸ்துபத்தோடே கலந்து ப்ரகாஶியாநின்ற உன்னுடைய திருமேனியை—ஶ்ரமஹரமான மரதகரத்னமானது விஸ்த்ருதமான ப்ரபையை உடைததாய்க்கொண்டு, ஸ்பஷ்டமாக ப்ரகாஶிப்பியாநின்றது. அழகு விளங்காநின்றுள்ள கொத்துக்

---

87. அவ:— இப்படி ஓர் உபமானத்தாலே கண்டு திருப்தி பெறக்கூடியவரல்லாமையாலே, அவனுடைய இயற்கையழகை மேலும் இரண்டு உபமானங்களாலே கண்டு அநுபவிக்க மநோரதிக்கிறார்.

வ்யா:— (கண்ணா!) ஓர் இடைச்சிக்கும் கட்டவும் அடிக்கவும் ஆம்படி க்ருஷ்ணாவதாரம் எடுத்து ஸுலபனானவனே! நீயே காட்டக் கண்ட அடியார் கண்ணுக்கு விஷயமாகின்றவனே! என்றும் பொருள் கொள்ளலாம். அளவிட்டுக் காணவொண்ணாத உன்னைக் கண்ணால் கண்டவர்களும் பலர் உளர் என்று கருத்து. (மணி கலந்து இமைக்கும் நின் மேனி) ஸ்ரீ கௌஸ்துபமணி கலந்து ஒளிவிடா நின்ற உன்னுடைய திருமேனியை. (மரதகமே மலர்ந்து காட்டும்) கண்டார் களைப்பை ஆற்றும் மரகதரத்னமானது பரவி வீசும் ஒளியை உடையதாய்க்கொண்டு தெளிவாகக் காட்டாநின்றது ஏற்கனவே மணிவண்ணனாயிருக்கும் உன் திருமேனியில், ஸ்ரீகௌஸ்துபமணியும் சேர்ந்து ஒளிவீசுவதால், மரகத

(நலந்திகழுமித்யாதி) அழகு திகழாநின்ற கொத்திலே வண்டறையாநின்ற திருத்துழாயையுடைய ஸர்வேஶ்வரனை ஸந்த்₄யாராக₃த்தாலே சிவந்தமேகம் காட்டாநின்றது. 87.

88. அதுநன் றிதுதீதென் றையப்படாதே
மதுநின்ற தண்டுழாய் மார்வன்—பொதுநின்ற
பொன்னங் கழலே தொழுமின் முழுவினைகள்
முன்னங் கழலும் முடிந்து.

---

களிலே படிந்து மதுபானம் பண்ணின வண்டுகள் ஶப்₃தி₃யாநின்றுள்ள குளிர்ந்த திருத்துழாயையுடைய ஸர்வேஶ்வரனை உன்னை ஸந்த்₄யாராக₃த்தையுடைத்தான அந்தி ஆகாஶமானது ப்ரகாஶிப்பியாநின்றது; திருத்துழாயின் பசுமையும், தி₃வ்யாவயவங்களிற் சிவப்பும் கூடின திருமேனியை அந்திவான் காட்டுமென்றபடி. அது போல் காட்டுமென்னவுமாம். 87.

---

மணியே அதற்குப் பொருத்தமான உபமானமாகிறது என்று கருத்து. (நலம் திகழும் கொந்தின்வாய் வண்டறையும் தண் துழாய்க் கோயானை) அழகு விளங்கும் கொத்துக்களிலே படிந்து, தேனைப் பருகிய வண்டுகள் ஒலிசெய்யும் குளிர்ந்த திருத்துழாயை உடைய ஸர்வேஶ்வரனை உன்னை. (அந்தி வான் அது காட்டும்) மாலை வேளையில் அந்திவெய்யிலாலே சிவந்திருக்கும் ஆகாயம் அல்லது மேக₄ம் காட்டுகிறது. திருத்துழாயின் பசுமையும், வண்டுகளின் கருமையும், கண் கை கால் முதலான அவயவங்களின் சிவப்பும் கூடிய திருமேனியை அந்நிறங்களெல்லாம் கூடிய அந்திவான் காட்டும் என்றபடி. 'வான்' என்றது ஆகாயத்தையோ, மேகத்தையோ, குறிக்கும். 'நெடுமால் நிறம்போலக் கார்வானம் காட்டும்' என்ற சென்ற பாசுரத்திற்போலே, இங்கும் 'போல' என்பதைக் கூட்டிக்கொண்டு, அதுபோல் காட்டும்' என்றும் பொருள்கொள்ளலாம். ஆக, அளவிட்டுக் காணவொண்ணாத இவனைச் சில உபமானங்களாலே கண்டு த₄ரிக்கலாம் என்றாராயிற்று. 87.

அது நன்று இது தீது என்று ஐயம்படாதே — 'அது நல்லதோ? இது கெட்டதோ? என்று ஸந்தேஹப்பட்டுக் கொண்டிராமல். மது நின்ற தண்துழாய் மார்வன் — தேன் நிறைந்த குளிர்ந்த துழாய்மாலையைத் திருமார்பிலணிந்த பெருமானுடைய. பொதுநின்ற — (திருவடியடைவதில்) அனைவர்க்கும் பொதுவான, பொன் அம் கழலே—விரும்பத் தக்க அழகிய திருவடிகளையே. தொழுமின்—தொழுங்கோள் (அப்படித்தொழுதால்) முன்னம் — முன்னதாகவே. முழு வினைகள் — எல்லாப்பாபங்களும். முடிந்து — உருமாய்ந்து. கழலும் — விட்டு நீங்கும்.

அவ:— (அதுநன்று) அது நன்று, இது தீதென்று ஸம்ஶயியாதே ஸர்வேஶ்வரனை ஆஶ்ரயியுங்கோள்; உங்களுடைய ப்ரதிபந்தகங்கள் வேறொருவ்யக்திக்காகாதபடி போமென்கிறார்.

வ்யா:—(அது நன்றித்யாதி) ப$_4$க$_3$வத் ப்ராவண்யம் நன்று. விஷயப்ராவண்யம் பொல்லாதென்று ஸம்ஶயப்படாதே. (மது

---

அவ:—இதர விஷயங்களில் உள்மானம் புறமானங்களை ஆராய்ந்து ஸம்ஶயியாதே. ஸர்வஸமாஶ்ரயணீயனான ஸர்வேஶ்வரன் திருவடிகளை ஆஶ்ரயியுங்கோள். உங்கள் ஸமஸ்தது$_8$:க்க$_2$ங்களும் போமென்கிறார்.

உரை:—ஶாஸ்த்ரஸித்$_3$த$_4$மான ப$_4$க$_3$வத்$_8$விஷயம் நல்லது. ப்ரத்யக்ஷஸித்$_3$த$_4$மான இதர விஷயங்கள் சாலப்பொல்லாது, என்னுமிவ்வர்த்த$_2$த்தில் ஸம்ஶயப்படாதே. ஐஶ்வர்ய

---

88. அவ:— ப$_4$க$_3$வத்$_3$விஷயத்தில் தம்முடைய ஈடுபாட்டைப் பேசினார்; ஸம்ஸாரிகள் இதரவிஷயங்களிலே மண்டி ஸம்ஶயத்தோடே வாழ்ந்துவருவதைக்கண்டு, 'கெடுவீர்! இப்படி ஸம்ஶயத்தாலே அழிந்து போகாமல், அனைவரும் ஆஶ்ரயிக்கத்தக்க ப$_4$க$_3$வத்$_3$ விஷயத்தை உறுதியோடு பற்றி உங்கள் துன்பங்களைப்போக்கிக் கொள்ளப் பாருங்கள்'—என்கிறார்.

நின்றவித்யாதி) ஸம்ஶயிக்கவொண்ணாதபடி ஆதிராஜ்ய ஸூசகமான திருத்துழாயையுடையவனுடைய திருவடிகளை

ப்ரகர்ஷகமாய் தேன்நிறைந்திருக்கிற குளிர்ந்த திருத்துழாயாலே அலங்க்ருதமான திருமார்வையுடையவனுடைய, ஸர்வாஶ்ரித ஸாதாரணமாய், ஸ்ப்ருஹணீயமாய், அழகியதாயிருந்துள்ள திருவடியை ஆஶ்ரயியுங்கோள். ஆஶ்ரயண

வ்யா:—('அது நன்று இது தீது என்று ஐயப்படாதே') இந்த்ரியங்களுக்குப்புலப்படாததாய், ஶாஸ்த்ரங்களாலேயே அறியப்படுவதாகையாலே 'அது' எனப்படும் பகவத்விஷயம் நல்லது; இந்திரியங்களுக்குப்புலப்படுகையாலே 'இது' எனத்தக்க இதரவிஷயம் மிகவும் தீயது என்று ஸம்ஶயப்படாமல்; "பகவத்விஷயம் நல்லது, இதரவிஷயம் பொல்லாதது" என்னும் அறிவே நிஶ்சயரூபமானதாயிருந்தால் உத்தேஶ்யமாகிறது; அதுவே ஸம்ஶயாத்மகமான அறிவாகில், "ஸம்ஶயாத்மா விநஶ்யதி" [கீதை 4-40] [ஐயப்படும் நெஞ்சை உடையவன் அழிகிறான்] என்கிற ரீதியிலே விநாஶஹேதுவாய் த்யாஜ்யமாகிறதன்றோ. அன்றிக்கே, 'அது' என்று ஏற்கனவே அநுபவிக்கப்பட்ட இதரவிஷயத்தையும், 'இது' என்று இப்போது அநுபவிக்கப்படுகிற இதரவிஷயத்தையும் சொல்லுவதாகக்கொண்டு, இப்படி இதரவிஷயங்களின் "உள்ளளவு, வெளியளவுகளை ஆராய்ந்து அவற்றில் தாரதம்யங்களைப்பார்த்து ஒன்றைவிட்டு ஒன்றுக்குத்தாவி, ஒன்றிலும் நிலைநில்லாமல் ஸம்ஶயாத்மாக்களாய்த் திரியாமல்" என்றும் பொருள் கொள்ளலாம். இதரவிஷயங்கள் இயல்வாகவே தீயவையாகையால், அவற்றை அநுபவிக்கும்போது விவேகிகளுக்கு இதுதீது என்று தோன்றும்; அநுபவிக்கப்பட்ட விஷயங்களும், அநுபவிக்கவிருக்கும் விஷயங்களும், இக்கரைக்கு அக்கரை பச்சை' என்னும் நியாயத்தாலே 'அது நன்று' எனததோன்றும். இப்படி என்றும் நிலைநில்லாமை ஏற்படும் என்று கருத்து. "அது நன்று இதுதீது என்று ஐயப்படாமல் உறுதியாக நல்லவிஷயம் என்று பற்றலாவது எதை.?" என்ன,—(மது நின்ற தண்டுழாய மார்பன்) 'இவனே ஸர்வேஶ்வரன்' என்று காட்டித்தருவதாய், தேன் நிறைந்திருப்பதாய், குளிர்ந்திருப்பதான திருத்துழாயாலே அலங்கரிக்கப்பெற்ற திருமார்வை உடையவனுடைய. (பொது நின்ற பொன்னங்கழலே)

ஆஶ்ரயியுங்கோள். (முழுவினையித்யாதி) நீங்கள் பண்ணின பாபம் வ்யக்த்யந்தரத்துக்கு ஆகாதபடி நசிக்கும். 88.

---

விரோதிகளான ஸமஸ்தபாபங்களும் வ்யக்த்யந்தரங்களில் கார்யகரமாக மாட்டாதபடி நசித்து, தொழுவதாகவொருப் பட்டவளவிலே விட்டு நீங்கும். 'அது நன்று இது தீது என்று ஐயப்படாதே' என்று அநுபூதமான விஷயம் நல்லது, இப்போது அநுபவிக்கிற விஷயம் பொல்லாது என்று இதரவிஷயங்களில் உள்மானம் புறமானங்களைப் பார்த்து ஸம்ஶயியாதே என்னவுமாம். 88.

---

"தேவாநாம் தாநவாநாம் ச ஸாமாந்யமதிதைவதம் ।
ஸர்வதா சரணத்வந்த்வம் வ்ரஜாமி ஶரணம் தவ ॥" [ஜிதந்தே]

[தேவர்களுக்கும், அஸுரர்களுக்கும், (ஆஶ்ரயிக்கும் விஷயத்தில்), எப்போதும் பொதுவான தெய்வமாயிருக்கும் உன் திருவடியிணையை உபாயமாக அடைகிறேன்.] என்றும், "ஸமோऽஹம் ஸர்வபூதேஷு" [கீதை9-19] [எல்லா ஜீவராசிகட்கும் (ஆஶ்ரயிக்கும் விஷயத்தில்), நான் ஸமமாயிருப்பவன்] என்றும் கூறுகிறபடியே, இன்னார் இனியார் என்னும் வாசியில்லாமல் அனைவராலும் ஆஶ்ரயிக்கத்தக்கதாய், பொன்போலே அனைவராலும் ஆசைப்படத்தக்கதாய், அழகியதான, திருவடியையே. ஐயப்படாமல், உறுதியாகப்பற்றததக்க விஷயம் இதைக்காட்டிலும் வேறு எது உள்ளது? என்று கருத்து, (கழலே தொழுமின்) அத்திருவடியையே வேறு எதிலும் நெஞ்சுசெலுத்தாமல், ப்ராப்யமாகவும், ப்ராபகமாகவும், தாரகமாகவும், போஷகமாகவும், போக்யமாகவும் நினைத்துத் தொழுங்கள். இப்படிப் பற்றினால் வரக்கூடிய பேறு யாதெனில்: (முழுவினைகள் முன்னம் முடிந்து கழலும்) முற்கூறிய ஸம்ஶயத்திற்குக்காரணமாய், உங்களை, இதுநாள் வரையில் இவ்விஷயத்தை ஆஶ்ரயிக்கவொட்டாமல் தடுத்து வந்த ஸகலபாபங்களும், உங்களை விட்டபின்பு வேறு யாரிடமும் கூடத் தம் வீர்யத்தைக்காட்ட முடியாதபடி அடியோடு அழிந்து, ஆஶ்ரயிக்கத் தொடங்கிய அக்கணத்திலேயே உங்களை, விட்டு நீங்கும். இப்படி விலக்ஷணனான புருஷார்த்தமான பகவத்விஷயத்தைப்பற்றி உஜ்ஜீவிக்கப்பாருங்கள்—என்று ஸம்ஸாரிகளின் அநர்த்தத்தைக் கண்டு பரோபதேஶம் செய்தருளினாராயிற்று. 88.

89. முடிந்தபொழுதில் குறவாணர் ஏனம்
படிந்துழுசால் பைந்தினைகள்வித்த—தடிந்தெழுந்த
வேய்ங்கழைபோய் விண்திறக்கும் வேங்கடமே மேலொரு
தீங்குழல்வாய் வைத்தான் சிலம்பு. [நாள்

முடிந்த பொழுதில் குறவாணர்—*மரணமடையும் நிலைமை யிலுள்ள கிழவர்களான குறவர் தலைவர்கள்.* ஏனம் படிந்து உழு சால்—*காட்டுப்பன்றிகள் (தங்கள் செருக்காலே மூங்கில்கள் வேர்பறிந்து விழும்படி) ஊன்றி உழுத நிலங்களிலே.* பை தினைகள் வித்த-*புதிய தினைவிதைகளை விதைக்க,* தடிந்து—*வெட்டிப்போட்ட பின்பும்.* எழுந்த - *(நிலவளத்தினால்)* ஓங்கிவளர்ந்த வேய்ங்கழை—*மூங்கில் தடிகளானவை.* போய்—*வளர்ந்து சென்று.* விண் திறக்கும்—*ஆகாசத்தை அளாவப்பெற்ற.* வேங்கடம் — *திருவேங்கடம்.* மேல் ஒரு நாள்—*முன்பொருநாள்.* தீம் குழல்—*இனிய புல்லாங்குழலை.* வாய் வைத்தான்—*திருப்பவளத்தில் வைத்து ஊதின கண்ணபிரானுடைய.* சிலம்பு—*திருமலையாம்.*

---

அவ:— (முடிந்த) திருமலையில் குறவரோடு திருவேங்கடமுடையானோடு வாசியற எல்லாம் உத்₃தே₃ஶ்யமாயிருக்கிறபடி.

வ்யா:— (முடிந்தவித்யாதி) சரமாவஸ்தை₂யிலே வர்த்திக்கிற குறவர்க்கு நிர்வாஹகர். (ஏனமித்யாதி) தங்களுக்கு

---

அவ:— *இப்படி ஸமாஶ்ரயணீயனானவனைக்கண்டு அநுப₄விக்கலாவது திருமலையிலே கிடீரென்கிறார்.*

உரை:— *அப்போது முடிந்தார்கள். இப்போது முடிந்தார்கள் என்னும்படி சரமத₃ஶாபன்னரான குறவ்ருத்₃த₄ர்*

---

89. அவ:— 'ப்ரத்யக்ஷம்' என்பதே கொண்டு தீதான இதர விஷயங்களிலே மண்டினீர்களாகில், நன்றான அந்த ப₄க₃வத்₃ விஷயத்தையும் ப்ரத்யக்ஷமாகக்கண்டு திருமலையிலே அநுப₄விக்கலாம் வாரீர் என்கிறார்.

பூலமின்றிக்கே பன்றியுழுத சாலிலே அழகிய தினைகளை வித்த, (தடிந்தித்யாதி) தினைவிரைக்கைக்காக வெட்டியெழுந்த வேய்ங்கழைபோய் விண்ணைத்திறக்கும் திருமலை. (மேலித்

கள் தாங்கள் ஏர் பிடித்து உழமாட்டாமையாலும், ஜாத்யுசிதவ்ருத்தி தவிரவொண்ணாமையாலும் வராஹங்களானவை தங்கள் செருக்காலே மூங்கில்கள் வேர்பறிந்துவிழும்படி படிந்து உழுத சால்களிலே, உழுத செவ்வி போவதுக்கு முன்னே அழகிய தினைகளை விதைக்க. பிற்றைநாள் பன்றிகள் சாய்த்துப் பொகட்ட, மூங்கில்களை தினைக்குக் களை ஆகவொண்ணாதென்று அவர்கள் வெட்டிக்கிளைத்த வேய் மூங்கில்களானவை போய் ஆகாசத்தை ஊடுருவ வளர்ந்து

வ்யா:— (முடிந்த பொழுதில் குறவாணர்) மரணமடையும் நிலையிலுள்ள கிழக்குறவர் தலைவர்கள். 'அன்றே முடிந்தனர்; இதோ இன்றே முடிவர்' என்று ஊர்வழக்கு ஏற்படும்படி ஆயுள் முடியும் நிலையிலுள்ள குறக்கிழவர் தலைவர்கள். இப்படி வயஸ்ஸு அதிகமாகி, தங்கள் குலத்தொழிலான வேட்டையாடுதல் முதலானவற்றைச் செய்ய இயலாதவர்களாகி எளிதாக விவசாயம் செய்வதில் ஈடுபட்டிருக்கிறார்கள் என்று கருத்து. எளிதாக விவசாயம் செய்ய இவர்கள் செய்வதுயாது? எனில்: (ஏனம் படிந்துழு சால் பைந்தினைகள் வித்த) காட்டுப்பன்றிகள் தங்கள் செருக்காலே மூங்கில் வேர் பறிந்து விழும்படி ஊன்றி உழுத நிலங்களிலே, உழுத செவ்வி மாறுவதற்குள் புதிய தினைவிதைகளை விதைக்க; தாங்கள் ஏர்பிடித்து உழமாட்டாமையாலும், தங்கள் குலத்தொழிலை விடமாட்டாமையாலும் பன்றிகள் உழுத நிலப்பகுதிகளிலே தினைகளை விதைத்துப் பயன்பெறப் பார்க்கிறார்கள் என்று கருத்து. சால்— உழுகின்ற நிலப்பகுதி. (தடிந்தெழுந்த வேய்ங்கழை போய் விண் திறக்கும் வேங்கடமே) வெட்டிப் போட்டபின்பும் நிலவளத்தினால் கிளைத்து வளர்ந்த மூங்கில்தடிகள் வளர்ந்து சென்று, ஆகாயத்தை ஊடுருவி நிற்கும்படியான திருமலையே. பன்றிகள் சால்களை உழும்போது சாய்த்த மூங்கில்கள் தினைக்குக்களை ஆகக்கூடாது என்னும் எண்ணத்தாலே குறவர்கள் அம்மூங்கில்களை வெட்டி விடுகிறார்கள்; வெட்டப்பட்ட அம்மூங்கில்களின் அடிப்பகுதிகள், நிலத்தின் வளத்தாலே விரைவிலேயே ஆகாயத்தை ஊடுருவும் மூங்கில்தடிகளாக

**யாதி) பண்டொருநாள் இனிய குழலை வாயிலே வைத்துத் திருவாய்ப்பாடியிலுள்ளாரை வசீகரித்தாப்போலே ஒருமலையிலேநின்று ஸம்ஸாரிகளை வசீகரிக்க நிற்குமவன் சிலம்பு. 69.**

---

*நிற்கும்படியான திருவேங்கடமே பண்டொருநாளிலே திருவாய்ப்பாடியில் இடைச்சிகள் முதலானோரைப் பிச்சேற்றும்படி அழகிய திருக்குழலைத் திருப்பவளத்தில் வைத்து ஊதினவன். பின்புள்ள ஸம்ஸாரிகளையும் வசீகரிக்கைக்காக விரும்பி வர்த்திக்கிற மலை. சிலம்பு—மலை.*

---

வளர்ந்து விடுகிறது என்று கருத்து. அன்றிக்கே, 'முடிந்த பொழுதில்' என்று அந்திவேளையைச் சொல்லுகிறதாய், மாலை வேளையிலே குறவர்கள் தினைகளை விதைத்து, களையான மூங்கில்களை வெட்டிவர அப்படி வெட்டப்பட்ட அடிப்பகுதி காலையில் ஆகாயமளாவும்படி வளர்ந்து விடுகிறது என்று கூறுவதாகவும் கொள்ளலாம். ஸ்வாபதேசத்தில், ஏனம் படிந்துழு சால்களிலே பைந்தினைகளை விதைக்கும் முடிந்தபொழுதில் குறவாணர் என்று, வராஹப்பெருமான் காட்டிய ஸித்தோபாய நிஷ்டையை உறுதியாகப்பற்றிநிற்கும் சரமாதிகாரிகளைக்காட்டுகிறது, ஏனத்தால் சாய்க்கப்பெற்று இவ்வதிகாரிகளாலும் வெட்டப்பெற்ற களையான மூங்கிலாவது, இவர்களுடைய ஸ்வப்ரவ்ருத்தி. வராஹம் காட்டிய வழியான ஸித்தோபாயநிஷ்டைக்கு அநாதிகாலமாகக் களையாய் நிற்பது ஸ்வப்ரவ்ருத்தியன்றோ. இப்படி வெட்டப்பட்ட மூங்கில் உடனடியாக வளர்ந்து சென்று விண்திறப்பதாவது — இந்த ஸ்வப்ரவ்ருத்தியானது ஸ்வார்த்தமாக நின்ற நிலைமாறிப் பரார்த்தமாகி, பரமபதமளவும் எம்பெருமானுக்கும் அவனடியார்களுக்கும் மங்களாஸாஸநம் செய்வதாய் வளருகை. இவ்வளவு காரியங்களும் வராஹக்ஷேத்ரமான வேங்கடத்திலே நடக்கத் தட்டில்லையன்றோ. (வேங்கடமே மேல் ஒருநாள் தீங்குழல்வாய் வைத்தான் சிலம்பு) இந்தத் திருவேங்கடமே—முன் ஒரு காலத்திலே திருவாய்ப்பாடியிலுள்ள இடக்கை வலக்கையறியாத இடைச்சிகளையும், பகுத்தறிவற்ற மிருகங்களையும், அசேதனப்பொருள்களையும், பரம்பொருளான தன்னையும்

90. சிலம்பும் செறிகழலும் சென்றிசைப்ப விண்ணா
றலம்பிய சேவடி போய் அண்டம்—புலம்பியதோள்
எண்டிசையும் சூழ இடம்போதா தென்கொலோ
வண்டுழாய் மாலளந்த மண்.

சிலம்பும்—(திருவடிகளில் சாத்தின) நூபுரங்களும். செறி கழலும்—நெருக்கமாக அணிந்த வீரத்தண்டைகளும், சென்று இசைப்ப—எங்கும் ஒலிக்க. விண் ஆறு—ஆகாச கங்கையிலே, அலம்பிய—விளக்கப்பட்ட, சே அடி–திருவடி களானவை, அண்டம் போய்—அண்டச்சுவரளவும் நீண்டு போனபோது. புலம்பிய—(அனைவராலும்) துதிக்கத் தக்க, தோள்—திருத்தோள்கள், எண் திசையும் சூழ—எட்டுத் திசைகளையும் வியாபிக்க. இடம் போதாது—இடம் போர வில்லை; வண் துழாய் மால்—அழகிய திருத்துழாய் மாலையை அணிந்த எம்பெருமான் அளந்த — அளந்துகொண்ட மண்—பூமியானது என் கொல்—என்ன பெரிது! [சிறியதே போலும்.]

அவ:— (சிலம்பும்) திருமலையில் மூங்கில்களகப்பட உத்₃தே₃ஶ்யமானவிடத்தில் அதில் நின்றவன் உத்₃தே₃ஶ்யமாகச் சொல்லவேண்டாவிறே என்கிறார்.

---

அவ:— திருமலையில் மூங்கில்களோபாதி திருவேங்கடமுடையானும் உத்₃தே₃ஶ்யமாகையாலே அங்கே நின்று ஆஶ்ரிதரக்ஷணம் பண்ணியருளுகிறவன் படியை அருளிச் செய்கிறார்.

---

90. அவ:— திருமலையில் மூங்கில்களைப் போலே, திருவேங்கடமுடையானும் உத்₃தே₃ஶ்யனாகையாலே, அம் மூங்கிலைப்போலே அவன் வளர்ந்தருளிய திருவிக்கிரமவிருத்தாந்தத்தைப்பேசுகிறார். சென்ற பாசுரத்தில் ப்ரஸ்தாபிக்கப்பட்ட ஸித்₃தோ₄பாய நிஷ்டையை இனி ப்ரப₃ந்த₄ஶேஷத்தாலே விவரிக்கும் முறையிலே, 'ரக்ஷ்யத்தின் அளவல்ல ரக்ஷகனின் பாரிப்பு' என்னும் அர்த்தத்தைக் காட்டுகிறது இப்பாசுரம்.

வ்யா:—(சிலம்பித்யாதி) சிலம்பையும் செறிகழலையுமுடைத்தாய், கங்கையிலே விளக்கின திருவடிபோய் அண்டம் சென்றிசைப்ப. (புலம்பியதோள்) "सङ्केस्सुराणां" (ஸங்கை₄ஸ

உரை:— திருச்சிலம்பும், செறியச் சாத்தின திருவீரக் கழலும் ஸர்வதோதி₃க்கமாக ஒக்கச்சென்று த்₄வனிக்க, ஆகாச கங்கையிலே விளக்கப்பட்ட சிவந்த திருவடிகளானவை அண்ட₃பி₄த்தியிலே தாக்க ஸகல லோகங்களும் வாய்

வ்யா:— (சிலம்பும் செறிகழலும் சென்றிசைப்ப) திரிவிக்கிரமனாய்த் திருவுலகளந்தருளியபோது திருவடிகளில் சாத்திய திருச்சிலம்பாகிற நூபுரங்களும், நெருக்கமாக அணிந்த வீரத்தண்டைகளும் எல்லா தி₃க்குகளிலும் சென்று ஒலிக்க. (விண்ணாறு அலம்பிய சேவடி அண்டம்போய்)

"த்₃ரவீபூ₄தஸ் தத₃ா த₄ர்மோ ஹரிப₄க்த்யா மஹாமுநே!
க்₃ருஹீத்வா த₄ர்மபாநீயம் பத₃ம் நாத₂ஸ்ய துஷ்டயே ||
க்ஷாளிதம் பரயா ப₄க்த்யா பாத்₃யார்க்₄யாதி₃பி₄ர்ச்சிதம் |
தத₃ம்பு பதிதம் த்₃ருஷ்ட்வா த₃த₄ார ஶிரஸா ஹர: ||
பாவநார்த்த₂ம் ஜடாமத்₄யே யோக்₃யோऽஸ்மீத்யவத₄ாரணாத் |
வர்ஷாயுதாந்யத₂ ப₃ஹூந் ந முமோச தத₃ா ஹர: ||

[ரிஷிஶ்ரேஷ்டரே! (பகவான் திருவுலகளந்தருளின) அச்சமயம், ஹரியினிடம் பக்தியினால் தர்மம் ஜலமாயிற்று. தர்மமாகிய அந்த ஜலத்தை எடுத்து, ஜகந்நாதனுடைய ஸந்தோஷத்திற்காக (அவனுடைய) திருவடியானது (என்னால்) மேலான ப₄க்தியுடன் விளக்கப்பட்டது; பாத்₃யம், அர்க்₄யம் முதலியவைகளாலும் பூஜிக்கப்பட்டது. விழுந்த அந்த ஜலத்தைப் பார்த்து, 'நான் (பரிசுத்தப்படுத்தத்) தகுந்தவனாயிருக்கிறேன்' என்று நிஶ்சயித்து, சிவன் தன்னைப் பரிசுத்தப்படுத்திக்கொள்வதற்காக ஜடையின் நடுவில் தலையால் தாங்கினான். பிறகு, பல பதினாயிரக்கணக்கான வருஷங்கள், உருத்திரன் அப்படியே (அதை) விடவில்லை.] என்று ஈஶ்வரஸம்ஹிதையில் சொல்லப்பட்டபடியே ஆகாஶக₃ங்கை₃யிலே (பிரமனால்) விளக்கப்பட்ட சிவந்த திருவடிகளானவை அண்டச்சுவரிலே சென்று முட்டியபோது. 'அண்டம்' என்னும் பத₃ம் மத்₄யமணி ந்யாயத்தாலே மேலும், கீழும் அந்வயிக்கிறது. (அண்

ஸுராஞ்ச) என்று தேவர்களாலே திரள் திரளாக நின்று ஏத்தப்பட்ட தோள். எட்டுத்திக்கும் சூழ இடம்போராது. (என்கொலோவித்யாதி) அளக்குமவன் அளக்கப்படுமத்தை உண்டாக்கிக்கொண்டன்றோ அளப்பது. 90.

---

புலத்தும்படியான அழகையுடைய திருத்தோள்களானவை எட்டு திக்குக்களையும் வ்யாபிக்க. அழகிய திருத்துழாய் மாலையாலே அலங்க்ருதனை ஸர்வேஶ்வரன் அளந்த பூமி யானது அவன் றனக்கு நின்று அளக்க இடம் போதாது; இதென்ன ஆச்சர்யம்தான்! 90.

---

டம் புலம்பிய தோள்) அண்டத்திலுள்ள எல்லா உலகிலுள்ளாரும் வாய் வெருவும்படியான அழகையுடைய திருத்தோள்கள்.

ஸங்கை: ஸுராஞ்ச திவி பூதலஸ்தைஸ்
ததா மநுஷ்யைர் ககநே ச கேசரை: ।
ஸ்துத: க்ரமாந் ய: ப்ரசகார ஸர்வதா
மமாஸ்து மாங்கள்யவிவ்ருத்தயே ஹரி: ॥''

[விஷ்ணுதர்மம் மாங்கள்யஸ்தவம்]

[ஸ்வர்க்கத்தில் தேவஸமூஹங்களாலும், பூமிப்ரதேசத்திலிருக்கும் மனிதர்களாலும், ஆகாயத்தில் ஆகாஸஸஞ்சாரிகளாலும் துதிக்கப்பட்டவனும் எந்த பகவான் திருவடிகளை வைத்தருளினானோ, (திரிவிக்கிரமாவதாரம் செய்த) அந்த ஹரி எனக்கு மங்களங்களின் விருத்தியின் பொருட்டு ஆகட்டும்.] என்று தேவர்கள் முதலான அனைவரும் திரள் திரளாக நின்று இவனைக்குறித்து வாய் புலத்தினார்களாகையாலே 'புலம்பிய' என்கிறார். (எண் திசையும் சூழ இடம் போதாது) எட்டு திக்குகளையும் வியாபிக்க இடம் போரவில்லை. (வண் துழாய் மால் அளந்த மண் என்கொலோ) அழகிய திருத்துழாய் மாலையாலே அலங்கரிக்கப்பெற்ற திருமால் அளந்த உலகமானது என்ன பரப்பையுடையது? மிகச் சிறியதேயாயிரா நின்றது என்றபடி. அளக்கப்புகுந்தவன் அளக்கப்படுமதை உண்டாக்கிக் கொண்டன்றோ அளக்கவேண்டும்? சிறியதை உண்டாக்கிவிட்டுப் பெரியகாலாலே அளக்கலாமோ? என்று கருத்து. இத்தால் ரக்ஷிக்கப்படும் விஷயத்தின் அளவையும் விஞ்சியிருப்பது ரக்ஷகனின் பாரிப்பு என்னும் அர்த்தமும் அறிவிக்கப்

91. மண்ணுண்டு பேய்ச்சி முலையுண்டு மாற்றுதாய்
வெண்ணெய் விழுங்கவெகுண்டு ஆய்ச்சி—கண்ணிக்
கயிற்றினால்கட்டத் தான் கட்டுண்டிருந்தான்
வயிற்றினோ டாற்றா மகன்.

வயிற்றினோடு ஆற்றா மகன்—வயிற்றைக் கொண்டு ஆறியிருக்க மாட்டாத (கண்ணனாகிற) பிள்ளையானவன். மண் உண்டு — உலகங்களையெல்லாம் அமுதுசெய்தும். பேய்ச்சி—பூதனையினது. முலை—(நஞ்சு தீற்றின) முலையை. உண்டும்—அமுது செய்தும். ஆற்றாதாய்— திருப்தி பெறாதவனாய். வெண்ணெய்—வெண்ணெயை. விழுங்க—(களவு செய்து) விழுங்கினவளவிலே, ஆய்ச்சி — யசோதைப் பிராட்டி. வெகுண்டு—கோபங்கொண்டு. கண்ணி கயிற்றினால்—பல முடிச்சுகளையுடைய தாம்பினால், கட்ட— அழுந்தக் கட்டிப்போட. தான்—ஸர்வஶக்தனான தான். கட்டுண்டு இருந்தான்—(அதற்கொரு பரிஹாரம் செய்துகொள்ளமாட்டாமல்) கட்டுண்டிருந்தான்.

அவ:— (மண்ணுண்டு) ஸாமாந்யேந ஜக$_3$த்தை உண்டும் ப்ரதிகூலருடைய ப்ராணனையும் அநுகூலர் ஸ்பர்சித்த த்$_3$ரவ்யத்தையுண்டும் பர்யாப்தமாயிற்றில்லை என்கிறது.

---

அவ:— அவனுடைய ஆஶ்ரிதபாரதந்த்ர்யத்தை அருளிச்செய்கிறார்.

---

படுகிறது. (வண் துழாய் மால் அளந்த மண் இடம் போதாது—என்கொலோ) முற்கூறியபடி தோள்கள் எட்டுதிக்குகளிலும் வியாபிக்கும் போது, திருமால் அளந்த பூ$_4$மி அவனுக்கு நின்று அளக்க இடம் போதாமலிருந்தது; இது என்ன ஆஶ்சர்யம்—என்று கூட்டிப் பொருள்கொண்டார் அப்பிள்ளை. 90.

91. அவ:— அடியார் கைபட்ட த்$_3$ரவ்யமே த$_4$ாரகமாகவிருக்கும்படியையும், அவர்களுக்குக் கட்டவும் ஆம்படியிருக்கும் பாரதந்த்ர்யத்தையும் அநுப$_4$விக்கிறார்.

வ்யா:— (மண்ணுண்டு பேய்ச்சி முலையுண்டுமாற்றுதாய்) ஜகத்தை வயிற்றிலேவைத்தும், பூதனையுடைய ப்ராணனை யுண்டும், இரண்டாலும் அபர்யாப்தனாய். (வெண்ணெய் விழுங்க வெகுண்டாய்ச்சி) இவனுக்கு வெண்ணெய் களவு காண்கையிலுள்ள ஸ்நேஹம் போருமிறே அவளுக்கு ரக்ஷிக்கையிலும். வெண்ணெய் களவுபோயிற்றென்ற மாத்ரத்

---

உரை:— அநுகூல ப்ரதிகூல விபாகமற பூமியிலுள்ள வர்களைத் திருவயிற்றிலேவைத்து ரக்ஷித்தும், ப்ரதிகூலையான பூதனையுடைய முலையை அவள் பிணமாய் விழும்படி அமுதுசெய்தும், இவற்றால் பர்யாப்தி பிறவாமல் அநு கூலர் கடைந்து சேர்த்துவைத்த வெண்ணெயைக் களவிலே

---

வ்யா:— (மண்ணுண்டு) "நான் மண்ணுண்டேனாக அன்புற்று நோக்கி அடித்தும் பிடித்தும் அனைவர்க்கும் காட்டிற்றிலையே" [பெரியாழ் திரு 2-3-8] என்கிறபடியே க்ருஷ்ணாவதாரத்தில் மண்ணுண்டதைக் கூறுகிறதாகவுமாம். அன்றிக்கே, "அங்காந்திட வையமேழும் கண்டாள் பிள்ளைவாயுளே" [பெரியாழ் திரு 1-1-6] என்கிறபடியே அநுகூலர் ப்ரதிகூலர் என்னும் வாசியில்லாமல் பூமியிலுள்ளார் அனைவரையும் தன் வயிற்றிலே வைத்து ரக்ஷிக்கும் படியை அவ்வவதாரத்திலே யசோதைக்குக் காட்டியபடியைச் சொல்லுகிறதாகவுமாம். (பேய்ச்சி முலையுண்டும்) இவனைக் கொல்ல வந்த பூதனையுடைய முலையை அவள் பிணமாய் விழும்படி உயிரோடு கூட அமுது செய்தும். (ஆற்றுதாய்) இவற்றால் திருப்தி பெறாமல், மண்ணும், பேய்ச்சி முலையும் அடியார் கரம் பட்டவையல்லவாகையாலே, இவற்றால் திருப்திபிறக்கவில்லை என்று கருத்து. (வெண்ணெய் விழுங்க) இக்குறைதீர அநுகூலையான ஆய்ச்சி கடைந்து சேர்த்துவைத்த வெண்ணெயைக் களவுகண்டு அமுதுசெய்ய. இத்தால் அடியார் கைபட்ட த்ரவ்யமே இவனுக்கு தாரகம் என்று தோற்றுகிறது. இதுவரை மகனிருக்கும்படி சொல்லிற்று; இனி, தாயிருக்கும்படி சொல்லுகிறது.— (ஆய்ச்சி வெகுண்டு) பரிவுடையவளான யசோதை 'இப்படிக்கண்டதை யெல்லாம் தின்றால் உடம்புக்கு ஆகாதே' என்னும் வயிறுபிடியாலே கடுங்கோபங்கொண்டு, 'வெண்ணெய் களவு போயிற்று' என்று கேள்விப்பட்டவுடன், இவன் முகத்தில் பயத்தைக்கண்டு, 'இவ்வள

**திலே இவன்முகத்தில் பையாப்பைக்கண்டு தாயார் சீறி. ( கண்ணிக்கயிறித்யாதி ) பல பிணையுடைத்தான கயிற்றிலே அவள் கட்டுவதற்குப் பரிஹாரமின்றிக்கே கட்டுண்டிருந்தான்.**

---

*அமுதுசெய்ய. பரிவுடையளான யசோதைப் பிராட்டி ஸ்நேஹம் தோற்றச்சீறி. பலமுடிச்சுகளையுடைத்தான தாம்பாலே உரைக்கக்கட்ட ஸ்வஸங்கல்பத்தாலே ஸர்வரையும் கட்டுவது விடுவதாய்ப்போரும் ஸர்வசக்தியான தான் கட்டுண்டு அதுக்கொரு ப்ரதிக்ரியை பண்ணமாட்டாதே*

---

திருடித்தின்றிருக்கவேண்டும்' என்று அறுதியிட்டுப் பரிவாலே சீறினாள். இவன் அவள் கைபட்டதென்னும் ஸ்நேஹத்தாலே அதைக் களவு காண்கிறான். இவன் உடலுக்கு என்னாகுமோ என்னும் பரிவாலே இவள் சீறுகிறாள். இவர்களிருவருடைய ஸ்நேஹமிருக்கும்படியிது. இனி, பரிவாலே ஏற்பட்ட சீற்றத்தின் கார்யத்தைப் பேசுகிறார்.— ( கண்ணிக்கயிற்றினால் கட்ட ) பல முடிச்சுகளை உடைய தாம்பாலே அழுந்தக்கட்ட. வெண்ணெய் களவு காண்பதற்கு முன்பே கயிறுகளைத் தன்னைக் கட்டமுடியாத படி துண்டுதுண்டாக்கி வைப்பான் கண்ணன். அவற்றை ஒன்றாக முடிபோட்டுக் கட்டவேண்டுகையாலே கண்ணிக் கயிற்றினாலேயே கட்டமுடிந்தது என்று கருத்து. ''**கண்ணிநுண்சிறுத்தாம்பினால்**'' என்று மது₄ரகவிகளும், '**கண்ணிக்குறுங்கயிற்றால் கட்டுண்டான்**'' [பெரிய திரு 11-5-5] என்று மங்கைமன்னனும் இவன் கட்டுண்டது சிறு சிறு துண்டுகளை முடிபோட்ட கயிற்றினாலே என்று காட்டினரன்றோ. இப்படி ஒன்றுக்கும் உதவாத சிறுசிறு கயிறுகளை முடிபோட்டுக் கட்டினால் கட்டும்போதே அறுந்துவிடுமே! இது இவனைக் கட்டிற்றோ? எனில்: ( தான் கட்டுண்டிருந்தான் ) இவள் பரிவாலே கட்டுகையாலே, செய்வதறியாமல் அக்கயிற்றுக்கும் தன்னைக் கட்ட வலிமையைக் கொடுத்துத் தான் கட்டுண்டிருந்தான். ''**கட்டுண்ணப் பண்ணிய பெருமாயன்**'' என்றாரன்றோ மது₄ரகவிகளும். தன் ஸங்கல்பத்தாலே அனைவரையும் ஸம்ஸாரத்தில் கட்டுவது. விடுவிப்பதாய்ப்போரும் ஸர்வசக்தியானவன் கட்டுண்டு தன்னை விடுவித்துக்கொள்ளமாட்டாதவனாயிருந்தான். ''**பீ₄ஷாSஸ்மாத் வாத: பவதே**' என்று தே₃வதைகளையெல்லாம் ப₄யப்படுத்துமவன் தாய்க்கு ப₄யப்பட்டான். இது ஓர் ஆஸ்சர்யமிருந்தபடியென்!

"தாயெடுத்த சிறுகோலுக்குளைந்து" "நெய்யுண்வார்த்தை யுளன்னை கோல் கொள்ள நீயுன் தாமரைக்கண்கள் நீர்மல்கப் பையவேநிலையும்" "முழுதும் வெண்ணெயளைந்து தொட்டுண்ணும் முகிழிளஞ் சிறுத் தாமரைக்கையும்" (வயிற்றினோடாற்றா மகன்) இதுக்குப் பிள்ளையுறங்காவில்லிதாஸர் வயிற்றை வண்ணானுக்கிட்டாலோவென்று பணித்தார். 91.

92. மகனொருவர்க் கல்லாத மாமேனி மாயன்
மகனா மவன்மகன்றன் காதல்—மகனை
சிறைசெய்த வாணன்தோள் செற்றான் கழலே
நிறைசெய்தென் நெஞ்சே நினை.

---

*யிருந்தான்—வயிற்றைக்கொண்டு எங்கே புகுவோமென்று பாடாற்றமாட்டாத பிள்ளை.* *91.*

---

"தாயெடுத்த சிறுகோலுக்கு உளைந்தோடித் தயிருண்ட வாய்துடைத்த மைந்தன்" [பெரியதிருமொழி 8-3-5] "நெய்யுண்வார்த்தையுளன்னை கோல்கொள்ள நீயுன் தாமரைக்கண்கள் நீர்மல்க பையவே நிலையும் வந்து என்னெஞ்சையுருக்குங்களே" [திருவாய்மொழி 5-10-5]

"முழுதும்வெண்ணெயளைந்துதொட்டுண்ணும்
முகிழிளஞ்சிறுத்தாமரைக்கையும்
எழில்கொள் தாம்புகொண்டடிப்பதற்கெள்குநிலையும்
வெண்தயிர்தோய்ந்தசெவ்வாயும்
அழுகையுமஞ்சிநோக்குமந்நோக்கும்
அணிகொள்செஞ்சிறுவாய்நெளிப்பதுவும்
தொழுகையுமிவைகண்டஅசோதை
தொல்லையின்பத்திறுதிகண்டாளே."
[பெருமாள் திருமொழி 7-8]

என்று இவ்வாஸ்சர்யத்தில் பல ஆழ்வார்கள் ஆழங்காற்பட்டனரன்றோ. இப்படிக் கட்டுண்டிருந்தவன் தான் யாரென்னில், (வயிற்றினோடாற்றா மகன்) எத்தனையிட்டாலும் நிறையாத வயிற்றைப் பெற்றிருக்கையாலே, இதுக்கு இரைதேட எங்கே புகுவோம் என்னும் ஆற்றாமையை உடைய பிள்ளை. "வயிற்றை வண்ணானுக் கிட்டாலோ" என்று பிள்ளையுறங்காவில்லிதாஸர் பணிப்பராம். வண்ணான் தாழிபோன்ற இவ்வயிற்றை வண்ணானுக்கு அனுப்பினால் தகும் என்று ரஸோக்தியாகச் சொன்னபடி. 91.

என் நெஞ்சே—என் மனமே!. ஒருவர்க்கு மகன் அல்லாத—(கருமமடியாக) எவருக்கும் மகனாகப் பிறக்கத் தகாதவனாய் மாமேனி—சிறந்த திருமேனியையுடையவனாய். மாயன்—ஆஶ்சர்யபூ₄தனான கண்ணன். மகன் ஆம்—(வஸுதே₃வதே₃வகிகளுக்கு)பிள்ளையாகப் பிறந்தான்; அவன் மகன் தன்—அவனது மகனான ப்ரத்யும்நனுடைய. காதல் மகனை—இஷ்ட குமாரனான அநிருத்₃த₄ாழ்வானை. சிறை செய்த—சிறையிலே வைத்த, வாணன்-பா₃ணாஸுரனுடைய. தோள்—தோள்களாயிரத்தையும். செற்றான்—அறுத்தொழித்தவனான பெருமானுடைய. கழலே—திருவடிகளையே. நிறை செய்து—பூர்த்தியாக. நினை—சிந்தை செய்வாயாக.

வ்யா:—(மகனித்யாதி) "पिता पुत्रेण पितृमान्" (பிதா புத்ரேண பித்ருமாந்) என்னும்படியில்லாமையாலே, ஸர்வேஶ்வரனுக்கு அலப்₄யலாப₄மிறே புத்ரலாப₄ம். தனக்கில்லாத

அவ:— ஆஶ்ரித விரோதி₄நிரஸன ஸ்வபா₄வனானவனை நெஞ்சே! பூர்ணமாக நினை என்கிறார்.

உரை:— கர்மமடியாக ஒருவனுக்குப் பிள்ளையாய்ப் பிறக்குமவனன்றிக்கே ஸர்வலோகத்துக்கும் பிதாவான பெருமையையுடையனாய். அப்ராக்ருதமாகையாலே பரம பூஜ்யமான திருமேனியை உடையனாய். அத்யாஶ்சர்யமான

92. அவ:— நெஞ்சே! அடியார்களுடைய விரோதிகளைப் போக்குவதையே இயல்வாக உடையவனையே பரிபூர்ணமாக நினைப்பாய்—என்கிறார்.

வ்யா:— (மகனொருவர்க்கல்லாத மாமேனி மாயன் மகனாம்) "பிதா புத்ரேண பித்ருமாந் யோநியோநௌ" [ஸர்வலோகபிதாவானவன, தன் புத்திரனொருவனைப் பிதாவாகக் கொண்டு எல்லா யோனிகளிலும் பிறக்கிறான்.] என்கிறபடியே கர்மம் காரணமாக எவர்க்கும் பிள்ளையாகப் பிறக்காதவனாய், எல்லா உலகினர்க்கும் தந்தையாயிருக்கும் பெருமையை உடையவனாய், அப்ராக்ருதமாகையாலே மிகச்சிறந்த திருமேனியை உடையவனாய், அத்யாஶ்சர்யமான

தோன்றிலேயிறே ஸ்நேஹம் ஜநிப்பது. புத்ரனிற்காட்டில் பௌத்ரன் பக்கல் ஸ்நேஹமுண்டிறே. ஸ்நிக்₃த₄னுமாய் பௌத்ரனுமான அநிருத்₃தா₄ழ்வானைச் சிறைசெய்த சீற்றத்தாலே பா₃ணனுடைய தோளைக்கழித்தவனுடைய திருவடிகளை, நெஞ்சே! அவன் ப்ரதிப₃ந்த₄கததைப் போக்க, ஸ்நேஹித்தநுப₄வி. 92.

---

ஜ்ஞாநாதி₃கு₃ணங்களையமைத்துக்கொண்டு ஸ்ரீவஸுதே₃வர்க்குப் பிள்ளையாய்ப் பிறந்த க்ருஷ்ணனை தன்னுடைய புத்ரனுக்குப் புத்ரனாய், அத்தாலே மிகவும் ஸ்நிக்₃த₄னாயிருக்கிற அநிருத்₃தா₄ழ்வானைச் சிறையிலே வைத்த பா₃ணாஸுரனுடைய செருக்குக்கு அடியான தோள்கள் ஆயிரத்தையும் அறுத்துப் பொகட்டவனுடைய திருவடிகளை — எனக்கு விதே₄யமான நெஞ்சே! பூர்ணமாக அநுஸந்தி₄க்கப்பார். 92.

---

ஜ்ஞாநம் ஶக்தி, ஸௌலப்₄யம், ஸௌஶீல்யம் முதலான கு₃ணங்களை அமைத்துக்கொண்டு ஒரு பிறப்பிலே இரண்டு த₃ம்பதிகளுக்குப் பிள்ளையானான். ஒருத்தி மகனாய்ப்பிறந்து ஓரிரவில் ஒருத்தி மகனாய் ஒளித்து வளர்ந்தானன்றோ. (அவன் மகன்) இப்படித் தன்னைப் போலே தான் தோன்றியான மகனாயிராமல், தன்னால் படைக்கப்பட்ட பிள்ளையாகையாலே தனக்குப் பெருப்பேறாயிருக்கும் மகனான ப்ரத்₃யும்னன். (தன் காதல் மகனை) அந்த ப்ரத்₃யும்னனுடைய மகனாய், தனக்குப்பேரனாகையாலே தன் காதலுக்கு மிகவும் பாத்திரனாயிருக்கும் அநிருத்₃த₄னை. புத்ரனைக் காட்டிலும் பௌத்ரனிடம் காதல் விஞ்சியிருக்குமன்றோ. (மகனைச்சிறைசெய்த) எவராலும் சிறை செய்யப்படாதவன் (அநிருத்₃த₄ன்) என்று பெயர் பெற்றவனையும் ஒருவன் சிறைசெய்தான்! அப்படிச்சிறைசெய்தவன் என்ன ஆனான் எனில் (வாணன் தோள் செற்றான்) அவனுடைய க₃ர்வத்துக்குக் காரணமான ஆயிரம்தோளையும் அறுத்துப்போட்ட கண்ணனுடைய. (ஏழலே நிறைசெய்து நினை என் நெஞ்சே) எனக்கு ப₄வ்யமான நெஞ்சே! ஆஶ்ரித விரோதி₄களை அடக்குவதையே இயல்வாகக் கொண்ட அக்கண்ணனுடையை திருவடிகளையே பரிபூர்ணமாக நினைப்பாய். ப்ராப்யமாகவும், ப்ராபகமாகவும், த₄ாரகபோஷக போ₄க்₃யங்களாகவும் நினைப்பாய் என்று கருத்து. 92.

93. நினைத்துலகி லார்தெளிவார் நீண்ட திருமால்
அனைத்துலகு முள்ளொடுக்கி யால்மேல்—கனைத்துலவு
வெள்ளத்தோர் பிள்ளையாய் மெள்ளத் துயின்றானை
உள்ளத்தேவை நெஞ்சே யுய்த்து.

நெஞ்சே—ஓ மனமே! நீண்ட—(உலகளக்க) வளர்ந்த. திரு மால்—ஸ்ரிய:பதியானவனும், கனைத்து உலவு வெள்ளத்து—கோஷித்துக்கொண்டு எங்கும் பரந்த பிரளய வெள்ளத்திலே. ஓர் பிள்ளை ஆய்—ஒப்பற்ற சிறுகுழந்தையாய். அனைத்து உலகும்-உலகங்களையெல்லாம். உள் ஒடுக்கி-திருவயிற்றினுள்ளே அடக்கி, ஆல் மேல்—ஆலந்தளிரின் மேலே. மெள்ள துயின்றானை—மெள்ள சயனித்துக் கொண்டவனுமான பெருமானை. உலகில்—இவ்வுலகத்தில். நினைத்து—(அப்பெருமானைத் தஞ்சமாக) அநுஸந்தித்து. ஆர் தெளிவார்-தெளிவுபெறுவார் ஆரேனுமுண்டோ? (ஒருவருமில்லையே.) உய்த்து-(நீயாவது) அவனைக்கொண்டுவந்து, உள்ளத்தே வை-உன்னகத்து வைப்பாய்.

வ்யா:— (நினைத்துலகிலார் தெளிவார்) அவனையநுப₄வித்துத் தந்தாமுக்கு உரியராக வல்லாருண்டோ? (நீண்ட

---

அவ:— இப்படி இருக்கிறவனுடைய ஆஶ்சர்யசேஷ்டிதங்களை லோகத்தில் அறிவார் ஒருவருமில்லையாகிலும் நீ அவனை உன் ஹ்ருத₃யத்திலே கொடுபுகுந்து வைகிடாயென்கிறார்.

உரை:— ஸர்வப்ரகாரத்தாலும் அபரிச்சே₂த்₃யனான ஸ்ரிய:பதியாய், இப்படி இருந்துவைத்து ஸகலலோகங்

---

93. அவ:— நெஞ்சே! உலகினரை உய்விப்பதற்காக அவன் படும் பாடுகளை அறிவார் இவ்வுலகில் ஒருவரும் இல்லையாகிலும், நீ அவனை உன்னுள்ளே வைத்துக்கொள்வாயாக என்கிறார்.

வ்யா:— (நெஞ்சே! நினைத்துலகில் ஆர் தெளிவார்) நெஞ்சமே! உலகினரை உய்விப்பதற்காக அவன் அநாதி₃காலமாகப்படும்

வித்யாதி) லோகத்தையெல்லாம் அளக்கைக்காக வளர்ந்து, அளந்த லோகத்தை ஒரு வயிற்றிலே வைத்து ஒரு பவனு யிருப்பதொரு ஆலிலையிலே; (களைத்துலவித்யாதி) ஸம்₃ தி₃த்துப் பரந்து வளராநின்றுள்ள வெள்ளத்திலே உளனான பிள்ளையாய். (மெள்ளவித்யாதி) வயிற்றிலே புக்க லோகம்

---

களையும் திருவுத₃ரத்தில் ஏகதே₃ஶத்திலே அடக்கிவைத்து ஒரு பவனுயிருப்பதோர் ஆலந்தளிரின்மேலே கோ₄ஷித்துக் கொண்டு கண்டவிடமெங்கும் தடையற ஸஞ்சரிக்கிற ப்ரளயத்திலே அத்₂விதீயமான முக்₃த₄ஶிஶுவிக்₃ரஹத்தை யுடையனாய்கொண்டு வயிற்றிற்புக்க பதார்த்த₂த்துக்கு ஓர

---

பாடுகளை அறிவார் ஆர்? அதை இல்லை செய்வாரும், அதை இசைந்தாலும், 'தங்கள் ஆனுகூல்யம் அவன் பட்டபாடுகளால் ஏற்பட்டதேயொழியத் தங்களால் வந்ததன்று' என்பதை இசைய மறுப்பாரும் நிறைந்ததாகவன்றோ இவ்வுலகம் காணப்படுகிறது என்று கருத்து. அப்படி அவன் பட்டபாடுகளில் இரண்டைச் சொல்லிக்காட்டுகிறார் மேலே.— (அனைத்துலகும் உள்ளொடுக்கி நீண்ட திருமால்) எல்லா உலகங்களையும் தன் திருவடிகளினுள்ளே ஒடுக்கி, திரிவிக்கிரமனாக வளர்ந்த திருமாலன்றோ அவன். (திருமால்) இதையும் மேலே சொல்லப்போகிற செயலையும் புருஷகாரபூ₄தை யான பிராட்டியின் தூண்டுதலாலும், அவள் உகப்பிற்காகவும் செய்தானேயொழிய, இவ்வுலகினர் அபேக்ஷித்தோ செய்தான்? இதுமட்டுமோ? (அனைத்துலகும் உள் ஒடுக்கி ஆல்மேல் களைத்துலவு வெள்ளத்தோர் பிள்ளையாய் மெள்ளத்துயின்றானை) 'நைமித்திக ப்ரளயத்திலே வெள்ளங்கொள்ளத் தொடங்கியபோது எல்லா உலகங்களையும், தன் திருவயிற்றில் ஒரு மூலையிலே அடக்கிவைத்து ரக்ஷித்து, அப்போதே துளிர்விட்டதொரு ஆலந்தளிரின் மேலே— முழங்கிக்கொண்டு எல்லாவிடங்களிலும் அலையெறியும் ப்ரளய வெள்ளத்திலே ஒப்பற்றதோர் இளம் பிள்ளையாய், வயிற்றிலுள்ள உலகிற்கு ஓர் அசைவுவாராதபடியாக மெள்ளத் துயின்றவனை. 'அனைத்துலகும் உள்ளொடுக்கி' என்றது காகாக்ஷிந்யாயத்தாலே முன்னும் பின்னும் அந்வயிக்கிறது. இவரை அடியொற்றி நம் மாழ்வாரும்.

தளராதபடிக் கீடாக மெள்ளக் கண்வளர்ந்தவனே. (நெஞ்சே

---

லசுவாராதபடி மெள்ள கண்வளர்ந்தருளினவனே, நமக்கு இவனல்லது தஞ்சமில்லை என்று அநுஸந்தி₄த்து லோகத்திற் கலங்காமலறியவல்லார் ஒருவருமில்லை; ஆனாலும் நெஞ்சே! இப்படி இருக்கிறவனைக் கொடுவந்து உன் ஹ்ருத₃யத்திலே வை. அவன் புகரப்புக்கால் விலக்காதே கிட்டி அநுஸந்தி₄ என்றபடி. அன்றிக்கே. நீண்ட திருமால் அனைத்துலகும் உள்ளொடுக்கி என்றாய், லோகத்தையெல்லாமளக்கைக்காக வளர்ந்த ஶ்ரிய:பதியாய், அளந்தலோகத்தைத்

---

"கண்டாயே நெஞ்சே! கருமங்கள் வாய்க்கின்று ஓர்
எண்தானும் இன்றியே வந்து இயலுமாறு
உண்டானை உலகேழும் ஓர் மூவடி
கொண்டானைக் கண்டு கொண்டனை நீயுமே"
[திருவாய்1-10-5]

என்று உலகளந்து உண்ட விருத்தாந்தங்களை அவனுடைய நிர்ஹேதுககிருபைக்குச்சான்றாக அருளிச்செய்தாரன்றோ. 'அனைத்துலகும் உள்ளொடுக்கி' என்பதை மேலே மட்டும் அந்வயித்து, 'நீண்ட திருமால்' என்பதைத் தனியாகப் பொருள் கொள்வதொரு நிர்வாஹத்தையும் அப்பிள்ளை அருளிச்செய்வர். (நீண்டதிருமால்) எல்லாப் படியாலும் அளவிடற்கரிய திருமாலாகையாலே,

'பாலன் தனதுருவாய் ஏழுலகுண்டு ஆலிலையின்
மேலன்று நீ வளர்ந்த மெய்யென்பர்—ஆலன்று
வேலைநீர் உள்ளதோ விண்ணதோ மண்ணதோ
சோலைசூழ் குன்றெடுத்தாய் சொல்லு [முதல் திருவ 69]

என்று அறிவாளிகள் அதிஶயிக்கும் அக₄டிதக₄டநாஶக்திகார்யமான வடத₃ளஶயநச்செயலைச் செய்தான் என்று கருத்து. (துயின்றானை நினைத்துலகில் ஆர் தெளிவார்) ரக்ஷணசிந்தை செய்து கொண்டே யோக₃நித்₃ரைசெய்யும் அவனை நினைக்கப்புக்கால், நம் ரக்ஷணத்திற்கு நாம் கரைய இடமுண்டோ? இதை அறிவார் உலகில் இல்லையே! (நெஞ்சே! உய்த்து உள்ளத்தே வை) எனக்கு வசப்பட்டிருக்கும் நெஞ்சே! நீயாவது, அவனைக் கொண்டுவந்து

உய்த்துள்ளத்தே வை) கொடுவருகையாவது—அவன் புகுரப் புக்கால் விலக்காதொழிகை. 93.

94. உய்த்துணர் வென்னு மொளிகொள் விளக்கேற்றி
வைத்தவனை நாடி வலைப்படுத்தேன்—மெத்தெனவே
நின்று னிருந்தான் கிடந்தானென் னெஞ்சத்து
பொன்றுமை மாயன் புகுந்து.

உணர்வு என்னும்—*ஸித்₃தோ₄பாய ஜ்ஞாநமாகிற.* ஒளி கொள் விளக்கு—*ஒளிமயமான தீ₃பத்தை.* ஏற்றி—*ஏற்றி.* அவனை உய்த்து வைத்து—*அம்மெம்பெருமானைத் தேடிப் பிடித்து.* நாடி—*ஆராய்ந்து அநுஸந்தித்து* வலைப்படுத்தேன்—*ஸ்வாதீ₄னப்படுத்திக்கொண்டேன்;* மாயன்—*அப்பெருமான்.* பொன்றுமை—*இடைவீடின்றி.* என் நெஞ்சத்து—*என்னுடைய ஹ்ருத₃யத்திலே.* புகுந்து—*வந்துசேர்ந்து.* மெத்தென—*மெதுவாக.* நின்றான்—*(முதலில்) நின்றான்;* இருந்தான்—*(பிறகு) வீற்றிருந்தான்;* கிடந்தான்—*(அதன் பிறகு) பள்ளி கொண்டருளினான்.*

---

*திருவயிற்றிலே வைத்து ஆலின்மேலே மெள்ளத்துயின்றானே என்றுமாம். 93.*

---

உன்னகத்தே வைப்பாயாக. அஶக்தமான இந்நெஞ்சு, ஸர்வ ஶக்தனான அவனைக் கொண்டுவந்து. உள்ளே வைக்கமுடியுமோ? எனில்: உள்ளே புக இடம் பார்த்து நிற்கும் அவனை அநாதி₃ காலமாகச்செய்தது போலே ஸ்வப்ருவ்ருத்தியாலே விலக்காமலிருந்தால், தானே உள்ளே புகுவான்; அதுவே அவனைக்கொண்டு வந்து உள்ளத்து வைத்ததாகும் என்று கருத்து. 'நெஞ்சே! உள்ளத்து வை' என்கிறது. நெஞ்சுக்கு ஓர் உள்ளமுண்டோ? என்னில்: 'உன்னகத்தே வை' என்று பொருள் கொள்ளலாம். நீ வாழும் ஹ்ருத₃யகு₃ஹையிலே வை என்றும் பொருள் கொள்ளலாம். ஆக, நிர்ஹேதுகக்ருபையாலே அநாதி₃காலமாக உயிர்கள் உய்யப்பாடுபடும் அவன் ஸ்வப்ருவ்ருத்திநிவ்ருத்தியாகிற விலக்காமையே பற்றுசாகக்கொண்டு அடியார் உள்ளத்தில் புகுவான் என்றதாயிற்று. 93.

வ்யா:— (உணர்வென்னுமொளிகொள் விளக்கேற்றி) உணர்வாகிற — ஸதைலவர்த்திகளா லுண்டான அழுக்கின்றிக்கே திணுங்கின — தேஜஸ்ஸை ஒளிவிளக்கேற்றி. (உய்த்து வைத்து அவனை நாடி வலைப்படுத்தேன்) கொடுவந்து வைத்து அநு

---

அவ:— இப்படி அவனை அநுஸந்தி₄ என்று திருவுள்ளத்துக்குத் தாமருளிச்செய்தவளவிலே அத்யபி₄நிவிஷ்டனுய்க் கொண்டு அவன் தம்முள்ளே புகுந்து தம்பக்கல் வ்யாமுக்₃த₄னுனபடியை அருளிச்செய்கிருர்.

உரை:— ஜ்ஞானமாகிற தைலவர்த்திகளாலுண்டான அழுக்கின்றிக்கே செறிந்த ஒளியை உடைத்தான விளக்கை ஏற்றி அவனை கொண்டுவந்து வைத்து, தத்ஸ்வபா₄வங்களை ஆராய்ந்து அநுஸந்தி₄த்து, ஆநுகூல்யமாகிற வலையிலே

---

94. அவ:— இப்படித் தான் அநுஸந்தி₄த்தபின், பெரிய பாரிப்போடே அவன் தம்முடைய நெஞ்சில் புகுந்து பெருங்காதலோடே பலவகையாகப் பரிமாறத் தொடங்கினுன் என்கிருர்.

வ்யா:— (உண்ர்வென்னும் ஒளிகொள் விளக்கேற்றி) அவனே உபாயம் என்னும் ஒளிமயமான விளக்கை ஏற்றி. (ஒளிகொள் விளக்கு) உலகில் — திரியும் எண்ணெயும்கொண்டு ஏற்றப்படும் விளக்கு புகை முதலான அழுக்கை உடையதாயிருக்கும். இது ஞானத்தையே எண்ணெயும் திரியுமாக்கி ஏற்றப்பட்ட விளக்காகையாலே அழுக்கற்று ஒளிமயமான விளக்காயிருக்கிறது. (ஒளிகொள் விளக்கேற்றி) "வையம் தகளியா வார்கடலே நெய்யாக வெய்யகதிரோன் விளக்காக" ஓர் விளக்கேற்றினுர் முதலாம் ஆழ்வார். "அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக இன்புருகு சிந்தை இடு திரியா நன்புருகி ஞானச்சுடர் விளக்கு" ஏற்றினுர் இரண்டாம் ஆழ்வார். மூன்றுமவரான இவர் உணர்வென்னும் ஒளிவிளக்கேற்றுகிருர். இருள் சூழ்ந்து கிடந்த தமிழ்நாட்டிலே விளக்கேற்றி ப₄க₃வத் விஷயத்தை அனைவரும் அறியும்படி விளங்க வைத்த பெருமை இம்மூவர்க்குமே உரியதன்றே. (அவனை உய்த்து வைத்து நாடி வலைப்படுத்தேன்) அவனை உள்ளத்தே முற்கூறிய படி கொண்டுவந்து வைத்து, அவனுடைய ஸ்வபா₄வங்களை ஆராய்ந்து அநுஸந்தித்து, அத்₃ [illegible] ஷம் ஆபி₄முக்₂யம்

ஸந்தித்து ஆநுகூல்யமாகிற வலையிலே அகப்படுத்தினேன். (மெத்தெனவேயித்யாதி) அவனுமிவ்வலையிலே அகப்பட்டு, விச்சேதமின்றிக்கே என்னுடைய நெஞ்சிலே நிற்பதிருப்பது கிடப்பதானான். "பொன்றாமை" என்றது—நான நஸியாமலென்னவுமாம்; ஹ்ருதயத்திலே ஸ்திதயாதிகளுக்கு விச்சேதமின்றிக்கே என்னவுமாம். 94.

---

தப்பவொண்ணாதபடி சேர்த்துக்கொண்டேன். அனந்தரம் ஆஸ்சர்யபூதனானவன் நான் நஸித்துப் போகாதபடியாக என் ஹ்ருதயத்திலே வந்து புகுந்து மெள்ளக்கொண்டு கால்பாவி தரித்துநின்றான். புறப்பு போக்கில்லை என்று தோற்ற வாஸனைப் பற்றுண்டாயிருந்தான். பின்னைபடுத்த படுக்கை கொட்டுப்படாமல் பள்ளிகொண்டருளினான். பொன்றாமை என்று—ஹ்ருதயத்திலே ஸ்திதயாதிகளுக்கு விச்சேதம் வாராதபடி என்றுமாம். 94.

---

என்னும் வலைகளிலே தப்பமுடியாதபடி பிடித்து வைத்துக் கொண்டேன். இனி, அவன் படும் பாடுகளைச் சொல்லுகிறார்,—(மெத்தெனவே புகுந்து நின்றான்) என் நெஞ்சினுள்ளே புகுரும் போது, 'அநாதிகாலமாகப் பெறாத பேற்றைப் பெறப்போகிறோம்; இது நமக்கு நிலைக்கவேணுமே!' என்னும் அதிஸங்கையோடே மெள்ளப் புகுந்து கால்பாவி தரித்து நின்றான்; (இருந்தான்) சிறிது நேரத்தில், 'இனி எங்கும் போக்கிடமில்லை' என்பவன் போலே வீற்றிருந்தான். (கிடந்தான்) மேலும் சிறிது நேரத்திலே, பிடித்துத் தள்ளினாலும் போகமாட்டாதவன்போலே படுக்கையை விரித்துப் படுத்துக்கொண்டு விட்டான்! (என் நெஞ்சத்து) இவன் இவ்வளவு வ்யாமோஹத்தைச் செய்தது நேற்றுவரை இவனை உட்புகாமல் விலக்கி வந்த என் நெஞ்சத்திலேயன்றோ! என்று ஆஸ்சர்யப்படுகிறார். (பொன்றாமை) இப்படிச் செய்ததன் மூலம் என்னை நசியாதபடி செய்தான்! அன்றிக்கே, 'பொன்றாமை நின்றான் இருந்தான் கிடந்தான்' என்றுகொண்டு, இடைவிடாமல் என் நெஞ்சில் நிற்பது, இருப்பது, கிடப்பதாகாநின்றான் என்பதாகவும் கொள்ளலாம். இவ்வளவும் செய்தது யாரென்னில்: (மாயன்) ஆஸ்சர்யமான ஸௌலப்ய ஸௌஸீல்ய வாத்ஸல்யாதி ஸ்வபாவங்களை உடையவன். ஸர்வேஸ்வரனானவன் அதிநீஹீந

95. புகுந்திலங்கு மந்திப் பொழுதத்து அரியா
யிகழ்ந்த விரணியன தாகம்—சுகிர்ந்தெங்கும்
சிந்தப் பிளந்த திருமால் திருவடியே
வந்தித்தென் னெஞ்சமே வாழ்த்து.

**அந்தி புகுந்து**—*மாலைவேளை வந்துசேர்ந்து*. **இலங்கும் பொழுதத்து**—*விளங்கும் ஸமயத்திலே* **அரி ஆய்**—*நரஸிம்ஹ மூர்த்தியாய்த் திருவவதரித்து*. **இகழ்ந்த இரணியனது ஆகம்**—*தன்னை நெஞ்சார நிந்தித்துக் கொண்டிருந்த ஹிரண்யாஸுரனது உடலை*. **சுகிர்ந்து**—*பல கூறாக வகிர்ந்து*. **எங்கும் சிந்த**—*எங்கும் சிந்தும்படியாக*. **பிளந்த**—*பிளந்தொழித்த*. **திரு மால்**—*எம்பெருமானுடைய*. **திரு அடியே**—*திருவடிகளையே*. **என் நெஞ்சமே**—*எனது மனமே!*. **வந்தித்து வாழ்த்து**—*தலையாரவணங்கி வாயாரவாழ்த்து*.

**அவ:— (புகுந்து) தம்முடைய பக்கல் அவன் ஸௌலப₄்யபடியைக்கண்டு ஸ்ரீ ப்ரஹ்லாத₃ாழ்வானுக்கு ஸௌலப₄்யபடியைச் சொல்லுகிறார்.**

---

**அவ:—** *தம்முடைய பக்கல் அவன் ஸௌலப₄்யபடியைக்கண்டு ஸ்ரீ ப்ரஹ்லாத₃ாழ்வானுக்கு ஸௌலப₄்யபடியைச் சொல்லாநின்றுகொண்டு, நெஞ்சே! இப்படி உபகாரகனானவன் திருவடிகளை வணங்கி வாழ்த்தப்பாராய் என்கிறார்.*

---

மான தன் நெஞ்சிலே பாரித்துப் புகுந்து செய்யும் வ்யோமோஹத்தைக் கண்டு ஆஶ்சர்யப்படுகிறார். ஆக, ஆஶாலேஶமுடையார் நெஞ்சிலே புகுந்தபின்பு அவன் அதிலே வைக்கும் வ்யாமோஹத்திற்கு ஓர் எல்லையில்லை என்றாராயிற்று. 94.

95. அவ:— தம்மிடம் ஸௌலப₄்யபடியைக் கண்டவுடன், ஸ்ரீ ப்ரஹ்லாத₃ாழ்வானுக்கு ஸௌலப₄்யபடி நினைவுக்குவர, அவனுக்கு இப்படி உதவியவன் திருவடியையே வாழ்த்துமாறு நெஞ்சுக்கு உபதே₃ஶிக்கிறார்.

வ்யா:— (புகுந்தித்யாதி) ஹிரண்யன் வரங்கொள்ளாத ஸந்த்₄யையிலே. "புகுந்திலங்கும்" என்றது— ஸந்த்₄யையினுடைய ப்ரவேஶத்தைச் சொல்லுகிறது.

---

உரை:— வந்து ப்ரவேஶியாநிற்பதாய், செக்கர் வானத்தால் வந்த ஒளியை உடைத்தாய், அஸுரர்க்கு ப₃லம் வர்த்தி₄த்துச் செல்லக்கடவதான ஸந்த்₄யாஸமயத்திலே. அவன் வரத்துக்குள் அடங்காத நரஸிம்ஹரூபியாய்க்கொண்டு நிர்நிப₃ந்த₄னமாகத் தன்னையும் ப்ரஹ்லாத₃னையும் ப₃ஹுமுக₂மாக நிந்தி₃த்த அஸஹ்யாபசாரத்தை உடையனான ஹிரண்யாஸுரனுடைய வரப₃லாதி₃களாலே வளர்ந்த ஶரீரத்தை.

---

வ்யா:— (புகுந்திலங்கும் அந்திப்பொழுதத்து) வந்து பிரவேசியாநிற்பதாய், செக்கர்வானத்தால் வந்த ஒளியை உடையதாய், அஸுரர்க்கு பலம் வளர்ந்து செல்லக்கடவதான மாலை வேளையிலே. ஹிரண்யன் தனக்குப் பகலிலும், இரவிலும் சாவில்லை என்று வரங்கொண்டானுகையாலே, அவனைக் கொல்ல அந்திப் போதில் தோன்றினன் என்று கருத்து. (அரியாய்) சிங்கமாய். 'மிருகத்தாலும் சாவில்லை, மனிதனாலும் சாவில்லை' என்று வரம் கொள்ளுகையாலே நரங்கலந்த சிங்கமாய் அவதரித்தான் என்று கருத்து. (அந்திப்பொழுதத்து இலங்கும் அரியாய்ப்புகுந்து) என்று கூட்டி, 'மாலைவேளையிலே, ஒளியையுடைய நரசிங்கமாய் அவதரித்து' என்றும் பொருள் கொள்ளலாம். "அந்தியம் போதில் அரியுருவாகி அரியை அழித்தவனை" [திருப்பல்லாண்டு 6] என்றாரன்றோ பெரியாழ்வாரும். (இவனை இப்படிக் கொல்லக் காரணமென்ன? எனில்: (இகழ்ந்த இரணியனதாகம்) ஒரு காரணமுமில்லாமல் தன்னையும், தன்னடியானான ப்ரஹ்லாத₃னையும் நெஞ்சார இகழ்ந்த இரணியனுடைய சரீரத்தைப் பிளந்தான் என்று கருத்து. "நின்னைச் சிந்தையினால் இகழ்ந்த இரணியன் அகல்மார்வம் கீண்ட என் முன்னைக் கோளரியே" [திருவாய் 2-6-6] என்று வாயால் இகழ்வது மாத்திரமல்லாமல், பு₃த்₃தி₄பூர்வகமாக நெஞ்சார இகழ்ந்ததாலேயே அவனை உளந்தொட்டுப் பிளந்தான் என்று ஆழ்வாரும் அருளிச்செய்தாரன்றோ. (ஆகம்) வரப₃லம், ஆஹாரம் முதலானவற்றால் வளர்ந்த ஶரீரத்தை.

(அரியாயித்யாதி) ஆஶ்ரித விரோதி₄யாகையாலே கொன்ற தென்ற மாத்ரமின்றிக்கே சீற்றத்தினுடைய உரமிருந்தபடி. (திருமால் திருவடியே) ஆஶ்ரிதர்பக்கல் ஓரத்துக்கடி பிராட்டி அருகேயிருக்கை என்கிறது. (வந்தித்தென் நெஞ்சமே வாழ்த்து) வந்திக்கைக்கும் விஷயம் அவளோடே கூடினவன் போலே. 95.

---

*சீற்றத்தின் மிகுதியாலே, "छिन्नं भिन्नं" (சி₂ந்நம் பி₄ந்நம்) என்கிறபடியே பல கூறாக வகிர்ந்து ஸர்வப்ரதே₃ஶத்திலும் சிதறிவிழும்படியாகப் பிளந்து பொகட்ட ஶ்ரிய:பதியானவனுடைய திருவடிகளை—என் கருத்திலே நடக்கும் நெஞ்சே! தலையாரவணங்கி வாயார மங்க₃ளாஶாஸநம் பண்ணு. அந்திப் பொழுதத்து இலங்கும் அரியாய்ப் புகுந்து என்றாய், ஸந்த்₄யா காலத்திலே ஒளியை உடைத்தான நரஸிம்ஹமாய்ப் புகுந்து என்றுமாம். திருமால் என்று ஆஶ்ரிதவிஷயத்தில் ஓரத்துக்கு அடி அவளோட்டைச் சேர்த்தி என்கை. 95.*

---

(சுகிர்ந்து எங்கும் சிந்தப் பிளந்த) பல கூறாக வகிர்ந்து எங்கும் சிந்தும்படியாக (இரணியனது உடலைப்) பிளந்த. தன் விஷயத்தில் அபசாரம் செய்த ஶிஶுபாலாதி₃களைச் சக்கரத்தால் தலை கொண்டதுபோலே நற்கொலையாகக் கொல்லாமல், ப₄ாக₃வதாபசாரம் செய்த பையலாகையாலே, "சி₂ந்நம் பி₄ந்நம்" [ரா-யு] என்கிறபடியே சி₂ந்நபி₄ந்நமாக்கிப் பல கூறாக் வகிர்ந்து, சித்ரவத₄ம் செய்து பார்த்தவிடமெங்கும் சிதறிவிழும்படி பிளந்தமையைக் காட்டுகிறது. (பிளந்த திருமால்) இப்படி அடியார் பக்கலிலே பக்ஷபாதத்தைக் காட்டியதற்குக் காரணம் புருஷகாரபூ₄தையான பெரியபிராட்டியார் அருகிலேயிருக்கையே என்கை. (என் நெஞ்சமே! திருமால் திருவடியே வந்தித்து வாழ்த்து) என் கருத்தறிந்து நடக்கும் நெஞ்சே! அத்திருமாலுடைய திருவடிகளையே தலையார வணங்கி, வாயார மங்க₃ளாஶாஸநம் பண்ணுவாயாக வந்தித்து வாழ்த்துகைக்கும் ஶேஷித்வ ப்ராப்யத்வங்களையுடைய ஒரு மிது₂நமே விஷயம் என்று காட்டுகிறார். 95.

96. வாழ்த்திய வாயராய் வானோர் மணிமகுடம்
தாழ்த்தி வணங்கத் தழும்பாமே—கேழ்த்த
அடித்தாமரை மலர்மேல் மங்கை மணாளன்
அடித் தாமரையா மலர்.

கேழ்த்த அடி—பெருத்த தாளையுடைய, தாமரை மலர் மேல்—தாமரைப்பூவில் வீற்றிருக்கும், மங்கை-பெரிய பிராட்டிக்கு, மணாளன்—நாதனான எம்பெருமானுடைய, அடி ஆம் தாமரை அலர்—திருவடிகளாகிற தாமரைப் பூக்களை, வானோர்—நித்யஸூரிகள், வாழ்த்திய வாயர் ஆய்—வாயால் வாழ்த்துகின்றவராய்க்கொண்டு, மணி மகுடம்—மணிகளழுத்தின கிரீடத்தை, தாழ்த்தி—தாழவிட்டு, வணங்க—வணங்குவதனால், தழும்பு ஆமே—(அத்திருவடிகள்) தழும்பேறிக் கிடக்கின்றனவே.

அவ:— (வாழ்த்திய) நித்யஸூரிகளுடைய பரிமாற்றம் பொறாத ஸௌகுமார்யத்தையுடையவனென்கிறது.

வ்யா:— (கேழ்த்தவித்யாதி) நிறத்தையுடைத்தான தாமரைமேலேயிருக்கும் பெரியபிராட்டியாருடைய திருக்கை

---

அவ:— நித்யஸூரிகளுடைய பரிமாற்றமும் பொறாத ஸௌகுமார்யத்தையுடையவன் என்கிறார்.

உரை:— பெருத்த தாளையுடைய தாமரைப்பூவின் மேலே வர்த்திக்கிற நித்யயௌவநஸ்வபாவையான, பெரிய

---

96. அவ:— இப்படி முரட்டு அசுரப்பையலைப் பிளந்தவன்—நித்யஸூரிகள் வணங்கும்போது, அவர்கள் முடி உரசுவதினால் திருவடி தழும்பேறும்படியான மென்மையை உடையவன் கிடீர்! என்கிறார்.

வ்யா:—(கேழ்த்தஅடித்தாமரைமலர்மேல் மங்கை மணாளன் அடித் தாமரையாம் அலர்) நிறமுடையதாய், அடிக்கொண்டிருப்பதான தாமரைமலர்மேலே எழுந்தருளியிருப்பவளாய், அத்தாமரையின் மென்மை, நிறம், மணம் முதலியவையெல்லாம் ஓர் உருக்கொண்டது

81. பகல்கண்டேன் நாரணனைக் கண்டேன் கனவில்
மிகக்கண்டேன் மீண்டவனை மெய்யே — மிகக்கண்டேன்
ஊன்திகழு நேமி யொளிதிகழுஞ் சேவடியான்
வான்திகழுஞ் சோதி வடிவு.

பகல் கண்டேன் — இராக்காலம் கலவாமல் ஒரே பகற் காலமாய்ச் செல்லுகிற நல்விடிவைக் கண்டேன்; (அதற்கு அடியாக) நாரணனை கண்டேன் — ஸ்ரீமந் நாராயண(ஞகிற என்றும் மறையாத சூரிய)னைக் கண்டேன்; மீண்டு — மறுபடியும், கனவில் — மாநஸஸாக்ஷாத்காரத்திற் காட்டிலும், மிக மெய்யே — மிகவும் தெளிவாக, அவனை கண்டேன் — அவனைக்காணப்பெற்றேன்; ஊன் திகழும் நேமி — திருமேனியில் விளங்குகின்ற திருவாழியையுடையவனும், ஒளி திகழும் சே அடியான் — பிரகாசம் மிக்க திருவடிகளையுடையவனுமான அப்பெருமானுடைய, வான் திகழும் — பரம பதத்திலே விளங்குகின்ற, சோதி வடிவு — சோதிமயமான திருமேனியை, மிக கண்டேன் — (இங்கே) நன்கு காணப்பெற்றேன்.

பெரி அவ:— (பகல்) நீர் கண்டபடி சொல்லிக்காணீரென்னச் சொல்லுகிறுர்.

---

அவ: — பண்டு அவனைக்கண்டு அநுபவிக்கப்பெற்றவர்கள் என்பட்டார்கள் என்று பழங்கிணறு வாருகிறதென்? இப்போது அவனைக்கண்டு நான்தான் படுகிற பாட்டைப் பார்க்கமாட்டீர்களோ? என்கிறுர்.

---

81. அவ: — சென்ற பாசுரத்தில் "என்கொலோ முன்னைப் படிக்கோலம் கண்ட பகல்" என்று பண்டைக் காலத்தில் அவனைக் கண்டு அநுபவிக்கப்பெற்றவர்கள் என்ன பாடுபட்டார்களோ என்று வியந்தார். "இப்படிப் பழங்கிணறு தூறெடுக்கவேண்டுமோ? இப்போது நான் அவனைக்கண்டு படுகிற பாட்டைக்கண்டால் போதாதோ?" என்கிறுர் இப்பாசுரத்தில்.

97. அலரெடுத்த வுந்தியா னங்கெழி லாய
மலரெடுத்த மாமேனி மாயன்—அலரெடுத்த
வண்ணத்தான் மாமலரான் வார்சடையானென்று
கெண்ணத்தானுமோ விமை. [இவர்கட்கு

அலர் எடுத்த உந்தியான்-தாமரைப்பூ ஓங்கியிருக்கப்பெற்ற திருநாபியை யுடையவனும், எழிலாய மலர் எடுத்த—அழகிய காயாம் பூப்போன்ற மாமேனி—கரிய திருமேனியை உடையவனுமான, மாயன்-ஆச்சர்ய பூதனான எம்பெருமானை—அலர் எடுத்த வண்ணத்தான—காஞ்சிமலர்போன்ற நிறத்தை யுடையனான இந்திரனென்ன. மாமலரான்—தாமரைப்பூவில் பிறந்த பிரமனென்ன. வார் சடையான்—தாழ்ந்த ஜடையை யுடையனான சிவனென்ன. என்று இவர்கட்கு—ஆகிய இந்த தேவர்கட்கு. இமை—சற்றேனும். எண்ணத்தான் ஆமோ—நெஞ்சால் நினைக்கவும் முடியுமோ?

---

அவ:— இப்படி ஸ்ரீய:பதியாய் அயர்வறுமமரர்களதிபதியானவனை ஆஸ்ரயித்துப் பெறில் பெறுமித்தனையல்லது ஸ்வயத்னத்தால் ப்₃ரஹ்மாதி₃களுக்கும் அறிய முடியாது என்கிறார்.

---

என்று திருவடிகளின் மென்மையில் ஈடுபடுகிறார். "இங்ஙனம் வானோர் ஓயாமல் வணங்கிக்கொண்டேயிருந்தால் திருவடிகள் தழும்பேறிவிடாதோ" என்று வயிறுபிடிக்கிறார் என்றும் கொள்ளலாம். 'வானோர்' என்று அடுத்த பாட்டில் ப்ரஸ்தாபிக்கப்படும் ப்₃ரஹ்மாதி₃ தே₃வதைகளையே சொல்லுவதாகவும் கொள்ளலாம்.

97. அவ:—இப்படித் திருமகள்கேள்வனாய், அயர்வறும் அமரர்கள் அதிபதியாயிருப்பவனைக் கால்கட்டி அவனருளாலே அவனைப் பெற்றால் பெறலாமேயொழிய, தமது முயற்சியால் ப்₃ரஹ்மாதி₃தே₃வதைகளுக்கும் அவனை அறியவும்முடியாது என்கிறார்.

வ்யா:— (அலர் எடுத்த உந்தியான்) "அஜஸ்ய நாபாவத்₄யேகம் அர்ப்பிதம்" [பிறப்பற்றவனை பரம்பொருளின் நாபியில் ஒன்று தோன்றியது.] "யந்நாபி₄பத்₃மாத்₃ப₄வான்" [illegible]

வ்யா:— (அலரெடுத்த வுந்தியான்) அலரைக்காட்டா நின்ற திருநாபி₄யையுடையனாய். (ஆங்கித்யாதி) எழிலை யுடைத்தாயிருந்துள்ள மலர் காட்டாநின்ற திருமேனியை யுடைய ஆஶ்சர்யபூ₄தன். (அலரித்யாதி) இந்த்₃ராதி₃களுக்

---

உரை:— ஸகலஜக₃து₃த்பத்தி காரணமான தாமரைப் பூவைத் தோற்றுவியாநிற்கிற திருநாபி₄யையுடையனாய், அழகை உடைத்தான பூவை ப்ரகாசிப்பிக்கிற அதிஸு குமாரமான கறுத்த திருமேனியையுடைய ஆஶ்சர்யபூ₄த னை அவனிடையாட்டத்தில்—பூவைத்தெரிவிப்பிக்கிற நல்ல நிறத்தையுடைய இந்த்₃ரன், ஶ்லாக்₄யமான திருநாபீ₄கமலத் திலே பிறந்த ப்₃ரஹ்மா, தாழ்ந்த ஜடையையுடையனான ருத்₃ரன் என்று ப்ரஸித்₃த₄ரான இவர்களுக்கு நெஞ்சாலே நினைக்கத்தான் போமோ? இது ஒக்குமோ ஒவ்வாதோ என்று விசாரித்துப்பார். சற்றுப்போது என்றுமாம். அல

---

ப்ரஜாபதி: " [எவருடைய திருநாபிக்கமலத்திலிருந்து மஹாத்மாவான பிரமன் பிறந்தானோ] என்கிறபடியே எல்லா உலகும் உண்டாகக் காரணமான தாமரைப்பூவை உண்டாக்கிய திருநாபி₄யை உடைய வன். 'எடுத்த' என்றது 'காட்டுகின்ற' என்னும் பொருள் உடையது. 'உண்டாக்கிய' என்று தாத்பர்யம். (ஆங்கு எழி லாய மலர் எடுத்த மாமேனி மாயன்) மலர்களிலே அழகே உரு வெடுத்ததான காயாமலர் காட்டும் கறுத்தமென்மைமிக்கமேனியை உடைய ஆஶ்சர்யபூ₄தனை. காயாம்பூ இவனுடைய திருமேனியைக் காட்டுகிறது, அல்லது காயாம்பூவை இவனுடைய திருமேனி காட்டு கிறது என்று இருவித₄மாகவும் பொருள்கொள்ளலாம். 'மாமேனி' என்று கருநிறத்தைக் காட்டுவதாகவும், நிறம், மணம், மென்மை முதலிய எல்லாச் சிறப்புகளையும் காட்டுவதாகவும் பொருள் கொள்ளலாம். (அலர் எடுத்த வண்ணத்தான்) காஞ்சிமலரைக் காட்டும் நிறத்தையுடைய இந்திரன் என்ன; "மங்குலூர்ச் செல்வன் போல மலர்ந்தன காஞ்சி" [திருவிளையாடற்புரானம்] என்று தமிழர் கள் இந்திரனைக் காஞ்சிமலர் நிறத்தனாகக் கூறியிருப்பதை தீ₃பிகை யுரை எடுத்துக்காட்டியிருப்பது காணத்தக்கது. (மாமலரான்) உந்தித் தாமரையாகிற சிறந்த மலரில் தோன்றிய அனைவரையும் படைத்த பிரமன் என்ன; (வார்சடையான்) தாழத்தொங்குகின்ற ஜடையை

கும் அவனை மநோரதிக்கத்தான்போமோ? (இமை) விசாரி; சற்றுப்போதென்றுமாம். 97.

98. இமஞ்சூழ் மலையு மிருவிசும்பும் காற்றும்
அமஞ்சூழ்ந் தறவிளங்கித் தோன்றும்—நமஞ்சூழ்
நரகத்து நம்மை நணுகாமல் காப்பான்
துரகத்தை வாய்பிளந்தான் தொட்டு.

இமம் சூழ் மலையும்—பனியாலே சூழப்பட்டிருக்கிற இமயமலையையும், இரு விசும்பும்—பெரிய ஆகாயத்தையும். காற்றும்-வாயுவையும். அமம் சூழ்ந்து-(பருமனாலும் உயர்த்தியாலும் வேகத்தாலும்)கீழ்ப்படுத்தி வியாபித்து, அறவிளங்கி தோன்றும்-மிகவும்விளங்கிக் கண்ணெதிரே வந்துதோன்றின, துரகத்தை—குதிரைவடிவு கொண்டு வந்த கேசியென்னும் அசுரனை, தொட்டு—திருக்கையால் பற்றி, வாய்பிளந்தான்—(அவனது) வாயைக்கிழித்துப்போட்ட பெருமான் நம்மை—நம்மை. நமன் சூழ் நரகத்து நணுகாமல் காப்பான்—யமனைத் தலைவனாகக் கொண்ட நரகத்திலே புகவொட்டாமல் ரக்ஷித்தருள்வன்.

---

ரெடுத்த உந்தியானெழிலாய மலரெடுத்த மாமேனி மாயனங்கு—அவனிடையாட்டத்தில் என்றுமாம். 97.

---

உடையனை பேசநின்ற சிவன் என்ன; (என்று இவர்கட்கு இமை எண்ணத்தானுமோ) இப்படி ஸுப்ரஸித்தரான இத்தேவர் தலைவர்கட்கு (அம்மாயனைச்) சிறிது போது (நெஞ்சாலே) மநோரதிக்கவும் இயலுமோ? இமை—இமைக்கும் நேரமாகிற கணப்போது. அன்றிக்கே, "இமை" என்பதைத் தனி வாக்யமாக்கி, "இவர்களால் அவனை எண்ணவும் முடியுமோ? (நெஞ்சே) இதை விசாரித்துப்பார்" என்பதாகவும் கொள்ளலாம். 'ஆங்கு எழிலாய' என்று மலர்களிலே அழகே உருவான காயா மலர் என்றும் பொருள் கொள்ளலாம். அல்லது, 'மாயன் ஆங்கு' என்று கூட்டி "அம்மாயன் திறத்தில் (சிறிது நினைக்கவும் முடியுமோ)" என்றும் பொருள் கொள்ளலாம். இத்தால் ஸித்தோபாயமான அவன் தானே தன்னைக் காட்டினால் காணலாமேயல்லது. எத்தனையேனும் ஜ்ஞாநசக்திகளை உடையவர்களாலும் தம் முயற்சியாலே அவனைக் காணமுடியாது என்றதாயிற்று. 97.

வ்யா:— (இமஞ்சூழித்யாதி) ஹிமவானிலும் வாயுவின் பக்கலிலும் அமைத்துப் பரந்து அறப்ரகாசித்துத் தோன்றுகிற

அவ:— தன்னை ஆஸ்ரயித்திருக்கிற நம்முடைய விரோதி₁யான ஸம்ஸாரஸம்ப₃ந்த₄த்தை அறுத்துத்தருவான் அவன் என்கிறார்.

உரை:— பனியாலே சூழப்பட்டிருக்கிற பர்வதமும், ஸர்வத்துக்கும் அவகாஸப்ரத₃மான பெரிய ஆகாஸமும். வாயுவும் ஸகலபதார்த்த₂ங்களிலும் வ்யாபித்து நிற்குமவனு யிருந்து வைத்துக் கண்காணவந்து அவதரித்து. "ஒளிவரு முழுநலம்" என்கிறபடியே மிகவும் உஜ்வலமான கு₃ணங்களை உடையனுய்க் கொண்டு ப்ரகாசிக்குமவனுய், பத்தும்பத்தாக

98. அவ:—தன்னையே உபாயமாகப்பற்றிய நம்முடைய விரோதி₁யான ஸம்ஸாரத் தொடர்பை அறுத்துத் தருகின்றவன் அவனே என்கிறார்.

வ்யா:— (இமம் சூழ்மலையும் இருவிசும்பும் காற்றும் அமஞ்சூழ்ந்து அறவிளங்கித்தோன்றும்) பனிசூழ்ந்த இமயமலையையும், அனைத்துக்கும் இடமளிக்கும் பெரிய ஆகாயத்தையும், வாயுவையும் கீழ்ப்படுத்தி வியாபித்து. "ஸ உ ஸ்ரேயாந் ப₄வதி ஜாயமாந:" [அவன் பிறந்த பின்பே பெருமை பெறுகிருன்] "பல பிறப்பாய் ஒளிவரும் முழுநலம்" [திருவாய் 1-3-2] என்கிறபடியே பரமபத₃த்தில் இருப்பிலும் மிகவும் குணங்களாலே பிரகாசித்து அவதரிப்பான். அமம் சூழ்ந்து என்றது, அமைத்து (கீழ்ப்படுத்தி) வியாபித்து என்றபடி. உலகில் பருப்பருத்த பொருள்களாக நாம் காணும் இமயமலை, ஆகாசம், காற்று முதலானவற்றையும் கீழ்ப்படுத்தி வியாபித்திருப்பவன் என்றதால் இவனுடைய ஸர்வவ்யாபகத்வம் காட்டப்பட்டது. மிகப் பெரிய சிலவற்றைச் சொன்னது அனைத்துக்கும் உபலக்ஷணம். கடைசி அடியிலுள்ள 'துரகத்தை' என்பதற்கு இவற்றை விசேஷணமாக்கி, பருமனுல் இமயமலையையும், உயரத்தால் ஆகாயத்தையும், வேக₃ம் அல்லது வலிமையால் காற்றையும் கீழ்ப்படுத்திஎங்கும்வியாபித்துக்கொண்டு மிகவும்பிரகாசிப்பவனுய்த் தோன்றிய கேசி என்னும் குதிரை என்றும் பொருள் கொள்ளலாம். முதற்பொருள் ஸ்வபூ₄ர்வோக்தியும், இரண்டாவதுபொருள்

துரகத்தைத்தொட்டு வாய்பிளந்தான். (நமன்சூழ் நரகத்து நம்மை நணுகாமல் காப்பான்) கேசியை ஆஶ்ரிதவிரோதியென்று கைதொட்டுப் பிளந்தவன் நமனாலே சூழ்க்கப்பட்டுள்ள நரகத்தில் நம்மைக் கிட்டாமல் காக்குமவன். 98.

---

நம்மாலே சூழ்த்துக் கொள்ளப்பட்ட ஸம்ஸார மாகிற நரகத்திலே நம்மைக் கிட்டாதபடி ரக்ஷிக்குமவன்—கேஶியாகிற குதிரையைப்பிடித்து வாயைக்கிழித்து பொகட்ட க்ருஷ்ணன். அன்றிக்கே, யமவஶ்யதை தவிராதபடியான ஸம்ஸாரத்தில் நம்மைக் கிட்டாதபடி காப்பானென்னவுமாம். அறவிளங்கித் தோன்றும் துரகத்தை வாய்ப்பிளந்தானென்று குதிரைக்கு விஶேஷணமாகவுமாம். அப்போது மிகவும் ப்ரகாசித்துத் தோற்றுகிற குதிரை வாயைக்கிழித்துப் பொகட்டானென்று பொருளாகக் கடவது. 98.

---

அதிஶயோக்தியும் ஆகும். இப்படி எங்கும் வியாபித்து அவதரிப்பது எதற்காக எனில்: (நமஞ்சூழ் நரகத்து நம்மை நணுகாமல் காப்பான்) நம்மாலே பரிபூர்ணமாகச் சூழ்த்துக்கொள்ளப்பட்ட ஸம்ஸாரமாகிற வெந்நரகத்தில் நம்மை இனிச்சேராதபடி ரக்ஷிப்பதற்காகவே இப்பாடுபடுகிறான் என்கிறது. நம்—நம்மால், அம்சூழ்—அழகாகச் சூழ்த்துக்கொள்ளப்பட்ட; (அதாவது,—) தப்பவொண்ணாதபடி பத்தும்பத்தாக (பரிபூர்ணமாக) விளைத்துக்கொள்ளப்பட்ட, நரகத்து—(ஸம்ஸாரமாகிற) நரகத்தில் என்றபடி. அன்றிக்கே, நமனாலே விளைத்துக்கொள்ளப்பட்டிருக்கையாலே யமவஶ்யதை தவிராத ஸம்ஸாரத்தில் அல்லது, ரௌரவாதிநரகத்தில் என்றும் பொருள் கொள்ளலாம். இத்தால் உபாயக்ருத்யமான அநிஷ்டநிவர்த்தகத்வம் காட்டப்பட்டது. இவன் இப்படி அடியாருடைய அநிஷ்டங்களைப் போக்குவான் என்பதை எங்கே கண்டோம்? எனில். (துரகத்தை வாய் பிளந்தான் தொட்டு) ஆஶ்ரித விரோதியான கேசி என்னும் குதிரையுருக்கொண்டு வந்த அஸுரனைக் கைதொட்டு வாய்பிளந்து அழித்த கண்ணனன்றோ இவன். இவன் நம்மை நரகத்து நணுகாமல் காப்பான் என்பதை விளக்கவும் வேண்டுமோ? என்று கருத்து. "அன்று துரகவாய் கீண்ட துழாய் முடியாய் நங்கள் நரகவாய் கீண்டாயும் நீ" [47] என்று முன்னமே இதை இவ்வாழ்வார் அருளிச் செய்தாரன்றோ. 98.

99. தொட்டபடை யெட்டும் தோலாத வென்றியான்
அட்ட புயகரத்தா னஂநான்று—குட்டத்துக்
கோள்முதலை துஞ்சக் குறித்தெறிந்த சக்கரத்தான்
தாள்முதலே நங்கட்குச் சார்வு.

தொட்ட—ஏந்தின. படை எட்டும்—எட்டு தி₃வ்யாயுத₄ங்களாலும், தோலாத—தோல்வி யடையாமல். வென்றியான்—வெற்றியே அடைபவனும், அட்டபுய கரத்தான்—கச்சித் திருவட்டபுயகரத் திருப்பதியிலுள்ளவனும், அந்நான்று—முன் பொருகாலத்தில். குட்டத்து—நீர்ப்பொய்கையிலே. கோள் முதலை துஞ்ச — வலிமையுடைய முதலை முடியும்படியாக. குறித்து எறிந்த சக்கரத்தான்—இலக்குத் தப்பாமல் எறியப் பட்ட ஸுத₃ர்ஶனாழ்வானையுடைய பெருமானது. தாள் முதலே நங்கட்கு சார்வு — பாத₃மூலமே எங்களுக்கு ஆஶ்ரயணீயமாகும்.

வ்யா:— ( தொட்டவித்யாதி ) ஏதேனுமொரு ஆயுத₄த்தைத்தொட்டால் அவ்வாயுத₄த்தாலே எதிரிகளுக்குத் தோலாதே

---

அவ :—ஆஶ்ரித விரோதி₄களைப்போக்கும் ஸ்வபா₄வனான எம்பெருமான் திருவடிகளே பரமப்ராப்யம் என்கிறார்.

உரை :—எடுத்த தி₁வ்யாயுத₄ங்களெட்டாலும் போரில் தோலாதே எதிரிகளை மூலமற மாய்த்து. வெற்றியை உடைய

---

99. அவ:— அடியாருடைய விரோதி₄களைப்போக்கும் இயல்வுடையவனான எம்பெருமானுடைய திருவடிகளே மேலான ப்ராப்யமாகவும், ப்ராபகமாகவும் இருக்கையாலே அதுவே நமக்கு மேலான ஆஶ்ரயணீய வஸ்து என்கிறார்.

வ்யா:—(தொட்ட படை எட்டும் தோலாத வென்றியான்) ' செம்பொன் இலங்கு வலங்கை வாளி திண்சிலை தண்டொடு சங்கம் ஒள்வாள் உம்பர் இருசுடர் ஆழியோடு கேடகம் ஒண்மலர் பற்றி யெற்றே!...அட்ட புயகரத்தேன் என்றாரே'' [பெரியதிருமொழி 2-8-3] என்று திருமங்கை

வெற்றியையுடையனுய். திருவட்டபுயகரத்திலே நின்றவன்.

ஞயிருக்கும் ஆண்பிள்ளையாய். இந்த வடிவோடும் மிடுக்கோடும் எட்டா நிலத்தில் இருக்கையன்றிக்கே திருவட்டபுயகரத்திலே ஸந்நிஹிதனுய் ஸ்ரீகஜேந்த்ராழ்வான் ஆபந்நனை அத்தசையிலே மடுவில் முடிக்கும் ஸ்வபாவமான முதலை யானது உருவழிந்து சிதிலமாம்படி—அவ்வாபத்திலும் கலங்காத ஸ்ரீகஜேந்த்ராழ்வான் பக்கல் பரிவாலே இலக்குத் தப்பாதபடி எறிந்த திருவாழியை உடையவனுடைய பாத,

யாழ்வார் அருளியபடியே (1) வாளி (அம்பு) (2) சிலை (வில், (3) தண்டு (கதை) (4) சங்கம் (5) வாள் (6) ஆழி (சக்கரம்) (7) கேடகம், (8) மலர் ஆகிய எட்டு திவ்யாயுதங்களையும் ஓர் ஆயாஸமின்றியே பூ ஏந்தினாற்போலே தொட்டு நிற்பவனுய், அவற்றில் ஏதேனும் ஓர் ஆயுதத்தைப் பிரயோகிப்பதற்காகத் தொட்டாலும், அவ்வாயுதத்தால் தோல்வி என்பதையே அறியாமல் எதிரிகளைப் பூண்டோடு அழித்து வெற்றியடையும் ஆண்பிள்ளையாயிருப்பவன். இத்தால் உபாயக்ருத்யமான அநிஷ்ட நிவர்த்தகத்வம் சொல்லப்பட்டது. இந்த வடிவோடும், வீரத்தோடும், பலத்தோடும், வெற்றியோடும் இவன் எழுந்தருளியிருப்பது எட்டா நிலமான பரமபதத்திலேயோ? எனில், இந்நிலவுலகிலேயே நம் கண்காண எழுந்தருளியிருக்கிறுன் என்கிறுர்,— (அட்டபுயகரத்தான்) திருவட்டபுயகரம் என்னும் திவ்யதேசத்திலே தன் வடிவழகையெல்லாம் காட்டிக்கொண்டிருக்கையாலே பரமப்ராப்யனுய், தானே உபாயம் என்பது தோற்றத் தொட்டபடையெட்டும் தோலாத வென்றியானுய்,எட்டு திவ்யாயுதங்களையும் எட்டுத் திருக்கைகளிலே ஏந்தி நிற்கிறுன் என்று கருத்து. இப்படி திவ்யாயுதங்களைக் கொண்டு தோலாதவென்றியானுய் ஆஸ்ரித விரோதி நிரஸநம் செய்தவிடம் உண்டோ? எனில்,-(அந்நான்று குட்டத்துக்கோள் முதலை துஞ்சக்குறித்தெறிந்த சக்கரத்தான்) மழுங்காத ஞானமே படையாக (ஸங்கல்பமாத்ரத்தாலே) முதலையை அழித்திருக்கலாமாயினும், அடியானை கஜேந்திராழ்வானிடமுள்ள வாத்ஸல்யத்தாலே, அவன் பரமாபத்தை அடைந்து ஸ்வப்ரவ்ருத்தி கழியப்பெற்று 'ஆதிமூலமே' என்று கையெடுத்துக் கூப்பிட்டவுடன்— சிறிது குறிதவறி அடியானுக்கு ஏதேனும் ஏற்பட்டால் என் செய்வது' என்னும் அதிசங்கையால் மடுக்கரைக்கு அரைகுலையத் தலைகுலைய

(குட்டத்தித்யாதி) "त्वत्पादमूलं शरणं प्रपद्ये" (த்வத்பாத₃மூலம் ஶரணம் ப்ரபத்₃யே) என்னும்படியே ஶ்ரீக₂ஜேந்த்₃ராழ்வானுக்கு உதவினவனுடைய திருவடிகளே நமக்கு அபாஶ்ரயம். 99.

---

மூலமே ப்ராப்ய ருசிபரவஶரான எங்களுக்குப் பரமப்ராப்யம். அன்றிக்கே, ஸ்வரக்ஷணத்திலே அஶக்தரான எங்களுக்கு "त्वत्पादमूलं शरणं प्रपद्ये" (த்வத்பாத₃மூலம் ஶரணம் ப்ரபத்₃யே) என்கிறபடியே ஸ்ரீக₂ஜேந்த்₃ராழ்வானுக்கு உதவின சிவந்த திருவடிகளே ஸஹாயாந்தர நிரபேக்ஷமான உபாயமென்னவுமாம். 99.

---

ஓடிவந்து, அந்த க₂ஜேந்திரனை விழுங்கிக்கொண்டிருந்த பெரு வலிமையுடைய முதலை அழியும்படியாகக் குறிபார்த்துப் பிரயோக₃ம் செய்த சக்கரத்தாழ்வானை உடையவன். (சக்கரத்தான் தாள்முதலே நங்கட்குச்சார்வு) இப்படி அடியார் விரோதி₄களைப் போக்கும் படையை உடையவனுடைய திருவடிமூலமே நமக்கு உபாயமாக ஆஶ்ரயணீயம். 'தாள் முதலே' என்னும் இப் பாசுரத்தை அடியொற்றியே ஆளவந்தார் 'த்வத்பாத₃மூலம் ஶரணம் ப்ரபத்₃யே" (ஸ்தோ-ர) என்று எம்பெருமானுடைய பாத₃மூலத்தையே ஶரணாகப் பற்றினார். (சக்கரத்தான் தாள் முதலே நங்கட்குச் சார்வு) அநிஷ்டநிவர்த்தனத்தையும், இஷ்டப்ராப்தியையும் செய்து தரும் தி₃வ்யாயுத₄ங்களையும் தி₃வ்யமங்க₃ள விக்₃ரஹத்தையும் உடைய அவனுடைய பாத₃மூலமே அநந்ய ஶரணத்வத்தை ஸ்வரூபமாகக்கொண்ட நமக்கு ப்ராபகம். ஏகாரத்தாலே அஜ்ஞாத நிக்₃ரஹையாய் (நிக்₃ரஹம் என்பதையே அறியாதாளாய்) அதனாலேயே அநிஷ்ட நிவர்த்தனம் செய்ய முடியாதவளான பெரிய பிராட்டியாரையும் உபாயமாக ஸஹியாத இவனுடைய நிரபேக்ஷோபாயபூ₄வத்தைக் கூறுகிறது. 'தாள் முதலே' என்கையாலே, "பிராட்டியும் அவனும் விடிலும் திருவடிகள் விடாது, திண்கழலாயிருக்கும்" (முமுக்ஷுப்படி 146) என்கிறபடியே விக்₃ரஹ விஶிஷ்டனே உபாயம் என்று காட்டப்படுகிறது. இப்படி விக்₃ரஹத்துக்கும், கு₃ணங்களுக்கும் உபாயத்வத்தை ஒப்புக்கொண்டால் உபாய நைரபேக்ஷ்யத்திற்குக் குறைவாராதோ? எனில்; அவை தனியே பு₃த்₃தி₄ ப்ரவ்ருத்தி செய்ய வல்லமையற்ற அசேதனங்களாகையாலே, அவற்றுக்கு உபாயத்

100. சார்வு நமக்கென்றும் சக்கரத்தான் தண்டுழாய்த்
தார்வாழ் வரைமார்பன் தான்முயங்கும்—காரார்ந்த
வானமரு மின்னிமைக்கும் வண்டாமரை நெடுங்கண்
தேனமரும் பூமேல் திரு.

**சக்கரத்தான்**—ஸுதர்ஶனத்தைக் கையிலே உடையவனும். **தண் துழாய் தார் வாழ்**—குளிர்ந்த திருத்துழாய் மாலை விளங்கப் பெற்ற. **வரை மார்பன் தான்**—மலைபோன்ற திருமார்பையுடையனுமான எம்பெருமானால். **முயங்கும்**—ஸம்ஶ்லேஷிக்கப்படுகின்றவளாய். **கார் ஆர்ந்த வான்**—மேகங்கள் செறிந்த ஆகாசத்திலே. **அமரும்**—நிலைத்து நிற்கக்கூடியதான. **மின்**—மின்னல்போல். **இமைக்கும்**—விளங்குகின்றவளாய், **வண் தாமரை**—அழகிய தாமரைப் பூப்போன்ற. **நெடு**—நீண்ட. **கண்**—திருக்கண்களையுடையளாய், **தேன் அமரும் பூ மேல்**—தேன் நிறைந்த தாமரைப் பூவில் வஸிப்பவளான. **திரு**—பெரிய பிராட்டியார், **நமக்கு என்றும் சார்வு**—நமக்கு எப்போதும் ஆஶ்ரயணீயை.

---

வம் கொள்வதால் நைரபேக்ஷ்யத்துக்குக் குறைவாராது. தனியே புத்₃தி₄ ப்ரவ்ருத்தி செய்ய யோக்₃யதையுடைய மற்றொரு சேதன வஸ்துவை உபாயமாயிருக்க ஸஹியாதது இவ்வுபாயம் என்பதே ஏகாரத்தினால் உணர்த்தப்படும் உபாய நைரபேக்ஷ்யத்தின் ஸாரமாகும். (தாள் முதலே நங்கட்குச் சார்வு) பரமப்ராப்யனை அவனுடைய பாத₃மூலமே அநந்யபோ₄க₃த்வத்தை ஸ்வரூபமாகக் கொண்ட நமக்கு ப்ராப்யமாகவும் ஆஶ்ரயணீயம் என்பதாகவும் கொள்ளலாம். ஏகாரத்தாலே அவன் ஒருவனே நிருபாதி₄கப்ராப்யன் என்றும். மற்றவரெல்லாம் அவன் ஸம்ப₃ந்த₄த்தையிட்டு ப்ராப்யராகிறார்கள் என்றும், குழந்தை தாய்முலையிலே வாய்வைக்குமாபோலே, மோக்ஷபக்ஷல் மோக்ஷபூ₄தன் இழியும் துறை திருவடிகளே என்றும் உணர்த்தப்படுகிறது. இதையே நம்மாழ்வாரும் " சார்வே தவநெறிக்குத் தாமோதரன் தாள்கள் " (திருவாய் 10-4-1) என்று அருளிச்செய்தார். 'சார்வு' என்றது ஆஶ்ரயணீயம் என்றபடி. ஆக, இப்பாசுரத்தால் சக்கரத்தானுடைய பாத₃மூலமே நமக்கு ப்ராப்யமாகவும் ப்ராபகமாகவும் ஆஶ்ரயணீயம் என்னும் ஸகல சாஸ்த்ர ஸாரத்தை அருளிச் செய்தாராயிற்று. 99.

வ்யா:— ( சார்வு நமக்கென்றும் ) ஆபத்துக்கு ஸர்வேஶ்வரன்; ஆபத்துள்ளபோதும் எற்றைக்கும் நமக்கு அபாஶ்ரயம் பெரியபிராட்டியார். ( சக்கரத்தானித்யாதி ) ரக்ஷணத்துக்கு உபகரணமான திருவாழியைக் கையிலே உடையவனுமாய், போ₄கோ₃பகரணமான திருத்துழாயையுடையவன் தானே

---

அவ :—எம்பெருமான் அபாஶ்ரயமான பெரியபிராட்டியார் திருவடிகளே என்றும் புகலிடமாம் பற்றினோர்க்கு என்கிறார்.

உரை :— திருவாழியைத் திருக்கையிலேயுடையனாய். போ₄கோ₃பகரணமாய் ஸர்வைஶ்வர்ய ஸூசகமான குளிர்ந்த திருத்துழாய் மாலையானது செவ்வி பெற்றுத் தழைத்துச் செல்லாநிற்கிற மலைபோலே உறைத்துப் பரந்த திருமார்வையுடையனான தான் அத்யாபி₄நிவிஷ்டனாய்க்

---

அவ :—முன் பாசுரத்தில் ஆஶ்ரயணீயனைச் சொன்ன எம்பெருமானை ஆஶ்ரயித்திருக்கும் பெரிய பிராட்டியாரே நமக்கு என்றும் ஆஶ்ரயணீயை என்று அருளி தி₃வ்யப்ரப₃ந்த₄த்தைத் தலைக்கட்டுகிறார்.

வ்யா :—(சக்கரத்தான் தண் துழாய்த் தார்வாழ் வரைமார்பன் தான் முயங்கும் திரு நமக்கு என்றும் சார்வு) திருவாழியைத் திருக்கையிலே உடையவனாய், போ₄க₃த்துக்கு உபகரணமாய் ஸர்வேஶ்வரன் என்று காட்டித்தருவதான குளிர்ந்த திருத்துழாய் மாலையானது செவ்விபெற்றுத் தழைத்துச் செல்லாநிற்கிற மலைபோலே வலிமையும், பரப்புமுடைய திருமார்பை உடையனான ஸர்வேஶ்வரன், தானே மேல் விழுந்து எப்போதும் அணைக்கும்படியிருக்கும் பெரிய பிராட்டியார் நமக்கு எப்போதும் ஆஶ்ரயணீயையாவாள். சக்கரத்தானாகையாலே ஆபத்து வந்தபோது ரக்ஷகனாகும் அவனே நாம் அடாதது செய்யும்போது ஶிக்ஷகனாகவும் கூடும். அதனால் மேல் விழுந்து ஸம்ஶ்லேஷிக்கப்படுமவளாய் நிக்₃ரஹத்தையே அறியாதவளாகையாலே இவள் அந்த த₃ஶையிலும் அவனிடம் வாதாடி உசிதோபாயங்களாலே நமது தோ₃ஷங்களை மறக்கடித்து நமக்காகப் புருஷகாரம் செய்வாளாகையாலே நமக்கு எப்போதும்

ஸம்ஶ்லேஷியாநின்றுள்ளவளான. இதுக்கு உபமாநம் மேல்—(காரார்ந்தவித்யாதி) மேகஂங்கள் செறிந்துள்ள ஆகாசத்திலே அமர்ந்த மின்னைக் காட்டாநின்றுள்ளாளுமாய். ஆஶ்ரிதரக்ஷணத்திலே குளிர நோக்காநின்ற கண்ணையுடையாளாய்.

---

கொண்டு அநவரதம் ஸம்ஶ்லேஷிக்கும்படியிருக்குமவளாய். மேகங்கள் நிறைந்திருந்துள்ள ஆகாஶத்திலே பொருந்தின மின்போலே கறுத்த திருநிறத்துக்குப் பகைத்தொடையாக ப்ரகாஶியாநிற்பாளாய், ஆஶ்ரிதஂர ஸஹ்ருதஂயமாகக் குளிர நோக்குகிற உதாஂரமான தாமரையைப் போலேயிருக்கிற அழகுநீண்ட திருக்கண்களையுடையளாய் தேன் நிறைந்

---

ஸமாஶ்ரயணீயையாயிருப்பவள் இவளேயாவாள் என்று கருத்து. (காரார்ந்த வானமரும் மின்னிமைக்கும் திரு நமக்குச் சார்வு) மேகஂங்கள் நிறைந்திருக்கும் நீலவானத்திலே நிலைத்திருக்கும் மின்னல்போலே ஹிரண்யவர்ணையாகப் பிரகாசிக்கும் பெரிய பிராட்டியார் நமக்கு ஸமாஶ்ரயணீயை. " வான் அமரும் மின் இமைக்கும் " என்கையாலே, உலகிற்காணும் மின்னல்போலே சஞ்சலையாயிராமல், நிலையாயிருக்கும் மின்னல்போலே பிரகாசிக்கிருள் இவள் என்கிறது. இத்தால் இவளுடைய புருஷகாரத்வத்துக்கு உறுப்பான நித்யயோகஂம் சொல்லப்படுகிறது. நம்மிடம் ஆநுகூல்யலேஶம் பிறந்த கணத்திலேயே புருஷகாரம் செய்வதற்காக ' இறையும் அகலகில்லேன் ' என்று திருமார்பிலேயே நித்யவாஸம் செய்கிருளன்றோ இப்பிராட்டி. (வண் தாமரை நெடுங்கண் திரு நமக்குச் சார்வு) அடியாரை நெஞ்சாரக் குளிர நோக்குகிற உதாஂரமான—தாமரையைப்போலேயிருக்கிற அழகிய நீண்ட திருக்கண்களை உடைய திரு நமக்கு ஆஶ்ரயணீயை. நம்மைக் குளிர நோக்கி அருளாலே திருத்துகின்றவள் இவள் என்னும் அர்த்தஂத்தைக் காட்டுகிருர். ' வண் ' என்று ' உதாஂராம் ' என்று ஸ்ரீஸூக்தத்தில் புகழப்பட்ட இந்த ஔதாஂர்யம் உணர்த்தப்படுகிறது. (தேனமரும் பூமேல் திரு நமக்குச் சார்வு) தேன் நிறைந்திருக்கிற தாமரைப் பூவின்மேலே, அப்பூவின் மணமும், நிறமும், அதிலுள்ள தேனின் சுவையும் ஓர் வடிவுகொண்டாற்போலே அமர்ந்திருக்கும் பிராட்டி நமக்கு ஆஶ்ரயணீயை. இத்தால், தனது அழகாலும் இனிமையாலும் ஸர்வேஶ்வரனைத் திருத்தி நம்மை அவனோடு சேரவிடு

தேன் செறிந்த பூவின்மேலே இருக்கிற திரு. (சார்வு நம கென்றும்) பெரியபிராட்டியார் நமக்கு எல்லாக் காலத்துக்கும அபாஶ்ரயம். 100.

மூன்றும் திருவந்தாதிக்குப் பெரியவாச்சான்பிள்ளை அருளிய
வ்யாக்₂யாநம் ஸம்பூர்ணம்.
பேயாழ்வார் திருவடிகளே ஶரணம்.
பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே ஶரணம்,

---

திருந்துள்ள பூவின்மேலே எழுந்தருளியிருக்கிற பெரிய பிராட்டியார் தன்னையொழிய வேறு புகலின்றியே இருக்கிற நமக்கு ஆபத்து உள்ளபோதோடு இல்லாத போதோடு வாசியற ஸர்வகாலத்திலும் அபாஶ்ரயம். 100.

மூன்றும் திருவந்தாதிக்கு அப்பிள்ளை அருளிய
உரை நிறைவுபெற்றது.
பேயாழ்வார் திருவடிகளே ஶரணம்.
ஜீயர் திருவடிகளே ஶரணம்.

---

கின்றவள் என்று உணர்த்தப்படுகிறது. (நமக்கு என்றும் சார்வு) கருணைக்கடலான ஸர்வேஶ்வரன் திறத்திலும் தீரக்கழிய அபராதஞ் செய்து கடல் கொதித்தாப்போலே அவனையும் கொதிக்கவைக்கும் நமக்கு, ஆபத்து உண்டானவேளையோடு, இல்லாதவேளையோடு வாசியற எல்லாக்காலத்திலும் பெரிய பிராட்டியார் ஆஶ்ரயணீயையா யிருக்கிறாள். "அவன் உபாயமாமிடத்தில் தான் புருஷகாரமாயிருக்கும்; அவன் ப்ராப்யனாமிடத்தில் தான் ப்ராப்யையுமாய்க் கைங்கர்ய வர்த்த₄கையுமாயிருக்கும்" [166] என்னும் முமுக்ஷுப்படி சூர்ணையும், அவ்விடத்தில் மாமுனிகளின் வியாக்கியானமும் இங்கு அநுஸந்தி₄க்கத்தக்கவை. "ஆக, 'திருக்கண்டேன்' என்று லக்ஷ்மீ கடாக்ஷத்தோடு தொடங்குகையாலே 'திரு நமக்கு என்றும் சார்வு' என்று பெரிய பிராட்டியாரே நமக்கு என்றும் ஆஶ்ரயணீயை என்று அறுதியிட்டுப் பிரபந்தத்தைத் தலைக்கட்டியருளினாரா யிற்று. 100.

ஸ்ரீவைஷ்ணவ ஸுத₃ர்ஶந பத்ராதி₄பனான
ஸ்ரீக்ருஷ்ணஸ்வாமி த₃ாஸன் இயற்றிய
மூன்றும் திருவந்தாதி வ்யாக்யானம் நிறைவு பெற்றது.
பேயாழ்வார் திருவடிகளே சரணம்.
பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.
அப்பிள்ளை திருவடிகளே சரணம்.

## பேயாழ்வார் திருநக்ஷத்திர தனியன்

तुलाशतभिषग्जातं मयूरपुरि कैरवात्।
महान्तं महदाख्यानं वन्दे श्रीनन्दकांशजम्॥

துலா ஶதபி₄ஷக்₃ஜாதம் மயூரபுரி கைரவாத்।
மஹாந்தம் மஹதா₃க்₂யாநம் வந்தே₃ ஶ்ரீநந்த₃காம்ஶஜம்॥

*[திருமயிலையில் ஓர் அல்லிக்கேணியிலே, ஐப்பசியில் சதயத்தில் பரமபுருஷனின் நாந்த₃கவாளின் அம்ஶமாய் அவதரித்த பேயாழ்வாரை வணங்குகிறேன்.]*

★

## பேயாழ்வார் நித்ய தனியன்

दृष्ट्वा तुष्टाव यो विष्णुं रमया मयिलाधिपम्।
कूपे रक्तोत्पले जातं महदाह्वयमाश्रये॥

த்₃ருஷ்ட்வா துஷ்டாவ யோ விஷ்ணும் ரமயா மயிலாதி₄பம்।
கூபே ரக்தோத்பலே ஜாதம் மஹதா₃ஹ்வயமாஶ்ரயே॥

*[கிணற்றில் செவ்வல்லிப்பூவில் அவதரித்தவராய், திருவோடு மயிலைக்கதி₄பனை விஷ்ணுவைக் கண்டு துதித்தவரான பேயாழ்வாரை ஆஶ்ரயிக்கிறேன்.]*

★

## பேயாழ்வார் வாழி திருநாமம்

திருக்கண்டேனென நூறுஞ் செப்பினான் வாழியே
சிறந்த வைப்பசியிற் சதயம் செனித்த வள்ளல் வாழியே
மருக்கமழும் மயிலைநகர் வாழவந்தோன் வாழியே
மலர்க்கரிய நெய்தல்தனில் வந்துதித்தான் வாழியே
நெருக்கிடவே யிடைகழியில் நின்றசெல்வன் வாழியே
நேமிசங்கன் வடிவழகை நெஞ்சில்வைப்போன் வாழியே
பெருக்கமுடன் திருமழிசைப் பிரான்தொழுவோன் வாழியே
பேயாழ்வார் தாளிணை யிப்பெருநிலத்தில் வாழியே.

—❂—